தமிழ் வெளியீட்டுக் கழக வரிசை எண்—181

# இந்திய ஆட்சி அமைப்புமுறை வளர்ச்சி—II

(THE DEVELOPMENT OF INDIAN POLITY - II)

ஆசிரியர் :

**எச். என். சின்ஹா**

தமிழாக்கம் :

**கி. ர. அநுமந்தன்,** எம்.ஏ., எம்.எஸ். (விஸ்கான்ஸின்),
பேராசிரியர், வரலாற்றுத்துறை,
மாநிலக் கல்லூரி, சென்னை.




தமிழ் வெளியீட்டுக் கழகம்
தமிழக அரசு

First Edition — December 1968

B.T.P. No. 181



THE DEVELOPMENT OF INDIAN POLITY - II

H. N. SINHA

*Translation* :

K. R. HANUMANTHAN

Price Rs. 5-75



*Printed By* :
Sri B.L.S. PRESS,
Madras-24.

# அணிந்துரை

(திரு. இரா. நெடுஞ்செழியன், தமிழகக் கல்வி-தொழில் அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கி ஏழு ஆண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ., வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்று வருகின்றனர். தொடக்கத்தில் இருந்த இடர்ப்பாடுகள் மெல்லமெல்ல மறைந்து வருகின்றன. நாடு முழுதும் பரந்துள்ள மாணவர்களின் ஆர்வம், 'தமிழிலேயே கற்பிப்போம்' என முன் வந்துள்ள கல்வி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி, இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மனநிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்று வருகிறது.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், புவியியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், தத்துவம் ஆகிய பல துறைகளில் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இருவகையிலும் தமிழ் வெளியீட்டுக் கழகம் நூல்களை வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றுன 'இந்திய ஆட்சி அமைப்புமுறை வளர்ச்சி-II' என்ற இந் நூல் தமிழ் வெளியீட்டுக் கழகத்தின் 181ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 216 நூல்கள் வெளிவந்துள்ளன.

கணக்கிலடங்காத் தடைகளை எல்லாம் அகற்றித் தமிழன்னை கல்லூரிக் கலை மண்டபத்தில் கொலு வீற்றிருக்கிறுள். எனவே, இவ்வன்னையை வாழ்த்துவோமாக! உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும்; அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். சென்னைப் பல்கலைக் கழகத்தின் பலவகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரித்தாகுக.

இரா. நெடுஞ்செழியன்

# பொருளடக்கம்

# 8. இந்தோ - இஸ்லாமிய ஆட்சி அமைப்பு முறையின் ஆய்விற்கு ஓர் அறிமுகம்

## சிந்து நாட்டை அரேபியர் வென்று அடிப்படுத்தல்

கி.பி. 712-ல் சிந்து நாட்டைத் தாக்க முகம்மது பின் காசிம் என்பவரை பாக்தாத்தின் கலிபா அமர்த்தியபொழுது, முதல் முறையாக முஸ்லிம்கள் இந்தியாவிற்குள் நுழைந்தனர். இந்தியாவின் மேலைக் கடற்கரையோரங்களில் கடல் வழியாக வாணிகம் செய்த சில அரேபியர்களை இந்தியக் கடற்கொள்ளைக் கார்ர்கள் கொள்ளையடித்தனர். சிந்துவின் அரசரை கலிபா இதற்குப் பொறுப்புடையவராக்கினர். ஆனால், அரசர் கடற் கொள்ளைக் கூட்டத்தைத் தண்டிக்காததாலும் அரேபிய வாணிகர் களுக்கு இழப்பீடு அளிக்காததாலும், இவருக்கெதிராக முகம்மது பின் காசிமின்கீழ்ப் படையெழுச்சியின் இயல்புடைய படை யொன்று அனுப்பப்பட்டது. இது சிறந்த வெற்றியாக்கமுடைய தாக இருந்தது; சிறிய முடியரசாகிய சிந்து, கலிபாவின் பரந்த நாட்டோடு இணைக்கப்பட்டது. கலிபாவின் நாடு இப்பொழுது இந்தஸிலிருந்து பிரனிஸ்வரை பரவியிருந்தது. சிந்துவில் அரே பியரின் ஆட்சி பெரும்பாலும் ஒன்றரை நூற்றுண்டிற்குத் தொடர்ந்தது. பாக்தாத்தில் மத்திய அதிகாரத்தின் வலுக் குறைவோடும், கலிபாவின் பேரரசில் அவிழ்த்துவிடப்பட்ட சிதைக்கும் ஆற்றல்களோடும், சிந்துவின்மீதான இவர்களின் ஆட்சி அதிகாரம் சிறிது சிறிதாகத் தளர்ந்து இறுதியில் மறைந்தது.

## துருக்கர் ஆப்கானிஸ்தானத்தைக் கைப்பற்றுதல்

இதற்கிடையே இஸ்லாமைத் தழுவிய நடு ஆசியத் துருக்கர் கள் கலிபாவின் ஆட்சியில் சிறிது அதிகாரமும் அரசியல் செல்

வாக்கும் பெற்றனர். இந்தியாவையும் ஆப்கானிஸ்தானத்தை யும் ஒட்டி இவர்கள் சில சுயேச்சையான அரசுகளை நிறுவினர். ஆப்கானிஸ்தானத்தை அதனுடைய இந்து அரசர்களிட மிருந்து கைப்பற்றி அவர்களையும் மேற்குப் பஞ்சாப்பிற்கு இடம் பெயரும்படி வற்புறுத்தினர். எனவே, துருக்கர்கள் தம்மை ஆப்கானிஸ்தானத்தில் நிலைப்படுத்திக்கொண்டனர்; கைபர் கணவாய் வழியாக இந்தியாவைத் தாக்குவதற்கு இவர்களுக்கு இது ஒரு சிறந்த தளத்தை அளித்தது; பத்தாம் நூற்றுண்டில் இது நிறைவேற்றப்பட்டது. வட இந்தியாவில் அரசியல் சிதைவுக் காலத்தோடு இது ஒத்து நிகழ்ந்தது. வட இந்தியாவை ஒரு பேரரசாக இணைத்தவர் ஹர்ஷர். கி.பி. 647-ல் இவருடைய மறைவிற்குப் பின் இவரது பேரரசு சிதைந்தது; சிந்து-கங்கைச் சமவெளிகளில் பஞ்சாப்பிலிருந்து அஸ்ஸாம்வரை, இமயமலைகளிலிருந்து விந்திய மலைகள்வரை எங்கும் சிறிய முடியரசுகள் எழுந்தன. தனி முதன்மை நிலைக்கான இவர் களுடைய போராட்டமும், உட்பகை சார்ந்த போர்களும் இவர் களை வலுவற்றவர்களாகவும் ஒற்றுமையற்றவர்களாகவும் செய் தன. இந்தியாவின் எல்லைப்புறம் தாண்டிய பகுதியில் படிப்படி யாகத் தம் அதிகாரத்தை நிறுவிக்கொண்ட முஸ்லிம் துருக்கர்கள் இதன் நன்மையைப் பெற்றனர். பஞ்சாப்பை இவர்கள் அடிக்கடி தாக்கினர்கள். பதினோராம் நூற்றுண்டின் முற்பகுதியில், கஜினி (Ghazni) முகம்மது, பஞ்சாப்பின் எல்லைகளுக்கப்பால் பெஞரஸ்வரை தூரக் கிழக்கிலும், தெற்கில் குஜராத்தில் சோம நாத்வரையிலும் இவருடைய தாக்குதல்கள் பரவின. வட இந்தியாவின் சிறிய அரசுகளை இவரது வெற்றி முற்றிலும் நிலை குலையச் செய்தது. இவர் மறைவின்பொழுது பஞ்சாப்பில் முஸ் லிம் ஆட்சி நிலைபெற்றது. இவருடைய மரணத்திற்குப்பின் ஒன்றரை நூற்றுண்டுக் காலத்திற்கு இந்தியாவில் முஸ்லிம்களின் ஆட்சி பஞ்சாப்போடு நின்றது. பன்னிரண்டாம் நூற்றுண்டின் இறுதியில் மியூசுதீன் முகம்மது கோரி என்ற ஒரு புதிய தாக்குதல் காரர் தோன்றினர். டெல்லி, ஆஜ்மீர் ஆகிய இடங்களின் இந்து அரசர்களோடு போரிட்டுக் கங்கைக்கும் யமுனைக்கும் இடையில் உள்ள நாட்டை வெற்றி கொண்டார். இவருடைய படைத் தலைவர் குத்புதீன் அய்பெக், இவர் வென்ற பகுதிகளை இன்னும் பெருக்கினர். டெல்லி சுல்தானியம் எனப் பெயர் பெற்ற முதல் முஸ்லிம் பேரரசிற்கு இவர் அடிக்கல் நாட்டினர்.

## டெல்லி சுல்தானிய அரசு

1206-ல் முதல் முஸ்லிம் சுல்தானுகிய குத்புதீன் அய்பெக் கின் தலைமையில் டெல்லி சுல்தானிய அரசு நிறுவப்பெற்றது.

வட இந்தியாவை வென்று டெல்லி சுல்தான்களின் ஆட்சியை நிலைப்படுத்த பதின்மூன்றும் நூற்றுண்டு முழுவதும், அதாவது, ஒரு நூற்றுண்டு பிடித்தது. தக்காணம் அல்லது விந்திய மலைகளுக்குத் தெற்கே உள்ள நாடு பதினுன்காம் நூற்றுண்டின் முற்பாதியில் வென்று கைக்கொள்ளப்பட்டது. ஆனுல், டெல்லியிலிருந்துகொண்டு இதை வைத்து நீண்ட காலம் ஆட்சி செய்ய முடியவில்லை. பதினுன்காம் நூற்றுண்டின் பிற்பகுதியில் இது பிரிந்துசென்று சுயேச்சையடைந்தது. இங்கு ஓர் இந்து அரசும் ஒரு முஸ்லிம் அரசுமாகிய இரண்டு பெரிய வலிமைமிக்க அரசுகள் தோன்றின. அடுத்து வந்த இரண்டு நூற்றுண்டின் தக்காண வரலாறு, தனிமுதன்மை நிலைக்கான இவர்களுடைய போராட்டத்தாலும் போட்டியாலும் எழுந்த மோதல்கள் நிறைந்து காணப்படுகிறது. தேக்கங் கண்ட இயக்காற்றலையும் வலிமையையும் இழந்துவிட்ட இதனுடைய (சுல்தானிய அரசின்) ஆட்சிமுறையின்மீது பெருமளவிலான பேரரசின் தேவைகளின் கடுமையான அழுத்தத்தின் விளைவாகவும், ஓரளவாக, முகலாயர்கள் எனப்பட்ட மிக்க உரம் பெற்ற இனத்தவர்களின் படையெடுப்பின் காரணமாகவும் பதினுன்காம் நூற்றுண்டு முடிவுறும் சமயத்தில் டெல்லி சுல்தானிய அரசு சிதைந்தழிந்தது. இவர்களும் முஸ்லிம்களாக இருந்தபோதிலும், ஐந்து நூற்றுண்டிற்குமுன் வெற்றியாளர்களாக இந் நாட்டிற்குள் நுழைந்த சீர்கேடுற்ற இந்திய முஸ்லிம்களினின்று இவர்கள் மொழியிலும், பண்பாட்டிலும், இனத்திலும் வேறுபட்டிருந்தனர்.

## முகலாயப் பேரரசு

டெல்லி சுல்தானிய அரசு சிதைந்ததன் விளைவாக, இக்காலத்தில் வட இந்தியாவில் சுயேச்சையான முடியரசுகள் எழுந்தன; இவை அரசியல் ஒற்றுமையையும் இழந்தன. ஐந்து நூற்றுண்டிற்குமுன் கோரி முகம்மது படையெடுத்தபோது வட இந்தியா இருந்தநிலையில் மீண்டும் காணப்பட்டது. இது முகலாயப் படையெடுப்பாளர்களின் பணியை எளிதாக்கிற்று. 1526-ல், டெல்லியின் அரசராகிய இப்ராஹிம் லோடியும், 1527-ல், இராஜபுதனத்தின் அரசரும் இராஜபுத்திரர்களின் வல்லமை வாய்ந்த தலைவருமாகிய இராணு சங்கராம் சிங்கும் ஆப்கானிஸ்தானத்தின் அரசர் பாபரால் போரில் தோற்கடிக்கப்பட்டனர். பாபர் ஆப்கானிஸ்தானத்தைச் சிறிது காலம் ஆட்சி செய்தார்; ஆசியாவின் இருபெரு வெற்றியாளர்களின் வழிவந்தவர், தாய்வழியில் செங்கிஸ்கானின் வழியாகவும் தந்தை

வழியில் அமீர் தைமூரின் வழியாகவும் இவர் தோன்றினர். ஆப்கானியர், இராஜபுத்திரர்மீதான இவரது வெற்றியோடு இந்தியாவில் முகலாயப் பேரரசை இவர் நிறுவினர். புகழ்மிக்க முகலாயப் பேரரசர்களின் குலமொன்று ஏறத்தாழ இரண்டு நூற்றுண்டுகள் நாட்டை ஆண்டது. கி.பி. நான்காம் நூற்றுண்டில் குப்தர்கள் காலத்திலும், கி.மு. மூன்றும் நூற்றுண்டில் மோரியர் காலத்திலுமாக இவை பெருதிருந்த அரசியல் முறையிலான வட இந்தியா முழுவதன் ஒற்றுமையை இது அளித்தது. ஆப்கானிஸ்தானம், காஷ்மீரம், சிந்து, கங்கைச் சமவெளிகளைக் கொண்டதும், வடக்கில் இமய மலைகளாலும் தெற்கில் விந்திய மலைகளாலும், கிழக்கில் வங்காள விரிகுடா, மேற்கில் அரபிக் கடல் ஆகியவற்றுல் சூழப்பெற்றதுமான ஒரு பேரரசை அக்பர் நிறுவினர். ஓர் ஆட்சி முறையையும் கூட்டு ஒருமைப்பாட்டினையும் இவர் இதற்கு அளித்தார். இவருக்குப் பின் நீண்ட காலம் இது நிலைத்திருந்தது. பதினெட்டாம் நூற்றுண்டின் மத்தியில் முகலாயப் பேரரசு சிதைந்தபொழுது கூட அரசாங்க முறை கவிழவில்லை. தம் ஆட்சி முறையாக மராத்தியர்களும், அவர்களுக்குப்பின் பிரிட்டிஷாரும் இதைப் பயன்படுத்திக்கொண்டனர். இதுதான் முகலாயர்களின் பணியின் சிறப்பாக இருந்தது. ஆனுல், கஜினி முகம்மது, குத்புதீன் அய்பெக் ஆகியோர் காலத்திலிருந்து முற்கால முஸ்லிம்கள் நிறுவ முயன்ற அமைப்பாகிய முகலாயரின் அரசாங்கம் முற்றிலும் வளர்ச்சியடைந்ததாகும். இந்தியாவில் முஸ்லிம்கள் தோற்றுவித்து வளர்த்த அவ்வகை அரசாங்கத்தையும் ஆட்சிமுறையையும், இந்த ஆய்வில், இந்தோ-இஸ்லாமிய ஆட்சிமுறையாக நாம் விவரித்திருக்கிறோம்.

## இந்தோ - இஸ்லாமிய ஆட்சி அமைப்பு முறையும் அதன் சிறப்பியல்புகளும்

இந்தியாவில் முஸ்லிம்கள் நிறுவிய அரசையும் அதன் அரசாங்க முறையையும் சேர்த்து அதன் தோற்றத்தின் மூலங்களாலும் உயிர்நிலையான கூறுகளாலும் நாம் அதை இந்தோ-இஸ்லாமிய ஆட்சி முறையென நன்ருக வழங்கலாம். புகழ்மிக்க இந்திய வரலாற்றின் மிகப் பழங்காலத்திலிருந்து வந்த மரபுகளையும், நிறுவனங்களையும், அரசியற் கருத்துகளின் ஓர் இணைப்பாக்கத்தையும், முஸ்லிம்கள் தாம் கொண்டுவந்தவைகளையும், இங்கு அவர்கள் தம் ஆட்சியை ஏற்படுத்திக்கொண்டபின் இந்தியாவில் புகுத்தியவைகளையும் இது கொண்டிருந்தது. மெதுவான,

தயக்கமுடைய இவ்விணைப்பாக்கம் உருவாக ஆறு நூற்றாண்டுகள் பிடித்தன. சற்றேறக்குறைய கி.பி. 1000-ல் கசினி முகம்மதுடன் தொடங்கிய இது ஏறக்குறைய கி.பி. 1600-ல் அக்பரின் ஆட்சி முடிவில் தன்னுடைய இறுதி வடிவத்தைப் பெற்றது.

முஸ்லிம்கள் தம்மோடு சில அரசியல் கருத்துகளையும் நிறுவனங்களையும் கொண்டுவந்தனர். அரேபியாவிலும் பாரசீகத்திலும் பிறந்து வளர்ந்த இவைகள் கலிபாவின் அரசியல் நிறுவனங்களில் இடம் பெற்றன. தொடக்கத்தில் இஸ்லாமிய அரசின் அமைப்பு முகம்மது நபியால் தோற்றுவிக்கப்பெற்றது. பின்னர் நான்கு கலிபாக்களின் ஆட்சிக் காலத்தில் இது தொடர்ந்தது; பின் மாற்றியமைக்கப்பெற்றது. இந்தியாவின் முஸ்லிம் அரசர்களுக்கு உமாயத்துகளும் அபசித்துகளும் அமைப்பை அளித்தனர். கலிபாவின் ஆட்சியில் இருந்த முறைகளைத்தான் இவர்களுடைய ஆட்சி அமைப்பும் பின்பற்றியது. முகம்மது நபியின் போதனைகள், தீர்வு முடிவுகள் ஆகியவற்றின் அடிப்படையில் அரேபியாவில் வளர்ச்சியடைந்திருந்தவை தாம் இவர்களுடைய பொது, தனிச் சட்ட முறைகள். பிற்காலத்தில் அபஹனிஃபாவையும் மற்றவர்களையும் கொண்ட போதனைப் பயிற்சியாளர்களின் பொருள் விளக்கங்களாலும் கருத்துரைகளாலும் இவைகள் விரிவாக்கப்பட்டன. கலிபாவின் ஆட்சிமுறையில் இருந்தவைகளைக்கொண்டு இவர்களுடைய நிதியியல் முறை அமைந்திருந்தது. வென்று நிலங்களைக் கைப்பற்றுதல், விரிவடைதல் ஆகிய நெருக்கடிநிலை கடிநிலைகளின்கீழ் இது வளர்ச்சியடைந்தது. சமயத்தைப் பரப்புவதற்கும் பாதுகாப்பு நோக்கங்களுக்கும் அரசின் வருவாய்களிலிருந்து இதைப் பேண வேண்டியிருந்தது. மாறுதல்கள் இன்றி இந் நிறுவனங்களை இந்திய அரசாங்க முறையில் புகுத்த முடியாது.

முஸ்லிம் அரசர்களின் இந்தியச் சூழ்நிலை கலிபாவின் ஆட்சிச் சூழ்நிலையிலிருந்து பெரிதும் மாறுபட்டிருந்தது. தனித்த சமயம், தத்துவம், பண்பாடு, அரசியல் நிறுவனங்கள் ஆகியவற்றைப் பெற்றிருந்த முஸ்லிம் அல்லாத, எளிதாக அடக்கியாள முடியாத, மதமாற்றம் செய்ய முடியாத பெருந்தொகையான மக்கள் முஸ்லிம் அரசர்களுக்குக் கடுமையான பிரச்சினைகளைத் தோற்றுவித்தனர். வட இந்தியா முழுவதையும் எக் காலத்திலும் டெல்லியின் முஸ்லிம் அரசர்கள் வென்று ஆளமுடியாது. இவர்களுடைய அதிகாரத்தை எதிர்த்த சுயேச்சையான திட்டுப் பகுதிகள் எப்பொழுதுமே இருந்துவந்தன. நேர்மாறாக, டெல்லியி

லிருந்து தொலேவில் இருந்த தக்காணத்தை வென்று அதிக காலத்திற்கு ஆட்சி செய்ய முடியவில்லே. இதனுடன், முஸ்லிம் இந்த நாட்டில் தங்கி, இந்த நாட்டின் மக்களேப்போல முஸ்லிம் அல்லாதாருடன் அடுத்தடுத்து வாழ்ந்தனர். பொது வான சுற்றுச்சார்பும் தொடர்பும் கொள்வதற்கான இயல்பான மனிதத் தூண்டுதல், சமய, அரசியல் அடிமைநிலே ஆகிய வற்றின் தடைகள் சிறிது சிறிதாக மறைந்துவிட்டன. ஒருவருக் கொருவர் உணர்ந்துகொள்வதற்கும், தனிநலன் பொருத்தப் பாட்டிற்கும் இரண்டு பக்கங்களிலிருந்தும் முயற்சிகள் வந்தன. இதன் விளேவாக, முஸ்லிம் அரசர்கள் தம் இந்துக் குடிமக்களேப் பற்றிய மனப்பான்மையில் உதவும் மனப்போக்குடையவர்களாக வும், சிறிதளவு பொறுதியற்றவர்களாகவும் மாறினர். டெல்லி சுல்தானிய அரசின் சிதைவிற்கும் அக்பரின்கீழ் முகலாயப் பேரரசின் எழுச்சிக்கும் இடைப்பட்ட, ஏறத்தாழ இரண்டு நூற் ருண்டில், வட இந்தியாவும் தக்காணமும் அடங்கிய நாடு முழு வதும், கீழறுக்கப்பட்ட சிறிய மண்டல அரசுகளாகத் தோன் றியது. இவைகளில் பெரும்பாலானவைகளில் முஸ்லிம்களேத் தம் குடிமக்களாகக்கொண்ட இந்து அரசர்களும், இந்துக்களேக் குடிமக்களாகக்கொண்ட முஸ்லிம் அரசர்களும் ஆண்டனர். இதைப்போன்றதோர் அரசியற் சூழ்நிலேயில், இந்து, முஸ்லிம் அர சர்கள் தம் ஆட்சி நிலேபேறுனதாகவும் பொதுமக்கள் சார்புடைய தாகவும் இருக்கவேண்டுமென்று விரும்பிஞல், இன நோக்கத்தோ டும் கட்சியுணர்ச்சியோடும் இவ்வரசர்கள் ஆட்சிசெய்ய இயலாது. இதற்கு விட்டுக்கொடுக்கும் மனப்பான்மை வேண்டும். அரசு, மொழியும் இலக்கியமும், கலேயும் கட்டடக்கலேயும், சமயம், உடை, வாழ்க்கை முறை போன்றவைகளில், அதாவது, வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் ஓர் இணேப்பாக்கத்தின் வழியாக இவ் வுணர்ச்சி படிப்படியாக வெளியாயிற்று. இந்தியாவில் முஸ் லிம்களின் ஆட்சிக் காலத்தின்பொழுது அரசியல் மரபுகள், நிறு வனங்கள் வழியாக இவ்விணேப்பாக்கம் எவ்வாறு வெளியிடப் பட்டது என்ற ஓர் இயல்போடுமட்டுமே நாம் இங்கு அக்கறை கொண்டுள்ளோம். இந்தியாவில் தோன்றிய அரசியல் மரபுகளும் நிறுவனங்களும், மூலத்தோற்றத்தில் இஸ்லாமைச் சார்ந்தனவும் வெளியிடத்திற்குரிய அரசாங்க முறையில் எப்படி இணேந்து கலந்தனவென்பதை நாம் ஆராயவேண்டும். ஆகையால், இஸ் லாமின் வருகைக்குமுன் இந்தியாவின் அரசியல் வளர்ச்சியையும், முஸ்லிம்கள் தம் ஆட்சியை இந்தியாவில் நிறுவியபொழுது அவர் கள் கண்ட இந்திய அரசியல் மரபுகளேயும் நிறுவனங்களேயும் அவைகளின் முக்கியக் கூறுகளோடு அறிந்துகொள்வது தேவையாகிறது.

# பழங்கால இந்திய அரசின் இயல்புகள்

## (அ) வேத காலத்திய ஆட்சிமுறை

பழங்கால அரசின் நீண்ட கால வளர்ச்சியை வேதகாலத்திற்கு, அதாவது, கி.மு. 1500-க்குக் கொண்டு செல்லலாம். வேதகால ஆட்சிமுறை இனச்சார்புடைய முடியாட்சியின் உருவத்தைப் பெற்றது. ராஷ்டிரமென்ற, அதாவது, அரசர் அல்லது இராஜாவால் ஆளப்படும் நிலத்தின் பொதுவியலான பெயரால் இது வழங்கப்பட்டது. அரசர் பெரும்பாலும் தேர்ந்தெடுக்கப்பெற்ருர். சபைகளில் கூடியிருந்த இனத் தலைவர்களின் பொதுவான இசைவோடு இவர் பதவியிலிருந்து நீக்கப்படலாம். இச் சபைகளில் ஒன்று சபா எனப் பெயர்பெற்றது. அதாவது, புகழ்பெற்ற, சிறந்த மணிகளின் சபையெனவும், மக்களின் கூட்டத்தை சமிதியெனவும் பெயரிட்டிருந்தனர். விசாக்கள் அல்லது மாவட்டங்களேயும் கிராமங்களேயும் கொண்ட முடியரசுகள் சிறியவாகவும் நெருக்கமாகவும் இருந்தன. பல்வேறு அளவில் இருந்த இவைகளெல்லாம் ஆரியரின் குடியிருப்புகளே. குடிமக்கள் விரும்பிக் கொடுத்த காணிக்கைகளே அரசர் ஏற்றுக் கொண்டார். இது அரசரின் வருவாயாயிற்று. இதை வைத்துக் கொண்டு அரசர் தன் நிலேயைப் பேணிக்கொண்டார். போரில் இவர் தலேவர். நாட்டின் பழங்குடிகளாகிய திராவிடர்களுக்கெதிராக ஆரிய 'வழிபாட்டு முறை'யையும் வருணத்தையும் இவர் பாதுகாத்தார். 'கருநிறக் கருமி'களென்றும், 'லிங்க வழிபாடு செய்பவர்கள்' என்றும் திராவிடர் இவர்களால் வெறுக்கப்பட்டனர். நாட்டை இவர்களிடமிருந்து வென்று கைப்பற்ற ஆரியர் போரிடவேண்டியிருந்தது. அரசரின் சிறப்பு, போரில் தலேவராகவும் அமைதியில் காப்பாளராகவும், சமூகத்தில் செல்வாக்கையும் இனங்களின்மீது அதிகாரத்தையும் அளித்தது. இந்தோ-ஆரியர் இந்தியாவில் நுழைந்தபொழுது இப்படி இருந்ததாகத் தெரியவில்லே. ஆகவே, அரச பதவி வெகு விரைவில் மிக உயர்ந்த சமூகத் தனிச்சிறப்பியல்புடைய நிறுவனமாயிற்று. ஆனுலும், குணவியல்பில் இது சமயச் சார்பற்றதாக இருந்தது.

இந்தோ-ஆரியக் கிராமம், அரசு அல்லது ராஷ்டிரத்தின் ஒரு பிரிவாக இருந்தது. தனக்கென்று ஒரு சபையை இது பெற்றிருந்தது. கிராமத்தின் கூட்டு வாழ்க்கையின் கேந்திரமாக அது இருந்தது. சொத்துடைமைகள்பற்றித் தீய விருப்பால் எழுகிற தகராறுகளேத் தீர்க்கவும், அவர்களின் செயல்களே ஒருங்கமைக்கவும், பொதுவான நிகழ்ச்சிகளேயும் பிரச்சினேகளேயும் விவாதிக்க

வும் இங்கு மக்கள் கூடினர். கிராமத் தன்னாட்சியின் திருவுருவாகச் சபை இருந்தது. இந்தோ-ஆரியரின் ஆட்சி முறையின் தனிச்சிறப்பான கூறாக இது இருந்தது. கிராமத்தின் தலைவர் கிராமணியெனப் பெயர் பெற்றிருந்தார். இவர் எந்த அதிகாரத்தையும் செயற்படுத்தவில்லை. பிரிட்டிஷார் காலத்தில் ஆனதுபோல் சிறிய கொடுங்கோலராகவும் இவர் இல்லை. அரசர் படைச் சேவைக்கு அழைக்கும்பொழுது போர்க்காலத்தில் இவர் கிராமக் குடிப்படையின் தலைவராக இருந்தார். அரசரைத் தேர்ந்தெடுத்தவர்களில் இவரும் ஒருவராவார்.

## (ஆ) பெரிய அரசுகளின் எழுச்சி

இந்தோ-ஆரிய அல்லது வேதகாலத்திய ஆட்சி முறையின் இந்த எளிய தோற்றம், சிந்து-கங்கைச் சமவெளிகள் முழுவதிலும் ஆரியர்கள் பரவி நிலைகொண்டபொழுது மாறியது. கி.மு. 1000-க்கு முன் இது நிறைவேறியது. பிராமண காலமெனப் பெயர்பெற்ற இக் காலம், பழங்கால இந்தியாவில் அரசின் உருவிலும் செயலிலும் குறிப்பிடத்தக்க வளர்ச்சிகளைப் பதிவு செய்தது. சிறிய, நெருக்கமான வேதகால ராஷ்டிரங்கள் மிகப் பெரியனவாக வளர்ச்சியடைந்தன; இவைகளுடைய அரசாங்கங்கள் மேன்மேலும் அதிகாரத்தை ஏற்றன; இதுவரை தேர்ந்தெடுப்பிற்குரியதாக இருந்த அரச பதவி மரபுரிமைக்குரியதாயிற்று. சபா, சமிதியாகிய பொதுமக்கள் சார்ந்த வேதகாலத்திய சபைகள் தொடர்ந்து இருந்துவந்தன. ஆனால், இவை அலங்காரமாகி ஆலோசனை நிறுவனங்களாகச் செயலாற்றின. இவைகளின் சிறப்புக் குன்றியது. அரசரின் அலுவலராகிய ரத்னிகள் அல்லது சொற்பொருளில் 'இரத்தினங்களைத் தாங்கிச் செல்வோர்' என்பாரின் தொகுதியொன்றால் இவைகள் சிறப்பிழந்தன. கடமைகளை நிறைவேற்றுவதிலும் அதிகாரத்தைச் செயல்படுத்துவதிலும் இவர்கள் அரசருக்கு உதவினர். அரசரின் அரசாங்கத்தின் பல்வேறு துறைகளின் பொறுப்பை இவர்கள் ஏற்றிருந்தனரென்பது இவர்களின் பதவிப் பெயர்களிலிருந்து தெளிவாகிறது. படைத்தலைவர் சேனானி என்றும், அரசிறை வசூலிப்பவர் பாகதூகரென்றும், கணக்குத் தணிக்கையாளர் அக்ஷாவாபர் (Akshavapa) என்றும், நீதிமன்றச் செய்தித் தொகுப்பாளர் சுதரென்றும், அரண்மனை அகவினைஞர் ஷட்ரியென்றும், அரசகுரு புரோகிதரென்றும் பெயர் பெற்றிருந்தனர். பிற்காலத்தில் இந்த இரத்னிகள், மந்திரிகள் அல்லது அரசரின் மந்திரிகள் என்று பெயர் பெற்றனர். சபாவில் மையங்கொண்ட (இவைகளின்) கூட்டு வாழ்க்கையோடு கிராமங்கள் தன்னாட்சி

யைப் பெற்றிருந்தன. பெரிய அரசுகளின் தோற்றம், முடியாட்சி அதிகாரத்தின் வளர்ச்சி, மரபுவழி வந்த அரச பதவி, அரசின் மிக உயர்ந்த அதிகாரிகளைக் கொண்டிருந்த நிருவாகத்தின் தோற்றம் ஆகியவை பிராமண காலத்தில் வேதகால ஆட்சிமுறை எய்திய வளர்ச்சியின் அளவைச் சுட்டிக்காட்டின. ஆனால், இதுமட்டுமன்று; அரச பதவியின் கோட்பாடொன்று உருவாக்கப் பட்டது; இருபத்தைந்து நூற்றாண்டிற்குப்பின் ஹாப்ஸ் என்பவரால் எடுத்து விளக்கப்பெற்ற சமுதாய ஒப்பந்தக் கோட் பாட்டை இது ஒத்திருந்தது. அரசியலுக்கு முந்திய ' இயற்கை நிலை'யில் உருவாகிய உடன்பாட்டில் அரச பதவியின் தோற்றம் விளக்கப்பெற்றது. அழிக்கமுடியாத இந்த ஒப்பந்தம், தன் விருப்பில் விட்டுக்கொடுத்த, சமூகத்தின் கூட்டு அதிகாரத்தை அரசருக்கு அளித்தது. அரசரின் திருமுழுக்காட்டுச் சடங்கின் நிறைவேற்றத்திற்கான சமயச் சடங்குமுறைத் தொகுப்பொன்று எழுந்தது. இப்பொழுது தூய்மையாகக் கருதப்பெற்றதும், மக்களின் நலத்திற்கும், பாதுகாப்பிற்கும், அமைதிக்குமுரியதுமான இவருடைய பதவி ஏற்புச் சடங்கை இது குறித்தது. ஓர் அரசர் தம் அதிகாரத்தைத் தவறான முறையில் பயன்படுத்தினால் அவர் பதவி நீக்கப்படலாம். எனவே, அரசபதவி ஒரு நிறுவனமென்ற முறையில் தத்துவ அடிப்படையையும், சமய ஒப்புதலையும், பொதுமக்களின் ஏற்பையும் இக் காலத்தில் பெற்றது.

நாட்டின் பல்வேறு பாகங்களிலும் முடியாட்சி அரசுகளோடு அடுத்தடுத்து முடியாட்சி அல்லாத குடியரசுகளும் தோன்றின. காஷ்மீருக்கப்பால் இமயமலைகளுக்கு வடக்கில் உள்ள பகுதிகளிலும் கங்கைச் சமவெளிக்கு வடக்கிலும், சிந்து சமவெளியிலும், சிந்து நதியின் கிளையாறுகள் பாயும் இடங்களிலும் கணராஷ்டிரங்கள் அல்லது இணைக்குடியரசுகள் இருந்தன. இத்தகைய குடியரசு ஒன்றில் கௌதமர் பிறந்தார். சாக்கியர், மல்லர், வஜ்ஜி, உத்ரகுரு, உத்ரமத்ரர் போன்ற இனங்களின் பெயர்களை இவை பெற்றிருந்தன. இவைகள் சிறிய குடியரசுகள்; சில சுவிட்ஜர் லாந்தின் கான்டனைக் காட்டிலும் சிறியவை. இவர்களின் சபை மண்டபங்களில் இவர்கள் அடிக்கடி கூடினார்கள்; இங்கு இனத்தின் உடல்வலியுடைய மனிதர்கள் எல்லாம் கூடி, பொதுப்படையாக, இனத்தின் வாழ்வையும் நலவாழ்வையும் பாதிக்கின்ற மிகச் சிறந்த நிகழ்வுகளை ஆய்ந்து முடிவு செய்தனர். தலைவர்கள் என்று இவர் கள் வழங்கிய பல நிருவாகிகளையும் இவர்கள் தேர்ந்தெடுத்தனர்; இனத்தின் அரசாங்கத்தை நடத்த ஒருவகையான கழகத்தையும் இவர்கள் அமைத்தார்கள். பழங்கால இந்தியா அறிந்திருந்த உணர்வுமிக்க அரசியற் குழுக்களாகவும், மிக்க உறுதியாக

இணைந்த பேராற்றல் மிக்க இனங்களாகவும் இக் குடியரசினங்கள் இருந்தன. பிராமண காலத்தில் இந்திய ஆட்சிமுறையின் வளர்ச்சிகள் இப்படித்தானிருந்தன.

## (இ) வரலாற்றுச் சார்புடைய முதல் பேரரசு

கி.மு. 700-லிருந்து 200வரையான பிற்காலத்தில், பேரரசின் குறிக்கோள், அதாவது, இந்தியா முழுவதும் ஓர் ஆட்சியின்கீழ் ஒன்றுபடவேண்டுமெனும் ஆட்சி முறையின் ஒரு புதிய குறிக்கோள் மேம்பாடுற்றது. இதை அரசர் 'திக்விஜயத்'தின் வழியாக அடையவேண்டும்; திசைகளை வென்று கைக்கொள்ளுதல் அல்லது உலகத்தை வென்று அடக்குதலை இச் சொல் குறிக்கிறது. 'சக்கரவர்த்தின்' அல்லது 'சாம்ராட்' அல்லது பேரரசர் என்ற பட்டத்தை ஏற்றுக்கொள்வதை இது குறிக்கும். நீண்ட காலமாகவே நிலைபெற்றுவிட்ட பெரிய, வலிமைமிக்க முடியாட்சி அரசுகளுக்குள் தனி முதன்மை நிலைக்கான போராட்டத்தின் விளைவு இதுவாகும். மேலும், பாரசீகப் பேரரசோடும் அலெக்சாந்தரோடுமான இந்தியாவின் தொடர்பு இதற்கான வழியை வகுத்தது. இங்கிருந்த சில இனக்குடியரசுகளின் கீழ்ப்படியாத எதிர்ப்பால் அலெக்சாந்தர் பஞ்சாப்பிற்கப்பால் செல்ல முடியாது போயிற்று. இவருடைய எடுத்துக்காட்டு இந்திய அரசர்களைப் பெரிதும் கவர்ந்தது. இவர் திரும்பிச் சென்றபின், சந்திரகுப்த மோரியர், இந்திய அரசியல் துறைச் சொல்லாகிய 'திக்விஜயம்' அல்லது திசைகளை வென்று கைக்கொள்ளுதலாகிய வென்று நாடு பிடிக்கும் தொழிலைத் தொடங்கினர். ஒரு பரந்த பேரரசிற்கு இவரை இது அதிபராக்கிற்று. வடஇந்தியா முழுவதையும், தென்னிந்திய தீபகற்பத்தையும், அலெக்சாந்தரின் கிரேக்கப் படைத் தலைவராகிய செலுக்கோஸ் நிகேட்டரிடமிருந்து இந்திய எல்லைகளுக்கப்பால் இருந்த பாமியன் கணவாயையும், பாமிர் மேட்டு நிலத்தையும் இவர் வென்று தம்கீழ்க் கொண்டுவந்தார். தம் தலைநகராகிய பாடலிபுத்திரத்திலிருந்து இப் பரந்த பேரரசை ஆட்சி செய்தார். பீகாரில் உள்ள தற்காலத்திய பாட்னுதான் இப் பாடலிபுத்திரம். இவருடைய மகன் பிந்துசாரரும் பேரன் அசோகரும் தொடர்ந்து இதை வலுப்படுத்தி இதனுடைய வலிமையையும் செழிப்பையும் பெருக்கினர்கள். அசோகரின் கல்வெட்டு ஆணைகளில் கூறப்பட்டுள்ள ஆசியா மைனர், எகிப்து, கிரீஸ் போன்ற நாடுகளின் அரசர்களாகிய சமகாலத்தவர்களுடன் இப் பேரரசு தொடர்புகொண்டிருந்தது.

எண்ணற்ற திறை செலுத்தும் தன்னுட்சி அரசுகளை மோரியப் பரரசு கொண்டிருந்தது. இவைகளின் அரசர்கள் மோரிய

மேலுரிமை அரசருக்குக் கடப்பாடுடையவர்களாக இருந்தனர். இறைமை, அரசியற் புகழ் ஆகியவற்றில் மிக உயர்ந்த நிலைக்கு உயர்த்தப்பெற்ற பிராமண காலத்திய அரசர்தான் இப்போதைய பேரரசர். இவருக்குத் தூய்மையின் கீர்த்தி வழங்கப்பெற்றது. இவருடைய பதவியும் தெய்விக இசைவாணை பெற்றது. சமூக ஒழுக்கமுறையின் காப்பாளராகவும், மனித இனப் பாதுகாவலராகவும், 'காலத்தைப் படைப்பவ'ராகவும் இவர் தோற்றமளித்தார். இவருக்கு அளிக்கப்பெற்ற இத்தகைய பெருமையோடும், தெய்வ விருப்பிலிருந்து பெற்ற இவருடைய இறைமை அதிகாரத்தோடும் அரசர் முழு வல்லரசராகலாம். இத்தகைய விளைவைத் தடுப்பதற்கு, சமூக இசைவாணையோடும், வலிமையான சமய முத்திரையோடும் அரசரின் கடமைகளும் குறிக்கோள்களும், அரசாங்க அதிகாரத்தின் பயன்களும் வகுக்கப்பெற்றன. அரசர் சிறு வயதிலிருந்தே கவனமாகப் பயிற்சிபெற வேண்டும். அரசரின் குறிக்கோள்களும் கடமைகளும் தன்னலமற்ற உணர்ச்சியோடு மக்களுக்குச் சேவை செய்யவேண்டுமென்பதற்காகவே வலியுறுத்தப்பெற்றன. தமக்கின்றி மக்களின் நலவாழ்வுக்கெனப் பயன்படுத்துவதற்கு இவருடைய பதவியும் அதிகாரமும் தூய்மையான பொறுப்பாகக் கருதப்பெற்றன. இதை மனத்திற்கொண்டுதான் முடிசூட்டு விழாவின்பொழுது இவர் ஓர் உறுதிப் பிரமாணம் செய்யவேண்டியிருந்தது. இவருடைய அதிகாரத்திற்கும் பதவிக்கும் பொதுவில் சடங்கு முறையில் இது சமய ஒப்புதலை அளித்தது. சமய அடிப்படையில் எழுந்த சட்டங்களுக்கு ஒப்பவும், சமூகங்கள், வகுப்புகள் ஆகியவற்றின் மீறமுடியாத மரபுகளுக்கும் பழக்கங்களுக்கும் ஒப்பவும் இவர் ஆட்சி செய்யவேண்டியிருந்தது. ஆகவே, அரசரின் முழுமையான அதிகாரமும் தனியாட்சியும், சமயத்தின் கட்டளைகளாலும், நிலைபெற்ற சட்டங்களாலும், பழக்கங்களாலும், அவைகளுக்கு முரணாக இவர் செயல்படலாகாதென்ற சமூக விருப்பாலும் கட்டுப்படுத்தப்பெற்றுப் பரவலாக்கப்பெற்றன. இவருடைய கடமைகளில் மந்திரி பரிஷத் என்னும் ஓர் அமைச்சவையினர் இவருக்கு உதவினர். அரசாங்கத்தின் பல்வேறு துறைகளை அமைச்சவை கட்டுப்படுத்திச் செயலாட்சி செய்தது. தனியாட்சியிலும் தங்குதடையற்ற இன்ப இழைவிலும் இவர் நாட்டங்கொண்டால், அவை அரசர்மீது ஒரு நிலவரமாக்கும் ஆற்றலைச் செயல்படுத்தும்.

**(ஈ) அசோகரின் அரசபதவியும் மோரிய அரசாங்கமும்**

பேரரசுக் குறிக்கோளின் எழுச்சியோடு குடியரசு மரபுகள் நற்பெயர் இழந்தன. நடைமுறையில் எல்லா இனக் குடியரசு

களும் மோரியப் பேரரசு முறையில் இணைக்கப்பட்டன. பேரரசரின் மேதகு நிலையை ஏற்றுக்கொண்டு தன்னாட்சிப் பிரிவுகளாக இருக்க அனுமதிக்கப்பட்டன. எனவே, அரச இறைமையின் அரசியற் குறிக்கோள் அல்லது அரசரின் எங்கும் நிறைந்த இறைமை வெற்றியோடு வெளிப்பட்டது. அரசின் சின்னமாக அரசர் இருந்தார். அரசு எங்கும் பரவியுள்ள பேரரசைக் குறிப்பிட்டது. ஆகையால், அரச இறைமை, இதற்குமுன் பெற்றிராத இயல்பையும் தகுதித் திறத்தையும் அடைந்தது. அசோகரைப் போல ஓர் அரசர், மக்கள் சமூக நடத்தையையும் சமூக ஒழுக்கத்தையும் ஒழுங்குபடுத்த முற்படலாம். இவருடைய அரசுத்துறைகளின் வழியாக நேர்மையானதை அறிவித்துச் செயல்படுத்தவும், நேர்மையற்றதைத் தவிர்க்கவும் இவரால் முடியும்; இவர் தம் குடிமக்களைக் குழந்தைகளாகக் கருதக்கூடும். இவர் 'கடவுளர்களின் அன்பிற்குரியவர்' என்பதையும், அரசர்களில் பரந்த உள்ளங்கொண்டவர் என்பதையும் இவர் எல்லோர் மீதும் வலியுறுத்த முடியும். புத்தமதம், சமணமதம், பிராமணச் சார்புடைய இந்துமதம் போன்ற பல்வேறு சமயங்களை மக்கள் பின்பற்றிய ஒரு பேரரசில் சமய 'ஒருமனப்பாட்டின்' முக்கியத்துவத்தை இவர் அறிந்திருந்தார். இதை இவர் கண்டிப்போடு செயல்படுத்தினார். இவர் வகுத்தளித்த அரசாங்கச் செயல்பாட்டின் பாங்கும், அரசபதவியின் குறிக்கோளும் இவருக்குப் பின் நீண்ட காலம் நிலைத்திருந்தது. அது பழங்கால இந்திய ஆட்சி முறையின் அதிகார முத்திரையாயிற்று.

மோரியரின்கீழ் இருந்த அரசாங்கம், மையப்படுத்தப்பெற்றதும், நன்கு சமன் பெற்றதுமான மத்திய (மாநில) தல ஆட்சிகளைக் கொண்டதாயிற்று. அடித்தளங்களை மாநிலங்களிலும் உச்சியைத் தலைநகரிலும் கொண்ட படிமுறையில் அமைக்கப்பட்ட, பலதுறைகளைக் கொண்டதாக மத்திய ஆட்சி இருந்தது. நகருக்கும் நாட்டுப்புறப்பகுதிக்குமெனத் தல ஆட்சி இரண்டு வகைகளாகப் பிரிந்திருந்தது. சந்திரகுப்தரின் அரசவையில் செலுக்கஸ் நிகேட்டரின் தூதராக இருந்த மெகஸ்தனிஸ் என்பவரால் விவரிக்கப்பட்டிருக்கும் சந்திரகுப்தரின் தலைநகராகிய பாடலிபுத்திரத்தின் நகராட்சிபற்றிய விரிவான செய்திகள் இக்கால முறையில் நகராட்சி அமைப்பின் விரிவான மக்களாட்சி முறை என்பதற்கு எவ்வித ஐயப்பாடுமில்லை. பேரரசின் மற்ற நகரங்களுக்குத் தலைநகரம் இந்த முறையை அளித்ததென்றும் கருதலாம். மனிதர்களுக்கும் விலங்குகளுக்கும் வைத்தியசாலைகள், கிணறுகள், குளங்கள், இருபக்கங்களிலும் நிழல் தரும் மரங்களைக்கொண்ட சாலைகள், பயணிகள் தங்குமிடங்கள், தூரத்தைக் குறிக்க மைல் கம்பங்கள், பள்ளிகள், பொதுப் பூங்காக்கள் ஆகிய

பொதுப் பயன்பாட்டுப் பணிகள் பரவலாக அமைக்கப்பட்டன. குணவியல்பில் முடியாட்சியையும் தகுதித்திறனில் எங்கும் பரவி நின்ற இறைமையையும் அரசு கொண்டிருந்தாலும், இப்பொழுது நாம் வழங்கும் பொதுநல வாழ்வு அரசாக இது மாறிற்று. மன்னர்கள் பின்பற்றுவதற்காகப் பின்வரும் தலைமுறையினருக்கு இம் மரபுகள் அளிக்கப்பட்டன.

**(உ) சகர்களின் பேரரசு**

மோரியர்களுக்குப்பின், சுங்கர், கண்வர், சாதவாகனர், குஷாணர் ஆகியோர் கி.மு. இரண்டாம் நூற்றூண்டிற்கும் கி.பி. நான்காம் நூற்றூண்டிற்கும் இடையில் பேரரசுகளை அமைத்துக் கொண்டனர். ஆனால், இவைகளில் எதுவும் மோரியப் பேரரசைப் போல் நீண்ட காலம் இருக்கவும் இல்லை அல்லது அந்த அளவு இந்தியாவில் பரவியதும் இல்லை. பொதுவாகக் கூறினால், பிராமண சமயம் அல்லது புத்த சமயத்தைப் பின்பற்றுபவர்கள் என்ற முறையில் இவைகளின் அரசர்கள், அரசின் கொள்கைகளை வகுப்பதிலும் செயல்படுத்துவதிலும், தம் சொந்தச் சமயத்தின் குறிக்கோள்களை வளர்க்க முயல்வதிலும் கட்சி உணர்ச்சியைக் காட்டினர். இக் காலத்தின் சில அரசர்கள், 'தேவ புத்ரா' அல்லது கடவுளின் மைந்தர், 'தேவ விரதா' அல்லது கடவுளைப் பின்பற்றுபவர், 'மகாபிராமணு' அல்லது பெரிய பிராமணர் என்ற பட்டங்களை ஏற்றனர். அரசியற் கோட்பாட்டில், இப் பொழுது, அரசர்கள், 'மனித உருவில் பெரிய கடவுளர்கள்' என்று விவரிக்கப்பட்டிருந்தனர். இக் காலத்தின்போது அரசின் கட்சிச் சார்புடைய உணர்ச்சியை இந்த வளர்ச்சிகள் சுட்டிக் காட்டின. கோட்பாட்டின்படி அரசு, இப்பொழுது, அரசர், அமைச்சு, நட்பு அல்லது நட்பரசுகள், பொருள், சட்டமுறையும் நீதிமுறையும், அரண்கள் அல்லது பாதுகாப்புப் பணிகளும் படைகளும் ஆகிய ஏழு கூறுகளைக் கொண்டிருந்தது. இப்பொழுது அரசுகளுக்கிடையேயான உறவுகள்பற்றித் திட்டவட்டமான கருத்துகள் வளர்ந்துவிட்டன. இன்று நாம் அரச தந்திரமென வழங்குவது சில குறிக்கோள்களை எய்தியது; சில முறைகளையும் பின்பற்றியது. அரசுகளுக்கிடையிலான உறவுகளில் பொது மக்களின் நல்வாழ்வுபற்றிய அக்கறைகளும் நெறிமுறை மெய்ப்பிப்பும் 'காட்டின் சட்டம்' அல்லது 'மச்ச நியாயம்' என்றும் அல்லது வலிந்தோர் மெலிந்தோரைக் கொன்று வாழவேண்டுமென்றும் விளக்கப்பட்டுள்ளதைக் கட்டுப்படுத்தின. ஆகையால், கி.பி. மூன்றும் நூற்றூண்டின் இறுதியில், கருத்திலும் செயற்பாட்டிலும் இந்திய ஆட்சிமுறை வியத்தகு செழிப்பையும் முதிர்ச்சியையும் பெற்றது.

**(ஊ) குப்தப் பேரரசு கோட்பாடு — அரசர்களின் இறை உரிமையும் சமயப் பொறையும்**

கி.பி. நான்காம் நூற்றாண்டின் தொடக்கத்தில் குப்தர்கள் தம் பேரரசைத் தோற்றுவித்தனர். மோரியப் பேரரசின் அருஞ் செயல்களைப் பல வழிகளில் இது ஒத்திருந்ததோடன்றி மிஞ்சியும் விட்டது. இவர்களுடைய ஆட்சி இருநூறு ஆண்டிற்குமேல் இருந்தது. இக் காலத்தின்போது மறுபடியும் இந்தியா முழுவதும் ஓர் அரசியற் பிரிவாக இணைக்கப்பட்டது. முன் இருந்ததைப் போல, பேரரசு தோற்றத்தில் ஒரு திறை செலுத்தும் முறையாகத் தான் இருந்தது. இது பெற்றிருந்த அரசாங்கம் திறமைக்கும் பொதுநல வாழ்வு அரசிற்கும் ஒரு முன்மாதிரியாக ஆயிற்று. இதன் அறிவொளி சார்ந்த கொள்கை எல்லாச் சமயங்களுக்கும் பொறையையும், எல்லாக் கலைகளுக்கும் அறிவியல்களுக்கும் ஆதரவையும், வறியர்களுக்கும் துணையற்றவர்களுக்கும் ஆதரவை யும் காப்பையும் அளித்தது. பழங்கால இந்தியாவின் பொற் காலத்தை இது தோற்றுவித்தது. ஆகையால், மனித உருவில் கடவுளென விவரிக்கப்பெற்றிருந்ததைப்போல மெய்யாகவே மக்களால் அரசர் மதிக்கப்பெற்றார். ஏனெனில், எல்லா மக்களின் சமூக நலனையும் அடைவதற்கான மறைவாற்றலான கருவியாக இவர் இருந்தார். மோரியர் காலத்தில் இருந்ததைப் போல், அரசரின் வழியாக மறுபடியும் அரசு, ஒரு பொதுநல வாழ்வு அரசாகவும், தெய்விக விருப்பாற்றலின் ஓர் அடையாள மாகவும் ஆயிற்று. இக் காலங்களிலெல்லாம், பேரரசு எழுச்சியுற்று வீழ்ச்சியுற்றபொழுது, கிராமங்கள் தம் தன்னாட்சி இயல்புகளைத் தக்கவைத்துக்கொண்டன. தம் வாழ்க்கையிலும் பொருளா தாரத்திலும் அமைதிக் குலைவில்லாமல் சிறிய குடியரசு களாகச் செயல்பட்டன. காலத்திற்குக் காலம் இவை முதிர்ச்சி யிலும் சிறப்பிலும் வளர்ச்சி பெற்றன. அமைதி, பாதுகாப்பு ஆகியவற்றின் சிறிய சுவர்க்கமாக இவை இருந்துவந்தன. ஏனெனில், எந்த உருவிலும் கிராமங்களின் சூறையாட்டையும் அட்டூழியத்தையும் போர், அரச தந்திரம் ஆகியவைபற்றிய சட்டங்கள் கண்டிப்பாகத் தடை செய்தன. எனவே, குப்தப் பேரரசின் இறுதியில் இந்திய ஆட்சி முறையின் வளர்ச்சியை ஐந்து சிறந்த இயல்புகள் குறித்தன. இவை: பேரரசின் குறிக் கோள், தெய்விக விருப்பாற்றலின் அடையாளமாக அரசபதவி, சமயப் பொறைக் கொள்கை, கிராமத் தன்னாட்சி நிறுவனம், பொதுநல வாழ்வு அரசின் மரபுகள், அரசியல் மரபுகள், நிறுவனங்கள், குறிக்கோள்கள் ஆகியவை பிற்காலத்திற்கான அமைப்பை அளித்தன.

## இந்தோ-இஸ்லாமிய ஆட்சி முறையின் தோற்றம்

ஆரும் நூற்ருண்டின் இறுதியில் குப்தப் பேரரசு வீழ்ச்சியடைந்தது. ஏறத்தாழ ஏழாம் நூற்ருண்டின் மத்தியப் பகுதியில் இவர்களுக்குப்பின் வடஇந்தியாவில் ஹர்ஷரும், தென்னிந்தியாவில் புலிகேசியும் பேரரசை அமைத்தார்கள். ஆயிரம் ஆண்டிற்குப் பின் முகலாயர் காலம்வரையில் வடஇந்தியாவும் தென்னிந்தியாவும் மறுபடியும் ஓர் அரசரின்கீழ் ஐக்கியப்படவில்லே. நெடுங் காலத்திற்குப்பின், முஸ்லிம்கள் இந்தியாவில் நிலேயாக நாடுகளேப் படைத்துக்கொண்டபொழுதும், இந்த நாட்டைத் தம் சொந்த நாடாகக்கொண்டபொழுதும், நல்லரசாங்கத்திற்காக இவர்கள் பயன்படுத்திக்கொண்ட இந்தியாவின் நிறுவனங்களாலும் அரசியல் மரபுகளாலும் இவர்கள் விளேவாட்சிக்குட்படுத்தப் பட்டார்கள். இங்குதான் இந்தோ-இஸ்லாமிய ஆட்சிமுறையின் தோற்றம் (ஏற்பட்டது) இருந்தது. கஜினி முகம்மது, அலாவுத்தீன் கில்ஜி, ஷெர்ஷா போன்ற வெற்றியாளர்களும் அரசர்களும் அடித்தளங்களே அமைத்தனர். இந்த அமைப்பை அக்பர் கட்டிமுடித்தார். முஸ்லிம்களின் கூர்மதியும் இந்துக்களின் ஒத்துழைப்பும், கலேயும், கட்டடக் கலேயும், மொழியும் இலக்கியமும் போன்ற துறைகளில் அரசியல் துறையில் இருந்ததுபோல் ஓர் இணேப்பாக்கத்தைப் பெற்றன. இவ்விணேப்பாக்கம் வேறெதையும்விடக் கடந்த காலங்களில் இந்தியாவில் இந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் இடையில் இருந்த உறவு முறைகளின் தன்மையை வெளிப்படுத்துகிறது. மொழித்துறையில் இக் கூட்டு உருதுவின் உருவை ஏற்றது. கலேத்துறையில் முகலாய-இராஜ புத்திர ஓவியங்களாகவும், கட்டடக் கலேயில் தாஜ்மகாலாகவும், சமயத்துறையில் பக்தி மார்க்கமாகவும் சீக்கிய மதமாகவும், அரசாங்கத்துறையில் இந்தோ-இஸ்லாமிய ஆட்சிமுறையாகவும் இது உருப்பெற்றது. சமயம், அரசபதவி ஆகிய குறுகிய எல்லேக் கப்பால் நோக்கிய முஸ்லிம் அரசர்களின் கூர்மதிக்கு இது ஒரு நிலேயான சான்ருகிறது. இந்துச் சார்புடைய அல்லது இஸ்லாமியச் சார்புடையதாக இல்லாத ஒரு பொதுவான, ஆளுல், இவ்விரண்டின் இயல்புகளேயும் கொண்ட ஆட்சிமுறையொன்றை அவர்கள் நிறுவினர்.

# 9. இஸ்லாமிற்கு முந்திய இந்திய ஆட்சி அமைப்பு முறையின் இயல்புகளும் சூழலும்

முஸ்லிம்கள் இந்தியாவிற்குள் நுழைந்தபொழுது கண்ட பழங்கால இந்திய ஆட்சி முறையின் தோற்றம், கூறுகள் ஆகியவற்றின் சுருக்கமான மறு-ஆய்வோடு இந்தோ-இஸ்லாமிய ஆட்சிமுறையின் ஆய்வு தொடங்கவேண்டும். ஒரு தொலைக் காட்சிக்காக இந்த ஆட்சிமுறை வளர்ந்து செயல்பட்ட சூழ் நிலையையும் வரையவேண்டும். இந்தியாவின் கடந்தகால வரலாற் றில் நாம் நெடுந்தொலைவு செல்லவேண்டியதில்லை. ஆனால், இஸ்லாமின் வருகைக்குப்பின் ஏற்பட்ட விளைவுகளை நன்றாக அறிந்துகொள்வதற்காக ஏழாம், எட்டாம் நூற்றாண்டுகளில் இந்தியாவின் அரசியல் நிலையும், அரசு எவ்வாறு அமைக்கப் பெற்றதென்பதும் செயல்பட்டதென்பதும் சிறப்பிற்குரியதாக இருக்கும். சில குறிப்பிட்ட அரசியற் கருத்துக்களையும் நிறுவனங் களையும் இஸ்லாம் இந்தியாவில் புகுத்திற்று. இவைகளின் பயனுடைமையும், இவைகள் உண்டாக்கிய எதிர் வினைகளும் அந்தக் காலத்தில் இந்தியாவில் என்ன காணப்பட்டது என்ற தறுவாயில் மதிப்பீடு செய்யக்கூடும். ஏழாம் எட்டாம் நூற்றாண்டு களில் இந்தியாவின் நிறுவனங்களும் அரசியற் குறிக்கோள்களும் எந்த அளவிற்கு நாட்டின் மிகச் சிறந்த நலன்களுக்குச் செயல் பட்டன என்பதும், இதனுடைய மக்களின் சுதந்திரத்தை எப்படிப் பேணின என்பதும், வடஇந்தியாவை வெல்வதிலும் இஸ்லாமிய ஆட்சியை ஏற்படுத்துவதிலும் இதனுடைய வெற்றிக் குதவிய கூறுகள் என்ன என்பதும் நம் ஆய்வின் நோக்கங்களுக்காக ஒரு புதுமுகப் பயிற்சியாக இருக்கலாம். அதாவது, இந்தியா விற்குள் இஸ்லாமின் வருகைக்கு வசதியளித்த கூறுகளையும், வடஇந்திய அரசியற் சூழ்நிலையில் இக் கூறுகள் செயல்பட்டனவா என்பதையும் நாம் முதலில் அறிந்துகொள்ள வேண்டும்.

## ஹர்ஷவர்த்தனரின் மறைவுக்குப்பின் இந்தியா

ஹர்ஷவர்த்தனரின் மறைவோடு (கி.பி. 647) வடஇந்தியா அவரின்கீழ் அடைந்திருந்த அரசியல் ஒற்றுமையை இழந்தது. வடஇந்தியா முழுவதன் மேலாட்சித் தலைவர் அல்லது 'சகல-உத்ர-பதேஸ்வரர்' என ஹர்ஷர் பெயர் பெற்றார். வடஇந்தியா முழுவதிலும் அடங்கியிருந்த நிலமானிய அல்லது திறை செலுத்தும் முறைகளின் தலைவராக அவர் இருந்தார் என்பதை இது குறிப்பிட்டது. ஆனல், ஹர்ஷர் அல்லது குப்தர்கள் நிலைத்திருக்கக் கூடிய மையப்படுத்தப்பெற்ற அரசாங்கத்தை நிறுவவில்லை. இவர்கள் ஏற்படுத்திய அரசாங்க முறை ஒரு வலிமைமிக்க அரசரின் மரணத்தை அல்லது வலிமைமிக்க ஒருவரின் தேவைநிலையை ஒழித்து இது நிலைபெற முடியவில்லை. உண்மையில், பழங்கால இந்தியாவின் எல்லா அரசியல் முறைகளும் மோரியரால், ஹர்ஷரால் அல்லது குப்தர்களால் நிறுவப்பட்டதாயினும் இல்லையென்றாலும், அவைகள் திறை செலுத்தும் முறைகளாக அல்லது செல்வாக்கு மண்டலமாக அல்லது கௌடில்யரின் மரபு வழிச் சொற்றொடரில் மண்டலமாக ஒருமை குலைந்து, தனிப்பட்ட தளர்வினல் வருந்தியது. ஒரு மண்டலத்தின் அல்லது திறை செலுத்தும் முறையின் அடிப்படையான உண்மை வலிமை வாய்ந்த ஓர் அரசரின் மேலாட்சியாகும். குறைந்த வலிமையுள்ள அரசர்களும் ஆட்சியாளர்களும் இவருக்குக் கடப்பாடு கொண்டிருந்தனர். இந்தக் கீழான தலைவர்கள் தம் அரசுகளைப் பேணிக் கொண்டனர். அவர்களின் தனி நிலையைத் தக்கவைத்துக்கொண்டனர். மேலாளரின் நாட்டின் இணைந்த ஒரு பகுதியாகவன்றி அதன் ஓர் இணைப்பாகத் தொடர்ந்து அதை ஆட்சி செய்தனர். மையப்படுத்தப்படுதலை நோக்கிய எல்லா முயற்சிகளையும் இந்நிலை தடுத்தது. ஒரு மேலாளரின் ஆள்நிலப் பரப்பில் பிரிவுகளைப் பிரித்த இடராக இயல்தடைகளால் மையப்படுத்தப்படுதல் மேலும் இடையூறுக்குள்ளாயிற்று. இருந்துங்கூட, எவ்வாருயினும், வடஇந்தியா அரசு அற்ற நிலையிலோ குழப்பத்திலோ ஆழ்ந்து விடவில்லை. ஹர்ஷரின் மரணத்திற்குப்பின் குறுநில மன்னர்கள் சுதந்திரம் பெற்று அதற்குமுன் இருந்ததுபோல் தம் நாட்டை ஆண்டனர்.

நேர்மாருக, ஆரும் நூற்ருண்டின் நடுப்பகுதியிலிருந்து பதின்மூன்ரும் நூற்ருண்டின் இறுதிவரை தக்காணம் ஒரு சுயேச்சையான, அமைதியான அரசியல் வாழ்க்கையைப் பெற்றிருந்தது.[1]

---

[1]H. C. A. Roy., 'A Dynastic History of Northern India,' pp. XXXIV—XXXV.

ஹர்ஷரின் திறை செலுத்தும் முறை அல்லது மண்டலத்தோடு இதே காலத்தில் புலிகேசியின்கீழ் சாளுக்கியர்களின் மண்டலம் எப்படி இருந்தது என்பதையும், வாகாடகர், சத்திரபர்களைப் போலப் பல்வேறு மண்டலங்களை ஒன்றன்பின் ஒன்றாக அழித்துக் குப்தர்கள் எப்படிப் படிப்படியாகத் தம் பேரரசை நிறுவினர் என்பதையும் முந்திய அதிகாரத்தில் நாம் குறிப்பிட்டுள்ளோம். எனவே, ஹர்ஷரின் மரணத்திற்குப்பின் வடக்கு மண்டலத்தின் அழிவு இந்தியா முழுவதிலும் அரசியல் வாழ்க்கையைச் சிதைக்க முற்படவில்லை என்பது தெளிவாக இருப்பினும், ஹர்ஷரின் மரணத் திற்குப்பின் வடஇந்தியாவின் சிதைவு கட்டுமீறிய மாற்றங்களுக்கு ஒரு முன்விளைவாக இருந்தது. அரைநூற்றாண்டிற்குச் சற்று அதிகமாக, கி.பி. 712-ல் அரேபியர்கள் சிந்து நாட்டையும் மூல்தானையும் கைப்பற்றினர். இஸ்லாம் முதல் முறையாக இந்தியாவிற்குள் நுழைந்தது.

உடனடியாக, பால்க் (Balk), ஆப்கானிஸ்தானம் போன்ற இந்தியாவின் வடமேற்குப் பகுதியின் புறஅரண்கள் அழிந்தன. இதே சமயத்தில் ஹில்மாண்டிற்கும் ஆக்ஸஸிற்கும் இடையில் ஒரு வலிமைமிக்க புயல் உருவாகிக்கொண்டிருந்தது. வடஇந்தியா வில் நிலவிய நிலைகளைக்கொண்டு இது செய்த அழிவை இத் தறுவாயில் மிக நன்றாக அறிய முடியும். சிறிய அரசுகளின் போட்டியின் காரணமாக, இந்த நூற்றாண்டுகளின்போது, அரசற்ற நிலை, உள்நாட்டுப் போர் ஆகியவற்றின் நடுக்கினால் வடஇந்தியா துடிதுடித்தது. ஹர்ஷப் பேரரசின் இச் சிதைவு பொதுவான அதிகாரப் போராட்டத்தைத் தூண்டியது. காஷ்மீரிலிருந்து மகாராஷ்டிரம் வரைக்கும், சிந்துவிலிருந்து இமயமலைகள் வரைக்கும் தனி முதன்மை நிலைக்கான இப் போராட்டம் காணப்பட்டது. திக்விஜயம், மண்டலம் போன்ற மரபுகளிலிருந்து இக் காட்சி பிரிக்க முடியாததாக இருந்தது. இதன் விளைவான குழப்பத்திலிருந்து நான்கு வலிமையான மண்டலங்கள் மெதுவாகத் தோன்றின. அவை: காஷ்மீர், கன்னோஜ், வங்காளம், மகாராஷ்டிரம்.

## இராஜபுத்திரர்களின் எழுச்சி

பல்வேறு கூறுகளின் செயற்பாட்டால் மிகு விரைவுபடுத்தப் பெற்ற புதிய அரசியற் பிரிவுகளாக இவைகள் இருந்தன. இவை களில் சில பார்வைக்கு முதல் முறையாகத் தோன்றின. இராஜ புத்திரர்கள் இந்தியாவில் வசித்தவர்களாக இருந்தாலும், அவர் களைப்பற்றி இதுவரை அதிகமாகக் கேள்விப்பட்டதில்லை. இராஜ

புத்திரர்களின் எழுச்சி மற்றொரு கூறாகும். அவர்களுடைய தோற்றம்பற்றிய கருத்தும் இங்கு அவசியமாகும். ஆரும் நூற்றாண்டில் இந்தியாவிற்குள் நுழைந்த வெளியார்கள் இவர்கள் என டோடும் (Tod), இன்னும் பலரும் நம்மை நம்பச் செய்தனர். ராய்பகதூர் ஜி. எச். ஓஜா (G. H. Ojha) என்பாரின் ஆராய்ச்சிகளுக்குப் பிறகு இத்தகைய கோட்பாடு நிலைக்கக்கூடியதாகத் தோன்றவில்லை. இராஜபுத்திரர்களின் தோற்றத்தின் வரலாற்றைப் புதிய ஆதாரங்களோடு இவர் அளிக்கிறார்.

மத்திய காலத்திய இந்திய வரலாற்றுக் குறிப்புகளை வீரம், தன்மறுப்பு ஆகியவற்றால் நிறைக்கும் இராஜபுத்திர இனத்தார் முற்றிலும் அயற் பண்புடையவர்களல்லர். பேரரச குப்தர்களின் காலத்திய அர்ஜுனையர்கள், யவ்தேயர்கள் ஆகியோரைப்போல் இவர்களும் பழமையான இனத்தார். மோரியர் காலத்தில் சகர், மல்லர், லிச்சாவிகள் போன்றோர் அவர்களுடைய மூலத்தோற்றத்திலும், இனஅமைப்பிலும், உணர்விலும் மத்திய காலத்திய இராஜபுத்திரர்களை ஒத்திருந்தனர். ஹர்ஷர் காலத்தில் இவர்கள் மறைந்துபோய் இருக்கமுடியாது. மேலும், பழங்கால அரச குலங்கள் தம்மை எப்பொழுதும் க்ஷத்திரியர்களென்று உரிமை கொண்டாடிக்கொண்டு, தம்மைச் சார்ந்திருந்த பெரிய குடும்பங்களோடும் உறவினர்களோடும் காலப்போக்கில் அரசியல் நலன்களால் தனிச் சிறப்புநிலையடைந்த ஒரு தனிப்பட்ட சமூகத் தனி மதிப்புநிலையோடு போதுமான அளவில் பெரிய குழுக்களாக விரிவடைந்தனர்.

இந் நிகழ்வு, இராஜபுத்திர இனங்களின் அமைவிற்கும் வளர்ச்சிக்கும் உதவியிருக்க வேண்டும். மேலும், ஹர்ஷரின் காலத்திற்குப் பல நூற்றாண்டுகளுக்குமுன் சகர், ஹூணர் போன்றோர் இந்தியாவிற்குள் நுழைந்து நாட்டின் பல்வேறு பகுதிகளில் தம் ஆட்சியை ஏற்படுத்தினார்கள். ஆனால், முதலில் இவர்கள் வெற்றியாளர்களாகவும் வெளிநாட்டவர்களாகவும் வந்தாலும், இவர்கள் இறுதியில் பிராமண சமூக அமைப்பில் சேர்த்துக் கொள்ளப்பெற்றனர். இதன் விளைவாக, போர்ப் பழக்கங்களில் க்ஷத்திரியர்களைப்போல் தோற்றமளித்தவர்களாகிய இவ் வெளிநாட்டினர்களுக்கும் க்ஷத்திரியர்களுக்குமிடையில் மண-இணைப்புறவுகள் ஏற்பட்டிருக்கவேண்டும். வெளியாரோடு க்ஷத்திரியர்களின் இக் கலப்பு ஒரு தனிப்பட்ட வகுப்பைத் தோற்றுவித்திருக்க வேண்டும். இவர்களுடைய இராணுவ, அரசியல் எழுச்சியின் விளைவாக, இராஜபுத்திரர் அல்லது அரசர்களின் புத்திரர் என்ற புதிய பெயரின்கீழ் இணையற்ற சமூக ஏற்பையும் பெருமையையும் இவர்கள் பெற்றிருக்கவேண்டும்.

இச் செய்திகளை மனத்திற்கொண்டு, (மத்திய) இடைக்கால இந்தியாவின் அரசியல் வரலாற்றில் ஏன் இராஜபுத்திரர் சிறப்பான பங்கு பெற்றனர் என்பதை நாம் அறியக்கூடும். ஹர்ஷரின் பேரரசு சிதைந்த காலத்திற்குப்பின் அதிகாரப் போட்டியொன்று எழுந்தது. திக்விஜயத்தை அல்லது புதிய இடங்களை வென்று கீழ்ப்படுத்துவதைச் சிறப்பித்த இவர்களுடைய நாட்டின் அரசியல் மரபுகளாலும், இவர்களுடைய சாதியின் குறிக்கோள்களாலும் இவ்வரசர்கள் உள்ளூக்கம் பெற்றனர். குல அமைப்பில் இவர்களுடைய உறவினர்களாலும் கடப்பாடுடைய போர்த்திறம்மிக்க இவர்களைப் பின்பற்றுபவர்களாலும் உதவிபெற்ற இவ்வரசர்கள், தங்களுக்கெனச் சுதந்திரமான முடியரசுகளை வென்று ஏற்படுத்திக்கொள்வது எளிதாயிற்று. எனவே, பல்வேறு இராஜபுத்திரக் குலங்களால் நிறுவப்பெற்ற சிறிய அரசுகள் வடஇந்தியாவின் எல்லாப் பாகங்களிலும் எழுந்தன. இவர்களின்மீது முஸ்லிம் படையெழுச்சி நடந்தபொழுது, இவர்களுக்கிடையிலான போட்டி மனப்பான்மையும் மேலாட்சிக்கான போரும் இவர்களுக்கு ஓய்வையும், செழிப்பையும், ஒற்றுமையையும் அளிக்கவில்லை. போதிய காலத்தோடும் தக்க தலைமையோடும் ஹர்ஷரின் பேரரசைப்போல் ஒன்றை நிறுவியிருக்கலாம். இசைவிணைவற்ற அரசியல் ஆற்றல்கள், விரிவான ஒருங்கிணைந்த கட்டுப்பாட்டுச் செயலாட்சிமுறையாகப் பொருத்தப்பட்டு உறுதியாக இணைக்கப் பட்டன. கூர்ஜரப் பிரதிஹாரர்களின் எழுச்சி, உண்மையில் இத்தகைய முறையை அமைப்பதில் வெற்றிபெற்றது. இவர்களுடைய நாடுகள் பெரும்பாலும் வடஇந்தியா முழுவதையும் கொண்டிருந்தன. ஆனுல், இது குறைந்த காலம்தான் இருந்தது. இறுதியில் நாடு அரசியல் நிலையில்லாமை நிலையில் ஆழ்ந்தது. இராஜபுத்திரர்களின் குலவுணர்ச்சி இதற்குப் பெருமளவு உதவியது. ஆகவே, முஸ்லிம்கள் படையெடுத்தபொழுது, பல இராஜபுத்திர அரசர்களின் தனித்த எதிர்ப்பை அவர்கள் சமாளித்தனர். நாட்டில் மற்றவர்களிடம் காணமுடியாத இணையற்ற வீரத்தோடு இராஜபுத்திரர்கள் போரிட்டனர். ஆனுல், ஓர் ஐக்கிய முன்னணியை வளர்க்க இவர்கள் தவறிவிட்டனர். ஆகவே, இவர்களிடம் இடுக்கண் அழியாத வீரமும் தடங்கலற்ற தியாகமும் இருந்தபோதிலும் இவர்கள் வீழ்ச்சியுற்றனர். முஸ்லிம்களாக இருந்த வெளியாருக்கும் உள்நாட்டினராகிய இராஜபுத்திரர்களுக்குமிடையில் இது அரசியல் தனி முதன்மை நிலைக்கான போராக இருந்தது. சமய வெறியோடும் நன்கமைந்த ஒற்றுமையோடும் ஒருசாரார் போரிட்டனர். மற்ருெரு சாரார் குறுகிய தல நோக்கத்தோடு, அமைவற்றும் ஒற்றுமையற்றும் போரிட்டனர். இராஜபுத்திர-முஸ்லிம் தனிமுதன்மை நிலைக்கான போராட்டத்தின் கதை இதுதான்,

## கூர்ஜரப் பிரதிஹாரர், பாலர், ராஷ்டிரகூடர் ஆகியோருக்கிடையிலான போட்டி மனப்பான்மை

ஹர்ஷரின் மரணத்திற்குப்பின் திரை விலகும்பொழுது, கன்னோஜில் நிலைபெற்றிருந்த கூர்ஜரப் பிரதிஹாரர்களின் உறுதியான தோற்றமுடைய அரசியல் மேலாட்சிக்குக் குழப்பமும் அதிகாரத்திற்கான போட்டியும் சிறிது சிறிதாக விட்டுக்கொடுத்ததை நாம் காண்கிறோம். வட இந்தியா கைக்கொண்ட இவர்களின் மண்டலமொன்றை இவர்கள் ஏற்படுத்த முயன்றனர். இப்படிச் செய்கையில் வங்காளத்தின் பாலர்களோடு இவர்கள் மோதினர். இவ்விரண்டு நாடுகளுக்குமிடையில் தனி முதன்மை நிலைக்காக எழுந்த இப் போராட்டம், வடஇந்திய அரசியலில் தெற்கில் இருந்த ராஷ்டிரகூடர்களும் காஷ்மீரின் லலிதாதித்தியரும் பங்கு பற்றியபொழுது மேலும் கேடுற்றது. ஆகவே, காஷ்மீரத்தின் தலையீடு தற்செயலான உட்கதையாக இருக்கையில், பாலர், ராஷ்டிரகூடர் ஆகியோரின் தலையீடு நீடித்திருக்கிற விளைவாக இருந்தது. வங்காளத்தின் தர்மபாலரும் (கி.பி. 769—801), துருவாவும், மூன்றும் கோவிந்தரும் (கி.பி. 793—814), மூன்றுவது இந்திரனும் கன்னோஜின் ஆதாய இழப்புப் பொறுப்பில் முயன்ற செல்வாக்குப் பெருக்கத்தின் விரிவான விளக்கம் இங்கு இடம்பெறலாகாது. இருப்பினும், மூன்று அரசுகளுக்குமிடையிலான இப் போராட்டம் இறுதியில் கன்னோஜின் பிரதிஹாரர்களைத் தளர்வுறச் செய்ததையும், வடமேற்கிலிருந்து வந்து கொண்டிருந்த இஸ்லாமின் படைபலத்தை அசட்டை செய்யத் தூண்டியதையும் குறிப்பிடலாம். அவர்கள் தம் சொந்த நிகழ்ச்சிகளில் ஆழ்ந்திருக்கையில், அவர்களுக்கும் முஸ்லிம்களுக்கும் இடையில் இருந்த ஆப்கானிஸ்தானத்தின் ஷாகி முடியரசும் பஞ்சாப்பும் ஆகிய ஒரே தடையும் சிறிது சிறிதாகக் கீழறுக்கப்பட்டது. ஏறத்தாழப் பத்தாம் நூற்றுண்டின் இடைப் பகுதியில் வட இந்தியாவில் கூர்ஜரப் பிரதிஹாரர் தனி முதன்மை நிலைக்கு உயர்ந்தனர். அவர்களுடைய அதிகார மயக்காற்றல் ஏறக்குறைய ஐம்பதாண்டிற்கு இருந்தது. பதினேராம் நூற்றுண்டின் தொடக்கம், கஜினி முகம்மதுவின் இந்தியப் படையெடுப்பைக் குறித்தது. இப் படையெடுப்பாளரின் வலிமையான தாக்குதலினுல் பிரதிஹாரர் வீழ்ச்சியுற்றனர். ஆகவே, இப்பொழுது, அதிகாரப் பெருக்கத்தைக் கன்னோஜ் முன்னேக்கத் தயாராக இருக்கையில், இஸ்லாம் இந்தியாவின் உள்-எல்லைக்குள் நுழைந்துவிட்டது. முன்னதாகவே இஸ்லாம் சப்தசிந்து நாட்டின் வாயில்களை எட்டிவிட்டது. வட இந்தியாவின் மேதகவு அதிகாரத்தின் உறைவிடமாகிய கன்னோஜோடு தம்முன் உள்ள

எல்லாவற்றையும் வடமேற்கில் இருந்த துணிவுள்ள முஸ்லிம்கள் புகுந்து அழிப்பது காலத்தைப் பொறுத்தே இருந்தது. பதினேராம் நூற்ருண்டின் இடைப்பகுதியில் இது நிறைவேற்றப் பட்டது. ஆகவே, ஹர்ஷரின் மரணத்திற்குப்பின் வந்த நானூறு ஆண்டும் வட இந்தியாவின் வரலாற்றில் பெருஞ் சிறப்பு வாய்ந்த காலமாகும். ஏனெனில், நாடு முழுவதன்மீதும் அழியாச் சின்ன மொன்றை இது விட்டுச் சென்றுள்ளது. பலர் நினைப்பதைக் காட்டிலும் மிகச் சிறந்ததோர் உட்கருத்தை இந்தியா முழுவதற் கும் இது பெற்றிருக்கிறது.

ஹர்ஷரின் மண்டலங்களின் வீழ்ச்சிக்கும் வட இந்தியாவின் பிரதிஹாரர்களின் வீழ்ச்சிக்கும் இடையிலுள்ள காலம், பாலர், ராஷ்டிரகூடர் திறை செலுத்தும் முறைகளின் எழுச்சி வீழ்ச்சி போன்ற நிகழ்ச்சிகளையும், எல்லைத் தடைகளின் முறிவு, இஸ்லா மின் செயல் விளைவு, வட இந்தியாவின் ஒரு பகுதியில் இஸ்லாமிய ஆட்சி ஏற்படுதல் ஆகியவைகளையும் பதிவு செய்தது. பெரும் அரசியல் வெறியாட்டங்கள், ஐயப்பாட்டு நிலைகள் ஆகியவற்றின் காலம் இது. ஏனெனில்,வடஇந்தியா சிறிதுசிறிதாகத் தன் கடந்த காலத் தொடர்பை இழந்துகொண்டிருந்தது. அது பரபரப் பூட்டும் அச்சத்தை எதிர்நோக்கிக்கொண்டிருந்தது. இந்த அச்சத்தையொட்டிய வருங்காலத்தில் இஸ்லாமின் விரிவாக்க ஆற்றல்கள் மறைந்திருந்தன. ஒன்றுக்குமில்லையென்ருலும், இந்தியாவின்மீதான இஸ்லாமின் முதல் செயல்விளைவு குறித்த காலமும், அதன்மீதான ஆதிக்கத்திற்கு அதனுடைய தயாரிப்பும் இந்திய வரலாற்றில் மிகச் சிறந்த ஓர் இயலை அது உருவாக் கலாம். இக் காரணத்தாலேதான், ஹர்ஷரின் மரணத்திற்குப் பின் வந்த இந் நானூறு ஆண்டுக் காலம் அவ்வளவு சிறப்புடைய தாகிறது.

## இந்தியாவின் பாதுகாப்பிற்கு எல்லை கடந்த பகுதிகளின் சிறப்பு

ஆரியவர்த்தத்தின் அரசுகள் காணுதவாறு எல்லா எதிர்ப்பு களையும் எப்படி இஸ்லாம் மெதுவாகத் தாங்கிக்கொண்ட தென்பதும், வடமேற்கு எல்லைப்புறத்தில் எப்படித் தீங்குருதவகை யில் தன்னை நிலைப்படுத்திக்கொண்டதென்பதுமான வரலாறு, அதனுடைய முடிவுகள் கடுந் துயரளிப்பதைப்போல் அதனுடைய விவரங்களும் அச்சந் தருவனவாகவும் இருக்கின்றன. ஆகவே, இதைப் பிரதிஹாரர்கள் அறியுமுன்னே இந்தியாவின் எல்லாக் கேந்திரப் பகுதிகளையும் இஸ்லாம் கட்டுப்படுத்திச் செயலாட்சி

செய்தது. எல்லைப்புறப் பகுதிகளிலும், அதற்கப்பாலும் இருந்த இவர்களுடைய சொந்த இனத்தவர்களைப்பற்றி வட இந்திய மக்களின் அக்கறையில்லாத போக்கை வெளிப்படுத்தும் நீண்ட செயல்முறையின் ஒரு முடிவாகும் இது. மேலும், உட்புகுதலுக்கான ஓர் ஏற்பாடாக, இந்த நூற்றுண்டுகளின்போது எல்லைப் புறப் பகுதிகளின் இஸ்லாமியக் கூட்டுப்பாட்டுச் செயலாட்சி, ஆரியர், பாரசீக நாட்டினர், கிரேக்கர், சித்தியர், யூச்சிகள், ஹூணர்கள் ஆகியோரின் வருகை நீண்ட நாடகத்தின் ஓர் உட் கதையாக அமைகிறது. இந்தியாவிற்குள் நுழைந்து இதன் விதியை உருவாக்கியவர்களில் மிக்க திறமுடைய ஆரியர்களை அடுத்து இறுதியாக இஸ்லாமியரைச் சொல்லலாம்.

ஆனுல், ஒரு முழுமையான தொலைக்காட்சிக்கு இக் கதையைத் தொடர்பாக எடுத்துரைத்தல் உறுதியான சிறப்பாக இருக்கையில், மக்களின், பண்பாடுகளின் கூட்டிணைவு, உள்வரவு ஆகியவற்றை மட்டுப்படுத்தாத இந்த இராணுவத் தாக்குதலை மனத்திற் கொள்வதும் இன்றியமையாததாகும். பழங்காலத்தில் இனங்களின் நடமாட்டம் வென்று கைப்பற்றுவதில் கொண்டுவிட்டது. அது இனங்கள், பண்பாடுகள் ஆகியவற்றின் கூட்டிணைவில் முடிந்தது. இக் கதையைப் பொறுத்தவரையில் அலெக்சாந்தர் ஒரு விதி விலக்காவார். வென்று கைக்கொள்ளுதல் என்ற பலரறிந்த நோக்கத்தோடு ஒரு படைத்தலைமையுடன் புறப்பட்டார். ஆனுல், ஒரு நாட்டிலிருந்து மற்ருெரு நாட்டிற்கு அவர் செல்லுகையில், தம் பெயரில் நகரங்களைத் தோற்றுவித்தார். இவைகளில் கிரேக்கர்களைக் குடியமர்த்தி, ஆசிய மரபினரான பெண்களை மணக்குமாறும் அவர் தூண்டினுர். எப்படி இருந்தபோதிலும், கிரீஸிலிருந்து இந்தியாவரை பரவியிருக்கும் ஒரு பேரரசை நிறுவுவதற்கான அலெக்சாந்தரின் முறைகள், வென்று கைக்கொள்ளுதலோடு மன்பதையின் நலன்களை இணக்கமுறச் செய்தலும் பண்பாட்டைப் படைத்தலும் இனக்கலப்பின் சரியான முறையென்பதைக் கருத்திற் கொண்டது. இத்தகைய இனக்கலப்பில் கிரேக்கர்களுமில்லை; யூதர்களுமில்லை. ஆண்டானுமில்லை; அடிமையும் இல்லை. முஸ்லிம்களுக்கு முன்னுன இந்தியத் தாக்குதலின் தன்மை இதுதான். இந்தியாவிற்குள் நுழைந்த இனங்கள் எல்லாம் உயிரியல் தேவைக்கிணங்கி, இந்தியாவின் மரபுரிமைச் செல்வத்தை வளப்படுத்த, பொதுவான சமூகப் பொருளாதாரத்தைத் தாமாகவே ஏற்றுக்கொண்டனர். கிரேக்கர்களும், பார்த்தியர்களும், பாரசீகர்களும், ஹூணர்களும் எல்லைக்குள் அல்லது அப்பால் இருந்தாலும், எல்லாம் ஓர் இந்திய சமூக அமைப்

பாகக் கலந்து இந்தியச் சமயங்களைத் தாமே மனமார ஏற்றுக் கொண்டனர்.

கோட்டான், ஆப்கானிஸ்தான், பால்க், கந்தஹார், பலுசிஸ் தான் என நாம் அறியும் நாடுகள் இந்திய நாகரிகத்தின் பின்னிணைவுகளாகும். பால்க், ஆப்கானிஸ்தானம் ஆகியவற்றின் எல்லைகளை முஸ்லிம்கள் அழிப்பதற்குமுன் கிரேக்கர்கள் தம் மட்டு மீறிய தன்மதிப்புடைய வழிமரபை மறந்தனர். பாரசீகர்களும், கிரேக்கர்களும், சகரும், ஹூணரும் முழு நிறைவான இந்தியப் பண்பாட்டால் எல்லோருமாக ஏற்றுக்கொள்ளப்பட்டனர். இந்தப் பண்பாட்டைப் படைப்பதில் இந்தோ-ஆரிய, இந்தோ-ஈரானியக் கூறுகள் பெருமளவு பங்குபெற்றன. இக் காழ்ப் பின்மை இதனுடைய வலிமையின்மையாகவும் இருந்தது. இஸ்லாம் வந்தபொழுது, இது வாள்முனையில் ஒரு மாற்றுப் பொருளை வழங்கியது. இது மிக்க ஆற்றலுடையதாகவும் பசையானதாகவும் இருந்தது. ஆகையால், இதற்கு முன்னிருந்த சமயங்களைக் காட்டிலும் மிக்க உறுதியானதொரு நிலையைப் படைத்துக்கொண்டது. இக் கருத்திலிருந்து, இதற்குமுன் வந்த எந்தப் படையெடுப்பைக் காட்டிலும் இந்தப் பகுதிகளின் இஸ்லாமியத் தாக்குதல் பெரிய இடராக இருந்தது. இதைக் கருத்திற்கொண்டு இஸ்லாமின் வருகையைக் கடைசிக் காட்சி யாகக்கொண்டிருக்கும் நாடகத்தின் கதையை நாம் தொகுத் துரைத்துச் செல்லலாம்.

## எல்லைகளுக்கு அப்பாலுள்ள பகுதிகளின் பண்பாட்டுத் தொடர்புகளின் முறிவும், அரசியற் கட்டுப்பாட்டுச் செயலாட்சியின் இழப்பும் இஸ்லாமின் வருகையை எளிதாக்கின

இதற்குமுன் வந்த மானிட அலைகளைப்போல அதே முறையில் இஸ்லாமின் வருகையும் எளிதாயிற்று. காலங்கடந்த மரபுகளும், இந்தியாவில் காணப்பட்ட அரசியல் அமைதிக் குலைவும் இஸ்லாமின் வருகைக்கு வழி வகுத்தது. நீண்ட காலமாக இருந்துவந்த மண்டலமுறை பிரிவினைப் போக்குகளை வலியுறுத் தியது. ஏனென்றால், தம்முடைய கீழாள்களின்கீழ் ஆள்நிலப் பகுதிகளைத் தக்கவைத்துக்கொள்ளவேண்டிய திறை செலுத்தும் முறை மேலாட்சியாளரின் செல்வாக்கெல்லையைக் குறித்தது. எனவே, ஒருமுக அரசின் குணவியல்பைக் குறிக்கும் இத்தகைய அரசியல் இணைப்பு இங்கு வளர்ந்திருக்க முடியாது. செல்வாக்கு

மண்டலம் மறைந்தவுடன் இவர்கள் பிரிந்தனர். திறை செலுத்து பவர்களின் அரசியல் ஒழுங்குணர்வு இதுவாஞல், இந்த வகைப் பாட்டிற்குள் சேராதவர்கள், 'இயற்கை நிலேயில்' இருந்த மனிதர்களேப்போல் ஒரு நோக்கத்தைப் பேணிப் பின்பற்றிஞர்கள். வட இந்தியாவில் இந்த ஒருமுக நோக்கு இல்லாமை வெளிநாட்டவர்களின் வருகைக்கு உதவியது. மேலும், தீங்கைப் பெருக்க, கடந்த காலங்களில் பிராமண சமயம் தனித்திருந்து வாழும் நிலே மரபை ஏற்படுத்திக்கொண்டது. பஞ்சாப், சிந்து, பலூசிஸ்தானம், ஆப்கானிஸ்தானம், கோட்டான் போன்ற ஆரிய எல்லேகளுக்கு அப்பால் உள்ள நாடுகளில் வசித்த இந்தியர்கள் தம்மை ஆரிய இனத்தவரின் ஒரு பாகம் எனக் கருதவில்லே. இங்கு வசித்த இனங்கள் மிலேச்சர்களெனக் கருதப்பெற்றனர். இவர்களுக்கு என்ன நேர்ந்ததென யாரும் பொருட்படுத்தவில்லே. மனுவின் கருத்தின்படி, முதலாம் நூற்ருண்டில், இமயமலேக்கும் விந்தியமலேக்கும் இடையிலுள்ள நாட்டையும், இரு கடல்களுக்கு இடையிலுள்ளதையும்,[3] இதற்கப்பால் நீளாத நாடுகளேயும் ஆரியவர்த்தம் கொண்டிருந்தது. ஆரிய நாட்டின் இந்துகுஷ் எல்லே நீண்ட காலமாகவே மறக்கப்பட்டிருந்தது. வேத, பிராமண காலங்களில் இந்துகுஷ் எல்லேயாக அமைந்திருந்தது. இந்தியாவின் தூரக்கிழக்கிலும் தென்கோடியிலும் இந்தோ-ஆரியர்கள் பரவவில்லே. வடமேற்கில் இருந்த தம் இனத்தவர்களோடு அவர்கள் தொடர்பு கொண்டிருந்திருக்கலாம். இந்த உறவு முறைகள்பற்றிய நினேவு ஐத்ரேய பிராமணத்தில் வெளியிடப்படுவதைக் காணலாம். நெடுந்தொலேவாலும், குளிர்ந்த, மொழுக்கையான மலேகளாலும் அவர்களுடைய இனத்தவர்களிடமிருந்து பிரிக்கப்பட்டிருந்தாலும், அவர்கள் அரசியல் உணர்ச்சியையும், சமய, இன ஒற்றுமையையும் வெளியிட்டார்கள். இமயமலேக்கப்பால் வசிக்கும் ஆரியர்களின் உறவினர்களாக உத்திர குருக்களும் உத்திர மத்ரர்களும் பிற்கால இலக்கியமாகிய ஐத்ரேய பிராமணத்தில்கூடச் சொல்லப்பட்டிருக்கின்றனர்.[4] இவர்களில் பிற்காலத்திய சட்லஜ்-யமுனே தாழ்வெளியில் வசித்த குருக்களும் மத்ரர்களும் புகழ்மிக்க வழித்தோன்றல்களாவர்.[5]

ஆரிய சமூகத்தின் ஒரு பாகமாக அவர்கள் கருதப்பட்டார்களென்றும், இமயமலேக்குத் தெற்கில் இருந்த தம் உறவினர்களேப்போல் அவர்களும் இதே சடங்குகளேயும் வழிபாட்டு முறை

---

[3] Manu, II, 22.

[4] Ai. Br. viii, 14.

[5] 'A. A. Macdonell's 'Vedic Index,' Vol. I, p. 84; II, p. 123.

களையும் பின்பற்றினர்களென்றும் ஐத்ரேய பிராமணம் கூறுகிறது. இந்துகுஷ் மலையடிவாரத்தில், சர் ஏ. ஸ்டெயின்[6] என்பவர் கண்ட இனங்களைப்போல், தம் சொந்தமான சிறிய தன்னாட்சி இனக் கூட்டங்களில் வசித்துக்கொண்டிருந்த அவர்கள், இந்திய எல்லைக்குள்ளும் வெளியேயும் இருந்த ஆரியர்களுக்கு என வகுத்தளிக்கப்பெற்ற பதவி ஏற்புச் சடங்குகளை அரியணையேறியபோது பின்பற்றினர்கள். இருந்துங்கூட, சரஸ்வதிக்கும் திரிசத்வதிக்கும் இடையே இருந்த நாடு மத்திய தேசமாகக் கருதப்பெற்றது; எல்லா ஆரியரின் புனித நாடாகவும், குருபாஞ்சாலர், வாசர்கள் (Vassas), உசினரர்கள் ஆகியோரின் தாய்நாடாகவும் கருதப்பெற்றது. இந் நாட்டை 'என்றுமுள்ள நடுநாடு' எனக் கருதப்படுவதன் தகுதி, வடக்கிலும் வடமேற்கிலும் இதனுடைய எல்லைப் பகுதிகள் இந்துகுஷ், ஆப்கானிஸ்தானம் வரையிலும், கிழக்கிலும் தெற்கிலும் இருந்தவைகள் விந்தியமலைகள் வரையிலும் கிழக்குக் கடல்வரையிலும் இருந்த பகுதிகளைக் கொண்டிருந்ததென்னும் கருத்தில் நிலைபெறுகிறது. ஆகையால், ஐத்திரேய காலம்வரையில் ஆரியர்கள் தங்கி வசித்த நிலப்பகுதிகள் இந்துகுஷ் மலையிலிருந்து கடல்கள் வரையிலும், இமயமலையிலிருந்து விந்தியமலைவரையிலும் இருந்த நாடுகளைக்கொண்டிருந்தது. மக்கள் தம் பொதுவான சமூக, பண்பாட்டு ஒருமைப்பாட்டை அறிந்திருந்தனர். பாரசீகர்கள் ஹில்மாண்டு-சிந்துப் பகுதியை வென்று கைப்பற்றியபொழுது இந்தப் பண்பாட்டு ஒருமையில் முதல் முரிவு ஏற்பட்டது. பக்திரி (பாக்டீரியா), ஹராய்வா (ஹூரத்), ஜெரவுகா (திரங்கியான), காந்தஹாரம் (பெஷாவர்), தட்டகு (கில்ஜி, ஹசாராப் பகுதிகள்), ஹரவைய்தி (காந்தஹாரைச் சுற்றியிருந்த பகுதி), தேரையஸின் கல்லறை, மேடைக்கல்வெட்டாகிய பாகிஸ்தான் (Bahistan Rock) குன்றுக் கல்வெட்டில் சொல்லப்பட்டிருக்கும் சக, மக ஆகிய எட்டு மாவட்டங்களையும் பாரசீகப் பேரரசு கொண்டதாக இருந்தது. ஹில்மண்ட், சிந்து ஆகியவற்றின் இடையில் இருந்த நிலப்பகுதி முழுவதையும் இது கொண்டிருந்திருக்கலாம். தேரையஸின் இந்தப் பேரரசு சர்க்சீசுக்குச் சென்றது. ஏனெனில், கிரேக்கர்களுக்கு எதிரான இவருடைய படையில், பாக்டிரியர்கள், சகை (Sakai), ஆர்கியோய் (Arcioi), கண்டரியோய் (Gandarioi), தடிக்கை (Dadikai), காசிபோய் (Kasipoi), சரங்கை (Sarangai), பக்டிஸ் (Paktyes), மிகோய்ஸ் (Mykois) போன்ற இனங்கள் இந்திய எல்லைகளுக்கு வெளியே இருந்தன. மூன்றுவது தேரையஸ் அரபெல்லா போர்க்களத்தில் அலெக்சாந்தருடன் போர்செய்ய இந்த வட்டாரத்திலிருந்து

[6] Sir A. Stein, 'Innermost Asia,' Vol, I, p. 20.

துருப்புகளை அழைத்தபொழுது, கி.மு. 330-ல் அக்கிமானிய ஆட்சி இந்த வட்டாரத்தில் இருந்தது.[7] தேரையஸின் தோல்விக்குப்பின் சட்லட்ஜ் நதிக்கரைவரையில் உள்ள இடங்களையெல்லாம் அலெக்சாந்தர் வென்று கைப்பற்றினர். இதில் ஒரு பகுதியை சந்திரகுப்த மோரியர் மீட்டார். அசோகரின் மரணம்வரை இது மோரியப் பேரரசோடு இருந்தது. இந்தப் பகுதிகளில் புத்த சமயம் பரவுவதற்கு அசோகரின் முயற்சிகள்தாம் பொறுப்பாக இருந்தன.

ஆகவே, ஸ்கிதியர்களும் யூச்சிகளும் வருவதற்குமுன், இந்தப் பகுதி, இந்தோ-ஆரியர், ஈரானியர், கிரேக்கர் ஆகிய பன்மொழியாளர்களைக்கொண்டிருந்தது. அலெக்சாந்தர் தம் பேரரசின் எல்லாப் பாகங்களிலும் நகரங்களைத் தோற்றுவித்து, அவைகளில் கிரேக்கர்களைக் குடியமர்த்தி, இங்குள்ள மக்கட்குள்ளிருந்து திருமணம் செய்துகொள்ள அவர்களைத் தூண்டிய அவருடைய கொள்கையால் இங்கு கிரேக்கர்களும் இருந்தனர். இந்தப் பகுதியின் பல்குவையான இனங்களும் பண்பாடுகளும், வேதகாலச் சமயத்தின் புதியதொரு வகையாகிய பிராமண சமயத்தைப் பின் பற்றியவர்களை அவர்களோடு உறவு கொள்ளத் தயங்கவைத்தது. இந்தப் பகுதிகளின் மக்கள் வெளிநாட்டினரோடும் வெளிச் சமயங்களோடும் தொடர்புகொண்டிருந்த காரணத்தால், அவர்களுக்குள் எந்த ஒரு சமயமும் நிலவ முடியவில்லை. அலெக்சாந்தரின் படையெடுப்பின்போதுகூட இது இப்படித்தான் இருந்தது. இவர்களுடைய பண்பாட்டின் புறக்கோட்பாடான இயல்புகளால் தான், என்றுமுள்ள நடுநாட்டோடான இந்தப் பகுதிகளின் உறவுகள் ஒரு முரிவில் முடிந்தது. இந்தப் பகுதிகளின் அரசியல் உடைமை மாற்றம், மத்திய நாட்டில் இருந்த மக்களோடு இப் பகுதி மக்களின் பண்பாட்டு, சமய உறவுகளுக்குப் பாதகமாக எதிர்ச்செயலாற்றின. மக்களின் சமய மசிவியல்புகளின்மீது இது எப்படி எதிர்ச்செயலாற்றிற்று என்பது சட்டத் தொகுப்புகளிலிருந்து தெளிவாகிறது. இமயமலைக்கும், விந்தியமலைக்கும், கிழக்கு-மேற்குக் கடல்களுக்குமிடையில் இருந்த நாட்டை மனு ஆரிய நாடு எனக் கருதினர்.

ஆனல், மனுவிற்குமுன், சட்லட்ஜ் நதிக்கும் பீகாருக்கும் இடையில் உள்ள பகுதியையும், இமயமலைக்கும் விந்தியமலைக்கும் இடையில் உள்ள நாட்டையும் தம்முடைய பண்பாட்டைப் பழுது படாமல் வைத்துக்கொண்டிருந்த ஆரியர்களின் இருப்பிடமாகக் கருதும் மனப்பான்மை வளர்ந்துகொண்டிருந்தது. இது கங்கைக்

[7] C.H.I., Vol. I, pp. 340—41.

கும் யமுனைக்கும் இடையேயான குறுகிய பகுதியாகுமென்பது சில ரது கருத்தாகும்.[8] மரபுக் கோட்பாடு, சடங்குவெறி, முரண் சமயக் கோட்பாட்டின்மீதான வெறுப்புப் போன்ற அக் காலத்திய பிராமண சமயத்தின் மெய்க்கருத்தை நாம் நினைவில் வைத்துக் கொண்டால், ஆரிய நாட்டை ஒழுங்காக வரையறை செய்யும் இந்தக் கருத்தில் வியப்பிற்குரியதொன்றுமில்லை. ஆனால், மோரிய குலத்தின் பேரரசர்கள், வட இந்தியாவின் அரசியற் பாதுகாப் பிற்கு ஹில்மாண்ட்-சிந்து பகுதியின் படைத்திறமுறைச் சிறப்பை நன்றாக உணர்ந்திருந்தார்கள். உறுதியான ஒரு பேரரசை நிறுவு வதற்கான சந்திரகுப்த மோரியரின் முந்திய முயற்சி, பஞ்சாப், சிந்து நாடுகளை கிரேக்கர்களிடமிருந்து கைப்பற்ற வேண்டு மென்பதாகும். மிக எளிதாக இதில் இவர் வெற்றியுமடைந்தார். செலுகஸ் நிகேட்டர் தம் தோல்விக்குப்பின், பரோபனிசதை (Paropanisadai), எரியா (Aria), ஆர்க்கோசியா (Arachosia) போன்ற இடங்களை முறையே அவைகளின் தலைநகர்களாகிய காபூல், ஹிரத், காந்தஹார் போன்றவைகளைக் கொடுத்த பொழுது, ஹில்மாண்ட்-இந்துகுஷ் அரணைப்போன்ற முறைப்படி அமைந்த ஓர் எல்லையைப் பெறுவதற்கான முயற்சி பயனளித்தது. எப்படியிருப்பினும், இந்தியப் பேரரசிற்கு இந்த இடங் களின் தகவையும், அவைகளின் தனிச் சிறப்பையும் வி. எ. ஸ்மித் வெளிக்கொணருகிறார். 'முறைப்படி அமைந்த இந்த எல்லைக் காக ஆங்கிலேயரின் பெரு முயற்சியும், பதினாறும் பதினேழாம் நூற்றாண்டில் முகலாய அரசர்களுங்கூட முழுமையாகப் பெற முடியாதவைகளை இரண்டாயிரம் ஆண்டிற்குமுன் முதல் இந்தியப் பேரரசர் பெற்றிருந்தார்'.[9] சந்திரகுப்தரின் இந்த உடைமைகள் அவருடைய பேரனாகிய மகா அசோகரைச் சென்றடைந்தன. வடமேற்கு எல்லை நெடுகிலும் அவருடைய கல்வெட்டு ஆணை களில் அவருடைய ஆட்சியில் என்றும் நிலவக்கூடிய நினைவுச் சின்னங்களை விட்டுச் சென்றுள்ளார். அவர் அமைத்த புத்த சமயப் பரப்புக் குழுக்கள் இப் பகுதிகளுக்கும் இவைகளுக்கப்பால் இன்னும் பல இடங்களுக்கும் சென்று, தாம் மேற்கொண்ட பணி யைப் பயனுள்ள முறையில் செய்து முடித்தன. இவைகளின் நடவடிக்கைகள்பற்றிய நம்பத்தக்க விவரங்கள் கிடைக்கவில்லை. இங்கும் மற்ற இடங்களிலும் மக்கள்தொகையில் பெரும் பகுதி யினர் புத்த சமயத்தைத் தழுவியிருக்கவேண்டுமென்று உறுதி யாகக் கொள்ளலாம். இக் காலத்தில் புத்த சமயம் கோட்டா னுக்குள் நுழைந்தது; தக்கசீலத்திலிருந்து நாடு கடத்தப்பட்ட அசோகரின் கண்ணிழந்த மகன் இந் நாட்டிற்கு அரசரானாரென்று

[8] Baudhayana, I, i, 2, 940; Vasista I, 8—12.
[9] V. A. Smith, 'Early History of India,' p. 126.

வழிவழிச் செய்தி கூறுகிறது. கோட்டான், இந்திய சமயத்தை மனமார ஏற்றுக்கொண்டதோடு அன்றி,[10] இந்திய மொழியையும், எழுத்து வடிவையும்,[11] பண்பாட்டையும் ஏற்றுக்கொண்டது. இந் நாட்டிற்கு சீனர்களைப்போல் பெரும் எண்ணிக்கையில் சென்று குடியேறினர். படிப்படியாக சீனுவிற்குள் புத்த சமய நுழைவிற்கு இது தளமாயிற்று.

எனவே, அசோகரின் ஆட்சிக் காலத்தில் இந்துகுஷ் வரையில் அரசியல் இந்தியா விரிவடைந்தது. அசோகரின் இறைமையால்மட்டும் இவைகளெல்லாம் ஒன்ருகக் கட்டுப்பட்டிருந்ததோடன்றி, அதைவிடச் சிறந்த அவருடைய தம்மம் அல்லது கடமையுணர்வு நெறி, நெறிமுறை இணக்கம் ஆகியவைகளால் கட்டுப்பட்டிருந்தது. பிராமண சமயத்தின் மரபுக் கோட்பாட்டால் முரிந்த பண்பாட்டுத் தொடர்பு இவ்வாறு அசோகரின் தலைமையின்கீழ் மீட்சி பெற்றது. 'ஆக்சஸ்' பற்றிப் பேசும்பொழுது, 'கருங்கடல், காஸ்பியன் கடல் வழியாக ஐரோப்பாவிற்கு இந்தியப் பொருள்களைக் கொண்டுசென்ற முக்கியமான வழித்தொடரில் இது ஓர் இணைப்பாகும்' என்று ஸ்டிராபோ கூறுகிருர்.[12] இந்தியாவினுலும் அதன் இணைப்பாலும் அடைந்த ஒற்றுமையின் அளவு தெளிவாகிறது. மோரியப் பேரரசின் வீழ்ச்சிக்குப்பின், சிந்துவிற்கும் ஹில்மாண்ட்-இந்துகுஷ் எல்லைக்கும் இடையில் இருந்த வடமேற்குப் பகுதிகளை காஷ்மீர் நீங்கலாக, சோபாகசேனுஸ் (Sophagasenus), அதாவது, சுபாகசேனர் ஆட்சி செய்தார். இந்தப் பகுதிக்கும் இந்தியாவிற்குமான உறவு மிக்க வலிமையாகவும் பழமையாகவும் இருந்ததால், இந்துகுஷிற்குத் தெற்கில் இருந்த இந்த நாடு இந்தியாவாகக் கருதப்பெற்றது. மூன்றும் அன்டியோகஸைப்பற்றி எழுதும் பொலிபியஸ், 'இந்துகுஷ் மலைகளைக் கடந்து, அண்டியோகஸ் இந்தியாவிற்குள் வந்தடைந்தார்,'[13] என்று எழுதுகிருர். அசோகருக்குப்பின், சிந்துவிற்கும் ஆக்சஸ்-ஹில்மாண்ட் எல்லைக்குமிடையில் உள்ள பகுதிகளின் வரலாறு, அலெக்சாந்தர் படையெடுப்பின் விளைவெச்சமாகிய இந்தப் பகுதிகளில் சிதறிக்கிடந்த சிறிய இந்தோ-பாக்டிரிய முடியரசுகளுக்கிடையில் தனிமுதன்மை நிலைக்கான போராட்டங்களாலும், உள்நாட்டுப் போராலும் குழப்பமடைகிறது. ஏறத்தாழக் கி.மு. 200-ல் பாக்டிரியா, பார்த்தியா என இரண்டு முடியரசுகள் இப்

[10] 'Sir A. Stein, 'Ancient Khotan,' Ch. VII.
[11] Ibid, Kharosthi Inscriptions discovered by Stein.
[12] C. H. I., p. 433.
[13] MacCorindle, 'Ancient India,' Polybius, xi, 34.

பகுதிகளில் எழுந்தன. ஏறத்தாழக் கி.மு. 135-ல் இவை இரண்டும் சகர்களால் முற்றிலும் அழிக்கப்பட்டன.[14] சிறிது காலத் திற்குப்பின் இவர்களை யூச்சிகள் இங்கிருந்து விரட்டினர். எனவே, இவர்கள் கிழக்கு நோக்கிச் சென்று கி.மு. முதலாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் சிந்துவெளியில் குடியேறினார்கள். கி.மு. 75-ல் இவர்களுடைய அரசாகிய மாவுஸ், புஷ்கலவதியையும் தக்கசீலத் தையும் கைப்பற்றினார். இவருக்குப்பின் முதலாம் அஜெசும், இரண்டாம் அஜெசும்(Azes), கொண்டோபெர்னிஸ்ஸும் ஆகியோர் அரசுரிமை பெற்றனர். இவர்கள் ஆட்சியை எல்லாத் திசைகளி லும் பரப்பினர். இந்தியாவில் சகர்களின் மேலரசுநிலை அஜெசுவால் தோற்றுவிக்கப்பட்டதைக் கி.மு. 58-ல் சக சகாப்தத்தை நிறுவி நினைவு விழாக் கொண்டாடப்பட்டிருக்கலாம். ஈரானின் கிழக்குப் பாகம், காபூல் பள்ளத்தாக்கு, வடமேற்கிந்தியா ஆகியவை களைக்கொண்ட நாட்டைக் கொண்டோபெர்னிசு ஆண்டார். மக்களின் இம் மோதல்களோடும் இயக்கங்களோடும் இந்தியா வுடனான இப் பகுதிகளின் நில, பண்பாட்டு உறவுகள் இழக்கப் பட்டிருக்க வேண்டும். சகர்களுக்குப்பின் வந்த குஷானர்க ளால் இது சிறிது மீட்கப்பெற்றது.

பாக்டிரியாவிலிருந்து பரவிக்கொண்டிருந்த குஷானர்களால் இறுதியில் சகர்கள் அழிக்கப்பட்டனர். மேல்காபூல் பள்ளத்தாக் கிலும் காந்தஹாரிலும் குஷானர்களின் ஆட்சிப் பகுதிகளைத் தோற்றுவித்தவர் குஜாலகாட்பிசிஸ் (Kujala Kadphises) ஆவார். இவருக்குப்பின் வலிமைமிக்க வெற்றியாளர்களாகிய விமகாட்பி சிஸ்ஸும் கனிஷ்கரும் வந்தனர். கனிஷ்கரோடு குஷான அதிகாரம் உச்ச நிலையை அடைந்தது. கனிஷ்கரின் (பதினோராம் ஆட்சி யாண்டின்) சுவீகாரக் கல்வெட்டின்படி இவரது மேலரசு நிலை கீழ் சிந்து நாட்டில் புகுத்தப்பட்டது. கி.பி. மூன்றாம் நூற்றாண்டின் முற்பகுதியில் இக் குலம் முடிவிற்கு வந்தவரையிலும் பாக்டிரியா விற்கும் சிந்துவிற்கும் இடையிலுள்ள நாடு முழுவதையும் இவ ருடைய குலம் தொடர்ந்து ஆட்சி செய்தது. அடுத்த சமயம் சமுத்திரகுப்தரின் அலகாபாத் கல்வெட்டு, 'தெய்வபுத்ர ஷாஹி ஷானுஷாஹில் இவருக்குச் செய்த மரியாதைக்குரிய செயல்களைப்' பற்றியதைக் குறிப்பிட்டுக் கூறுகிறது. இந்த ஷாஹிகள் யார் என்பதை முடிவு செய்வது கடினமாகும். குஷான குலத்தின் வலிமையற்ற பிரதிநிதிகளாக இவர்கள் இருந்திருக்க வேண்டும். குப்தப் பேரரசர்கள் எல்லைப்புறப் பகுதிகளின் முக்கி யத்துவத்தை உணர்ந்திருந்தது சிறப்பாகும். ஆனால், சிந்து பள் ளத்தாக்கு அல்லது காபூலுக்கு அப்பாலுள்ள பகுதிகள்மீது குப்த

[14] Le Coq, 'Buried Treasures of Turkistan,' p. 21.

இறைமை நீளவில்லை. இதுவும் குறைந்த காலம்தான் இருந்தது. சந்திரகுப்த விக்கிரமாதித்தியர் காலத்தில் இவர்களுடைய ஆதிக்கம் உறுதியாக மறைந்தது. வட இந்தியாவைப் பொறுத்தவரையில் இந்திய எல்லைப் பகுதிகள் விரைந்து கைவிடப்பட்டுவந்தன.

இதே சமயத்தில், குஷான அதிகாரம் வீழ்ச்சியுற்றது. யூச்சிகளில் மற்றொரு பிரிவாகிய சிறிய யூச்சிகள், முதன்மையான பிரிவிலிருந்து பிரிந்து, இந்துகுஷ்ஷுக்குத் தெற்கில் பெஷாவரைத் தலைநகராகக்கொண்டு ஓர் அரசைத் தோற்றுவித்தனர். ஏறத்தாழக் கி.பி. 430-ல் இது ஏற்பட்டதாகக் கருதப்படுகிறது.[16] ஆனால், இது நீடித்திருக்கவில்லை. இதற்கிடையில் ஒரு புதிய நாடோடி இனம் ஆக்சஸுக்கு அப்பால் இருந்த யூச்சிகளை நெருங்கிக்கொண்டிருந்தது. இது ஹூண இனமாகும். யூச்சிகளை விரட்டியபின், பால்க்கிலும் ஆக்சஸ் பள்ளத்தாக்கிலும் நிறுவப்பட்டிருந்த சசானித்து அரசோடு பொருது முதலாம் ஃபிரோஸ் (Firoz I) ஆகிய சசானித் அரசரைக் கொன்றனர். இவர்களின் ஒரு பிரிவினரை இந்துகுஷ் வழியாக ஆப்கானிஸ்தானத்துக்கும் இந்தியாவிற்கும் அனுப்பினர். 'பாரசீகத்தின் எல்லைகளிலிருந்தும் கோட்டானிலிருந்தும் மத்திய இந்தியாவரையிலும் பரவியிருந்த நிலப்பரப்பை,[17] இவர்களுடைய தலைநகர்களாகிய பாமியன் (Bamiyan), ஹிரத் போன்ற இடங்களிலிருந்து கட்டுப்படுத்திச் செயலாட்சி செய்யும் அளவிற்கு இவர்களுடைய அதிகார வலிமை வளர்ச்சியடைந்திருந்தது. யூச்சி, ஹூணர் ஆகியோரின் எழுச்சிக் காலத்தின்போது காபூலின் ஷாஹிகள், குறுநில மன்னர்களின் நிலைக்கு வீழ்ச்சியுற்றனர். ஹூணர்களின் இந்த எழுச்சிகூட 'சிறிய யூச்சி'களின் எழுச்சியைப்போலச் சிறிது காலமே இருந்தது; சசானித் அரசர் குஷ்ரு (Khushrau) (அனோசிர்வன், கி.பி. 531-79), ஆசிய மேலைத்துருக்கர்களோடும், இந்திய அரசர்களாகிய யசோதர்மன், பாலாதித்தியா ஆகியவர்களோடும் அடிக்கடி போரிட்டு அதன் விளைவாகத் தோல்வியடைந்து, சிறிது சிறிதாக அவர்கள் ஆட்சியும் வீழ்ந்தது. இதற்குப்பின் வந்த துருக்கர்கள் டிரான்ஸ் - ஆக்சியோனுவிலிருந்து எப்தாலிட்டுகளை (Epthalites) விரட்டினர். இந்தப் பகுதிக்குள் யுவான் சுவாங் வந்தபொழுது, டர்ஃபன் (Turfan), மெர்வ் (Merv), இசிக்குல் ஏரியிலிருந்து இந்துகுஷ்வரையிலான நாடு முழுவதும் இவர்களுடைய ஆட்சிக்குள் இருந்ததைக் கண்டார். இந்துகுஷ் மலைக்குத் தெற்கில் வலிமைமிக்க ஓர் முடியரசு இருந்தது. யுவான் சுவாங்கின் கருத்திற்கொப்ப இதன் அரசர் ஒரு க்ஷத்திரியர்.

[16] H. C. Roy, Op. cit., p. 58.
[17] Ibid.

இந்த அரசு ஒரு பக்கத்தில் காஷ்மீரையும், மற்ருெரு பக்கத்தில் தக்கசீலத்தையும் தொடர்புபடுத்திக்கொண்டிருந்தது. இதன் ஹூண அரசர் இந்து சமயத்தைத் தழுவியிருக்கலாம். மெய்யாகவே ஹூணர்கள் எல்லோரும் இந்தியப் பண்பாட்டை ஏற்றுக்கொண்டனர். வர்த்தகர்கள் தம் அரசைப் பாதுகாப்பதற்கு இந்த இனத்தோடு போரிடவேண்டியிருந்தது. அதனுல் ஹர்ஷர் இந்த எல்லையில் நிலைபெற முடியவில்லை; ஆகவே, இங்கு நிலைபெற்றிருந்த அரசர்களின் அதிகாரத்தையும் போக்கையும் சார்ந்துதான் வடஇந்தியாவின் பாதுகாப்பு நிலையற்றதாக இருந்தது.

ஏழாம் நூற்ருண்டின் மத்தியில் நிலை மாறியது. இந்துகுஷ் மலைகளுக்குத் தெற்கில் தம் ஆட்சியை நீடித்த சீனர்கள் துருக்கர்களை இடம்பெயர்த்தனர். இதே சமயத்தில் அரேபியரும் பாரசீகம் வழியாக வடக்கில் முன்னேறினர். ஹில்மாண்ட் நதிக்கரையில் இவர்கள் தம் அரசை நிறுவினர். ஷாஹிகள் இப்பொழுது எங்கிருந்தனர்? இவர்கள் முற்றிலும் அழிக்கப்படவில்லை. கடந்த நூற்ருண்டின் அமைதி கெட்ட நிலையிலும் குழப்பத்திலும் காபூலின்மீதான தம் பிடியை இவர்கள் வைத்துக்கொண்டிருந்தனர். அதனுல் இஸ்லாம் இவர்களைத் தாக்கியபொழுது இவர்கள் துணிவுடன் இதை எதிர்த்தனர். இருநூறு ஆண்டு (கி.பி. 650-860) காபூல், ஹில்மாண்ட் பள்ளத்தாக்குகளின் அரசர்களாகிய ஷாஹிகள், விரிவடைந்துவந்த அரேபியர்களின் அதிகாரத்தைக் கடுமையாக எதிர்த்தனர். இந்தியாவிலிருந்து இவர்களின் உதவிக்கு எவரும் வரவில்லை; ஏனென்ருல், இந்தியாவுடனுன உறவுகள் நீண்ட காலத்திற்கு முன்னே முரிக்கப்பட்டிருந்தன. கி.பி. 870-ல் காபூல் வீழ்ச்சியடைந்தது; துருக்கர்களின் தடுத்து நிறுத்த முடியாத முன்னேற்றம், பஞ்சாபிலுள்ள உத்பந்தபுரம் அல்லது ஒகிந்து என்ற இடத்திற்குத் தம் தலைநகரை ஷாஹிகள் மாற்றும்படி வற்புறுத்தியது. பிற்காலத்தில், இவர்கள் இந்துஸ்தானத்தின் ராய்கள் எனப் பெயர்பெற்றனர். கி.பி. 1021-ல் முகம்மது கஜினியோடான போரில் திருலோசனபாலர் தோல்வியுற்று இறந்ததோடு, அவர்களின் ஆட்சியும் முடிவடைந்தது. இவர்களின் அழிவோடு இந்தியாவின் உட்பாதுகாப்பு அரணும் முற்றிலும் அழிக்கப்பட்டது.

சுருக்கமாக, இந்தியாவின் எல்லைக்கப்பாலுள்ள பகுதிகளின் வரலாறு இதுதான். டிரான்ஸ் - ஆக்சியானுவிலிருந்து படையெடுப்பாளர்கள் அடிக்கடி உட்புகுந்தாலும், இந்தப் பகுதிகளுக்கு இந்தியாவுடனுன அரசியல் ஒற்றுமை இன்மையாலும், எல்லைப்

புறப் பாதுகாப்பு முற்றிலும் குலேந்தது. கடந்த பல நூற்றுண்டு களாக வட இந்தியாவிற்கும் எல்லேக்கப்பால் உள்ள பகுதிகளுக் கும் இடையிலான அரசியல் ஒற்றுமை வலிமையற்றுப் பெரும் பாலும் இல்லாதுபோய்விட்டது. எல்லேக்கப்பாலுள்ள மக்களின் பண்பாட்டுத் தொடர்புகளேயும், அரசியல் விதியையும், அவர்கள் பின்பற்றிய அதே சமயத்தையும்பற்றி வட இந்தியாவில் இருந்த மக்கள் அக்கறை கொள்ளவில்லே. வடஇந்தியாவிலுள்ள மக்களால் சமய மாறுபாடற்றதாகக் கருதப்பெற்ற வாழ்க்கை முறையைப் பின்பற்றுவதைத் தளர்த்துவதற்கு உதவிய மத்திய ஆசியாவின் நாகரிகமற்ற கூட்டங்கள், வெளியார்கள் ஆகியரோடான இவர் களுடைய தொடர்புகளும், இவர்களே ஒரு காலத்தில் ஒன்று படுத்திய பண்பாடு, சமயம் ஆகியவற்றின் தொடர்புகளும் நடை முறையில் அகற்றப்பட்டன. இதனுடன், வட இந்தியாவில் இருந்த மத்திய அதிகாரம் சமுத்திரகுப்தருக்குப்பின் எல்லேப் பகுதிகளேக் கட்டுப்படுத்தவில்லே. பிற்கால குப்தர்களுக்குத் தொலே நோக்கு ஓரளவு இன்மையாலும், ஓரளவு குப்த பேரரசர்களின் ஆற்றல்களேயும் செல்வவளங்களேயும் மண்டல அரசியல் கோரிப் பெற்றதாலும்தாம் இந் நிலே ஏற்பட்டது. குப்தர்களுக்குப்பின் நாட்டை ஹூணர்கள் ஆண்டனர். வர்த்தனர்களின் மேலாட்சி சிறிது காலம் மட்டுமே இருந்ததால், அது எல்லேப்புறப் பகுதி களுக்கு எட்டாதிருந்திருக்கலாம். வடஇந்தியாவிலிருந்து வகுக்கப் பட்டு இயக்கப்பெற்ற, திட்டவட்டமான எல்லேக் கொள்கை யின்மை இப் பகுதிகளில் முஸ்லிம்களின் மேலாட்சிக்குப் பொறுப் பாகும். இறுதியில் வடஇந்தியாவில் தம் ஆதிக்கத்தை அமைத்துக் கொள்ளவும் இது காரணமாயிற்று.

ஆனல், வடமேற்கின் உட்கதை இதுவாகும்; இந்தியாவிற்குள் இஸ்லாம் வருகையில் இது ஒரு நிலேயாகும். காபூலின் வீழ்ச்சியி லிருந்து நூற்றைம்பதாண்டிற்குமுன் மற்றெரு கட்டம் நிறை வேறியது. கி.பி. 712இல் சிந்து, அரேபியர்களால் கைக்கொள் ளப்பட்டது; இந்திய அரசியலில் ஒரு புதிய இயல்பு தோன்றியது. ஆனல், இந்திய மண்ணில், அதாவது, சிந்துவில் இஸ்லாம் நிலே பெறுதல், பம்பாய்க்கும் பரோச்சிற்கும் அருகில் உள்ள தானவை அரேபியரின் கடற்படை தாக்கியதோடு (கி.பி. 636), காலிபா உமரோடு தொடங்கிய நாடகத்தில் இது இறுதிக் காட்சியாகும்.[18] ஆகவே, வடமேற்குப் புற அரண்கள் முழுவதும், எல்லேப் பகுதிகள் முழுவதும், கி.பி. 700 - 1050-க்கு இடையில் (நம் ஆய்வின் கால மாகிய) முஸ்லிம்களின் கட்டுப்பாட்டின்கீழ் வந்தன. இதன் விளேவுகள் பரந்த செயல் விளேவுடையன. பொதுவாக இந்தியா

[18] H. C. Roy, op. cit, p. 6.

வில் இந் நிலைபற்றிய ஆய்விற்குப் பின்னும், குறிப்பாக எல்லைப் புறப் பகுதிகளின் ஆய்விற்குப் பின்னும் நாட்டு அரசாங்க முறையின் மதிப்பீட்டிற்கு நாம் செல்லலாம்.

## இந்தக் காலத்தின்போது இந்திய ஆட்சி அமைப்புமுறையின் இயல்புகள் (கி.பி. 700-1050)

இக் காலத்தின் இந்திய ஆட்சி அமைப்புமுறையின் வளர்ச்சி பற்றி, 'எங்கும் மேலாட்சி நிலை, குடியாள் நிலை ஆகியவற்றின் இதேபோன்ற நிலமானிய நிலையையும், இதே போன்ற உயர் அதிகாரிகளையும், இதே பதவிப் பெயர்களையும், இதே அளவில் இல்லாவிட்டாலும் இதைப்போன்ற நீதி, நிதி முறைகளையும் மக்களைப்பற்றிய அரசின் ஒரே மாதிரியான மனப்போக்கையும்தாம் ஒருவர் சந்திக்கிறார்', என்று டாக்டர் பெனிபிரசாத் குறிக்கிறார். 'பெரும்பாலும் நற்செயலாற்றும் விருப்பமுள்ள, சில சமயங்களில் கொடுமையானதும் கொடுங்கோன்மையானதுமான இதே வல்லாட்சியைத்தான் ஒருவர் சந்திக்கிறார். எங்கும் ஒரே மாதிரியான கிராம ஆட்சிமுறை இருக்கிறது. இது ஓரளவு தன்னாட்சியாகவும், ஓரளவு அரசாங்கமாகவும், மாவட்டத்திலிருந்து, மாநிலத்திலிருந்து தலைநகரிலிருந்து மேற்பார்வையிடுவதாகவும் இருக்கிறது.' பரவலாக இவ் விளக்கம் உண்மையாக இருக்கலாம். ஆனால், 'இந்த நான்கு நூற்றாண்டுகளின் அரசியலைச் சலிப்பும் தேக்கமும் கொண்டதெ'ன விரித்துரைக்கும் டாக்டர் பெனிபிரசாத்தின் முடிவை ஏற்க இயலாது. ஏனெனில், வடக்குத் தேக்கமுற்றபொழுதும், இதன் அரசியல் உரமும் கற்பனைத்திறமும் விலகியபொழுதும், தெற்கு அரசியல் அமைப்பின் புதிய பாணிகளை வளர்த்துக்கொண்டிருந்தது; இதன் வகைத் திரிபுவளமும் செழிப்பும் மிக்க கவர்ச்சியாக இருந்தன. சான்றாக, காஷ்மீரில் தோன்றிய சீர்குலைவு, ராஷ்டிரகூடப் பேரரசின் நிகழ்வுநிலைகளுக்கு ஒரு வேதனை தரும் வேறுபாடாக அமைகிறது. இதேபோல் பஞ்சாப், காபூல் ஆகியவற்றின் ஷாஹி அரசாங்கத்தின் அழிவும் வங்காள முடியரசோடு மாறுபடுகிறது. தென்னிந்தியாவின் அரசியல் முறையின் மிகச் சிறந்த இயல்பு இதன் தன்னாட்சி நிறுவனங்களின் மிக்க உரமான, பரவலான செயற்பாடாகும். தென்னிந்தியாவின் எண்ணற்ற கல்வெட்டுகள் நாட்டுப்புறங்கள்பற்றியும் நகர்ப்புறங்கள்பற்றியும் முழுமையாகச் சித்திரிக்கின்றன. பெருமளவிலான தன்னாட்சி இவைகளின் முதன்மையான இயல்பாகும். எங்கும் கூட்டுறவு முயற்சி இருந்தது. சமூக, பொருள், பயன்பாட்டு நிறுவனங்களைத்

தோற்றுவிப்பதால் மக்களின் நிலையைச் சீர்செய்ய முற்பட்டது. வடக்கில் வழக்கமாக இருந்ததைக் காட்டிலும், கிராம சபை தெற்கில் பெருமளவு மக்களாட்சி இயல்பினதாகவும் தேர்ந்தெடுப்பிற்குரியதாகவும் இருந்தது'.[19] டாக்டர் முக்கர்ஜியால் இவருடைய 'பழங்கால இந்தியாவின் தல அரசாங்கம்' என்னும் நூலில் கொடுக்கப்பட்டுள்ள கல்வெட்டுச் சான்றுகள் போதிய அளவில் இதை மெய்ப்பிக்கின்றன.[20]

## இந்தியாவின் அரசியல் வடிவமைதி

ஆகையால், இந்திய ஆட்சி அமைப்பு முறையின் வடிவு, செயல்வினை ஆகியவைபற்றிய ஆய்வு, வட, தென் இந்தியாவின் அரசாங்கங்களுக்குப் பொதுவாக இருக்கின்ற கூறுகளையும், அவை எது ஒன்றுக்கும் தனிப்பட்டதாக இருப்பவைகளையும் இவ் ஆய்வை ஏற்றமைவாகக் கொடுக்கலாம். காஷ்மீர், கன்னோஜ், வங்காளம், மகாராஷ்டிரம் போன்றவை முதன்மையாக இத்தகைய அரசுகளாகும்.

வழக்கமாக ராஷ்டிரகூடப் பேரரசு தென்குஜராத்திலும், மத்திய மாகாணத்தின் மராத்தி மொழி பேசும் மாவட்டங்களிலும், மகாராஷ்டிரம் முழுவதிலும், ஐதராபாத் அரசு முழுவதிலும், கர்நாடகத்திலும், மைசூரின் பகுதிகளிலும் பரவியிருந்தது. இதன் வடக்கெல்லை காம்பேயிலிருந்து ஹோசங்காபாத்வரையிலும், கிழக்கெல்லை தெளிவாக உறுதிப்படுத்த முடியாத வகையில் ஹோசங்காபாத், நாகபுரி, சந்தா, வாரங்கல், கடப்பை வழியாகவும் சென்றது. தெற்கெல்லை ஓரளவு வடபெண்ணுற்றிலும், இதற்கப்பால் பாண, நுளம்ப அரசுகளிடமும் இருந்தன; ஓர் அளவு வடபெண்ணுற்றின் தோற்றமூலத்திலிருந்து தொடங்கி சித்தல்துர்க் வழியாக அரேபியக் கடலைச் சென்றடையும் ஒரு கற்பனை எல்லையாலும் அமைந்திருந்தது. மேற்கெல்லை அரேபியக் கடலாக இருந்தது.[21] ராஷ்டிரகூடப் பேரரசின் பரப்பு இதுவானுல், பாலப் பேரரசு வங்காளம், பீகார் முழுவதையும் கொண்டிருந்தது. இப் பேரரசைத் தோற்றுவித்த கோபாலர் (கி.பி. 765) வங்காளம், மகதம்மீது ஆட்சி செலுத்தினர்.[22] 'இவருடைய அருள் நிறைந்த புருவ அசைவால் கன்னியாகுப்ஜத்தின் புகழ்மிக்க அரசரை அமர்த்தினர். போஜ, மத்சய,

[19] Altekar, 'Rastrakuta's and Their Times', p. 150.
[20] Ibid, p. 200 et seq.
[21] Ibid, p. 135.
[22] H. C. Roy, op. cit., pp. 279—84.

மத்ர, குரு, யது, யவன, அவந்தி, காந்தார, கிர அரசர்கள் மரியாதையோடு திருமுடிகளின் அசைவால் உடனடியாக ஏற்றுக்கொண்டனர். இவருக்கான தங்க மகுடம் மகிழ்ச்சி கொண்ட பாஞ்சாலர் முதலியோர்களால் எடுத்தளிக்கப்பெற்ற தென்று இவருக்குப்பின் அரசராகிய தர்மபாலர், தம் காலிம்பூர் பட்டயத்தில் நமக்குச் சொல்லுகிறார்.[23] வங்காளம், பீகாரின் பரந்த பகுதிகளுக்கு அப்பால் ஆற்றிடைப் பகுதிக்கும் இதை அடுத்த நாடுகளுக்கும் இவர் செல்வாக்குப் பரவியிருக்கலாம். கூர்ஜரப் பிரதிஹாரர்களைப் பொறுத்தவரை, கி.பி. 836-க்கு முன்பு இவர்கள் கன்னோஜைக் கைப்பற்றவில்லை.

இவர்களுடைய இரண்டு சிறந்த பிரதிநிதிகளாகிய போஜர், மகேந்திரபாலர் ஆகியவர்கள் இந்துஸ்தானத்தில் ஒரு பேரரசை நிறுவுவதில் வெற்றியடைந்தனர். வடக்கில் பஞ்சாபின் கர்னூல் மாவட்டத்திலிருந்து பீகார்வரையிலும், கத்தியவார் தீப கற்பத்திலிருந்து வடக்கு வங்காளம்வரையிலும் இது பரவி யிருந்தது.[24] 'எட்டாம் நூற்றாண்டின் முற்பாதியில் காஷ்மீரம் ஆசியாவில் வலிமைமிக்க நாடுகளில் ஒன்றாகியது';[25] இது பரவ லான வெற்றிகளை அடைந்தது. தோஆப்பகுதியில் கன்னோஜையும், ஆக்சஸ் பள்ளத்தாக்கில் துருக்காரிஸ்தானையும், மேல்கிசன்-கங்கா பள்ளத்தாக்கில் தார்தெசாவையும் கைப்பற்றியதாகத் தெரி கிறது. சைனாவுடனும் பூட்டானுடனும் இது அரச தந்திரத் தொடர்பு கொண்டிருந்தது. ஆனால், வெளிக்காரணங்களன்றி உட்காரணங்களால் இதன் நிலப்பரப்புகளும் செல்வாக்கும் சிறிது சிறிதாகக் குறைந்தது.

ஷாஹிகளைப் பொறுத்தவரை, இவர்கள் ஒரு காலத்தில் பஞ்சாபையும் காபூலையும் ஆண்டனர். ஆனால், படிப்படியாக இவர்கள் காபூலிலிருந்து முஸ்லிம்களால் அகற்றப்பட்டனர்; இங்கு முஸ்லிம்கள் தம் ஆட்சியை நிறுவினர். ஷாஹிகள் பஞ்சாப் பில் மட்டும் நிலைபெற்றனர். காபூல், ஹில்மாண்ட் நதியோரப் பரந்த ஆள்நிலப் பரப்புகளை இவர்கள் இழந்தனர். எஞ்சியது குறிப்பாக ஜெய்பாலரின்கீழ் இருந்தது. 'நீளத்தில் சிர்ஹிண்டி லிருந்து லாம்கன்வரையிலும் அகலத்தில் காஷ்மீரிலிருந்து மூல் தான்வரையிலும் இருந்த நாடாகும்.'[26] மூல்தானுக்குக்குத் தெற்

[23] Khalimpur Plate of Dharmapala, Ep. Ind., Vol. iv, pp. 243—54.

[24] H. C. Roy. op. cit., p. 570.

[25] Ibid, p. 112.

[26] Briggs, 'Frishta;' Vol. I, p. 15.

கில் உள்ள நாடு அரேபிய முஸ்லிம்களுக்குச் சொந்தமாயிற்று. இந்த நூற்றுண்டுகளின் அரசியல் வடிவமைதி இத்தகையதாகும்.

## இந்திய ஆட்சி அமைப்பு முறையின் வடிவம் : மரபுரிமைச் சட்டம் இல்லை

### முடியாட்சி

இந்த நூற்றுண்டுகளில் நிலவிய இந்திய ஆட்சி அமைப்பு முறை முடியாட்சியாகும். இதுவும் நற்செயலாற்றும் விருப்ப முள்ள வகையாக இருந்தது. பெரும்பாலும் எல்லா இடங் களிலும் இறக்கும் தறுவாயில் இருந்த அரசர் தமக்குப்பின் வரு பவரை நியமிக்கும் மரபு காணப்பட்டாலும், பொதுமக்கள் அல்லது அமைச்சவை தெரிவு செய்தல் முற்றிலும் மறைந்துவிட வில்லை. 'மச்ச நியாயம்' பெரிதும் வெறுக்கப்பட்டதென்றும், இந்த 'இயற்கை நிலை'யிலிருந்து மக்கள் விடுதலைபெற வங்காளத் தின் முதல் அரசராக கோபாலரைத் தேர்ந்தெடுத்தனரென்றும் காலிம்பூர் பட்டயத்தில் குறிப்பிட்டுச் சொல்லப்பட்டிருக்கிறது. இதே சூழ்நிலைகள்தாம் கி.பி. 939இல் காஷ்மீரின் அரியணைக்கு யசாஸ்கரரைத் (Yasaskara) தேர்ந்தெடுத்தன.[27]

மரபுரிமைபற்றிய பிரச்சினையில், முதல் மகன் அரியணையில் அமர்த்தப்பட வேண்டுமென லலிதாதித்திய முக்தபிடர் விதித் தார்...'இளையவரை அரசராக்காதீர். இருப்பினும், ஒரு தவறுன முடிவால் இப்படி நடந்தால், இவர் நற்குணமுடையவராக இல்லாவிட்டாலும் இவர் கட்டளைகளுக்குப் பணிய வேண்டும்; இவரையும் பாதுகாக்க வேண்டும்.'[28] நிலமானியத் தலைவர்களும் அமைச்சர்களும் சில சமயங்களில் அரசரைத் தேர்ந்தெடுத்தனர். கி.பி. 936இல் ராஷ்டிரகூட அரசர் அமோகவர்ஷரை அமர்த்தியபொழுது, நிலமானியதாரர் களும் (குறுநில மன்னர்களும்) அமைச்சர்களும் இதில் பெரும் பங்கு பற்றினர்.[29] ராஷ்டிரகூடப் பேரரசில் இரண்டாம் கோவிந்தர் தம் இளைய மகனைத் தமக்குப் பின்வருபவராகத் தெரிவு செய்தார். மொத்தத்தில், அரச பதவி மரபுவழி உரிமை யாக இருக்கையில், முஸ்லிம் ஆசிரியர்கள் எழுதுவதுபோல், 'அரசர்கள் தம் வாரிசுகளை அறிவித்தனர்,'[30] எத்தகைய மர

[27] Stein, 'Rajatarangini', Ch. V. pp. 461—66; Ch. VI, 2-4,
[28] Ibid, Ch. IV, pp. 356–58.
[29] Deoli Plate, Ep. Ind. Vol. IV, p. 90.
[30] Elliot and Dowson, Vol. I, p. 6.

புரிமைச் சட்டமுமில்லை. மிக்க தகுதிபெற்றவர், திறமையானவர், மூத்தவர் இவர்களின் மரபுரிமைக்குப் பொதுக் கருத்து உடன்பாடளித்தது; பொதுக் கருத்து எப்பொழுதும் தெளிவான குரலாகவும் வலிமையாகவும் இருந்ததால், ஒழுங்கற்ற அல்லது முற்றிலும் நேர்மை வாய்ந்ததாய் இராத வழிகளில் அரியணையேறிய ஒருவரின் சாமர்த்தியத்தில் இதனுடைய இசைவாணை சார்ந்திருந்தது. சான்றாக, அரசரின் அதிகாரங்களை அமைச்சர்கள் அடிக்கடி பறித்துக்கொண்டனர் என்பது நன்கறிந்ததே. மோரிய, சுங்க, கண்வ, வர்த்தன அரச பதவிகளின் முடிவும் அமைச்சவையின் தகாவழி உரிமைப் பறிப்பேயாகும். இந்த நூற்றாண்டுகளில் சிந்து, காஷ்மீர் வரலாறு அமைச்சவை உரிமைப் பறிப்பு நிகழ்ச்சிகளைக் கொண்டிருந்தது. சிந்து நாட்டின் அரசர் ராய் ஷாசியின் பிராமண அமைச்சர் அரியணையைத் தகாத வழியில் பறித்தார்; காஷ்மீர அரசர் சக்கரவர்மனின் அமைச்சராகிய சம்புவர்த்தனரும் இப்படித்தான் செய்தார் (கி.பி. 935).

### அமைச்சவை

அரசருக்கடுத்து அமைச்சர்களும் நிலமானியதாரர்களும் இருந்தனர்; நாட்டின் வலிமையையும் பரப்பையும் சார்ந்து இவர்களின் எண்ணிக்கை இருந்தது. ராஷ்டிரகூடர்கள் பல அமைச்சர்களைப் பெற்றிருந்தனர். இவர்களின் எண்ணிக்கை நாட்டின் தேவைகளைப் பொறுத்திருந்தது. ஒரு பிரதம அமைச்சர் இருந்தார். 'பஞ்சமகாசப்தத்தைப் பெறற்குரிய மகா சாமந்தரின் தன்மதிப்பு நிலையையும்....பேரரசின் நிலமானியத் தலைவர்களால் வணக்க மதிப்பறிவிக்கப்பெற்ற நிலையையும் இவர் பெற்றிருந்தார்.'[31] அரசர் இல்லாத சமயத்திலும் நோயுற்றபொழுதும் இவர் அரசரின் பிரதிநிதியாக இருந்தார்; அரியணை வாரிசு இளமையாக இருந்தபொழுது இவர் பகர ஆளுநராக இருந்தார். இவருக்கடுத்து மகாசந்திவிக்கிரகிகர் அல்லது முதன்மை வெளியுறவமைச்சர் இருந்தார். பல சந்திவிக்கிரகிகர்களை இவர் கட்டுப்படுத்தி ஆட்சி செய்தார். அரசதந்திரச் செயல்வினைகளை நிறைவேற்றுதல் இவர்களுடைய முதன்மையான பணியாகும். ஒரு தலைமை நீதிபதியும் இருந்தார். முதலாம் அமோகவர்ஷரின் சஞ்சம் செப்பேடுகளில் இவரைப்பற்றிக் கூறப்படுகிறது. இவர்களைக் காட்டிலும் சிறப்பில் குறையாதவர்களையும், சில சலுகைகளில் மிக்க சிறப்புடையவர்களாகிய படைத்தலைவர்களையும் சுக்கிரர் சச்சிவ் என்றும், கல்ஹணர் கம்பணரென்றும் பெயர் குறிப்பிட்

[31] Altekar, 'Rastrakutas and Their Times', p. 165.

டனர்[32]. தொடக்க காலத்திலிருந்து புரோகிதர் மிக முக்கிய மானவராக் இருந்தார்; எனவே, இவர் அமைச்சவையில் ஓர் உறுப் பினராகி யிருக்கவேண்டும். முல்தாய் (Multai) செப்பேடுகளின் படி, கி.பி. 708இல், ராஷ்டிரகூட அரசராகிய நன்னராஜா இப் பதவியை வைத்திருந்ததாகத் தெரிகிறது.[33] அமாத்தியர், ராஷ்டிரகூடப் பதிவுகளில் சொல்லப்படவில்லை யென்றாலும், ராஷ்டிரகூட அமைச்சவையிலிருந்து விடப்பட்டிருக்க முடியாது. அரச வருவாய்ப் பொறுப்பில் இவர் இருக்க நேர்ந்ததென்று பதினோராம் நூற்றாண்டுப் பதிவு ஒன்று கூறுகிறது.[34] இவர் மகா சப்தாலிகர் என்றோ அல்லது இதே காலத்திய அரசர் குலத்திற் குரிய பத்திரத்தில் சாசனாதிகாரி என்றோ பெயர் பெற்றுள் ளார்.[35] இறுதியாக அரசப் பொருளகப் (கருவூலப்) பொறுப்பில் இருந்தவர் பண்டகாரிகர்.[36] இவை எழுவரைக் கொண்ட பட்டிய லாகிறது. இதுவும் தென்னிந்தியாவில் மிக்க வலிமையுடைய முடியரசில் இருந்தது. வடக்கில், காஷ்மீரில் இதே எண்ணிக்கையி லான அமைச்சர்கள் சேவை செய்தனர். தர்மாதியட்சகர்கள், தனாதியட்சகர்கள், கோசாதியட்சகர்கள், சாமுபதி, தூதர், புரோதர், தெய்வாஞ்சனர் (Daivajna) ஆகியோர் இவர்க ளாவர். அசோகரின் மகன் ஜலுகர்தாம் பதினெட்டுப் பதவிகளை ஏற்படுத்தினர்.[37] இருப்பினும், லலிலாதித்திய அரசர்—மகா பிரிதிபீடர் அல்லது உயர் அரண்மனை அகவினைஞர், மகா சந்தி விக்கிரகிகர் அல்லது போர், அமைதி அமைச்சர், மகாஸ்வலாயர் அல்லது தொழுவத் தலைவர், மகாபாந்தாகாரர் அல்லது உயர் கருவூல அலுவலர், மகாசாதனபாகர் (இவருடைய செயல் வினையை உறுதிப்படுத்த முடியவில்லை) ஆகியோருடன் சர்வாதி காரர்[38] எனப் பெயர் பெற்ற முதல் அமைச்சரையும் இவர் பெற்றிருந்தார். பெயர்கள் பொதுவாக அமைச்சர்களின் பதவிப் பெயர்களைக்கொண்டிருந்தாலும், மந்திரியும்[39] அமாத்தியரும்[40] அரசின் இரண்டு வேறுபட்ட அமைச்சர்களாகத் தோன்று

[32] Stein, 'Rajatarangini,' VII, 365.
[33] Ind. Ant., XVIII, p. 230.
[34] Ep. Ind., Vol. II, 225.
[35] Ind. Ant., VIII p. 11.
[36] Figures in Silhara Records as also in Gahadwal Copper Plates.
[37] Stein, 'Rajatarangini,' I, 118–20.
[38] Ibid., VII, 364.
[39] Ibid., IV, 290 & 304.
[40] Ibid., V, 128—29.

கின்றனர். அவந்திவர்மனின் ஆட்சியில் (கி.பி. 856-883) இவரது ஒன்றுவிட்ட சகோதரர் மந்திரி சூரவர்மன், யுவராஜாவின் [41] பரந்த அதிகாரங்களைப் பெற்றிருந்தார். அரசில் இதுவும் மதிப்பிற்குரிய ஒரு பதவியாகும். படைத்தலைவர் கம்பணுதிபதி [42] என்று பெயர் பெற்றுர். பிரதிஹாரர் அரண்மனை அகவினைஞராக இருந்தார். இவர் முக்கியமான அலுவலர். சிந்துவில் அரண்மனை அகவினைஞராகிய சாச் (Chach) அரியணையைத் தகாமுறையில் கவர்ந்துகொண்டார். காஷ்மீரில் கி.பி. 883இல், அவந்திவர்மன் இறந்தபின் இவருடைய மகன் சங்கரவர்மனுக்கு அரண்மனை அகவினைஞர் நாட்டைப் பெற்றுக்கொடுத்தார். சங்கரவர்மன் இரண்டு பதவிகளைப் படைத்தார்; அவை அட்டபதிபாகர் அல்லது சந்தை அதிபரின் பங்கு; கிரிககிருத்தியர் [43] அல்லது வீட்டுக் காரியங்கள்பற்றியவர். இதற்கு இரண்டு அமைச்சர்கள் தலைவராக இருந்தனர். ஒருவர் கிருககிருத்தியாதிகாரர்;[44] பொருளாளர், கஞ்சவாரர் [45] அல்லது கோசாதியட்சர்[46] என்று பெயர் பெற்றுர். இராஜஸ்தானர், நீதித்துறையின் தலைவராக இருந்திருக்கலாம். [47] இவர்கள் எல்லோரும் எட்டு அமைச்சர்களாகின்றனர். எனவே, வடக்கு, தெற்குச் சான்றுகள் உடன்பட்டிருக்கின்றன. இருப்பினும், சாமளவர்மதேவரின் கல்வெட்டு இவர் இன்னும் பல அமைச்சர்களைப் பெற்றிருந்ததாகக் கூறுகிறது. இவர்கள் பிரதம அமைச்சர் (ராஜமாத்தியர்), குரு (புரோகிதர்), பிரதம நீதிபதி (மகா தர்மாதியட்சகர்), போர், அமைதிக்கான அமைச்சர் (மகாசந்திவிக்கிரகர்), படைத்தலைவர் (மகாசேஞபதி), அரசமுத்திரைக் காவலர் (மகாமுத்ராதிகிருதர்), பதிவேடு காப்பாளர் (மகாசப்தாலிகர்), தலைமை அரண்மனைப் பொறுப்பாளர் (மகாபிரதிகாரர்), தலைமை அந்தரங்க ஆலோசகர் (அந்தரங்க பிரிஹதுபரிகர்), யானைகளின் தலைமைக் காவலர் (மகாபிலுபதி), கணப்படைத் தலைவர் (மகாகணஸ்தர்) போன்றோர். [48] காலசூரி அரச குலத்தின் அரசராகிய யஸ்கர்ணதேவரின் கைரா (Khairha) செப்பேடுகள், பிரதம அமைச்சர், பிரதம ஆலோசகர், பலதிறப் படைப் பெருந்தலைவர், பிரதம குரு,

[41] Ibid., V, 22.
[42] Ibid., V, 447.
[43] Ibid., V, 167.
[44] Ibid., VII, 42.
[45] Ibid., V, 177.
[46] Ibid., V, 232.
[47] Ibid., VIII, 573.
[48] Ep. Ind. Vol. XII, Inscription No. 8.

தலைமை அரண்காவலர், ஆவணத் தலைவர், பொருள் விளக்குபவர் (மகா பிரமாத்ரர்), இலாயத்துறைத் தலைவர், பொருளகத் தலைவர், பிரதம மேற்பார்வையாளர் (மகா அத்யட்சகர்) ஆகியோரை அரசாங்கத் துறைத் தலைவர்களெனக் கூறுகின்றன.[49] அமைச்சர்களின் எண்ணிக்கை செயல்வினைகள் பற்றியவைகளில் இதற்கும் 'சுக்ர நீதி'க்கும் உடன்பாடு இருப்பதாகத் தோன்றுகிறது. புரோகிதர்கள் (குருமார்கள்), பிரதிநிதி (பகர ஆள்), பிரதானர் (பிரதமர்), சச்சிவர் (நிதி அமைச்சர்), மந்திரி (ஆலோசகர்), பிரத்விவாகர் (தலைமை நீதிபதி), பண்டிதர் (சட்ட அமைச்சர்), சுமந்தகர் (போர், அமைதிக்கான அமைச்சர்), அமாத்தியர் (அரசு செயலர்), தூதர் (நிலைத்தூதர்)[50] ஆகியோரை 'சுக்ரநீதி' எடுத்துரைக்கிறது. இறுதியாக, அமைச்சவைப் பொறுப்புக் கோட்பாடு பின்பற்றப்படுவதைவிடப் பின்பற்றப்படாமலேயே மதிக்கப்பட்டது. 'அரசர் ஏதாவது தவறு செய்திருந்தால் தவறு அமைச்சருடையதாகும்'[51] என்று 'முத்ராராக்ஷசம்' கூறுகிறது. அமைச்சவைப் பொறுப்பாகிய இக் காலக் கருத்தோடு இந்த விதியை ஒப்புநோக்க முடியாது. ஆனால், எவ்வாறாயினும், அரசருக்கு நல்ல அறிவுரை வழங்குதல் அமைச்சரின் கடமையாகும் என ஒரு மரபு இருந்ததாகத் தோன்றுகிறது. அரசர்கள் தவறிழைத்தால் அமைச்சர்கள் பொறுப்பேற்க வேண்டும்.

### நிலமானியத்தார்

வலிமை வாய்ந்த நிலமானியத்தார்க்குள்ளிருந்தும், அரசரின் உறவினர்களிலிருந்தும் அமைச்சர்கள் அமர்த்தப்பட்டனர். பின் பிரிவைப் பொறுத்தவரை, காஷ்மீரின் அரசர் அவந்திவர்மனின் மந்திரி சுரவர்மன் இவ்வரசரின் ஒன்றுவிட்ட சகோதரர் ஆவார். ஆகையால், இந்த நாட்டின் அரசியலில் இவர்கள் பெரும் பங்கு பற்றினார்கள்.[52] குறிப்பாகக் குறிக்கோள் திக்விஜயமாக இருந்ததால் நிலமானியதாரர்களின் எண்ணிக்கை பெரிதாகும். அடிமை நிலையில் இருந்தாலும், வெற்றி கொள்ளப்பட்ட அரசர்களை அரசர்களாக வைத்திருக்கவேண்டுமென்பது அரசியல் ஒழுக்கமாகும். கௌட அரசராகிய இராமபாலரின் குடியாள் (கீழாள்) பற்றிய பட்டியல் ஒன்றிருக்கிறது. அது பின்வருமாறு:[53]

---

[49] Ibid., Inscription No. 24.
[50] 'Sukraniti', Chap I.
[51] Act III.
[52] Stein, 'Rajatarangini', V, 128—29.
[53] H. C. Roy, op. cit., pp. 340—41.

(1) மகத அரசர் பீமயசாஸ் (Bhimayasas); (2) தென்பகுதியின் அரசாகிய கோட் அலவியின் அதிபராகிய வீரகுணர்; உட்கலேச கர்ணகேசரியைத் தோற்கடித்த தண்டபுத்தியின் அரசராகிய ஜெயசிம்மர்; (4) பால-வலபியின் அரசர் விக்ரம ராஜா; (5) குடியாள் தலைவர்களில் முதல்வராகிய சாமந்தசார சூடாமணி லக்சுமிசுரர்; (6) குஞ்சவாதியின் சுரபாலர்; (7) தைலகம்பத்தின் கலபட்டராகிய ருத்திரசிகரர்; (8) உச்சல அரசர் மாயகல சிம்மர்; (9) காயனகலாவின் மண்டலாதிபதி நரசிம்மார்ச்சுனர்; (10) தெக்காரிய அரசர் பிரதாபசிம்மர்; (11) சங்கடகிராமத்தின் கந்தர்ச்சுனு; (12) நித்ரபாலாவின் விஜயராஜா; (13) கௌசாம் பியின் அரசர் துவாரபவர்த்தனர்; (14) பாண்டுவனத்தின் சோமர்.

வெற்றிகொண்ட அரசர்களுடன், நிலமானியதாரர்களானவருடன் மேல்நிலை அரசரால் படைக்கப்பெற்றவர்களும் இருந்தனர். 'பஞ்ச மகாசப்த நிலமானிய சிறப்புரிமையோடு இவர்களில் பலர் முதலில் ஆளுநர்களாக அமர்த்தப்பட்டனர். ஆனால், மரபுவழிப் பதவிகள் மாற்றப்பட்டது விரைவில் இதை முழுமையான குடியாள்களாக்கியது.'[54] இவர்கள் பெரும் அதிகாரங்களைச் செயல்படுத்தினர். போர்க்காலத்தில் மேல்நிலை அரசருக்குப் படைகள் அளித்தனர். தம் அரசவையில் நிலையாக மேல்நிலை அரசரின் நிலைத்தூதர் ஒருவரை ஏற்றுக்கொண்டிருந்தனர். இவர்கள் உட்குடியாள்களைப் (நிலமானியதாரர்களைப்) படைக்கலாம். விழாக்காலங்களில் பேரரசரின் அவையில் இவர்கள் இருப்பது தேவையாயிற்று. வேங்கிச் சளுக்கியர்கள், கொங்கணின் சிலாஹரர், ராஷ்டிரகூடப் பேரரசில் சிலர், வங்காளத்தில் சாமந்த-சாகர சூடாமணி ஆகியோர் இத்தகைய நிலமானியத்தார்கள்.

இவர்களுக்குக்கீழ் இரண்டாம் வகுப்பு நிலமானியத்தார் இருந்தனர். இவர்கள் குறைந்த அதிகாரத்தையும் தன்னாட்சியையும் பெற்றிருந்தனர். மேலாட்சி அரசரின் இசைவாணையின்றி இவர்கள் ஒரு கிராமத்தைக்கூட மானியம் கொடுக்க முடியாது. இந்தியா முழுவதும் இது பொதுவான செயல்முறையாக இருந்ததாகத் தோன்றுகிறது. ஏனெனில், ராஷ்டிரகூட அரசரின் குடியாள் ஒருவராகிய சங்கரகனு, ஒரு கிராமத்தை மானியமளித்த சமயத்தில் அரசரின் இசைவாணை பெறவேண்டியிருந்தது.[55] சோழர்களின் நிலமானியத்தார்களாகிய வீரசோதரும் இரண்

[54] Altekar, 'Rastrakutas and their Times,' p. 263.
[55] Ep. Ind. Vol. IX, p. 195.

டாம் பிரிதிவிபதியும் இத்தகைய இசைவாணை பெறவேண்டி யிருந்தது.[56] பிரதிஹாரப் பேரரசில், நிலமானியங்களை அல்லது மற்ற அறக்கட்டளைகளை அரசரின் பிரதிநிதி கையொப்பமிட்டு அரசரின் ஏற்பினைத் தெரிவித்தார்.[57] நேபாளத்திலும் இதே முறை இருந்துவந்தது.[58]

கடைநிலைக் குடியாள்கள் இறுதியில் வந்தனர். இவர்கள் பெரும்பாலும் அரசருக்கும் இரண்டாந்தரக் குடியாள்களுக்கும் அலுவலராகப் பணியாற்றினர். ஆனால், முதல் தரத்தவர்கள் சாமந்தசாகர சூடாமணி, மகாமண்டலேசுவரர் அல்லது மகா சாமந்தாதிபதி என்று பெயர் பெறுகையில், இரண்டாம், மூன்றும் தரத்தவர்கள் மகாசாமந்தர் அல்லது சாமந்தர்கள் என்று மட்டுமே பெயர் பெற்றனர்..

முடிவாக, மையப்படுத்தப்படுதலை நோக்கியே வளரும் போக்கு இருந்தாலும், நெருக்கடி காலத்தில் நிலமானியத்தார்களின் வளரும் சிறப்பை மேல்நிலை அரசரால் புறக்கணிக்க முடியவில்லை.[59] துருவா, முதலாம் அமோகவர்ஷர், மூன்றும் அமோகவர்ஷர் ஆகிய ராஷ்டிரகூட அரசர்களும், அவந்திவர்மன், சங்கரவர்மன், யசகரர் ஆகிய காஷ்மீர் அரசர்களும், வங்காளத்தின் ராம பாலரும் நிலமானியத்தார்களின் உதவியால் அரியணை ஏறினார் கள். ஆனால், மொத்தத்தில், முன்னைக் காட்டிலும் இப்பொழுது மையப்படுத்தும் பணி இந்தியா முழுவதிலும் மிகத் தீவிரமான முறையில் சென்றுகொண்டிருந்ததென்று கூறலாம். ஏனென்றால், இப்பொழுது இந்தியாவில் பல மண்டலங்கள் அல்லது நிலமானிய முறைகள் இருந்தன. தலைப்பிரபுக்களின்மீது எதிர்ப்புணர்ச்சி குறைக்கப்படவேண்டிய நிலை ஏற்பட்டது. முஸ்லிம்களால் பேரரசு உருவாக்கப்படும் கடமைப் பொறுப்பிற்கு இந் நிலை ஒரு முன்னோடி யாக இருந்தது.

மத்திய அரசாங்கத்திற்குப் பல்வேறு வகையில் கீழ்ப்படியும், மாறுபட்ட அளவில் தன்னாட்சி பெற்றிருக்கும் நிலமானியத்தார் களால் ஆளப்படும் மண்டலத்தில் அல்லது பேரரசில் அரசாங்க அமைப்பு மூன்று வகையாகப் பிரிந்து செயல்படும். அவையாவன: பேரரசின் அரசாங்கம், நிலமானிய அரசின் அரசாங்கம், கிராமத்தின் அரசாங்கம், நிலப் பிரிவுகள், உட்பிரிவுகள் ஆகிய வற்றின் ஆய்விற்கு இயல்பாக நம்மை இட்டுச் செல்லுகிறது.

[56] Ibid., Vol. IV., p. 82.
[57] Ibid., Vol. IX, p. 9.
[58] Ind. Ant. Vol. XIII, p. 98.
[59] Stein, 'Rajatarangini', V, 250 & 451–52; VII, 48.

**ஆட்சிப் பிரிவுகள்**

இக் காலத்தின் பேரரசின் பரப்பை நாம் முன்னரே சுட்டிக் காட்டியுள்ளோம். நாராயண பாலரின் [60] கல்வெட்டிலிருந்து ஆட்சிப் பிரிவுகள் புக்தி (Bhukti), விஷயம் (Visaya), மண்டலம் (Mandala) என்று இறங்குவரிசையில் இருந்ததாகத் தோன்று கிறது. ஒரிசாவின் கல்வெட்டு ஒன்றில் விஷயத்திற்குப் பதிலாக மண்டலம் பயன்படுத்தப்பட்டுள்ளது. [61] சிறிது மாறுபட்ட பிரிவு களாகியவற்றை ராஷ்டிரம், விஷயம், புக்தி என்று ராஷ்டிரகூடப் பதிவுகள் கூறுகின்றன. ஒரிசாவின் பதிவுகளில் ராஷ்டிரத்திற்குப் பதிலாக மண்டலம் அடிக்கடி பயன்படுத்தப்படுகிறது. சில சமயங் களில் ராஷ்டிரம் சிறியதாகவும், விஷயம் பெரிய பிரிவாகவும் செய்யப்பட்டிருக்கிறது. கூர்ஜரப் பிரதிஹார,[62] கௌடப்[63] பேரரசு அமைப்பில், மண்டலத்தைக் காட்டிலும் புக்தி பெரிய ஆட்சிப் பிரிவாகத் தோன்றுகிறது. சான்றாக, 'புந்தரவர்த்தன புக்தி'யில் அடங்கிய கேட்டிவர்ச விஷயாவின் பிராமணி கிராம மண்டலத்தில், விசம்புரு கிராமத்தில் இருந்த நிலம் ஒரு பிராமண ருக்கு வழங்கப்பட்டதென்று அமாச்சி பட்டயம் பதிவு செய் கிறது. இதைப்போல, பிராதிஸ்தன புக்தியின் ஒரு பாகமாக வாரஞ்சி இருந்ததென்று விநாயகபாலரின் செப்பேடு கூறுவதாக மனிதனின் பழமைச் செய்திகள் பற்றிய ஆய்வு அறிக்கை யில் நாம் படிக்கிறோம். சோழப் பேரரசில் மண்டல மென்பது மாநிலமாக இருந்தது. ஒரு சமயத்தில் இப் பேரரசில் ஒன்பது மண்டலங்கள் இருந்தன.[64] இந்த ஆட்சிப் பிரிவுகளின் கீழ்மட்டத்தில் கிராமங்கள் இருந்தன. ராஷ்டிரத்தின் ஆளுநர் ராஷ்டிரபதியாகவும், விஷயத்தின் ஆளுநர் விஷயபதியாகவும், புக்தியின் ஆளுநர் போகபதியாகவும் அல்லது போகிகராகவும் இருந்தார். கிராமத் தொகுதிகளின் ஆளுநர் யார் என்று உறுதி செய்வது கடினமானதாகும்.

'பிரிஹத்போகிகர்' என்ற பெயர், இந்த அலுவலர் ஒரு பெரிய மாநிலத்தின் அல்லது ஒரு மாநிலத்தின் ஒரு பெரிய

[60] Ind. Ant. Vol. XV, pp. 304 et seq.

[61] Ep. Ind. Vol, XII, Ins. No. 20.

[62] Dhighwa—Duboli grant of Mahendra Pala, Ind. Ant., XV, p. 105.

[63] Amgachi grant, Epi. Indica, Vol. XV, pp. 295--301.

[64] Venkayya, 'Introduction to South Indian Inscriptions', Vol. II, Part, V.

பிரிவின் பெயராக இருந்திருக்கலாம்.[65] ஒரிசாவின் கல்வெட்டு களில் ஒன்றும், விஷயாவும் கிராமமும் இறங்குவரிசையில் ஆட்சிப் பிரிவாக அமைந்தனவென்று குறிப்பிடுகிறது.[66] இதே முறையில் மற்றொன்று—மண்டலம், விஷயா, கிராமம் என்ற பிரிவுகளைக் குறிப்பிடுகிறது.[67] கோசல ராஜ்ய கண்டத்தின் ஆட்சிப் பிரிவுக ளாக விஷயம், மண்டலம், கண்டம், கிராமம் என்பவைகளை மற் றொன்று இறங்கு வரிசையில் கொண்டிருக்கிறது. ஒரிசாவின் கேசரி அரசர்களின் ஆட்சிப் பகுதியை இது சேர்ந்தது.[68] ஆனால், இவைகளுக்குமேல் முக்கியமான நகரங்களும் மாநகர்களும் ஆட்சிப் பிரிவுகளாக அமைந்துகொண்டன. கிராமங்கள் பெருமளவு தன்னாட்சி பெற்றிருக்கையில் நகரங்கள் தனிப்பட்ட அலுவலர் களால் ஆளப்பட்டன. ஆட்சிப் பிரிவுகளின்படி நிலைவரிசை எது வாயினும், இக் காலக் கல்வெட்டுச் சான்றுகள் ஒரே மாதிரியான முறையைக் குறிப்பிடவில்லை. அரசின் பதவிகள், பெரும்பாலும் உயர்பதவிகள் மரபுவழிப் பதவிகளாகிக்கொண்டிருந்தனவென் பதில் ஐயமில்லை.[69]

**பேரரசின் அலுவலர்கள்**

அரசர் அல்லது நிலமானியத்தாரால் அமர்த்தப்பெற்ற அலு வலரின்கீழ் ஒவ்வோர் ஆட்சிப் பிரிவும் இருந்தது. பொதுவான ஆட்சி நோக்கங்களுக்காகப் பேரரசின் ஆட்சிப் பிரிவுகளில் நில மானிய அரசுகளும் இணைக்கப்பட்டிருந்தன. பேரரசு ஆட்சியில் அலுவலர்களின் படிநிலை வரிசையைக் கி.பி. 1026ஆம் ஆண்டின் பதிவு கீழ்க்கண்டவாறு குறிப்பிட்டுள்ளது: ராஷ்டிரபதி, விஷய பதி, நகரபதி, கிராமபதி, நியுக்தா நியுக்தர், இராஜபுருஷர்.[70] ராஷ்டிரத்தின் தலைவர்களாக அல்லது தக்காணத்தில் இதற்கிணை யான மண்டலம் அல்லது ஒரிசாவில் ராஜ்ய கண்டத்தில் மாநில ஆளுநர்களாக இருந்தனர். இவர்கள் நிலமானியத் தலைவர்களைக் கட்டுப்படுத்திச் செயலாட்சி செய்திருக்கலாம். நாம் பார்த்தது போல் இந்த ஆளுநர்கள் பெரும்பாலும் நிலமானியத்தார் களுக்குள்ளிருந்தே தெரிவு செய்யப்பட்டனர். சான்றாக, காலிம் பூர் கல்வெட்டில் நாராயண வர்மன் என்ற ஆளுநர் மகாசாமந் தாதிபதி என்ற பட்டத்தையும் பெற்றிருந்ததாக நாம் அறிகிறோம்.

[65] Beni Prasad, 'State in Ancient India', p. 409.
[66] Ep. Indi., Vol. XII, pp. 237-42.
[67] Ibid., Vol. VI, pp. 140-42.
[68] J. B. & O. R. S., Vol. II, p. 45-49.
[69] Elliot & Dowson, Vol. I, p. 20.
[70] Ind. Ant., Vol. V, p. 278.

ராமபால சரித்திரத்தில், நாம் 'மண்டலாதிபதி'யாக இருந்த ஒருவரைப் பெற்றிருக்கிறோம். ராஷ்டிரகூட ஆட்சியில் மாநில ஆளுநர்கள் பெரும்பாலும் 'மகாமண்டலேசுவரர்' அல்லது 'மகாசாமந்தாதிபதி' என்ற பட்டத்தைப் பெற்றிருந்தனர்.[71] சான்றாக, ஒரிசாவில் 'மண்டலிகர்கள்',[72] 'மகாசாமந்தர்கள்'[73] ஆகியவர்களைப்பற்றிக் கேள்விப்படுகிறோம். ஒரே சமயத்தில் இவர்கள் நிலமானியதாரர்களாகவும் ஆளுநர்களாகவும் இருந்திருக்கலாம். இந் நிலமானியத்தார்கள், 'ராணகர்' (Ranaka) என்ற பட்டப் பெயரைப் பெரும்பாலும் இங்குப் பெற்றிருந்தனர். இது வங்காளம், காஷ்மீரம் போன்றவைகளின் 'ராஜணகர்'கள் என்பதை ஒத்திருக்கிறது. ராஜதரங்கிணியும்,[74] தர்மபால தேவரின் காலிம்பூர் செப்பேடும் ராஜணகர்களையும் ராஜணர்களையும் கூறுகிறது. இவைகளிலிருந்து முறையே ராணகரும் ராணுவும் பெறப்பட்டிருக்கலாம். இன்று இந்தியாவின் இராஜபுத்திர அரசர்கள் பலர் பெற்றிருக்கும் ராணகர், ராணு என்பவைகளுக்கிடையில் பெரும் ஒப்புமை இருப்பதைக் காணலாம். இந்த ராணகர்கள் வெறும் மண்டலிகர்களா[75]கவும் மகாசாமந்தர்களாகவும்[76] மட்டும் இல்லை; பல்வேறு துறைகளின் பேரரசு அலுவலர்களாக இவர்கள் அமர்த்தப்பட்டிருந்தனர். சான்றாக, ராணகபூஷன் நாகரைப்பற்றி நாம் கேள்விப்படுகிறோம். இவர் 'மகாசப்தாலாதிகிருதர்'[77] ஆக இருந்தார். கூர்ஜரப் - பிரதிஹாரப்[78] பேரரசில், அளுநர்கள், 'மகாசாமந்தர்கள்' அல்லது 'மகா சாமந்தாதிபதி'[79] என்ற பட்டத்தையும் பெற்றிருந்தனர். இந் நிலமானியதாரர்களைத் தவிர அரசருடைய உறவினர்களோ அல்லது யுவராஜாக்களோ பெரும்பாலும் மாநில ஆளுநர்களாக அமர்த்தப்பட்டனர். இத் தலைவர்களின் அதிகாரத்தையும் தனி மதிப்பு நிலையையும் மாநில ஆளுநர்களின் கீழ்வரும் நிகழ்ச்சிகளிலிருந்து மதிப்பிடலாம். ராஷ்டிரக்கூடப் பேரரசில் கி.பி. 912இல் மகாசாமந்தகல வட்டராசா பானவாசியின் ஆளுநராக இருந்தார். இவருடைய கீழாள் ஒருவர் கிளர்ச்சி செய்து அண்டை நாட்டிற்குத்

---

71 Alteker, 'Rastrakutas and Their Times,' p. 175.
72 Ep. Ind., Vol. IV, pp. 254-59.
73 Ibid., Vol. XI, pp. 98-101.
75 Ibid, Vol. IV, p. 259.
76 Ibid, Vol. XI, pp. 98-101.
77 J. B. O. R. S., Vol. V, 564-78.
78 Ep. Ind., Vol. XIV, pp. 176-88.
79 Ind. Ant., Vol. XVIII, p. 90.

தப்பிச் செல்ல முயன்றபொழுது இவரால் அவர் கைது செய்யப் பட்டார்.[80] மேலும், மற்றொரு பற்றுதியற்ற கீழாளுக்கு எதிராக இவர் படைகொண்டு அவரைத் தாக்கி முற்றிலும் அடிப்படுத்தி னர்.[81] தண்டபுக்தியின் அரசராகிய, வங்காள அரசரின் அலு வலர் உட்கலேச (உட்கலாவின் அரசர்) கரணகேசரி என்பவரைத் தோற்கடித்தார். மொத்தத்தில் மாநில ஆளுநர்கள் பெருமளவு அதிகாரத்தையும் தொடக்கத் துணிவையும் பெற்றிருந்தனர். இவர்களுடைய தனிமதிப்பு நிலையை, 'தம் தலைநகர்களில் தம்முடைய நீதிமன்றங்களைப் பெற்றிருந்த உண்மையிலிருந்து முடிவு செய்யலாம்; சிறிய அளவில் பேரரசு அவையின் உருவ நேர் படியாக இவைகள் இருந்தன'.[82]

இந் நிலமானியத் தலைவர்களின் குடும்பங்களில் இப் பதவிகள் மரபுவழிக்குரியனவாக ஆக்கப்பட்டன. ஆனால், இருந்துங்கூட, வடக்கில் இருந்தவர்களைக் காட்டிலும் ராஷ்டிரகூடர்கள் தம் மாநில ஆளுநர்கள்மீது பெருமளவு அதிகாரம் செலுத்தினர்.[83] இராஷ்டிரகூடப் பேரரசில், 'மாநில ஆளுநர்கள் வருவாய் ஆட்சி யின் தலைவர்களாகவும் இருந்தனர்.... கிராமங்கள், நிலங்கள் ஆகியவற்றின் வருவாய் அறுதியீடு, தலநிறுவனங்களின் ஒத் துழைப்போடு இவர்களால் நிறைவேற்றப்பட்டது.'[84] தெற் கில் வழக்கில் இருந்த அரசாங்கத்தைவிட வடக்கில் இருந்த மாநில அரசாங்க முறை சிறிது மாறுபட்டிருந்ததாகத் தோன்று கிறது. ராஷ்டிரபதிக்குப் பதிலாக வடக்கில் இராஜஸ்தானியர் கள், அதாவது, அரசப் பகர ஆள் இருந்தனர். இவர்கள் வருவாய்த் துறைத் தலைவர்களாக இல்லை. நிதி அலுவலராகிய உபாரிகர் இராஜஸ்தானியரிடமிருந்து சுயேச்சையாக இருந்தார். தென் னாட்டின் மற்றொரு குறிப்பிடத்தக்க இயல்பு, தம் கடமைகளைச் செய்வதில் தல நிறுவனங்கள் அரசாங்கத்தோடு ஒத்துழைத்தன. சான்றாக, ராஷ்டிர மகாதாரர் என்னும் ஒரு குழுவினர் மாநில ஆளுநர்களுக்கு உதவினர்.[85] ஆனால், இச் செயல்முறை ராஷ்டிர கூடர்களுக்குத் தனிப்பட்டதன்று. இது காலசூரி அரசிலும் நிலவிற்று.[86] வடக்கில் அரசாங்கம் மரபுவழிகளைப் பின்பற்றியது.

---

[80] Ep. Carnatica, Vol. VIII, No. 88.
[81] Ibid. Nos. 10 & 22.
[82] Altekar, 'Rastrakutas and Their Times,' p. 173.
[83] Ibid, p. 173.
[84] Ibid. p. 175.
[85] Ep. Ind., Vol. VIII, p. 186; Dhulia Plates of Karka.
[86] Vadner Plates of Budha-raja, Ibid, Vol. XII, p. 130.

மாநில அரசாங்கம், ஹர்ஷர் அல்லது குப்தர் காலத்தில் எப்படி இருந்ததோ அப்படியேதான் இருந்ததென்று சொல்லலாம்.

## மாநில ஆட்சி

முன் இருந்ததைப்போல், மாநில ஆட்சி, அதிகரணங்கள் **(Adhikaranas)** எனப்பட்ட சில துறைகளைக்கொண்டிருந்தது. இது ஒவ்வொன்றிலும் லேக்ககர்களும் **(Lekhakas)** காயஸ்தர்கள் அல்லது எழுத்தர்களும் அமர்த்தப்பெற்றிருந்தனர். ஆனால், மகா காயஸ்த சந்திவிக்ரகிகர்[87] என்பவர் பற்றியும் காயஸ்த மகாசந்திவிக்ரகிகர் என்பவர் பற்றியும்[88] கேள்விப்படுகிறோம். நாராயண பாலரின் பாலிப்பூர் செப்பேடுகள், க்ஷேத்ரபர் (Ksetrapas) அல்லது களங்களின் காவலர், பிராந்பாலர் அல்லது எல்லைப் பாதுகாவலர், கோட்டப்பாலர், கண்டராக்ச காவற்படையினர், மாநில ஆட்சியைச் சேர்ந்த படை அலுவலர்கள் போன்றோர் குறிப்பிட்ட மற்ற அலுவலர் ஆவர்.[89] ராஷ்டிரம் அல்லது புக்தி விஷயம் அல்லது மாவட்டங்களைக் கொண்டிருந்ததால், மாவட்டத் தலைவர்கள் 'விஷயபதிகள்' என்று பெயர் பெற்றனர். ராஷ்டிரகூட அரசில் இருந்ததைப் போல் இந்த மாவட்டம் சில வேளைகளில் மிகப் பெரியதாகவும், ஒரிசாவைப் போல் மிகச் சிறியதாகவும் இருந்திருக்கின்றன. ஒரிசாவைப்பற்றி இந்த வேபுர விஷயம் பன்னிரண்டு கிராமங்களை மட்டுமே கொண்டிருந்ததாகச் சொல்லப்படுகிறது.[90] ஒரு விஷயம் அல்லது மாவட்டத்தின், ஒரு மண்டலம் அல்லது கிராமங்களின் தொகுதியின், ஒரு புக்தியின் அல்லது மாநிலத்தின் அல்லது ராஷ்டிரத்தின் அல்லது முடியரசின் எதுவாயினும், நாட்டுப்புறப் பகுதிக்கு மிக முக்கியமான கடமைகளைச் செய்கிற அலுவலர்கள் பலரைப்பற்றியும் இங்குச் சொல்லப் பெற்றிருக்கிறது. பெரும்பாலும் காவல்துறை அலுவலர்களாகிய தௌசாதசாதனிகர்களும் (Dausadhasadhanikas) சௌரோத்தாரணிகர்களும் (Chauroddharanikas), பெரும்பாலும் நீதித்துறையைச் சேர்ந்தவர்களாகிய தண்டசக்திகளும் தண்டபாசிகர்களும், சுங்க வரி வசூலிப்பவராகிய சவுல்கிகர்களும், காடுகளின் மேற்பார்வையாளர்களாகிய கவுல்மிகர்களும் இவர்களே. நிதி அலுவலர்களுள் சஸ்தாம்ஸர் (Sasthamsa), அதாவது, அரசருக்குச் செலுத்தப்பட வேண்டிய விளையுளில் ஆறில் ஒரு பங்கைக் கட்டுப்படுத்திச் செய

[87] Quarterly Journal of Andhra Historical Society, July 1926.

[88] J. A. S. B., 1898, Vol. 64, pp. 125-27.

[89] Ind. Ant.. Vol. XV, p. 304 et seq.

[90] Ep. Ind., Vol. IV, pp. 183-93.

லாட்சி செய்பவரும் சொல்லப்பட்டிருக்கிறார். கலிம்பூர் செப்பேட்டில் எழுத்தர்களின் தலைவராகிய ஜெயிஸ்தகாயஸ்தர் என்பவர் மாநில அரசாங்கத்தோடு சேர்க்கப்பட்டிருக்கிறார். இதையொத்த தற்கால அலுவலர் பதிவாளர் அல்லது ஓர் அலுவலகக் கண்காணிப்பாளராக இருக்கலாம்.

ராஷ்டிரகூடப் பேரரசில் சில விஷயபதிகள் மெய்யாகவே நிலமானியத் தலைவர்களின் தனி மதிப்பு நிலையைப் பெற்று அனுபவித்தனர்; சான்றாக, குந்தள விஷய ஆளுநர் பஞ்சமா சப்தத்தோடு கூடிய ஒரு மண்டலேசுவரரேயாவர் (கி.பி. 1019இல்).[91] 'கிராம அல்லது நிலமானியதார்களின் உடைமைகளை இடையிட்டுத் தலையிடாமல் இருக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளப்பட்ட அலுவலர்களில் தவறாமல் இவர்களும் கூறப்படுவதால் இவர்களும் பெருமளவு வருவாய் திரட்டும்' அதிகாரம் பெற்றிருந்தனர்.[92] இவர்களுடைய ஆட்சிப் பணிகளில் விஷயமகாதாரர்கள் இவர்களுக்குதவினர்.[93] ராஷ்டிரகூடப் பேரரசின் ஆட்சிப் பிரிவில் விஷயத்திற்கும் மண்டலத்திற்கும் பின் புக்தி வருகிறது. இதன் தலைமையில் போகிகர் அல்லது போகபதி இருந்தார். 100இலிருந்து 500 கிராமங்களை ஒரு புக்தி கொண்டிருந்தது; பத்து அல்லது முப்பது கிராமங்களைக்கொண்ட உட்பிரிவுகளாக, அதாவது, கிராமங்களின் தொகுதிகளாகவும் மண்டலங்களாகவும் இவை ஒவ்வொன்றும் பிரிக்கப்பட்டன. இயல்பான தரமுள்ள படையைச் சேர்ந்தவர்கள் இதற்கு அலுவலராக அமர்த்தப்படுவர். கங்க அரசர் இரண்டாம் பிரதுங்கர் (Biratunga) போரில் வீரம் காட்டியதற்காக மனலேரர் (Manalera) என்பவரை அட்கூர் 12-க்கு மேற்பார்வையாளராக அமர்த்தினர்.[94] விஷயபதிகளும் போகர்களும் நாட்டை மரபுவழி வந்த வருவாய்த் துறை அலுவலர்களின் உதவியோடு ஆட்சி செய்தனர். இக் கிராமத் தலைவர்கள் கர்நாடகத்தில் நாட்கௌடர்களென்றும், மகாராஷ்டிரத்தில் தேசகிராமகூடர்களென்றும் பெயர் பெற்றிருந்தனர்.[95]

### கிராம ஆட்சி

பொதுத்துறை ஆட்சியில் மிகச் சிறந்த இனம் கிராமத்தின் ஆட்சியாக இருந்தது; கிராம ஆட்சியின் ஜனநாயக அடிப்படை

[91] Ind. Ant. Vol. V., p. 17.
[92] Altekar, 'Rastrakutas and Their Times,' p. 177.
[93] Kapadwanj Grant of Krishna II, Ep. Ind., Vol. I, p. 55.
[94] Ep. Ind., Vol. IV, p. 56.
[95] Ibid, Vol. XIV., p. 366. பீஷ்வாக்களின்கீழ் 18ஆம் நூற்றாண்டில் நாடுகௌடா என்பது குறிப்பிட்ட நோக்கத்திற்காக ஒதுக்கப்பட்ட வருவாயின் ஒரு பகுதி.

தென்னிந்தியாவின் தனிச் சிறப்பியல்பாகும். இயல்பாக ஒவ்வொரு கிராமமும் ஒரு கிராமத் தலைவரைப் பெற்றிருந்தது. இவருடைய பதவி பெரும்பாலும் மரபுவழிக்குரியதாக இருந்தது. ஆனால், இவர் 'மத்திய அரசாங்கத்தின் பணியாள் என்பதை விடப் பெரிதும் மக்களின் பிரதிநிதியாகவே இருந்தார்.'[96] ஏனென்றால், கிராமம் மிகப் பழைய காலத்திலிருந்தே ஓரளவு தன்னாட்சி பெற்றிருந்தது; இது மரபாகி, எல்லா அரசியல் அமைப்பிற்கும் உறுதிநிலைக்கும் இது அடித்தளமாக அமைந்தது. அரசின் சேவைக்கென ஓரளவு படையைக் கிராமமும் அளித்தது. கிராமம் அரசின் ஒரு நிதிப் பிரிவாகவும் இருந்தது. அரசரின் வருவாயோடு கிராமத் தலைவரை அடிக்கடி குறிப்பிடுவதால்,இவர் அரசருக்குரிய வருவாய்களைத் திரட்டிச் செலுத்தும் பொறுப்பில் இருந்திருக்கலாமென்று கூறப்படுகிறது.[97] கிராம சபைக் கூட்டத்தில் இவர் பெரும் பங்கு பற்றினார். சிறிய குற்றவியல் வழக்குகளில் இவர் குற்றவியல் நடுவராகவும் பணியாற்றினார்.[98] ஆனால், ஒரு வரையறையின்றிப் பலரைக் கிராமத் தலைவர்களாகக்கொண்டிருந்த கிராமங்களும் இருந்தன. சுகந்தவதி, எலரவெ (Elerave), ஹாசூதி (Hasudi) போன்ற கிராமங்கள் ஒவ்வொன்றிலும் பன்னிரண்டு கிராமத் தலைவர்களையும், ஹிரயகும்மி ஆறு பேர்களையும் பெற்றிருந்ததாக ரத்தா (ratta) பதிவுகள் கூறுகின்றன.[99] கிராம சபை அல்லது பஞ்சாயத்தை உருவாக்கிய பெருமக்களாக இவர்கள் இருந்திருக்க வேண்டும். பொதுப் பாதுகாப்பிற்கும், நீதி பரிபாலனத்திற்கும், அரசருக்குரிய வருவாயைத் திரட்டிச் செலுத்துவதற்கும் பஞ்சாயத்து பொறுப்புடையதாக இருந்தது.

கிராமத்தின் மிக முக்கியமான நிறுவனம் கிராம சபையாகும். தக்காணத்தில் மூன்று வகைகள் இருந்தன. இவை: தமிழ் நாட்டு வகை, கர்நாடக வகை, மகாராஷ்டிர-குஜராத்திய வகை. 'மகாராஷ்டிரம் குஜராத்தில் இருந்ததைப்போல், தமிழ் நாட்டின் கிராம சபைகள் எல்லா வயதுவந்தவர்களையும் கொண்டிருக்கவில்லை. ஆனால், வாக்குச் சீட்டினாலும் ஒரு வகையான தெரிவு முறையினாலும் தெரிவு செய்யப்பட்ட 20 அல்லது 30 பேர்களை இவை கொண்டிருந்தன. வாக்காளர்கள், வேட்பாளர்களின் தகுதிபற்றி விரிவான விதிகள் இருந்தன. குற்றமற்ற குணவியல்போடு, வேட்பாளர்கள் குறிப்பிட்ட சொத்துடைமை, கல்வித் தகுதிகளும் வலியுறுத்தப்பெற்றன. ஒரு முறை தேர்ந்

[96] Altekar, 'Rastrakutas and their Times,' p. 189.

[97] Altekar, 'Village Communites in Western India', Ch.I,

[98] Ep. Ind. Vol. XI, pp. 224 et Seq.

[99] J. B. B. R. A. S., Vol. X, p. 283 et Seq.

தெடுக்கப்பட்டவர்கள் மூன்றுண்டிற்கு மறுபடியும் தேர்தலில் கலந்துகொள்ளக்கூடாது. தகுதி பெற்றவர்கள் எல்லோரும் கிராம சபையில் பணியாற்ற வாய்ப்பளிக்கும் பொருட்டு இந்த விதி வகுக்கப்பெற்றது. தேர்தல் ஆண்டுதோறும் நடந்தது. தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் அந்த ஆண்டின் பெருமக்கள் எனப் பெயர் பெற்றனர். சந்திரகுப்த மௌரியர் காலத்தில் பாடலி புத்திர மாநகர் ஆட்சியில் செய்ததைப்போல் இவர்கள் தம்மைப் பல குழுக்களாகப் பிரித்துக்கொண்டனர். கிராமத்தின் குளம், கோயில், சாலைகள், நடுவர் தீர்ப்பு, நன்செய், புன்செய் போன்ற குறிப்பிடப்பட்ட பொறுப்பை ஒவ்வோர் உட்குழுவும் ஏற்றுக் கொண்டது.[100] கர்நாடகத்தில் கிராம சபையினர் தேர்ந் தெடுக்கப்படவுமில்லை; தெரிந்தெடுக்கப்படவுமில்லை. கிராமத் தின் எல்லாக் குடும்பத் தலைவர்களும் இச் சபையில் உறுப்பினர் கள். இவர்கள் மகாஜனங்கள் எனப் பெயர் பெற்றிருந்தனர். குஜராத்திலும் மகாராஷ்டிரத்திலும் இச் சபையின் உறுப்பினர் கள் குடும்பத் தலைவர்களைக் குறிக்கும் மகாதாரர்கள் என வழங் கப்பெற்றனர். கிராம சபையின் அதிகாரங்களும், செயல்வினை களும், இதன் நிருவாகிகளும் குஜராத்,மகாராஷ்டிரம்,கர்நாடகம் போன்ற இடங்களில் பெருமளவு ஒரே மாதிரியாகத்தான் இருந் தன. ஆனல், தமிழ்நாட்டில் இருந்த இதேபோன்ற நிறுவனங் களிலிருந்து கணிசமாக இவை மாறுபட்டிருந்தன. கர்நாடகத் தில் கிராம நிருவாகம் அதனுடைய வருவாயைப் பொறுத்தவரை மத்திய அரசாங்கத்திற்குப் பொறுப்புடையதாக இருந்தது. ஆனல், எப்படி, எப்பொழுது இவைகள் வசூலிக்கப்பட்டன வென்பதிலும், வரிவிதிப்பிலிருந்து விலக்குத் தரப்பட வேண்டுமா, எந்த அளவிற்குக் கொடுக்கப்பட வேண்டுமென்பவைகளிலும் எல்லாம் கிராமம் முழுமையான அதிகாரம் பெற்றிருந்தது. நில வரி செலுத்தத் தவறியவர்களின் நிலத்தை விற்கும் இதன் அதிகா ரத்தை அரசாங்கம் கிராம சபைகளிடம் ஒப்படைத்தது. கிராமக் குழுக்கள் கிராம நிலங்களின் சொந்தக்காரர்களாக இருந்தன. இவை,கிராம காரியங்களுக்காக நிலத்தை விற்றிருக்கலாம் அல்லது ஒதுக்கலாம். ராஷ்டிரகூட ஆட்சியின்கீழ் இந்த அதிகாரங்களெல் லாம் மத்திய அரசாங்கத்திடமே இருந்தன. இதனுடைய பிரதி நிதிகளின்வழியாக இவைகள் செயல்படுத்தப்பட்டன'.[101] இருந்த போதிலும், கிராம சபைகள், பொதுப்பணிகள், பள்ளிக்கூடங்கள்,

[100]Altekar, 'Rastrakutas and Their Times,' p. 198; Archaeological Survey Report, 1904—5, p. 140 et seq.

[101]Altekar, 'Rastrakutas and Their Times', p. 207; R.C. Majumdar, 'Corporate Life in Ancient India', p. 193.

அறநிலையங்கள் ஆகியவற்றை ஏற்று நடத்தின.[102] கிராமத்தின் வருவாய்கள் இரண்டு பாகங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தன; இவை: (அ) மேல்வாரம் (Melavaram), (ஆ) குடிவாரம். முன்னது அரசாங்கத்தின் பங்கு; பின்னது கிராம மேம்பாட்டிற் காகக் கிராம சபை முடிவு செய்வதாகும்.

வடக்கில், தெற்கில்போல் கிராம ஆட்சி அவ்வளவு வேறுபடுத்தப்படவில்லை. கிராமத் தலைவர், கிராம முதி யோர்களாகிய மகாதாரர், மகாதாமர்களோடு[103] கிராமத்தில் நல்ல அரசாங்கத்திற்குப் பொறுப்புடையவர். காஷ்மீரில் கிராமத்தின் அரசு பிரதிநிதி கிராம காயஸ்தர் எனப் பெயர் பெற்றிருந்தார்.[104] கிராமத்திலிருந்து அரசு ஃபல பதிகா (Falapatika), பத்திகா (Pattika) என்ற இரண்டு வகை யான வருமானத்தைப் பெற்றதாக சைலாதித்தியரின் அலினு செப்பேட்டிலிருந்து அறிகிறோம். தெற்கில் இருந்ததைப்போல் பல கிராமங்களில் அரசரின் அலுவலர்கள் பொறுப்பேற்றிருந் தனர். பத்துக் கிராமங்களில் பொறுப்பேற்றிருந்த அலுவலர் தசகிராமிகர் என்று பெயர் பெற்றார். 'ராஜதரங்கிணி'யில் சொல்லப்பட்டிருக்கும் காயஸ்தர்களுக்கு ஒப்பாகக் கரணர்கள்[105] சொல்லப்பட்டிருக்கின்றனர். ஒரிசாவில் இன்று இவர்கள் ஒரு சாதியாக இருக்கின்றனர்.

## நிலமானியதார்கள், வரவுசெலவு, சட்டம், நீதிபற்றி சுக்ரநீதி

அரசாங்க அமைப்புப்பற்றிய விவரங்களைப் பொறுத்தவரை கல்வெட்டுப் பதிவுகளிலிருந்து பார்த்தவை இவை. இக் காலத் தில் இருந்த அரசின் நீதி, சட்டம் பொறுத்தவரையில் இவை எவ்வித அறிவுரையையும் கொடுக்கவில்லை. இங்கு நாம் அரசாங்கம்பற்றிய ஆய்வுக் கட்டுரை அல்லது தர்ம சாத்திரங் களைப் பார்க்கவேண்டும். மிக முக்கியமானதாக 'சுக்ரநீதி' இருக் கிறது. இந் நூலின் காலம்பற்றிக் கருத்து வேறுபாடு சிறிது இருக் கிறது. கஸ்டவ் ஒப்பர்ட் (Gustav Oppert) இதை நான்காம் நூற்றுண்டிற்கும், கே. பி. ஜெய்வால் எட்டாம் நூற்றுண்டிற்கும்,

---

[102] Ind. Ant., Vol. XIII, pp. 93-94; Ep. Ind., Vol XIII, p. 327.

[103] Alina Copper Plate Inscription of Siladitya (A.D 766—67), Ep. Ind., Vol. IV, No. 34.

[104] 'Rajataragini', Stein, V, 175.

[105] Ep. Ind., Vol. IV, No. 34.

ஆர். எல். மித்ரா இதைக் கி.பி. பதினாறும் நூற்றாண்டிற்கும் உரியதாக்குகிறார். முஸ்லிம்களின் வருகைக்கு முந்தியதாக இந் நூலைக் கூறுவதற்கு மறுப்பு, இதில் வெடிமருந்தும் பீரங்கிப் படையும் சொல்லியிருப்பதாகும். இருப்பினும், இப் பகுதிகள் இடைச் செருகல்கள் என்று வாதிக்கலாம். அல்பெருனி சுக்கிரரை தரும சாத்திரத்தின் ஆசிரியரென்றும் வியாசரின்[106] சீடர் என்றும் கூறுவது, இவருடைய காலத்திற்குக் குறைந்தது ஒரு நூற்றாண்டிற்கு முற்பட்டதாகவாவது இருக்கவேண்டும் என்ற முடிவு ஏற்படுகிறது. இதை நாம் கி.பி. எட்டாம் நூற்றாண்டிற்கும் ஒன்பதாம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்டதாக ஒதுக்கலாம்.

வழக்கமாக இந்து மேலாட்சியாளர் பரந்த நிலப்பரப்பைத் தம்கீழ் வைத்திருந்தாலும், இவரது நிலமானியதார்களால் நேர்முகமாக ஆளப்பட்டாலும், இவருடைய நேர்முக ஆட்சியின்கீழ் ஒரு சிறிய முடியரசை இந்து அரசியல் ஆய்வுக் கட்டுரைகள் விளக்க முயலுகின்றன. (அ) ஒரு சாமந்தரிலிருந்து அரசர்களின் படிநிலை வரிசை முறை, அதாவது, ஒரு சிறிய நிலமானியதாரிலிருந்து எங்கும் நிறைந்த அரசராகிய சர்வபூமர் வரைக்கும், (ஆ) ஓர் இலட்சம் வருமானமுள்ள அரசின் மாதிரி வரவுசெலவுத் திட்டம். 'மக்களைத் துன்புறுத்தாமல் ஆண்டிற்கு ஓர் இலட்சத்திலிருந்து மூன்று இலட்சம் கர்சம்வரை பெறப்படும் முடியரசின் அரசர் சாமந்தராவார். மூன்று இலட்சத்திலிருந்து பத்து இலட்சம் கர்சத்திற்கு அதிகரிக்கும் ஆண்டு வருமானமுடைய அரசின் மன்னர் மண்டலிகர் எனப் பெயர் பெற்றார். பத்து இலட்சத்துக்குமேல் 20 இலட்சம்வரை செல்லும் வருமானமுடையவர் அரசராவார். இருபது இலட்சத்திலிருந்து ஒரு கோடிக்கு அதிகமான வருமானமுடையவர் மகாராஜா. ஒரு கோடியிலிருந்து பத்துக் கோடிக்கதிகமான வருமானமுடையவர் சாம்ராட். விராட்டின் வருமானம் இதிலிருந்து பெருகி ஐம்பது கோடியாகும்; இவருக்கு மேலானவர் சர்வபூமர். இவருக்குப் பூமி அதன் ஏழு தீவுகளுடன் என்றும் அடக்கம்.'[107] இந்த அரசர்களின் படிநிலை அமைப்போடு அரசரின் அலுவலர்கள்பற்றிய மற்றொன்றும் இருக்கிறது. பத்துக் கிராமங்களின் ஆளுநர் நாயகர் (Nayaka) என்றும், நூறு கிராமங்களின் ஆளுநர் சாமந்தரென்றும், பத்தாயிரம் கிராமங்களின் (Ayuta) தலைவர் சுவராத் என்றும் பெயர் பெறுகின்றனர்.[108] பல்வேறு ஆட்சிப் பிரிவுகளிலும் அமர்த்தப்பெற்ற அரசரின் அலுவலர்

[106] Alberuni's 'India', (trans. by Sachau, Popular Ed. 1914), p. 132.

[107] 'Sukraniti', Ch. I. pp. 365—74.

[108] Ibid., p. 381—84.

களுக்கு அரச வருமானத்தின் இதே பங்கு ஒதுக்கி வழங்கப் பட்டது; நிலமானியதாரின் பதவிப் பெயர்களைப்போல் இவர் களும் பெற்றிருந்தனர். ஏனெனில், 'சாமந்தர்களோடும் மற்றவர்களோடும் சம்மார்க அமர்த்தப்பெற்ற இப் பணியாளர்கள் அரச வருமானத்தின் பங்கிடுபவராகவும், அடுத்து வருவதில் சாமந்தர்களெனவும் பெயர்பெறுவர்'.[109] இத் தறுவாயில் இம் முடிவு தெரிந்ததே. இக் காலத்தின் கல்வெட்டுகளில் பெரிய அலுவலர் நிலமானியதார்களின் சிறப்புப் பட்டமாகிய 'சம்திகத் பஞ்சமகாசப்தாஸ்' (Samadhigata Panchamahasabdas) என்ற சொற்றொடரின் பொருள்விளக்கப் பிரச்சினையை இது தெளிவாக்கு வதாகத் தோன்றுகிறது. 'பஞ்சமகாசப்தங்கள்' என்பது ஐந்து ஒலிக்கருவிகளின் பயன்பாட்டைக் குறிக்கிறதென ஃபிளீட் (Fleet) குறிப்பிட்டார். இவை: சிருங்க அல்லது கொம்பு, தம்பட்டம் அல்லது கஞ்சிரா, சங்க அல்லது சங்கு, பேரிகை, ஜெயகண்டா.[110] இதைச் சரியென ஏற்கமுடியாது. ஏனெனில், ஒரு கல்வெட்டிலா வது இறைமையின் சின்னத்தைத் தனித்தன்மை வாய்ந்த சங்கு, முரசு, பஞ்சமகாசப்தங்கள், வெண்கொற்றக் குடை, தங்கச் சாமரை என விவரிக்கப்பட்டிருக்கிறது.[111] அதாவது, ஃபிளீட்டும் அவரது தகவல்மூலமாகிய 'லிங்காயத விவேக சிந்தாமணி'யும் சரியானவையாக இருந்தால், சேர்க்கப்பட்டிருக்க வேண்டிய ஐந்து மகாசப்தங்கள் இங்கு சங்கையும் குடமுழாவையும் கொண்டிருக்க வில்லை. பஞ்சமகாசப்தங்களுடன் சொல்லப்பட்டிருக்கும் சங்கு, பேரியுடன் தொடங்கும் ஐந்துமகாசப்தங்கள் எனப் பொருள்படுவ தாக இந்த ஏட்டுரைப் பகுதியைப் பொருள் செய்ய முடியாது. ஆகையால், இச் சொல்லின் பொருள் ஐந்து ஒலிகளின் பயன்பாடு என்று இதுவரை ஏற்றுக்கொள்ளப்பட்ட சொல்விளக்கத்தை நாம் ஏற்பதற்கில்லை. ஒவ்வொரு பட்டத்தின் முன்னடையாக 'மகா' என்ற சொல்லைக் கொண்ட ஐந்து பட்டங்கள்தாம் பஞ்சமகா சப்தங்கள் என்பது ஏற்றுக்கொள்ளத்தக்கதாகத் தோன்றுகிறது. இப் பட்டங்களைப் பெற்றவர்கள் அரசரின் அலுவலர்களில் மிக உயர்ந்தவர்களாவர்.

இவர்கள் நிலமானியதார்கள் மட்டுமில்லை; அரச அலுவலர் களாக இருந்ததுடன் இவர் நிலமானியதார்களாகவும் இருந் தனர். 'பஞ்சமகாசப்தங்க'ளுக்கு முன்னால் 'சமதிகதா'வின் மாறுப் பயன்பாட்டிலிருந்து இம் முடிவு செய்யலாம். ஒரு மேல் நிலை அரசரிடமிருந்து இப் பட்டங்கள் பெறப்பட்டதை இது குறிப்

---

[109] Ibid, Ch. I, pp. 377–78.
[110] Ind. Ant., Vol. XII, p. 95.
[111] Ep. Ind., Vol. XI, 147—57.

பிடுகிறது. படிநிலை அமைப்பின் கீழ்மட்டத்தில் இருந்த அலுவலர் மகாநாயக்; பத்துக் கிராமங்களுக்கு அமர்த்தப்பட்ட அரச அலுவலர் நாயக் ஆவார்.[112] இதேபோல் இவருக்குமேல் மகா சாமந்தரும், அவருக்குமேல் மகாமண்டலிகரும், மகாமண்டலி கருக்குமேல் மகாராஜாவும், மகாராஜாவிற்குமேல் மகாராஜாதி ராஜாவும் இருந்தனர். அரச அலுவலர்களின் இப் படிநிலை அமைப்பு 'சுக்கிர - நீதி'யால் குறிப்பிட்டுக் காட்டப்பட்டிருக் கிறது.[113] சுயேச்சையான அரசர்கள் பேரரசர்களின் பட்டமாக இப் பஞ்சமகாசப்தங்கள் அமையவில்லை யென்பது மிகத் தெளி வாகும். ஆனால், இவைகளின் ஏற்பு மிக உயர்ந்த அரச அலுவலர் களைக் குறிக்கிறது. கல்வெட்டுச் சான்றை எடுத்துக்கொள்வோ மானால், ஜெபிலாவின் அரசராகிய மகாநாயக பிரதாபதாவலர் என்பவரைப்பற்றி தாராசந்தி பாறைக் கல்வெட்டுக் கூறு கிறது. ஆனால், இவர் காதிநகர் அரசருக்குக் கடப்பாடுடை யவராக இருந்தார்.[114] கல்வெட்டுகளில் 'மகாசாமந்தர்' களும்[115] 'மகாசாமந்தாதிபதி'களும்[116] அடிக்கடி சொல்லப் பட்டிருக்கிறார்கள். 'மகாமண்டலிகர்'[117], 'மண்டலாதிபதி'[118] போன்ற பட்டங்கள் அரியவாக இருந்தாலும், மகாராஜா, மகாராஜாதி ராஜா[119] போன்ற பட்டங்கள் அரியனவல்ல. கீழாள்கள் அல்லது அரச அலுவலர்களின் பட்டங்களாக இவைகள் இருக்கையில், அரசர்கள் தவறாது 'பரமேஸ்வரர்கள்' என அழைக் கப்பெற்றனர்; வடக்கில் ஒரு தனிப்பட்ட கீழாள் ஐந்து பட்டங் களைமட்டுமே பெறுவதற்குப் பதிலாக, சமதிகதாசேஷ, மகாசப் தர்[120] போன்ற எல்லாச் சிறப்புப் பட்டங்களையும் பெற்ற ஒரு நிகழ்ச்சி இருக்கிறது. இச் செய்திகள் 'மகாசப்தர்கள்' மிக உயர்ந்த பட்டங்கள் என்பதை, அதாவது, 'மகாநாயக்' என்று தொடங்கி 'மகாராஜாதி ராஜா' என்று முடியும் 'மகா' என்ற முன் னடையைக் கொண்டவை என்பதைக் குறிக்கின்றன.

---

[112] 'Sukraniti', Ch. I, pp. 383—84.

[113] Ibid. Ch. I, pp. 377—78.

[114] Journal of the American Oriental Society, Vol. VI, pp. 547-49; Ep. Ind., Vol. V, Appendix p. 22.

[115] Ep. Ind., Vol. XIV, pp. 176-88.

[116] J.B.O.R.S., Vol. II, pp. 396-400; Ep. Ind., Vol. IV, p. 243.

[117] 'Ind. His. Quarterly', March 1929, pp. 44-45.

[118] Bhavabhuti's Uttara Rama Charita, 'Commentary on Rama Charita', II, 5-6.

[119] Epi. Ind., Vol. III, pp. 263-67 & Vol. XII, pp. 156-59.

[120] Ind. Ant., Vol. XII, pp. 190-95.

மாதிரி வரவு செலவு திட்டத்தைப் பொறுத்தவரை, ஓர் இலட்சம் கர்சா வருமானமுள்ள ஓர் அரசிற்கு 'சுக்ர நீதி' கீழ்க் கண்டவாறு வகுத்தளிக்கிறது :

| | ஒரு மாதத் திற்கு கர்சா | ஓர் ஆண் டிற்கு கர்சா |
|---|---|---|
| i தற்செயல் நிகழ்வு, கேளிக்கை, அறங்கள் | 1,500 | 18,000 |
| ii ஆறு எழுத்தர் | 100 | 1,200 |
| iii மூன்று ஆலோசகர்கள் | 300 | 3,600 |
| iv மனைவியும் மக்களும் | 300 | 3,600 |
| v கற்ற அறிஞர்கள் | 200 | 2,400 |
| vi குதிரைவீரர், குதிரை, காலாள் கள் | 4,000 | 48,000 |
| vii யானை, ஒட்டகம், காளைகள், எரிகருவிகள் | 400 | 4,800 |
| viii சேமிப்புகள் | 1,500 | 18,000 |
| | 8,300 | 99,600 |

ஏறக்குறையப் பாதி அல்லது வருமானத்தில் 48 சதவீதம் படைக்குச் செலவிடப்பட்டுள்ளதையும், தற்செயல் நிகழ்விற்கு 18 சதவீதம், சிவில் சேவைத்துறையில் ஆட்சிச் சிப்பந்தித் தொகு திக்கு 4·8 சதவீதத்தையும் இது காட்டுகிறது. வைத்திருக்க வேண்டிய இருப்புப் படையினர் 100-ம், காலாட்படையினர் 300-ம், குதிரைப் படையினர் 80-ம், இரண்டு பெரிய துப்பாக்கி களும், பத்து ஒட்டகங்களும், இரண்டு யானைகளும், இரண்டு தேர் களும், ஆறு எருதுகளும் ஆகும். சிவில் துறையில் பணியாள்கள், மூன்று சபையினரும் ஆறு எழுத்தர்களும் பற்றுதுபோல் தோன்று கிறது. அரசாங்கம் நிறைவேற்ற வேண்டிய பணியை இது குறித்துக் காட்டுகிறது. இப் பணிகள் மிகக் குறைவாக இருக்க வேண்டும். இவை வருவாய் பெறலையும் நீதி வழங்கலையும் உறுதியாய்க் கொண்டிருந்தன. அரசரின் ஆட்சிபற்றிய இது உண்மையான விளக்கமாகாது. கோட்பாட்டில், அரசர் அல்லது பேரரசின்

அரசாங்கத் திட்டம் மிக விரிவாகவும், ஹர்ஷரைப் போன்ற தகுதி வாய்ந்த அரசர்களின்கீழ் திறமையானதாகவும் இருந்திருக்க வேண்டும்.

அரசரின் பயிற்சி, கடமைகள், துறைக்காரியங்களை நடத்துதல், அரசரின் பணியாக சட்டமும் நீதியும் ஆகியவைபற்றியவைகளில் பெரும்ளவு கவனம் செலுத்தப்பட்டது. இறுதியில் சொல்லப்பட்டிருக்கும் அரசரின் மிக முக்கியமான பணிகளில் ஒன்று வருவாய் திரட்டுதலாகும். புரோதர் (குரு), பிரதிநிதி (அரச பகர ஆள்), பிரதான (கண்காணிப்பாளர், தலைமைச் செயலாளர்), சச்சிவ (போர்த்துறைச் செயலர்), மந்திரி (வெளியுறவுச் செயலர்), பண்டிதர் (சமயகுருமாருக்குரிய அலுவலர்), அமாத்திய (நிலவருவாய் அலுவலர்), சுமந்தா (நிதி அமைச்சர்), தூதர் (நிலைத்தூதர்)[121] ஆகியோர் அரசரின் தலையாய அலுவலர்கள். இவர்களுடன், பூங்கா, கட்டடங்கள், அரண்மனை போன்றவைகளின் கண்காணிப்பாளர்களுமிருந்தனர். நிலவரி, தீர்வைகள், தண்டங்கள், காடுகளிலிருந்து பெறப்படும் வருமானங்கள், சுரங்கங்கள், கேட்பாரற்ற சொத்திலிருந்து கிடைக்கும் வருமானங்கள் வருவாய் மூலவளங்களில் அடங்கும்.

தல ஆட்சியைப் பொறுத்தவரை, ஒவ்வொரு கிராமத்திலும் ஆறு அலுவலர்கள் அமர்த்தப்பட்டனர். இவர்கள்: காவல் துறை அலுவலரைப் போன்றவராகிய ஷாகச அதிபர் (Lord of Sahasa), கிராமத் தலைவர், வரிகள் வசூலிப்பவர், நிலவரி வசூலிப்பவர், எழுத்தர், செய்தி கொண்டுசெல்வோர்.[122] தலைமை நீதிபதியின்கீழ்ச் சட்டமும் நீதியும் இருக்கின்றன. 'அவைப் பெருமக்களுடனும் தீர்வு முடிவுக்காக வழக்குகளைக் கொண்டுவந்தவர்களுடனும் கலந்துகொண்டு, சாட்சிகள், எழுதப்பெற்ற பத்திரங்கள், சாதனங்கள், மறைவாற்றலான முறைகள் ஆகியவற்றால் ஆய்ந்தும், எந்த வழக்கில் எந்த முறை அல்லது விதிமுறை மிக்க பயனுடையதாக இருக்குமென்பதையும் கண்டு, பகுத்தறிவு, நேர்காட்சி, ஆய்வுத் தீர்வு, ஒப்புநோக்கு, தல வழக்கம் ஆகியவற்றின் பயன்பாட்டால் தவிர்க்க முடியாத முடிவு என்ன என்பதை உறுதிசெய்தபின் இவர் அரசருக்கு அறிவுரை அளிக்க வேண்டும்'.[123] ஒரு நீதிபதியால் மட்டும் வழக்குகள் முடிவு செய்யப்படவில்லையென்பதும், நீதிபதிகளின் ஓர் அவையால், அதாவது, தலைநீதிபதியின் உயர்குடி அவையால் முடிவு செய்யப்பட்டதை

[121] 'Sukraniti', Ch. II, p. 168-73.
[122] Ibid., 242-45.
[123] Ibid., 194-99.

இது குறிப்பிடுகிறது. சாட்சிகளை ஆய்தலும் ஆவணமும் ஒரு முடிவிற்கு இன்றியமையாக் கூறுகளாகும். இதில் தலப் பழக்கம் போதிய இடம் பெற்றது. நடுவர் தீர்ப்பு, ஆட்சி பற்றியவைகளில் தலப் பழக்கங்களின் சிறப்பை, 'தலப் பழக்கங்கள், சமூகப் பழக்கங்கள், வீட்டுப் பழக்கங்கள், என்றும் எப்பொழுதும் இருக்கக் கூடிய கடமைகளென ஞானிகள் வகுத்தளித்த கடமைகள், பழைய, புதிய ஒழுங்கு முறைகள் ஆகியவை நாட்டின் பாதுகாப்பிற்காக அரசரால் பின்பற்றப்பட வேண்டு'[124]மெனும் 'சுக்ரநீதி'யின் மூதுரையிலிருந்து அறிந்துகொள்ளலாம். 'உழவர்கள், கைவினைஞர், கலைஞர், கடுவட்டி வாங்குபவர்கள், கூட்டாண்மைக் கழகங்கள், நடனமாடுபவர்கள், தவசிகள், கள்வர்கள் ஆகியோர் தம் தகராறுகளைத் தம் தொழிற் சங்க வழக்காறுகளுக்கொப்ப முடிவு செய்ய வேண்டும்'.[125] 'காட்டுப் பாதுகாவலர்கள் காட்டுப் பாதுகாவலர்களாலும், வணிகர்கள் வணிகர்களாலும், படையினர் படையினராலும், கிராமக் காரியங்கள் கட்சிக்காரர்களோடு வசிப்பவர்களாலும் (அண்டையில் உள்ளவர்களாலும்) விசாரிக்கப்பட வேண்டும்.'[126] ஒரு வகையான அறங்கூறுயம் இருந்திருக்கலாமென்று இது குறிப்பிடுகிறது.

## சட்டம், நீதி ஆகியவற்றின் நடைமுறை

இப்பொழுது சட்டமுறை மிக்க விரிவடைந்துவிட்டதாகத் தோன்றுகிறது. குற்றங்கள் மூன்று தலைப்பின்கீழ்ப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. இவை : (1) சஹால அல்லது சிறு குற்றங்கள், (2) அபராதங்கள் அல்லது அடாப்பழிகள், (3) ராஜ செனேய அல்லது அரசுக்கெதிரான குற்றங்கள். தல வழக்கங்கள் மதிக்கப்படவேண்டியிருந்ததால் நீதியின் வரம்பற்ற தரங்கள் பின்பற்றப்படவில்லை. சான்றாக, 'தென்னாடுகளில் பிராமணர்கள் தாய்மாமன் மகளை மணந்துகொண்டனர்.'[127] சாத்திரத்தில் சொல்லப்பட்டிருப்பவைகளின் குறைகளைத் தலப்பழக்கங்கள் நிறைவு செய்கின்றன. நடுவர் தீர்ப்புச் செய்வதில் சாட்சிகள் கவனமாக விசாரிக்கப்பட வேண்டும். வாக்கு மூலங்கள் சரியானபடி பதிவு செய்யப்படவேண்டும். 'வினாக்களைக் கேட்டு வழக்குகளைப் பகுப்பாய்வு செய்யப்' பிரதிவிவாக்கர் (Pradvivakas) இருந்தனர்.[128] இவர்கள் அரசாங்க வழக்குரைஞர்களுக்கொப்

[124] Ibid., Ch. V, Sec. iii, 17-19.
[125] Ibid., Ch. IV, Sec. V, 35-36.
[126] Ibid., Ch. IV, Sec. V, 44-45.
[127] Ibid., 92-96.
[128] Ibid., 125-26.

பானவர்கள், 'கொலை, திருட்டு, பிறன்மனை நயத்தல், விலக்கப் பட்ட உணவைக் கொள்ளல், கடத்திச் செல்லுதல், கடுமை காட் டுதல், பொய்க் கையெழுத்து, இராசத்துரோகம், கொள்ளை' போன்ற வழக்குகளைத் தவிரக் கட்சிக்காரர்களின் வழக்கெடுத் துரைக்கப் பிரதிநிதிகள் அமர்த்தும் வழக்கம் இருந்தது.[129] இந்த வழக்குகளில் 'குற்றஞ் செய்பவர்கள் நேரில் பதில் சொல்ல வேண்டியிருந்தது.'[130] கட்சிக்காரர்களிடமிருந்து பிணைப்பணத் திற்கு வகை செய்யப்பட்டிருந்தது.[131] இறுதியாக, ஒரு வழக்கு முழுதும் விசாரிக்கப்பட்டபின் தீர்ப்பளிக்கப்பட்டது; அறங் கூறுயத்தில் கருத்து வேற்றுமை இருந்தால், பெரும்பான்மைக் கருத்து ஏற்றுக்கொள்ளப்பட்டது. உண்மையைப் பெறக் கடுஞ் சோதனை ஒரு முறையாக இருந்தது. ஆனால், மூன்று முறைகளில் இது இறுதியானதாகும். (i) நேர்மைக்கு இணங்குவித்தல்; (ii) யுக்தி, அதாவது, மெய்ப்பிக்கக்கூடியதும் சூழலுக்கேற்ற தகுதி யும்; (iii) கடுஞ்சோதனை முறை.

குற்றவியல் வழக்குகளைப் பற்றியவை இவை. 'தாவரச் சொத்துகள்பற்றிய வழக்குகளில்; மக்களின் யூனியன்கள், தொழிற் சங்கங்கள், கம்பெனிகள் ஆகியவற்றிற்குள்ளான தகராறு களில்; விற்பனை மாற்றல்கள்பற்றிய வழக்குகளில்; ஒரு பொருளை வாங்கியவர் அதனுடைய விலையைக் கொடுக்காதவர்பற்றிய வழக்கில்—சாட்சியாலும், ஆவணத்தாலும், உடைமையாலும் இவைகளை ஒருவர் மெய்ப்பிக்க வேண்டும்'.[132] இவைகள் உரிமை இயல் வழக்குகளாகும். இந்த வழக்குகளில் 'பிரமாணங்கள் (சாட்சியின் சான்று, ஆவணங்கள்), காரணங்கள், வழக்காறுகள், உறுதிமொழிகள், அரசரின் தனிப்பட்ட ஆணைகள், வாதிகளின் ஏற்பு ஆகியவைகளின் வழியாக முடிவுகள் செய்யப்படுகின்றன'. ஆனால், 'எங்கு ஆவணம், உடைமை, சாட்சி ஆகியவை இல்லையோ, அங்கு (எது சரியோ) அதைச் செய்ய அரசருக்கு உரிமை இருக் கிறது.'[133] நான்கு வகைத் தண்டனைகள் இருக்கின்றன. அவை: திக்தண்டம் (ஒழுக்கமுறை மறுப்பு), வாக்குதண்டம் (வாக்குத் தண்டனை), அர்த்த தண்டம் அல்லது தண்டங்கள், உடல் சார்ந்த தண்டனைகள். ஆனால், இவைகளில் முதல் மூன்றை

[129] Ibid., Ch. IV, Sec. V, 216-18.
[130] Ibid., Ch. IV, Sec. V, 238-41.
[131] Ibid., Ch. IV, Sec. V, 249-51.
[132] Ibid., Ch. IV, Sec. V, 517-20.
[133] Ibid., Ch. IV, Sec. V, 529—32.

அறங்கூறும் அவை விதிக்கலாம்; இறுதியானதை அரசர் மட்டுமே விதிக்கலாம்.[184]

சட்ட நடைமுறையின் இந்த விளக்கம் இரண்டு குறிப்பிடத் தக்க முடிவுகளை அளிக்கிறது. முதலில், சட்டத்தின் உரிமை இயல், குற்றவியல் வேறுபாடும், தண்டனையின் படிநிலை வரிசையும் இதற்குமுன் இல்லாத சமூக, சூழ்நிலைப் பொருத்தத்தை இப்பொழுது பெற்றிருக்கின்றன. அதாவது, சட்டமும் தண் டனையும் தெய்வத்திற்குரிய, இயலுலகு கடந்த குறிப்புகளிலிருந்து விடுதலை பெற்றிருக்கின்றன. இவை மானிட அறிவுமுறைகளையும் செயலெளிமையையும் பின்பற்றுகின்றன. சட்டம், நீதிபற்றிய வைகளில் அரசரின் அதிகாரம் இறுதியாகக் கருதப்படுவது இரண் டாவது குறிப்பிடத்தக்க கருத்தாகும். ஏனென்றால், வியவகாரங் களையும் தர்மசாத்திரங்களின் கட்டளைகளையும் ஒருங்கிணைத்தல் இவருடைய கடமையாகும். இவரிடமிருந்து எழுவதெல்லாம் சட்ட மென்ற பொருளில் இவர் சட்டத்தின்மூலமாக இருக்கவில்லை என் பதே. வியவகாரம், தர்மசாத்திரம் ஆகியவற்றின் இவருடைய பொருள் விளக்கமும் அவைகளின் ஒருங்கிணைப்பும் இவர் செயல் படுத்திய சட்டத்தின் உருவத்தைப் பெற்றது என்ற பொருளில் இவர் சட்டத்தின்மூலமாக இருந்தார். தர்ம சாத்திரங்களோடும் வியவகாரங்களோடும் தலப்பழக்கங்களையும், தொழிற் சங்கங் களின் பழக்கங்களையும், கூட்டாண்மைக் கழகங்கள், குடும்பங்கள் ஆகியவற்றின் பழக்கங்களையும்கூட இவர் இணக்குவிக்க வேண்டும். எனவே, குடிமக்களின் பட்டறிவுகளின் அதிகார பூர்வ மான பொருள் விளக்கம் செய்பவரின் பாகத்தை ஏற்றுச் செய லாற்றினர். இந்தப் பொருளில் இவர் தற்காலச் சட்டமியற்று நருக்கு ஒப்பானுர். ஏனெனில், இக் கால அரசில், 'தோற்று வித்தலைக் காட்டிலும் பொருள் விளக்கம் செய்வதே' ஒரு சட்ட மியற்றுநரின் பணியாகுமென்று கருதப்படுகிறது. வன்முறை, குற்றங்கள் ஆகியவற்றின் தண்டனையில், தலப்பழக்கங்கள், வியவ காரங்கள், தர்மசாத்திரம் போன்றவைகளிலிருந்து சுயேச்சை யாக இவர் சட்டங்களை இயற்றமுடியும். சான்ருக, பொதுவான எதிரிகள் என்று இப்பொழுது கருதப்படுகிறவர்களை அடக்க இவை வேண்டியிருந்தன. முரசறைந்து இச் சட்டங்களை அரசர் அறிவித் தார்; எழுதப்பெற்ற அறிவிப்புகளாக அகலிடங்களில் வைத் தார்.[185] ஆகையால்தான், அரசரை மிகச் சிறந்த வழிகாட்டி

[184] Ibid., Ch. IV, Sec. V, 547—48.

[185] 'Sukraniti' Ch. I, 625—26.

யெனவும்,[186] காலத்தைப் படைத்தவரெனவும்[187] 'சுக்ரநீதி' கருதுகிறது.

## சட்டத்தின் தோற்றுவாய்

சட்டத்தின் மூலங்கள்பற்றிய ஆய்விற்குத் தற்செயலாக இது இட்டுச் செல்கிறது. இதற்கு முந்திய பிரிவில், தர்மசாத்திரங்களின் கட்டளைகளோடு தலப்பழக்கங்களை இணக்குவிக்க வேண்டியிருந்ததையும், அதற்குத் தேவையானபோது புதிய விதிகளை அரசர் வெளியிட வேண்டியிருந்ததையும் நாம் கண்டோம். 'தலப்பழக்கங்களையும், சமூகப் பழக்கங்களையும், வீட்டுப் பழக்கங்களையும், என்றும் எங்கும் இருக்கவேண்டிய கடமைகளெனத் தவசிகளால் எடுத்துவைக்கப்பட்டவைகளையும், புதிய, பழைய ஒழுங்கு முறைகளையும் நாட்டின் பாதுகாப்பிற்கென அரசரால் கவனமாக மேற்கொள்ளப்பட வேண்டியவையென 'சுக்ரநீதி' திட்டவட்டமாகக் கூறுகிறது.'[188] தலப் பழக்கங்கள் அல்லது வியவகாரம், தர்மசாத்திரம், இராஜசாசனம் எனக் கௌடிலியரால் கூறப்பட்டதுபோல் இம் மூன்று மூலங்களோடு இயல்பாக இவை ஒத்திருக்கின்றன. இவருடைய ஒரே ஓர் இனம் மட்டும், அதாவது, சாரித்ரியம் (charitryam), அதாவது, சிஷ்டர்கள் அல்லது கற்றறிந்த பிராமணரின் நடத்தை இதில் சேர்க்கப்படவில்லை. இச் சந்தர்ப்பத்தில் 'சுக்ரநீதி'யின் ஒரு முக்கியமான குறித்துரையைப் புறக்கணிக்க முடியாது. மக்களின் செயற்பாடுகளுக்கொப்பப் பழங்காலத்தில் சாதிகள் படைக்கப்பட்டிருக்கையில், இப்பொழுது கற்றறிவு அல்லது கலை, கைநுட்ப வேலை ஆகியவைகளின் தேர்ச்சித் திறன், அதாவது, வித்யா அல்லது கலாவிற்கொப்ப உறுதி செய்யப்படுகின்றன.[189] ஆகவே, மெய்யுணர்வாளரின் சாதி ஒன்றிருக்கலாம்; இவர்கள் பிராமண, க்ஷத்திரிய, வைசியர்களாகவும் இருக்கலாம். ஆகையால், கற்றறிந்த பிராமணர்களின் அல்லது சிஷ்டர்களின் நடத்தையைச் சட்டத்தின் தோற்றுவாயாகக் கருதும் தகவு சரியெனத் தோன்றவில்லை. சட்டம், நீதி ஆகியவற்றின் செயலாட்சியில் அந்த விதி குறிப்பிடத்தக்க மாறுதல்களைப் புகுத்துகிறது. சட்டத்தைச் சமயக் கட்டுப்பாட்டிலிருந்து இது விடுவிக்கிறது. இப்பொழுது வரை பிராமண சமயம் தன் நால்வகைச் சமூக அமைப்போடு திறமையையன்றிப் பிறப்பையே வலியுறுத்தியது. சட்டத்தின் நடுநிலையான செயற்

[186] Ibid., Ch. I, 129—30.
[187] Ibid., Ch. I, 43—44; 119—120.
[188] 'Sukraniti', Ch. IV, Sec. iii, 17—19.
[189] Ibid., Ch. IV, Sec. iii, 21 & 30.

பாட்டின்மீது சில வரையறைகளை இது திணித்தது. எடுத்துக் காட்டாக, தர்மசாத்திரத்தின்படி ஒரே மாதிரியான குற்றத் திற்கு பிராமணர், க்ஷத்திரியர், வைசியர் மாறுபட்ட தண்டனை களைப் பெற்றனர். 'பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர், மிலேச்சர் ஆகியோர் பிறப்பாலன்றிச் செயலாலும் நற்பண்புகளா லுமே பிரிக்கப்படுகிறார்கள்'[140] என்று சொல்லும்பொழுது 'சுக்ரநீதி' நிலையை மாற்றுகிறது. இம் மெய்மை குறிப்பிடத்தக்க மாறுதல்களைப் புகுத்துகிறது. இதன் பயனாக, கோட்பாட்டள விலாவது சட்டம் இதுவரை இருந்துவந்த சமயச் சார்பிலிருந்து விடுவிக்கப்பெற்றது.

## அரசின் கூறுகளும் கோட்பாடும்

கோட்பாட்டில் அரசு—இறை, அமைச்சு, நட்பு, பொருள், நிலம், அரண்கள், படை ஆகியவற்றின் திரட்சியெனக் கருதப் படுகிறது.[141] இந்த ஏழு கூறுகளையும் கொண்ட ஓர் உயிருள்ள பொருளோடு இது ஒப்புநோக்கப்படுகிறது. இதுவும் தக்கதோர் ஒப்புநோக்கேயாம். இவரது அமைச்சர்களைக் கலக்காமல் அரசர் எதுவும் செய்யலாகாது. ஓர் உயிரியோடான அரசின் ஒப்புமை அரசின் இன்றைய கருத்தோடு நன்றாக ஒத்திருக்கிறது. இந்த உயிரியின் ஒவ்வோர் உறுப்பின் சிறப்பும் இதனால் வலியுறுத்தப் படுகிறது. மக்களுக்குள் அரசருக்கு உயரிய மாண்பையும் இறைவழித் தோற்றத்தையும்[142] கொடுத்திருந்தாலும், சமயத் தைக் காப்பவராகவும் சமய மறுப்பை[143] அழிப்பவராகவும் கருதப்பட்டாலும், அரசாங்க அமைப்புத் திட்டமுறையில் அரசரின் சிறப்பு மற்றெந்த உறுப்பினரையும்போல் சமமானதே. சட்டத்தைப் பரப்புபவராகவும், சமயத்தைப் பாதுகாப்பவ ராகவும், நீதியின் அதிபராகவும், தலையாய வழிகாட்டியாகவும், காலத்தைப் படைப்பவராகவும் இருக்கும் இவருடைய அதிகா ரத்தில்தான் அரசரின் இறைமை (சுவாமித்துவம்) இருக்கிறது. இருந்தபோதிலுங்கூட, 'பிரம்மா அல்லது படைப்பவரால் அரசர் மக்களின் பணியாளாக ஆக்கப்படுகிறார். இதற்கு ஊதிய மாக வருவாய் பெறுகிறார். இருப்பினும், பாதுகாப்பதற்கு மட்டுமே இவரது இறைமை.[144]

---

[140] Ibid., Ch. I, 75—76.
[141] Ibid., Ch. I, 121—22.
[142] Ibid., Ch. I, 141—43.
[143] Ibid., Ch. I, 146.
[144] Ibid., Ch. I, 375.

அரசரின் தனியாட்சிக்கும் மக்களின் ஆட்சிக்கும் இடையில் ஓர் இடைநிலை வழியில் அரசு, இறைமை ஆகியவைபற்றிய இக் கோட்பாடு செல்ல முற்படுகிறது. மக்களின் தன்னிலை வலியுறுத்தும் குறிக்கோளை இது முன்னுக்குக் கொண்டுவராதிருக்கையில், அரசரை மக்களின் பணியாளன் என்கிற நிலைக்கு இது குறைக்கிறது. அரசரின் இறைவழிக் கோட்பாடு இறைவிருப்பிற்கு இறைமை அதிகாரம் அளிக்க முயல்கிறது. ஆகவே, எல்லா அதிகாரமும் மக்களிடமிருந்து எழுகிறது என்னும் கருத்தை மக்கள் ஏற்க இயலாது. அரச அதிகாரத்தின் சமூக உட்கருத்து, அதாவது, சமூகத்திலிருந்து அரசரின் அதிகாரம் எழுகிறதென்பதும், சமூக நலனைப் பெறச் செயல்படுத்த வேண்டுமென்பதும் இந்து அரசியற் கோட்பாட்டிற்குப் புறம்பானதாகவே இருந்து வந்தது. ஆகையால், மக்களுக்கு அமைதியையும் செழிப்பையும் பெறுவதைக் காட்டிலும் மிகக் குறிப்பிடத்தக்கதாகவும் வற்புறுத்துவதுமான எந்த நோக்கத்தாலும் அரச பதவியும் அரசருக்குரிய அரசாங்கமும் உந்தப்படவில்லை.

மக்களின் அமைதியையும் செல்வத்தையும் பெறுவதற்கான ஒரு (வழியாக) கருவியாக அரச அதிகாரத்தைக் கருதுவ்து ஒரு பழமையான குறிக்கோளாகும். பல நூற்றுண்டுகளாக நன்கமைந்த சமூகத்தின் காரணமாக இது தன் ஆற்றலின் பெருமளவை இழந்துவிட்டது. அரசாங்க அமைப்பு, அரசரின் அதிகாரம் ஆகியவற்றின் திறமையைப் பெருக்க ஒரே தூண்டுவிசை திக்விஜயக் குறிக்கோளேயாம். ஆனுல், இதுகூட வலிமையற்ற ஒரு மத்திய அரசாங்கத்தோடு ஒரு நெகிழ்வான நிலமானிய முறையைத்தான் உண்டாக்கியது. ஆகவே, இவர்களின் அரசாங்க அமைப்பைத் தளர்த்துவதற்கு இந்து அரசியல் கோட்பாடும் நடைமுறையும் முயன்றபொழுதும், மக்களுக்கு அமைதியையும் செழிப்பையும் பெற்று அளிப்பதைக் காட்டிலும் மிகச் சிறந்த அல்லது வலிமையான நோக்கங்களால் அரச பதவி தூண்டப்படாத பொழுதும் முஸ்லிம்கள் வந்தார்கள். அவர்களின் அரசின் நோக்கம் அவர்களின் சமயத்தைப் பரப்புவதாக இருந்தது.

# 10. தொடக்ககால இஸ்லாமிய ஆட்சி அமைப்பு முறையின் கூறுகள்

கி.பி. 700-ல் இருந்து 1100 வரையிலான காலத்தின்போது இந்தியாவின் அரசியல் நிலைபற்றிய சுருக்கமான ஆய்வோடும் அரசின் வடிவம், செயல்வினை ஆகியவற்றைப் பின்னணியாகக் கொண்டு வட இந்தியாவிற்கு இஸ்லாமின் வகையையும் இதன் விளைவுகளையும் நாம் ஆராயலாம். நாம் முன்னரே கண்டது போல், மக்களின் வாழ்க்கையில் இது ஆழமாக விளைவு உண்டாக்கியது. இது ஒரு புதிய சமயத்தையும், ஒரு புதிய அரசாங்க முறையையும், ஒரு புதிய பண்பாட்டையும், ஒரு புதிய வாழ்க்கை முறையையும் புகுத்தியது. இஸ்லாமின் முதல் தாக்குதல் விளைவுகள் அழிவு உண்டாக்குவனவாக இருந்தன; நூற்றாண்டுக் காலமாக மானிட முயற்சியால் ஆக்கப்பட்டிருந்தவைகளை அழிப்பனவாகவும் இருந்தன. ஒரு சமயம் என்ற முறையில் இது வன்மையாய்ப் பொறுதியற்றிருந்தது. கட்சிப் பற்றும் தனியாட்சியுமுடைய வலுச்சண்டைக்கு முனைகிற ஓர் அரசிற்குள் இது அடியெடுத்துவைத்தது. அரசும் சமயமும் ஒன்றாக இணையும் ஒரு வாழ்க்கை முறையை இது எடுத்துக்கூறியது. இது இந்தியாவின் புகழ்மிக்க பழைய மரபுகளுக்கு முரணாக இருந்தது. இது உண்டாக்கிய விளைவு, இந்துக்களையும் முஸ்லிம்களையும் பொருதும் இரு தனிப் பிரிவுகளாக்கியது. ஆனால், ஆண்டுகள் செல்லச் செல்ல இப் பிளவு சுருங்கியது, பிரிவு மனப்பான்மைகளை ஒன்றுக் கொன்றான பரிவுணர்வும் நல்லெண்ணமும் அகற்றின.

எட்டாவது நூற்றாண்டின் முற்பகுதியில் இந்தியாவின் முதல் இஸ்லாமிய அரசாங்கத்தை சிந்துவில் அரேபியர்கள் நிறுவினர். பிராமணாபாத்தில் ஆட்சி செய்த தாகிரிடமிருந்து சிந்து நாட்டைக் கைப்பற்றுவதில் முகம்மதுபின்காசிம் வெற்றி கண்டார். கைப்பற்றும் பணியும் ஒருங்கிணைக்கும் பணியும் ஒன்றாக நிகழ்ந்தது. ஏறத்தாழப் பத்தாண்டிற்குள் உமையாத்துகளின்கீழ்

கலிஃபாவின் பேரரசு பகுதிகளில் சிந்து ஓர் இணைப்பாகியது.[1] முகம்மதுபின் காசிம் சிந்துவிலும் முல்தானிலும் நிறுவிய அரசாங்கம் இந்தியாவில் அரேபிய முறையின் ஒரு நீட்சியாக இருந்தது. இஸ்லாமிய அரசைச் சுருக்கமாக மறு-ஆய்வு செய்தல் பயனுடையதாக இருக்கும்.

## முகம்மது காலத்திலும் இவருக்குப்பின் வந்தவர்கள் காலத்திலும் இஸ்லாமிய அரசு

முகம்மதுவால் இஸ்லாமிய அரசு தோற்றுவிக்கப்பெற்றது. இவர் நபி என்ற முறையில் தம்முடைய சமய போதனைகளுக்கு ஏற்பவும், இதே சமயத்தில் அரேபிய சமூகத்தின் ஆழப் பதிந்திருந்த மரபுகளுக்கு முரணுகாத வகையிலும் சமூகத்தையும் அரசாங்கத்தையும் அமைக்க முனைந்தார். ஆகவே, தொடர்ந்து பல உடன்பாடுகளை இவர் செய்யவேண்டியிருந்தது. இவைகளால் போரிட்டுக்கொண்டிருக்கும் அரேபிய மக்களை உடன்பிறந்தோராக இவர் இணைத்தார். எனவே, இஸ்லாம் ஒரு சமயமாக இருப்பதோடு ஒரு நட்பு நிறுவனமாகவும் அரசாகவும் ஆயிற்று. போர்களில்போல் முஸ்லிம்கள் நபிக்குத் தம்முடைய தலைவர் என்ற முறையில் பணியவேண்டியிருந்தது. கடவுளின் போரில் கலந்துகொள்வதற்கெனப் போர் வீரர்களாகத் தம்முடைய உயிரை இவர்கள் ஈடுபடுத்தினர்கள். வென்று கைப்பற்றிய தனைத்தும் சமூகத்திற்குச் சொந்தமாயிற்று. இது முதலில் தூய அரேபிய சமூகமாக இருந்தது. ஆனல், பின்னல் பல்வேறுன முரண்கூறுகளை இது கொண்டிருந்தது. நபி இறைமை பெற்று இறையுரிமையால் ஆட்சி செய்தார். இவருடைய அதிகாரம் மறுக்க முடியாததாக இருந்தது. ஏனெனில், இவர் வழியாகக் கடவுள் பேசினர். இவருடைய தலைமையின் பத்தாண்டுக் காலத்தில் (622-632) அரேபிய இனங்களை ஒருவகையான செப்பமுருத இஸ்லாமிய சமய நல உறவு நாடாக ஒருங்கிணைக்க இவர் பெரும்பாடுபட்டார்.

ஆனல், அரேபியர்களின் கிளர்ந்தெழுகிற உணர்ச்சியை இவரால்கூடப் படியவைக்க முடியாமல் இருந்தது. எனில், இவருடைய மறைவிற்குப்பின் பிரிந்துசெல்லுகைகளும் கலகங்களும் தொடங்கின.[2] சிறிது சாமர்த்தியத்தோடுதான் அபுபெக்கர்

[1] Conquest of As-Sind, Part XX, Kitab Futah Al-Buldan of al-Imam abu-Abbas Ahamad ibn-Jabiral-Baladhuri, translated by Philip Khuri Hitti ('Studies in History, Economics and Public Law', Vol. XLVIII of Columbia University), pp. 209-230.

[2] Ameer Ali, 'History of the Saracens', pp. 22 et Seq.

கலிஃபாவாக அல்லது துணைவராக, அதாவது, நபியின் துணைவராகத் தேர்ந்தெடுக்கப்பெற்றார். மௌவியாவின் (Muawiyah) காலம்வரை கலிஃபாவைத் தேர்ந்தெடுக்கும் விதி பின்பற்றப்பெற்றது. தலைவர் தேர்ந்தெடுக்கப்படவேண்டுமென்பது மிகப் பழமையான இன வழக்கத்தை யொட்டியதாகும். ஆனால், மௌவியாவின் காலத்திலிருந்து 'ஆட்சி செய்யும் அரசர் தமக்குப் பின் வருபவரை நியமித்தார்; படைத்தலைவர்களும் உயர் பதவியாளர்களும் அரசரின் முன்னிலையில் ஒப்பந்தம் செய்துகொண்டனர்; மாநிலங்களில் ஆளுநர், இயல்பான உரிமையுடைய கலிஃபாவின் சார்பில் பிரமாணம் எடுத்துக்கொண்டார்.'[3] கலிஃபாவின் பதவிக்கு உமையாத்துகள் வந்தபின் பல மாறுதல்கள் ஏற்பட்டன. டமாஸ்கஸ் இவர்களுடைய தலைநகராயிற்று. இதற்குமுன் இல்லாத மிகப் பரந்த பேரரசை இவர்கள் கட்டுப்படுத்திச் செயலாட்சி செய்கையில் செல்வமும் உயர் இன்ப வாழ்க்கையும் வளர்ந்தன. முகம்மதுவால் நிறுவப்பெற்று முதல் மூன்று கலிஃபாக்களால் தொடர்ந்து ஆட்சி செய்யப்பட்ட செப்பமுறுத் இந் நல உறவு அமைப்பு (நாடு) முடிவிற்கு வந்தது. பேரரசு அதிகாரமும் மேதகைமையும் கலிஃபாக்களின் சொந்தப் பழக்கங்களையும் குறிக்கோள்களையும் மாற்றியமைத்தன. நாள்தோறும் வழிபாட்டுக் கூட்டத்தில் இவர் தலைமை தாங்கவேண்டுமென்று எதிர்பார்க்கப்பெற்றாலும், வெள்ளிக்கிழமைத் தொழுகைகளில் இவர் இருத்தல் இன்றியமையாததெனினும், இரண்டாம் உமருக்குப்பின் இவ் விரண்டும் குறையத் தொடங்கிச் சிறிது காலத்திற்குப்பின் கலந்துகொள்வது கைவிடப்பட்டது. மாறாக, உவளகத்தின் அழகுமிக்க பெண்களின் கூட்டத்தில் தம் காலத்தை விருப்புடன் செலவிட்டனர். மது அருந்துவதிலும், இசை விருந்து பெறுவதிலும், அல்லது கோழிச்சண்டைகளையும் குதிரைப் பந்தயங்களைக் கண்டு களிப்பதிலும் காலங் கடத்தினர். இதைப்போலவே ஆட்சி நிறுவனமும் குறிப்பிடத்தக்க மாற்றங்களை அடைந்துவந்தது. தன்னுரிமையுடைய ஓர் இனக்குழுவின்கீழ் (பொதுநல அரசில்) அமைந்த அரசிற்குக் 'கலிஃபா பெருந்தலைவராக இருந்தார். நபியின் முதன்மையான கூட்டாளிகளைக்கொண்ட ஒரு முதியோர் குழு இவருக்கு உதவியது. முதன்மையான மசூதிகளில் இக் குழுவினர் கூடினர். இவர்களுக்கு மெதினாவில் இருந்த பெடுவின் தலைவர்களும் நகரப் பிரமுகர்களும் உதவினர். பல கூட்டாளிகள் தனிப்பட்ட கடமைகளைப் பெற்றனர். சான்றாக, அபுபெக்கர் கலிஃபாவின் ஆட்சியில் உமர், நீதிபரிபாலனப்

[3] Ibid, p. 185.

பொறுப்பையும் வறியோர் வரியைப் பகிர்ந்தளிக்கும் பொறுப்பையும் ஏற்றிருந்தார். கடிதப் போக்குவரத்து, போர்க்கைதிகளின் மேற்பார்வை, இவர்களை நடத்தும் விதம், மீட்புப் பணம் ஆகியவற்றின் மேற்பார்வை கற்றறிவாளராகிய அலிக்கு அளிக்கப் பெற்றது. நபியின் மற்றொரு கூட்டாளி துருப்புகளின் படைக்கலத் துறையின் தலைமையைப் பெற்றிருந்தார்.'[4] பதிவுகளைப் பத்திரமாக வைக்கவும் பேணவும் ஒரு பொது ஆவணக்களரியை உமர் நிறுவினார். ஓர் அரண்மனை அகவினைஞர் அல்லது ஹாஜிப் பதவியை இவர் படைத்தார். நகராட்சிக் காவற்படையை உருவாக்கியதாகவும் சொல்லப்படுகிறது; இச் சுருத்தப் படையின் தலைவர் பதவியையும் (Sahib-ush-Shurta) இவர் படைத்தார். இது காவற்படையின் நோக்கத்தை நிறைவேற்றியது.

அரேபியாவை நபிநாயகம் பல மாநிலங்களாகப் பிரித்து, மாநகர்களிலும் மாநிலங்களிலும் அமீர்களை நியமித்தார். உமர் இப் பட்டங்களைத் தொடர்ந்து பயன்படுத்தினார். பேரரசின் மாநிலங்களில் இவர் அமீர்களை அமர்த்தினார். அக்வாஜும் பஹறெய்னும் (Ahwaz and Baharain) சேர்ந்து ஒரு மாநிலமாயிற்று. சிஜிஸ்தான், மெக்ரான், கெர்மென் ஆகியவை மற்றொன்றாக அமைந்தன; தபரிஸ்கானும் கொராசனும் மூன்றாவதாக அமைந்தன ; தெற்குப் பாரசீகம் மூன்று ஆளுநரின்கீழ் வைக்கப்பட்டது ; ஈராக் இரண்டின்கீழும் வந்தது ; சிரியா இரண்டு மாநிலமாகப் பிரிக்கப்பட்டு இரண்டு ஆளுநரின்கீழ் வந்தது ; ஆஃப்ரிக்கா மூன்று ஆளுநரின்கீழும் அரேபியா ஐந்து ஆளுநரின்கீழும் வந்தன. சிறிய மாநிலங்களில் ஆளுநர்கள் வாலிஸ் அல்லது நாயிப்புகள் (உதவியாளர்கள்) என்று பெயர் பெற்றனர். ஆனால், பல இடங்களில் ஆளுநர் தம் பதவி காரணமாகப் பொதுப் பிரார்த்தனைகளை நடத்திவைத்து வெள்ளிக்கிழமை சமய விளக்கப் பேருரை (குதுபா) ஆற்றினார். 'பாலஸ்தீனம், டமாஸ்கஸ், ஹெம்ஸ், கிணிசிரின் ஆகிய நகரங்களுக்காகப் பிரார்த்தனை நடத்துவதற்காகவும் நீதி பரிபாலனம் செய்வதற்காகவும் தனி நீதிபதிகளை உமர் அமர்த்தினார்.'[5] வருமானங்களைப் பெற்றுச் செலவழிக்க திவான் எனப்பட்ட ஒரு துறை இருந்தது. ஆளுநர், மாநிலத்தின் சிவில் இராணுவத் தலைவராக இருந்தார். கீழ்நிலை அலுவலர்களால் நீதிபற்றிய கடமைகள் நிறைவேற்றப்பெற்றன. மாநில வருவாய்களில் சிவில் நிதிச் செலவுகள் முதன்மையாக இருந்தன. அடுத்து இராணுவத்தின்

[4] Ameer Ali, 'History of the Saracens,' p. 57.

[5] Ibid, p. 61.

தேவைகள் வந்தன. இவைகளுக்கான செலவு போக மிஞ்சிய தொகை முஸ்லிம் இனநலத்திற்குப் பயன்படுத்தப்பெற்றது.

நிலவுடைமை துண்டாடப்படுவதை நபி அல்லது புகழ் பெற்ற கலிஃபா உமரும் அனுமதிக்கவில்லை. இதனுல்தான் வென்று கைக்கொள்ளப்பட்ட நாடுகளின் நிலம், 'படையின ருக்குள் பங்கிடப்படுவதற்குப் பதிலாக அரசே மேற்கொண் டது. இதன் வருவாயில் செலவு போக எஞ்சியதை இந் நிலத்திற் குரிய மக்களுக்குள் பகிர்ந்துகொள்ளப்பட்டது.'[6] தம் சொந்த நாட்டில் அல்லது வென்று கைப்பற்றப்பட்ட நாட்டில் அரேபியப் படைவீரர் வேளாண்மையில், வாணிகத்தில் அல்லது தொழிலில் ஈடுபடுவதிலிருந்து தடுக்கப்பெற்ருர்கள்.[7] இஸ்லாமிற்காகப் போரிட இவர்களுக்குரிய கொள்ளைப் பொருளில் பங்குபெறத் தயாராக இருந்த முஸ்லிம்கள், முஸ்லிம்கள் அல்லாத ஓர் இராணுவச் சமூகமாகத் தோன்றினர். ஜிம்மிகளிடமிருந்து(முஸ்லி மல்லாத குடிமக்கள்) வசூலிக்கப்பட்ட கராஜ் (Kharaj) எனும் பெயருடைய நிலவரியும், தலைவரியாகிய ஜஸியாவும் (Jazia) புதிய வருவாய்வளங்களாயின.[8] எனவே, இஸ்லாமின் வருமானம்,

[6] Ibid. p. 59.

[7] W. Muir, 'Rise, Decline and Fall of the Caliphate', p.147.

See Appendix I to Part II of 'Kitab Futah Al-Buldan' of al-Imam abu-l Abbas Ahmad ibn-Jabir al-Baladhuri; F.C. Murgotten என்பவரால் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. 'Origins of the Islamic State—Studies in History, Economics and Public Law,' Vol. LXVIII of the Columbia University (Longmans Green & Co., New York). பத்து மாறு பட்ட முஸ்லிம் சட்ட வல்லுநர்களின் கருத்துகளைப் பிற் சேர்க்கை கொடுக்கிறது. இப்ன யூசுப்பின் கருத்தின்படி, 'அஸ்ஜவாத், அஸ்ஷாம், இன்னும் பிறவற்றைப் போன்ற தாக்கிக் கைப்பற்றிய நிலம் மட்டுமே கராஜ் என்னும் வரிக் குட்படும். இதைக் கைப்பற்றியவர்களுக்குள் தலைவர் இதைப் பிரித்துக்கொடுத்தால், இது டித் அல்லது பத்தில் ஒரு பங்கு வரி நிலமாகும். இதில் வசிக்கும் மக்கள் அடிமைகளாவர்; தலைவர் இதைப் பிரித்துக் கொடுக்காமல் முஸ்லிம்களுக்கு முழுதாக உமர் செய்ததுபோல் கொடுத்தால், பின் இதன் குடிமக்கள் ஜஸியா வரி செலுத்தவேண்டும். கராஜ் என்னும் நிலவரிக்கு நிலம் உட்படும். ஆனுல், குடிமக்கள் அடிமைகளாக இருப்பதில்லை. இது அபுஹனிஃபாவின் மூதுரையுங்கூட.'

தாக்கப்பட்ட முஸ்லிம் அல்லாதாரிலிருந்து ஒருவர் இஸ்லாமை ஏற்றுக்கொண்டபொழுது இவருடைய நிலம் சாகுபடிக்காக இவரது உரிமையாக்கப்படுகிறது. மற்ற முஸ்லிம்களைப்போல் இவர் கராஜ் வரி செலுத்துகிருர்' என்று மாலிக் இபன்-அனுஸ் கூறுகிருர்.

'சமயப் பற்றுடையவர்களின் மரபுரிமையாக, இஸ்லாமின் இராணுவ, சமயஞ்சார்ந்த அமைப்பிற்கு உகந்த முறையில் இவர்களுக்குள் பிரித்துக்கொள்ளப்படுகிறது.' இந் நோக்கத் திற்கான மூன்று கருத்துகள் கருத்திற் கொள்ளப்பட்டன. இவை சமயமாற்ற முதன்மை, நபியோடான உறவுமுறை, இராணுவ சேவை.'[9] இப் பாகுபாட்டை ஒழுங்கு செய்யவும் செயலெளிமை யாக்கவும் உபகார ஊதியம் பெறக்கூடிய அரேபியர்கள் அடங்கிய பதிவேடு திவானில் வைக்கப்பட்டிருந்தது.[10]

---

மாலிக், சுஃபியான் போன்றோரும் 'தாக்கப்படுகிறவர்கள்' இஸ்லாமை ஏற்றுக்கொள்வதுபற்றி, 'கராஜ், நிலத்தின் மீதான வரி, இதனுடன் பயிரின் மீதான ஜாகத்தும் (இரவலர் வரி)சேரும். இதுவும் அல் அவுஜாய் என்பவரின் மூதுரை யாகும்' என்று கூறுகின்றனர்.

ஆனால், அபுல் ஹனிஃபாவும் அவரைச் சேர்ந்தோரும், 'ஒரு மனிதர் கராஜ், ஜாகத் ஆகிய இரு வரிகளுக்கும் உட்பட வில்லை' என்று சொல்லுகிறார்கள்.

[9] W. Muir, 'Rise, Decline and Fall of the Caliphate', pp. 147 - 48.

[10] ஓய்வூதியங்கள் அல்லது 'அட்டா'வைப் (Ata) பற்றி 'Origins of the Islamic State' என்ற நூலின் இரண்டாம் பாகத் தின் இரண்டாவது பிற்சேர்க்கையைப் பார்க்கவும்; pp: 240. வரிசை முறையில், 'சமயப் பற்றுள்ளவர்களின் தாயாராகிய அய்ஷாவிற்கு 12,000 திர்ஹாம்களும், நபியின் மற்ற மனைவி கள் ஒவ்வொருவருக்கும் 10,000மும் உமர் ஒதுக்கியதாகச் சொல்லப்படுகிறது. அலி இபன் - அபு - தாலிப்பிற்கு இவர் 5,000 ஒதுக்கினார். பாதர் (Badr) போரில் பங்குபெற்ற ஹிஸ்ஷாமுக்கு இதே தொகை அளிக்கப்பட்டது (பக்கம் 240). ஒதுக்கீடுகளின் அளவுபற்றிக் கீழ்க்கண்டவாறு இது கூறுகிறது: 'அபுபெக்கர் மக்களிடையே சமமாகப் பிரித் தாலும், உமர் போரில் பங்குபற்றியவர்கள் என்றும், முதலில் சேர்த்துக்கொள்ளப்பட்டவர்கள் என்றும் ஒதுக்கீடுகளின் அளவை வைத்து உமர் ஓய்வூதியம் ஒதுக்கினார். குடி யிறங்கியவர்களோடும் பாதரில் பங்குகொண்ட கூட்டாளி களோடும் தொடங்கி, ஒவ்வொருவருக்கும் ஓர் ஆண்டிற்கு 5,000 திராமாகவும், இவர்களுடன் இவர்களின் வாடிக்கைக் காரர்களையும் (ஹெய்லிப்) சுயேச்சையானவர்களையும் (மாவலி) சமமாக வைத்தார். இஸ்லாமைத் தழுவிய வர்களுக்கும், அபிசீனியாவில் சென்று குடியேறியவர்களுக்கும், உஹுடில் (Uhud) போரிட்டவர்களுக்குமாக ஒவ்வொருவ ருக்கும் 4,000 ஒதுக்கினார். ஹாசன், ஹுசைனைத் தவிர, மற்ற பாதர் (Badr) போர்வீரர்கள் ஒவ்வொருவருக்கும் 2,000 திராம்கள் ஒதுக்கினார். இவ்விருவர்களின் ஓய்வூதி யத்தை இவர்களின் பெற்றோருக்குக் கொடுத்ததைப்போல் ஒதுக்கினார். ஏனெனில், இவர்களின் தந்தை அல்லாவின்

'ஆண்களுடைய பங்கில் பத்தில் ஒரு பங்கைப் பெண்கள் பெற்றிருந்தனர். மனைவிகள், கைம்பெண்கள், குழந்தைகள் ஆகியோர் ஒவ்வொருவரும் உதவித் தொகை பெற்றிருந்தனர். புதிதாய்ப் பிறக்கும் குழந்தை ஒவ்வொன்றும் உதவித் தொகை பெற உரிமை பெற்றது. அரேபிய அடிமைகள்கூடத் தம் பங்கைப் பெற்றிருந்தனர்.' அரேபியர்கள் அல்லாத முஸ்லிம்கள் அரேபியர்களோடு சமமாக நடத்தப்படவில்லை. இவர்கள் மாவாலி (Mawalis) எனப் பெயர் பெற்றனர்.[11] 'ஆகவே, அரேபியர் ஒரு நாட்டினமாக அமைந்து இஸ்லாமைப் பரப்பும் புனிதப் போர்ப் பணிக்குத் தயாரானார்கள். இப் புதிதாய்த் தோன்றிய விருப்பார்வம் மறைந்த பின்னும், போருக்கென்றே ஈடுபடுத்திக்கொண்ட அரேபிய இனத்தின் வீர உணர்வை உமரின் தொலைநோக்கின் காரணமாக முழுச் செயற்பாட்டோடு இரண்டரை நூற்றாண்டு பேணினார். தொடர்ந்து நாடு போருக்கென ஆயத்தமான நிலையில் இருந்தது. இவர்களுடைய இல்லம் நகரமன்று, பாசறை; இவர்களுடைய தொழில் போர் புரிதல்; ஒரு நொடிப்பொழுதில் போருக்குத் தயாராகும் நிலையில் இருந்த மக்களின் தொழில் போர்தான்.'[12]

## உமையாத்துகளின்கீழ் ஆட்சி நிறுவனம்

உமையாத்துகளின் கீழ் மத்திய ஆட்சி நிறுவனம் நான்கு பாகங்களைக் கொண்டிருந்தது; அவை : (i) திவான்-உல்-கராஜ்

---

பிரதிநிதிகளோடு மிக நெருங்கியவர்கள். இவர்கள் ஒவ்வொருவருக்கும் 5,000 திராம் ஒதுக்கினார். அல்-அபாஸ்-இபன்-அப்தல்-முத்தாலிப்பிற்கு 5,000 ஒதுக்கினார். ஏனென்றால், அல்லாவின் பிரதிநிதிகளுடன் இவர் நெருங்கிய உறவினர்.' இஸ்லாமின் தொடக்க காலத்தில் சிறப்படைந்தவர்களுக்கு வழி செய்யப்பட்டுள்ளவரை ஓய்வு ஊதியம் பெறுவோர் பட்டியல் செல்கிறது. 'மக்களின் தரத்திற்கேற்பவும், கொரானைப் படிப்பதற்கும், இவர்களின் போர்களுக்கும் (ஜிஹாட்) ஏற்ப இவர் நிதி ஒதுக்கினார். எஞ்சிய மக்களை இவர் ஒரு தனித்த பட்டியலில் வைத்தார். இதில் அல்-மதினாவிற்கு வந்தவர்களும் அடங்கும். இவர்கள் ஒவ்வொருவருக்கும் 25 தினாராவும், மற்றவர்களுக்கு இவற்றோடு மானியமும் அளித்தார்.' (பக்கங்கள் 243—244).

இந் நிதி ஒதுக்கீடுகளைப் பதிவு செய்ய ஒரு பதிவேடு திவானில் வைக்கப்பட்டிருந்தது. ஏனென்றால், சிரியாவில் அரசர்கள் ஒரு பதிவேடு வைத்துப் படையினரைச் சேர்த்ததை மக்கள் கண்டனர். ஆகவேதான், அரசின் இப் புகழ்பெற்ற (திவான்) துறை தோன்றியது.

[11] W. Muir, 'Rise, Decline and Fall of the Caliphate', p. 148.
[12] Ibid., pp. 149 - 50.

(Diwan-ul-Kharaj), அதாவது, நிலவரிக் கழகம்; (ii) திவான்-உல் காட்டிம் (Diwan-ul-Khatim) அல்லது தனி முத்திரைக் கழகம். இங்கு அரசாங்கத்தின் அவசரச் சட்டங்கள் வரையப்பெற்று, ஒப்பிசைவு பெற்று, முத்திரை இடப்பெற்றன; (iii) திவான்-உல்-ரசாயில் (Diwan-ul-Rasail) கடிதத் தொடர்புக் கழகம்; (iv) திவான்-உல்-முஸ்தாகில்லாத் (Diwan-ul-Mustaghillat) பல கூட்டான வருவாய்க் கழகம். திவான்-உல்-கராஜின் கீழ் இரண்டு மற்றத் துறைகள் இருந்தன. ஒன்று காவற்படையின் சம்பளம் அளிக்கும் பொறுப்பையும், மற்றொன்று படையினரின் சம்பளப் பொறுப்பையும் ஏற்றுக்கொண்டிருந்தன.[13] வருவாய் திரட்டும் பொறுப்பு ஆமில்களுக்கு அளிக்கப்பட்டது. இவர்கள் குறிப்பிட்ட நிர்வாகப் பணிகளை நிறைவேற்றினர். மாநிலத்தின் வருவாய்த் துறையின் தலைவர் சாகிப்-உல்-கராஜ் (Sahib-ul Kharaj). இவர் ஆளுநரிடமிருந்து சுயேச்சையானவர். இவர் கலிஃபாவினுல் அமர்த்தப்பெற்ருர். ஆனுல், இரண்டாம் உமருக்குப் பின் ஆளுநர்களும் சாகிப்-உல்-கராஜ் ஆக இருக்கையில், இவர்கள் வருவாய் திரட்டும் பொறுப்பைத் தம் செயலர்கள் அல்லது காத்திப்புகளுக்கு (Khatibs) அளித்தார்கள். (1) நிலவரி, (2) முஸ்லிம் அல்லாதாரின் மீதான சோதனை வரி, (3) வறியோருக்கான தீர்வைகள், (4) சுங்க வரியும் உள்நாட்டுப் பொருள் மீதான தீர்வைகளும், (5) உடன்படிக்கைகளின்கீழ்ச் செலுத்தப்பட்ட திறைகள், (6) போரில் கைப்பற்றிய பொருள்களில் ஐந்தில் ஒரு பங்கு ஆகியவை ஒவ்வொரு மாநிலத்தின் வருவாய் வளங்களாகும். இவை மாநிலக் கருவூலமாக அமைந்தன. இதிலிருந்து போர்வீரர்கள், உதவி பெறுவோர், பொதுப்பணியாளர்கள் ஆகியோர் ஊதியம் பெற்றனர். பொதுப் பயன்பாட்டுப் பணிகளும் இதிலிருந்து நிறைவேற்றப்பெற்றன. எஞ்சிய தொகையைப் பேரரசு கருவூலத்திற்குச் செலுத்தினர். இஸ்லாமின் வருவாய் முழுவதும் பெரும்பாலும் இப்படியே பெற்றவுடன் செலவிடப்பட்டது.

வென்று நிலம் கைப்பற்றுவதை சிவில் ஆட்சி நெருக்கமாகப் பின்பற்றியது. மெசபடோமியாவில் கால்வாயின் வலைபோன்ற பின்னல் அமைப்பு தொடக்கத்தில் எடுத்துக்கொள்ளப்பட்டது. 'நீண்ட காலமாகப் புறக்கணிக்கப்பட்ட டைகிரிஸ், யூபிரடிஸ் ஆற்றுக்கரைக் கட்டுமான வேலைகள் ஒரு தனிப்பட்ட அலுவலரின் கீழ்க் கொண்டுவரப்பட்டன; சிரியாவும் ஈராக்கும் வயலுக்கு வயல் நன்ருக அளக்கப்பெற்றன; ஒரே மாதிரியான மதிப்பீடு ஏற்படுத்

[13] Ameer Ali, 'History of the Saracens', pp. 190-91.

தப்பட்டது'[14] கலிஃபாவினுல் அமர்த்தப்பட்ட சிவில் நீதிபதிகள் நீதிமுறையைச் செய்தனர். இவர்கள் ஆளுநரிடமிருந்து சுயேச்சை யாக இருந்தனர். முடிவு செய்யப்பெற்ற ஊதியங்களை இவர்கள் பெற்ருர்கள். இவர்கள் ஹக்கிம் என்ற பட்டத்தைப் பெற்றிருந் தனர். நீதிபதி இன்னும் ஹக்கிமுஷ்-ஷாரா, அதாவது, சட்டத்தின் வழி ஆட்சி செய்பவர் என்ற பெயரைப் பெற்றிருந்தார். கலிஃபா அப்துல் மாலிக் என்பவரின் ஆட்சியில் அராபி பொது அலுவ லகங்களின் மொழியாக ஆக்கப்பட்டது.

## போரில் அரேபியரின் வெற்றிக்கான பொதுக் காரணங்கள்

அபசித்துகளுக்கு முன் அரேபியரின் ஆட்சி அமைப்பு இத் தகையதாகத்தான் இருந்தது. இதே காலத்திய இந்திய ஆட்சி அமைப்பைக் காட்டிலும் இது மிக்க உறுதிப்பாடும் பெரும் இயக்காற்றலும் பெற்றிருந்தது. இதனுடன் அரேபிய நாடு இஸ்லாமின் வீரமுதலாக இருந்தது; 'இதன் போர்களை நடத்த ஒவ்வோர் அரேபியரும் அருங்காவற் பண்புடையவராக இருந் தனர்'.[15] நபியின் முன்னறி திறத்தால் தம் சமயத்திற்காகப் போரிடவேண்டுமென்ற கட்டுப்படுத்த முடியாத அரேபியரின் ஆர்வம் ஒழுங்குபடுத்தப்பெற்றுப் பயனுள்ள நோக்கங்களுக்குத் திருப்பப்பட்டது. 'முதன்மையாகப் போர்கள் அறிவியலாலும், இரண்டாவதாக ஒழுங்குணர்வாலும், மூன்ருவதாக ஆர்வத் தாலும் வெல்லப்படுகின்றன.' முறைப்பட்ட படைப் பயிற்சி, விரத மாதம், உழைப்பாற்றல் சோதனை, இதில் கல்வி ஆகியவை ஐந்து 'பிரார்தனை'களாயின; விண்ணுலகிலும் மண்ணுல கிலும் ஆதாயம் பெறும் நோக்கமும், இதற்குச் சேராதவர்களை யெல்லாம் அடையவேண்டிய உரிமையோடு உலகில் முதன்மை யான இனமாவதற்கான கோரிக்கையால் ஆர்வம் தூண்டப் பட்டது. இருப்பினும், 'கடவுளுக்காகப் போர் என்ற நம்பிக்கை யால் இன்னும் அதிகமான ஆர்வம் ஊட்டப்பட்டது'.[16] தேவையான அளவு ஒழுங்குணர்வோடு சமய வெறி யார்வத்தின் வன்மைமிக்க பெருங் கிளாச்சியோடு சேர்ந்து கடவுளுக்கான போர்களில் போரிடுதல் துறக்கத்தில் இன்பங் களையும் உலகத்தில் பெரும் ஆதாயத்தையும் அளிக்கக் கடமைப் பட்டிருக்கிறதென்னும் நம்பிக்கை அரேபியர்களை வெற்றி

---

[14] W. Muir, 'Rise, Decline and Fall of the Caliphate', p. 151.

[15] W. Muir, 'Rise and Fall of the Caliphate,' p. 147.

[16] D. S. Margoliouth, 'Mohammedanism', p. 76.

கொள்ள முடியாதவர்களாக்கியது. உலகத்தை வென்று கீழ்ப் படுத்துமாறு இவர்களின் சமயம் தூண்டியது. இதனால் இவர்கள் கடவுளுக்குப் பணியாற்றினார்கள். இந்துக்களுக்கோ இந்த உலகம் ஒரு பொய்த் தோற்றம், மாயை. சமயத்திற்காகப் போரிடல் மடமைச் செயலாகும். இந்தியர்களுக்கும் முஸ்லிம் களுக்கும் இடையில் இம் மோதல்களின் விளைவுகளில் இந்த உளவியல் மிகப்பெரிய வேறுபாட்டை உண்டாக்கியது. எனவே, அல்பெருனி என்னும் பேரறிஞர், இந்துக்கள் ஒரு சமயச் சர்ச்சை பற்றித் தங்களுடைய 'ஆன்மா அல்லது உடல் அல்லது உடைமை ஆகியவற்றைப் பணயம் வைக்கமாட்டார்கள்' என்று குறிப்பிட்டார்.[17] இக் காலத்திற்குமுன் பல நூற்றாண்டுகளாக இந்தியாவில் சமயப் பொறை அரச தந்திரத்தின் எங்கும் நிறைந்த ஒரு குறிக்கோளாக ஏற்றுக்கொள்ளப்பட்டிருந்தது. சமயங்களும் சமயக் கோட்பாட்டு முறைகளும் கடவுளை நாடும் வழிகளே என்று இந்து மெய்யுணர்வு கற்பித்தது. கடவுளின் பெயரால் மனிதர்கள் படுகொலை செய்யப்படுவதை இவர்களால் அறிந்துகொள்ளவும் முடியவில்லை; பாராட்டவும் முடியவில்லை. நாடு பிடிக்கும் நோக்கமன்றி வேறு நோக்கங்களுக்கான போரை இவர்கள் அறியமாட்டார்கள். இந் நோக்கங்கூட முஸ்லிம்க ளிடத்தில் தூண்டிய பெரிய ஆர்வத்தையும் தன்மறுப்பையும் இவர்களிடம் எழுப்பவில்லை. அரேபியர்களைப்போல் இந்தியர் களும் அவ்வளவு ஒழுங்குணர்வு உடையவர்களாக இருக்கவில்லை. ஆகவே, அரேபியர்களோடு முதலிலும் பின்னர் துருக்கர்களோடும் போரில் படைக்கலம் ஏந்தி நிற்க முடியவில்லை.

## சிந்துவை அரேபியர் வென்று கைப்பற்றியதும் ஆட்சியும்

சிந்துவைக் கைப்பற்றியது அரேபியருக்கு மிக இடரான செய லாகத் தோன்றவில்லை. மத்திய ஆசியாவில் இவர்களின் முதன்மை யான முன்னேற்றத்தில் இது எல்லை கடந்த தொலைவிடந்தான். நெஹவாந்து (Nehawand) போர்க்களத்தில் பாரசீகப் பேரரசின் வீழ்ச்சிக்குப்பின் (கி.பி. 642), இவர்கள் ஆக்ஸஸிற்கப்பால் முன்னேறினர். இது ஒரு நீண்ட அதிர்கிற முறையாகும். மத்திய ஆசியாவின் வெற்றியைப் பெற்றவர்களின் பெருமையைப் பின்பற்றி மக்ரானின் ஆளுநர் ஒரு படையை சிந்து நாட்டிற்குள் கொண்டுவந்தார்; பல பயனற்ற முயற்சிகளுக்குப்பின் கி.பி. 712-ல் இந் நாடு முகம்மதுபின் காசிமிடம் வீழ்ச்சியடைந்தது. ஏறத்தாழ ஒன்றரை நூற்றாண்டு காலத்திற்கு அரேபியரின் ஆட்சி

[17] Alberuni, 'India', p. 19.

அதனுடைய முழு வலிமையோடு இருந்தது. சிறிது சிறிதாகச் சிதைவு ஏற்பட்டபொழுது கி.பி.870-71-ல் அபாசித் கலீபாக்கள் இதன்மீதான கட்டுப்பாட்டை இழந்தனர். பின் இது பெயரளவில் சஃபாரித் (Saffarid) குலத்தின்கீழ் வந்தது. சஃபாரித்திலிருந்து சமானித் குலத்திற்குச் சென்றது. இவை இரண்டும் சிந்துவை இதன் வழியில் விட்டுவிட்டு வெளியேறின.[18] பின் இது சின்னஞ் சிறிய அரசுகளாக முரிவுற்றது. கி.பி. 915-16-ல் சிந்துவெளிக்கு வந்த அல்-மசூதி, மூல்தானையும் மான்சுராவையும் தலைநகராகக் கொண்ட இரண்டு அரேபிய முடியரசுகளைக் கண்டார். இச் சிறிய அரேபிய அரசுகள் மகமுது கஜினியின் படையெடுப்பு வரை தொடர்ந்து இருந்துவந்தன. முஸ்லிம் (தலைவர்களால்) அரசர்களால் ஆளப்பட்டாலும் மற்றச் சிறிய அரசுகள் சிறப்பின்றி இருந்தன. இவைகளில் ஒன்று, 'பாஸ்ராவைச் சேர்ந்த அபுல் குவாசம் என்பவரின் அதிகாரத்தின்கீழ் இருந்தது. இவர் வரி திரட்டுபவர், ஆட்சியாளர், நீதிபதி, படைத்தலைவர். இவரால் மூன்றுக்கும் பத்துக்கும் உள்ள வேறுபாட்டைக் கண்டறிய முடியாது.'[19]

சிந்துவில் அரேபியர் நிறுவிய அரசாங்கம் இவர்களின்கீழ் மற்ற நாடுகளில் இருந்தவைகளை ஒட்டி இருந்தது. ஒருவாறு இராணுவ இயல்புடைய இவர்களின் ஆட்சியின் தொனி இந்தியாவில் மாறிவிட்டதாகத் தோன்றுகின்றது. இஸ்லாமைத் தழுவவில்லையென்றால் வேறு இடங்களில் சுதேசிகள் விழிப்போடு ஆட்சியில் பங்கு பற்றுமல் பார்த்துக்கொள்ளப்பட்டனர். இருப்பினும் இங்கு இவர்கள் நாட்டின் ஆட்சியில் தாராளமாகத் தொடர்புபடுத்தப்பட்டனர். தம்முடைய தலைவரின் தோல்விக்கும் மரணத்திற்கும்பின் தாகீரின் அமைச்சர் சிசாகர், முகம்மது பின் காசிமால் பதவிக்கு ஏற்றுக்கொள்ளப்பெற்றுர். 'இவரை மிக்க அன்போடு நடத்தி இவருக்கு வாசீர் (Wazir) பதவியும் அளித்தார்.[20] மிகப் பெருமளவிற்கு முஸ்லிம் தலைவரின் நம்பிக்கையை இவர் பெற்றிருந்தார். முகம்மதுபின் காசிம் கிராம மக்களிலிருந்தும் முதன்மையான குடிமக்களிலிருந்தும் ஆள்களை அமர்த்தி நகரங்களிலிருந்தும் கிராமங்களிலிருந்தும் நிலையான வரிகளை வசூலித்தார். இதனுல் மக்களுக்கு ஒரு வலிமையுணர்ச்சியும் காப்புணர்வும் இருந்தது.'[21] அரசாங்கத் துறையில் இருந்ததுபோல சமயத் துறையிலும் அரேபியர்களின் சமய

[18] Op. cit. p. 13.
[19] Elliot and Dowson, Vol. I, p. 456.
[20] Elliot and Dowson, Vol., I, Chachnam, p. 176.
[21] Ibid.,p. 183.

வெறி கணிசமாகக் குறைந்தது. உருவ வழிபாடு செய்ய சிந்து வின் மக்கள் பெருஞ்சலுகையோடு நடத்தப்பெற்றனர். இவர்கள் பணிந்த பிறகும், தலைவரியைச் செலுத்த இவர்கள் உடன்பட்ட பின்னரும், 'இவர்களின் உயிர்மீதும் உடமைமீதும் தாம் எந்த வகையிலும் கைவைக்கக்கூடாதென்று கலிஃபா கட்டளையிட்டார். இவர்கள் தம் கடவுளர்களை வழிபட அனுமதிக்கப்பட்டனர், எவரும் தம் சமயத்தைப் பின்பற்றுவது தடுக்கப்படவில்லை.'[22] ஆகவே, இவர்கள் தம் கோயில்களைக் கட்டிக்கொள்ள அனுமதிக்கப்பெற்றனர். 'ஏழ்மையான பிராமணர்களை அன்போடும் சலுகையோடும் பேணவும், அவர்களுடைய சடங்கு முறைகளையும் பழக்கங்களையும் பின்பற்றவும், முன்னுள் பழக்கத்தையொட்டி பிராமணர்களுக்குப் பலியுணவு, நன்கொடை கொடுக்கவும்'[23] முகம்மதுபின் காசிம் கட்டளையிட்டார். இந்தியாவில் உருவ வழிபாடு செய்பவர்களை நோக்கி அரேபிய முஸ்லிம்களுக்கு இத்தகைய தாராள மனப்பான்மை இருந்தது. இது ஓர் ஆதரவான கருத்தை உண்டாக்கியது. பல இந்தியர்கள் இஸ்லாமைத் தழுவ இது தூண்டியது. இஸ்லாமிய ஆட்சியின் சிறப்பொளியை முகம்மது கஜினியின் படையெடுப்புவரை இது வைத்துக் காத்தது.

இப்பொழுது நடைமுறையில் உள்ள ஆட்சியைப் பொறுத்தவரை, தாம் இதைக் கண்டவாறு ஆட்சி நிறுவனத்தை அரேபியர் தேவையான இடங்களில் மாறுதல்களைப் புகுத்தி வைத்துக் கொண்டார்கள். இருந்தபோதிலும், இவர்கள் முதன்மையாக இராணுவ அதிகாரத்தையே நம்பியிருந்தனர். சிறிதளவு மக்களின் பற்றுறுதியிலும் நம்பிக்கைகொண்டிருந்தனர். தலத்தலைவர்களும் ஆளுநர்களும் எங்கு இவர்கள் விருப்போடு கீழ்ப்பணிந்தார்களோ அல்லது தோல்விக்குப் பணிந்தார்களோ அங்கு இவர்கள் மறுபடியும் முன்னிருந்த நிலையில் வைக்கப்பெற்றனர். ஆனல், இவர்கள் குறிப்பிட்ட திறைப்பொருள்களைச் செலுத்த உடன்பட்டபின்தான் பதவியில் அமர்த்தப்பெற்றனர். தகீரின் ஆட்சியில் தலைவர்கள், ஆளுநர் ஆகிய கீழ்நிலை அலுவலர்கள் தக்கூர், ரவாட்கள், ராணுக்கள் என்று பலவாறு பெயர் பெற்றிருந்தனர்.[24] தகீரின் வலிமை மிக்க பற்றுறுதியுடைய தலைவர்களில் ஒருவர், தம் குடும்பத்தோடும் இருபது புகழ் பெற்ற தக்கூர்களோடும் பிடிக்கப்பட்டு முகம்மதுபின் காசிமின்முன் கொண்டு வரப்பட்டபொழுது, அவர்களை அன்போடும் மதிப்போடும் நடத்

[22] Ibid.' p. 186.
[23] Ibid., p. 186.
[24] Ibid., Chachnama, pp. 165, 167, 187, etc.

திஞர். நாட்டையும் (Bait) இவரிடம் திருப்பிக் கொடுத்து, மயில்களால் சூழப்பெற்ற ஒரு பச்சைக் குடையையும், நன்மதிப்பு விருது, நூருயிரம் திராம்களேக்கொண்ட ஒரு நாற்காலியையும் அளித்தார். 'தலைமைப் பதவியின் முதற் குடை அல்லது ரணகி மோக்காவிற்கு (Moka) இவர் கொடுத்தது இதுவேயாகும்' என்று வரலாற்றறிஞர்கள் கூறுகின்றனர். 'இவருடைய தக்கூர் களெல்லாம் சேணம் பூட்டப்பெற்ற குதிரைகளேயும், பதவிக்குரிய நீண்ட மேலங்கியையும் பெற்ருர்கள்.[25] 'தாலிலா கைப்பற்றப் பட்டபொழுது, தாரனின் மகஞகிய நூபாவை அழைத்து, இவருடன் ஓர் உடன்படிக்கை செய்துகொண்டு, இவருக்கு விருதுகளே வழங்கி, கிழக்கிலிருந்து மேற்கெல்லேவரையிலுமுள்ள அரண், அதன் உட்பட்ட பகுதிகளின் முழு ஆட்சிப் பொறுப்பையும் முகம்மதுபின் காசிம் அளித்தார்.'[26]

கக்கா (Kaka) எனப் பெயர்பெற்ற பௌதியா நாட்டின் தலத் தலேவரையும் இவர் இப்படித்தான் நடத்திஞர். இவருடைய ஆட்பேராகிய அப்துல் மாலிக் என்பவரை, எதிரிகளே யும் கலகக்காரர்களேயும் தண்டிக்க இவரின்கீழ் அமர்த்திஞர்.[27] ஆஞல், பொதுவாக ஓர் அரேபிய ஆளுநரைத் தலத்தலேவர்களுக்கு மேல் அமர்த்திஞர். இவர் திறைகளேத் திரட்டும் பொறுப்பை யும், தலத்தலேவர்களேக் கட்டுப்படுத்திச் செயலாட்சி செய்யும் பொறுப்பையும் காசிமிடமிருந்து பெற்ருர். எடுத்துக்காட்டாக, சிவிஸ்தாஞும் (செயிஸ்தான்) பௌதியாவும் கைப்பற்றப்பட்ட பொழுது, 'நாட்டின் சிவில் கடமைகளே நிறைவேற்ற இவர் தம் அதிகாரிகளே அமர்த்திஞர். இவருடைய ஆட்சியின்கீழ் அண்டை இடங்களேயும் இவர் கொண்டுவந்தார்.'[28] இங்கு இவர் ராலாட்டு களே அமர்த்திஞர். கிராமத் தலேவர்களே அல்லது முக்கதாம் களேப்போல் சிறு தலேவர்களாக இவர்கள் இருந்ததாகத் தோன்று கிறது. முக்கியமான நகரங்களும் அரண்களும் திறமையான அலு வலர் அல்லது படைத்தலேவர்களின்கீழ் விடப்பட்டன. மூல்தான் கைப்பற்றப்பட்டபொழுது, அமிர் தாவுத் நாசர் (Amir Daud Nasr) இதன் ஆளுநராக அமர்த்தப்பெற்ருர். ரிஹான் ஷாமியின் (Rihan Shami) மகன் அக்ரமா, மூல்தானேச் சுற்றியிருந்த பகுதிக்கு ஆளுநராக அமர்த்தப்பெற்ருர். அட்டோபா மென்டானியின் மகன் ஹரிமா அஜ்டாஹாட், காரூர் ஆகிய அரண்களுக்கு ஆளுநராக

[25] Ibid., p. 165.
[26] Ibid., p. 176.
[27] Ibid., p. 162.
[28] Ibid., p. 160.

அமர்த்தப்பெற்றூர்.'[29] அலோர் பிடிபட்டபொழுதும் இதே போல் தனிப்பட்ட அலுவலர்களையும் ஆளுநர்களையும் இவர் அமர்த்தினூர். சில சமயங்களில் இவர் தம் படைத்தலைவர்களோடு தனிப் படைகளை அனுப்பினூர். நாட்டின் அடிப்படுத்தப்படாத பகுதிகளை அரேபியரின் ஆட்சியின்கீழ்க் கொண்டுவரவேண்டிய பொறுப்பை இவர்கள் ஏற்றனர்; இவர்கள் இப் பகுதிகளை அடக்கித் தம் வசப்படுத்தியபின் ஒரு படைப் பிரிவோடு இவர்கள் இங்கேயே தங்கி வசிக்கும்படி கட்டளையிடப்பெற்றனர். சான்ருக, பஹ்ராவாரிலிருந்து 'பஹ்ராஜ் மக்களின் நாட்டை நோக்கி பத்தானின் மகன் சுலைமானையும் அபாஃபாசாதுல் கஷாரியையும் (Aba Fazzatul Kashari) ஒரு சிறு படையுடன் இவர் அனுப்பினூர். இவர்கள் இங்குச் சென்று தங்கினர்; ஹாஜ்-உல்-அக்பரி ஹனூஃபியின் (Hajjaz-ul-Akbari Hanafi) மகன் உமர் இவர்களின் தலைவராக அமர்த்தப்பெற்றூர். தலைசிறந்த வீரர்கள் சிலர் இவரின் கீழ் வைக்கப்பெற்றனர்.'[30] காயிஸ் பின் அப்துல் மாலிக் என்பவரோடும் காலிட் அன்சாரி என்பவரோடும் செயிஸ்டானில் இரண்டாயிரம் காலாட்படையினர் நிறுத்தி வைக்கப்பட்டனர். இவருடைய நம்பிக்கைக்கு ஏற்ற பலர் தேபால், நிரன் (Debal, Nirun)ஆகிய இடங்களைக் கைப்பற்றினர். இவருடைய கூட்டாளிகளில் ஒருவராகிய மாலிக் மௌலா கார்வைல் (Karwail) அரசராக அமர்த்தப்பெற்றூர். முந்நூறு பேர்களைக்கொண்ட ஒரு படை இங்கு நிறுத்திவைக்கப்பட்டது.[31]

முக்கியமான நகரங்கள் அக்கறையோடு கவனிக்கப்பட்டன. அரசாங்கக் காரியங்களில் செல்வாக்குடைய தல மக்கள் உதவியைப் பெறுவதில் முகம்மதுபின் காசிம் கவனம் செலுத்தினூர். சான்ருக, பிராமணூபாத் நகரின் மேலாண்மைக்காக ஹமியுதின் நாஜ்தி என்பவரின் மகன் விதா என்பவரை இவர் அமர்த்தினூர். இவருக்கு உதவியாளர்களையும் மேற்பார்வையாளர்களையும் தந்து உதவினூர். 'சொத்துப்பற்றிய எல்லாவற்றையும் கவனிக்கும் பொறுப்பை நகரின் நான்கு வணிகர்களிடம் ஒப்படைத்தார். இவர்கள் எல்லாவற்றைபற்றியும் முழுமையாகவும் குறிப்பிட்டும் இவருக்கு (விதாவிற்கு) அறிவிக்கவேண்டுமென்றும், இவரைக் கலந்துகொள்ளாமல் எதையும் முடிவு செய்யலாகாதென்றும் இவர் கண்டிப்பாகக் கட்டளையிட்டார்.'[32] நகரின் வறுமைக்குட்பட்ட பிராமணர்களுக்கு ஐயமிடும் பழக்கத்தை ஒழுங்குபடுத்தினூர்.

---

[29] Ibid., Chachnama, p. 207.
[30] Ibid., p. 191.
[31] Ibid., p. 190.
[32] Ibid., Chachnama, p. 189.

தேவையான அளவு ஐயமிட நூறு திராமில் மூன்று திராம் தனித்து வைக்கவேண்டுமென்று இவர் விதி செய்தார். முன்னைய பழக்கத்தையொட்டி நகரின் அலுவலர்களும் செல்வர்களும் அவர்களின் செலவுத் தொகைகளைப் பெற்றனர்.

நகர ஆட்சிகளில் உள்ளதைப்போல் நாட்டுப்புறப் பகுதிகளின் ஆட்சியிலும் இயன்றவரை அரேபியர் தலப் பழக்கங்களைப் பின்பற்றினார்கள். முகம்மதுபின் காசிம்மிற்கு சமானிஸ் நாட்டுத் தலைவர்களும் வணிகர்ளும் பணித்தபொழுது, 'இவர்கள்மீது வரி விதித்து ஒவ்வோர் இனத்திலிருந்தும் இதன் ஒவ்வொன்றிற்கும் தலைவரென ஒருவரை இவர் அமர்த்தினார்.' உழவர்களும் பாது காப்பின்கீழ்க் கொண்டுவரப்பெற்றனர். வணிகர்களும் கைவினைஞர்களும் கடுமையான வரிவிதிப்பிற்குட்படுத்தப்படவில்லை. இஸ்லாமை ஏற்றுக்கொண்டவர்களிடமிருந்து இவர்களுடைய சொத்திலும் விளைபொருளிலும் பத்தில் ஒரு பகுதி வசூலிக்கப்பெற்றது. ஆனால், தம் சொந்தச் சமயத்தைப் பின்பற்றியவர்களிடமிருந்து, 'உடலுழைப்புத் தொழில், நிலம் ஆகியவற்றிலிருந்து நாட்டின் நிலைபெற்ற வழக்கத்திற்கொப்ப வழக்கமான தொகை வசூலிக்கப் பெற்றது; இதை இவர்கள் அரசாங்கத் தண்டலர்களிடம் சேர்க்கவேண்டும்.'[33] முகம்மதுபின் காசிம் தம் இந்து அமைச்சராகிய சிஸாகர் (Sisakar) என்பவரின் அறிவுரையோடு, சச், தகிர் ஆகியோரின் காலத்து வழக்கங்களையொட்டி லோஹனு ஜாட்டுகளை (Jats Lohana) நடத்தினார்.[34] வருவாய் திரட்டுவதைப் பொறுத்துத் 'தம் குடிமக்களின் அரசியல் நிறுவனங்களை வெளியார் என்ற முறையில் தாம் கோரிப் பெறவேண்டுமென்ற உரிமையோடு இவ்வரிகளைப் பெறுவதற்கான வழிகளை நாட அரேபியர்கள் வற்புறுத்தப்பெற்றனர்.[35] ஆகவே, சிந்துவில் இவர்கள் உள்நாட்டு அலுவலர்களை வைத்துக்கொள்ள வேண்டியிருந்தது. மேலும், சிந்துவின் மக்கள் துணைப்படையினராகச் சேர்த்துக் கொள்ளப்பெற்றனர். அரேபியர்களின் வெளிநாட்டுப் போர்களில் சண்டை செய்ய இவர்கள் அமர்த்தப்பட்டனர்.

*11,500,000* திராமைக்கொண்ட ஒரு தொகையையும் *180* பவுண்டு காரகிற் கட்டையையும் சிந்து விளைவித்தளித்தது. நிலவரி, தலைவரி, சுங்கத் தீர்வைகள், மற்றெல்லாப் பல்கூட்டான வரிகள் ஆகியவற்றை இத் தொகை கொண்டிருந்தது. 'பொதுக் கால்வாய்களால் வயல்கள் நீர்ப்பாசனம் பெற்றிருந்தால்,

[33] Ibid., pp. 190-91.
[34] Ibid., p. 187.
[35] Ibid., Vol. I, Appendix, p. 461.

கோதுமை, வால்கோதுமை ஆகியவற்றின் விளையுளில் ஐந்தில் இரண்டு பங்கு வழக்கமாக நிலவரியாக விதிக்கப்பட்டது; சக்கரங் களால் அல்லது மற்றச் செயற்கை முறைகளால் நீர்ப்பாசன வசதி பெற்றவைகளுக்குப் பத்தில் மூன்று பங்கும், முற்றிலும் பாசன வசதி பெறாதவைகளுக்கு நான்கில் ஒரு பங்கும் நிலவரியாக வசூலிக்கப்பட்டது. சாகுபடி நிலம் சாகுபடி செய்யாமல் விடப் பட்டிருந்தால் ஒரு ஜிராவிற்கு ஒரு திராமும், விளையுளில் பத்தில் ஒரு பங்கும் செலுத்தியதாகத் தோன்றுகிறது......பேரீச்சம்பழ, திராட்சைப்பழத் தோட்ட விளைபொருள்களுக்கு மூன்றில் ஒரு பகுதி வரியாகப் பெறப்பட்டது. இதைப் பணமாகவும் பண்ட மாகவும் செலுத்தலாம். கொடிமுந்திரி, முத்துச்சிப்பி போன் றவைகளிலிருந்து ஐந்தில் ஒரு பங்கு பெறப்பட்டது. பயிர்த் தொழிலிலிருந்து பெறப்படாதவைகளைப் பண்டமாகக் கொடுக்க வேண்டும் அல்லது பெறுமதியில் இவைகளுக்கான செலவுகளைச் செய்வதற்கு முன்னரே கொடுக்கவேண்டும். சுங்க வரிகள், ஊடு சுங்க வரிகள் இஸ்லாமில் நம்பிக்கை வைக்காதாருக்கு இரண்டு பங்கும், வரிகள், தொழில், உற்பத்தி மீதான வரிகள், கைவினைப் பொருள்களின் மீதான வரிகள் ஆகியவை பொது வருமானத்தின் முக்கியமான செல்வ வளமூலங்களாகும்.'[36] சவாத் அளக்கப்பட்டு மதிப்பிடப்பட்டபொழுது இவை உமரின் சட்டமூலத் தொகுப்புகளாக இருந்தன. ஆனால், சிந்துவில் வரி வசூலிப்பு வரிக்குத்தகையாளரின்கீழ் இருந்ததால், மேல்குறிப் பிட்ட வரிவீதங்கள் பெரும்பாலும் இந் நோக்கத்திற்கு மிகக் குறைந்த அளவாகவே இருந்தன. சிந்துவின் உழவர்கள் பாஜ் (baj), உஷரி (ushari) போன்ற மற்ற வரிகளையும் செலுத்தவேண்டி யிருந்தது. உமரின் ஒரு பழைய சட்டத்தின்படி, ஒவ்வொரு முஸ்லிம் பயணிக்கும் மூன்றுநாள்களும் இரவுகளும் உணவளிக்கவேண்டும்.[37] ஆனால், இவைகளன்றிப் பொதுச் சேவைகளுக்காகப் பெருமளவு நிலம் இக்தாத் அல்லது மானிய நிலங்களாகவும், புனித நிறுவனங் களுக்கும் மாளிகைகளுக்கும் வாக்ஃப் ஆகவும் உடைமை மாற்றப் பெற்றன. அனுபவ பாத்திய மானியம் பெற்றவர்கள் தொடர்ந்த இராணுவ சேவை நிபந்தனையில் இதைப் பெற் றிருந்தனர். ஆகவே, இந்தியாவில் முஸ்லிம்களின் ஆட்சியின் தொடக்கத்திலேயே ஜாகீர் முறை தொடங்கியது. ஆனால், ஜாகீர் தார்கள் வேளாண்மையில் ஈடுபட அனுமதிக்கப்படவில்லை. நாட்டுமக்களால் இவர்களுடைய நிலம் இவர்களுக்காகச் சாகுபடி செய்யப்பட்டது. நிலமானியம் பெறாத படையினர் பொது வரு

[36] Ibid., Vol. I, Appendix, p. 474.
[37] Ibid., p. 176.

வாய்களிலிருந்து உதவிப் பணம் பெற்ருர்கள். இவர்கள் நில வரியாக எதுவும் பொது வருவாய்க்குச் செலுத்தவில்லை.

நீதி பரிபாலனத்தைப் பொறுத்தவரை உறுதியாக எதுவும் சொல்வது கடினமாகும். வரிவசூலிக்க அமர்த்தப்பட்டிருந்த வர்கள் நீதிபரிபாலனத்தோடு எவ்விதத் தொடர்பும் கொண் டிருக்கவில்லை. ‘சிறிது அளவு சுயேச்சைத் தோற்றத்தைப் பெற்றிருந்தவர்களும் அமீர்களும் மரண தண்டனை அளிக்கும் அதிகாரத்தைச் செயல்படுத்தினர். ஆனுல், பின் குறிப்பிட்டவர் களின்கீழ்ச் சட்ட வரன்முறைகள் நேர்மையாகப் பின்பற்றப்பட வில்லை யெனினும் மிகக் கடினமாக மேற்கொள்ளப்பட்டன. நீதி வழங்கும் இடத்திற்கு அமர்த்தப்பெற்ற காசி (Qazi), முஸ்லிம்களுக்கு இடையிலான தகரார்றுகளில் குரானின் நீதிவாச கங்களையொட்டி முடிவுசெய்வதாக வெளிப்படக் காட்டிக்கொண் டார். இந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் இடையிலான வழக்கு களிலும் இதே தவருத வழிகாட்டியிடம்தான் முறையிடப் பட்டது. இதன்படி இந்துக்கள் சிறிதளவு நீதியைத்தான் பெற் ருர்கள். பொதுவான அல்லது அரசியற் குற்றங்கள் யார் செய் தாலும் ஒரேமாதிரியான தரத்தில்தான் விசாரிக்கப்பட்டன. ஆனுல், கடன்கள், ஒப்பந்தங்கள், பிறன்மனை நயத்தல், மரபுரிமை, சொத்துரிமை போன்றவைகளுக்கான வழக்குகளில் எல்லாம் மேல்முறையீடு செய்வதற்காக நிறுவப்பெற்ற நீதிமன்றம் அல்லது எவ்வகையான சட்டத்தையும் இந்துக்கள் பெற்றிருக்க வில்லை. ஆகவே, இவர்களின் சொந்த வேறுபாடுகளை அகற்ற இவர்கள் தம் பஞ்சாயத்துகள் அல்லது திறமைமிக்க நடுவர் தீர்ப்புக் குழுக்களைப் பெற்றுப் பேணிவந்தனர்.’[38] ஆகையால், நீதி வழங்க இந்து நிறுவனங்கள் தொடர்ந்து இருந்துவந்தன. இவைகளின் சட்டத் தொகுப்புகள், பழக்கங்கள் ஆகிய வற்றிற்கொப்ப நீதி வழங்கப்பெற்றது என்று தோன்றுகிறது. இருப்பினும், இந்துக்களைப் பொறுத்தவரை, பொது நியாய சபைகள் கட்டாய மதமாற்றத்திற்கும் அச்சுறுத்திப் பணம் பறிப்ப தற்கும் கருவிகளாக இருந்தனவென்று மெய்ப்பிக்கப்படுகின்றன. சேணமிட்ட குதிரைச் சவாரி செய்வதற்கு நீதிமுறையில் தண்டங்கள் இருந்தன. தாடி வைத்திருத்தலும் முஸ்லிம்களின் உடைகளை அணிதலும் கட்டாயமாக்கப்பட்டன. ஆகவே, அர சாங்க நிறுவனத்தோடு பிரிக்க முடியாத முதன்மையான கடப் பாடாகிய நீதிமுறைமைத் தூய்மை சிந்துவின் அரேபிய அரசர் களால் புறக்கணிக்கப்பட்டதாகத் தோன்றுகிறது. ஆளுநர்கள் அடிக்கடி மாற்றப்பட்டாலும் கீழ்நிலை நோக்கிய போக்கு

[38] Ibid., Vol. I, Appendix, p.478.

விரைவில் தோன்றத் தொடங்கி, வெற்றி கண்டவர்களும் வெற்றிக்குட்பட்டவர்களும் விலகிச் சென்றனர். ஏனெனில், இவர்களிடையே பரிவுணர்வு இல்லை. சிந்துவில் இறுதியில் அரேபிய ஆட்சியின் சிதைவில் இதுவும் பங்கு பற்றியது.

இந்த வீழ்ச்சியை விரைவுபடுத்துவதற்கு உதவிய மற்ெருரு காரணம் அரேபியருக்குள்ளான உட்குழு சார்ந்த இனப்பகைகளாகும். சான்ருக, இரண்டு யாமனிய இனங்களாகிய சகசகரும் **(Sakasaks)** சகிஃபிசரும் **(Sakifis)** சிந்துவை வெற்றி கொண்ட பிறகு தம் இனப்பகையைத் தொடங்கினர். முட்டாசிம் கிலாஃபத்தின்கீழ் யாமனிய, நிஜாரிய இனங்களின் வெளிப்பகை மூண்டது. ஆலியைப் பின்பற்றியவர்களின் சமய ஒறுப்பும் இங்கிருந்தது. எனவே, உருவ வழிபாடு செய்கிறவர்களோடு இவர்கள் மிக மெல்லிணக்க நயமாக இருந்தாலும், சிந்துவில் சமயப் பொறையாகிய மெய்மை தெரியாமலே இருந்ததாகத் தோன்றுகிறது.

சுருங்கக் கூறின், சிந்துவில் அரேபியரின் ஆட்சி இத்தகையது தான். இவர்களின் வருகை இந்தியாவின் வரலாற்றில் ஓர் உட்கதைதான். இந்திய ஆட்சி அமைப்பு முறை வளர்ச்சிக்கு இவர்களுடைய அரசாங்கம் ஒன்றும் செய்யவில்லை. 1206 - ல் இந்தியாவில் முதல் முஸ்லிம் பேரரசு தோன்றிய பிறகுதான் முஸ்லிம்களின் கணிசமான அளவு பங்களிப்புக் கிடைத்தது. இந்து அரசியல் நிறுவனங்களின் இயல்பு, வடிவம் ஆகியவற்றில் சிந்துவின் அரேபியர் ஆட்சி எவ்விதப் பலனையும் உண்டாக்கவில்லை. மாருக, கலிஃபாக்கள் வகுத்த அரசாங்க முறைகள் சிந்துவில் இந்து முறைகளுக்குப் பல நிகழ்ச்சிகளில் விட்டுக் கொடுத்தன. கட்டடக் கலையிலும், கலையிலும், உடையிலும், நடையிலும் நாட்டின்மீதும் மக்களின்மீதும் இவர்கள் ஒன்றையும் பதியச் செய்யவில்லை. மூன்று கண்டங்களில் பரவியிருந்த இவர்களுடைய பேரரசில் எப் பகுதியிலும் இருந்ததைப் போல், சிந்துவில் அரேபியரின் ஆட்சியில் இருந்த உள்ளார்ந்த தளர்வு, மத்திய அதிகாரம் மதிக்கப்படாததேயாகும். தலத் தலைவர்களுக்கு அல்லது ஆளுநர்களுக்கு நெடுந்தொலைவுகள் உதவியதால் இதை முழுநிறைக் காப்புறுதியோடு இவர்கள் எதிர்த்து நின்ருர்கள்.

# 11. சுல்தானிய அரசும் இந்தோ-இஸ்லாமிய அரசியலமைப்பு ஒழுங்கு முறையின் அடிப்படை நிறுவப்படுதலும்

## கலீஃபாக்களின் பேரரசு சிதைவுறல்

தம் தலைநகரான பாக்தாத்திலிருந்து கலீஃபாக்கள் ஆட்சி புரிந்துவந்த இஸ்லாமியப் பேரரசானது, ஒரு காலத்தே பரப்பில் விரிந்ததாய், சீருஞ் சிறப்பும் மிக்கதாய் விளங்கியது. ஆனால், நாளடைவில் அது நலியத் தொடங்கியது. ஒன்பதாம் நூற்றாண்டின் இடையிலிருந்தே அது நலிவுப் பாதையில் இழிய ஆரம்பித்துவிட்டது. 'கலீஃபாக்களின் தலைவிதியை உண்மையிலேயே நிர்ணயிப்பவர்களாகத் திகழ்ந்த' வீராவேசம் பொருந்திய துருக்கியத் தலைவர்கள், வெறும் பொம்மை அரசர்களை அரியணையில் அமர்த்தினர். அவர்களுக்கு எவ்வித மான வல்லமையோ அதிகாரமோ தரப்படவில்லை.[1] முன்தசிர் பில்லா (Muntassir B'Illah, கி.பி. 862) என்பாரின் மரணத்துக்குப் பின்னர் நாடெங்கும் ஏற்பட்ட ஓர் குழப்பத்தில் பல மாநில ஆளுநர்கள் சுதந்திரமடைய முயன்றனர். பாதி சுதந்திரநிலையை அவர்களில் பலர் மெல்ல மெல்ல அடைந்துவிட்டனர். கலீஃபாக்களின் இறைமை என்பது நாளுக்கு நாள் தேய்ந்துவரலாயிற்று. மேலதிகாரத்தின் நிழல்மட்டுமே அவர்களிடம் எஞ்சியது. ஏறக்குறைய ஒரு முக்கால் நூற்றாண்டுக்குப் பின்னர், அப்துல் அப்பாஸ் முகம்மது என்பாரின் ஆட்சிக் காலத்தில் (கி.பி. 933-40) கலீஃபாக்களிடம் இறுதியாக எஞ்சி நின்ற அதிகாரமும் கண்ணியமும் மாய்ந்தொழிந்தன. பாக்தாதும் அதனைச் சுற்றியிருந்த சில இடங்களும் மட்டுமே அவரது ஆட்சிக்குள் அடங்கியிருந்தன. 'ஏனைய மாநிலங்களில் ஆட்சி புரிந்துவந்த ஆளுநர்கள் ஒவ்

[1] Ameer Ali, 'A Short History of the Saracens', p. 290.

வொருவரும் சுயேச்சையாக நடக்கத் தலைப்பட்டனர்.'[2] இஸ்லாமியக் கொடியைப் பிறநாடுகளில் பறக்கவிடக்கூடிய வலிமையைக் கலீஃபாக்கள் இழந்துவிட்டபோது, அதை இன்னும் வெற்றிகரமாகச் செய்து முடிக்கக்கூடிய வேற்று மனிதர்கள் அங்குத் தோன்றலாயினர்.

## கஜ்னவீடுகளும் கோரிகளும் இந்தியாவின்மீது படையெடுத்தல்

தொல்லைகள் நிரம்பிய இக் காலத்தில்தான் ஆக்ஸியானுவுக்கு வடக்கே உள்ள நிலப்பகுதியானது, சமானிட் (Samanid) வம்சத்தைச் சேர்ந்த இஸ்மாயில் என்ற ஆளுநரின் தலைமையின்கீழ் ஏறக்குறைய சுயேச்சை நிலையை அடைந்தது. சமன் என்பார் பாரசீக நாட்டைச் சேர்ந்தவர். பல ஒட்டகங்கள் அவருக்குச் சொந்தமாக இருந்தன. பல ஒட்டகத் தொகுதிகளுக்கு அவர் தலைவராக விளங்கினர். அவரது பெயரரான அகமது என்பார், மாமுன் (Mamun) என்பவரால் கி.பி. 819ஆம் ஆண்டில் ஃபர்கானு என்ற பிரதேசத்தின் ஆளுநராக நியமிக்கப்பட்டபோதுதான் அவரது குடும்பம் முதன்முதலாக முக்கியத்துவம் பெற்றது. சமானிட்டுகளின் தனிப்பட்ட சுதந்திர ஆட்சியானது கி.பி. 874 முதல் 999 வரை நீடித்தது. கலீஃபாக்களைப்போன்று சமானிட்டுகளும் துருக்கிய அடிமைகளைத் தங்களது அரசவையிலும் நாட்டிலும் பல பணிகளில் அமர்த்தினர். அவர்களில் ஒருவரான அலப்டிஜின் (Alaptigin) என்பார், தம் தலைவருக்கு விரோதமாகக் கலகம் செய்து, கஜினியில் தமக்கென ஓர் நாட்டைத் தனியே ஏற்படுத்திக்கொண்டார். அவருடைய அடிமையும் அதே சமயத்தில் மருமகனுமாயிருந்த சபுக்டிஜின் என்பார் கஜினியைக் கி.பி. 977 முதல் 998வரை ஆண்டுவந்தார். அவர் பல வெற்றிகளைப் பெற்றுத் தமது நாட்டை விரிவுபடுத்தினர். காபூல், பஞ்சாப் ஆகிய இடங்களை ஆண்டுவந்த ஜெய்பால் மன்னரை அவர் வென்று காபூலை அவரிடமிருந்து பலவந்தமாகக் கைப்பற்றிக்கொண்டார். அவர் இறந்தபோது, அவரது பேரரசானது ஆக்ஸஸ் நதிமுதல் சிந்து நதிவரையிலும், பாரசீகத்திலிருந்து பாமிர் வரையிலும் பரவியிருந்தது. அவரது வழித்தோன்றலும் மகனுமான கஜினி மகமது, இந்தியாவின்மீது படையெடுக்கவேண்டுமென்ற பேராசையால் உந்தப்பட்டு, பதினேழு முறை இந்தியாவுக்குள் வந்தார். ஒவ்வொரு முறையும் ஏராளமான பொன்னையும் பொருளையும் அவர் கொள்ளை

[2] Ibid., p. 301.

யடித்துக்கொண்டு சென்றார். பஞ்சாபைத் தமது நாட்டோடு சேர்த்துக்கொண்டார். வட இந்தியாவில் வாழ்ந்த இந்துக்களின் மனத்தில் அவர் ஒரு பீதியை ஏற்படுத்தினார். அவர் யாராலும் வெல்லப்பட முடியாதவர் என்றும், அதேபோல இஸ்லாமின் வல்லமையும் தோற்கடிக்கப்பட முடியாததொன்று என்றும் மக்களுக்குத் தோன்றிற்று. சிலை வணக்கத்தை (idolatry) இந்தியாவிலிருந்து அறவே ஒழித்துக்கட்டிவிடுவதென அவர் ஓர் சபதம் பூண்டார். தமது வாளைக்கொண்டும் மூர்க்கத் தனத்தைக்கொண்டும் அவர் ஏராளமான மக்களை இஸ்லாம் மதத்துக்கு மாற்றினார். கி.பி. 1030 - ல் அவர் இறந்த தேதியி லிருந்து குழப்பமான காலம் தொடங்கியது. அக் குழப்ப மானது முற்றி கஜ்னவீடுகளின் வீழ்ச்சியில் போய் அது முடிந்தது. கோர் வம்சத்தார்கள்தாம் அவ் வீழ்ச்சிக்குக் காரணமாயிருந்தனர். அலாவுதீன் ஹுஸேன் என்பார் கஜினி யைத் தரைமட்டமாக்கினார். அவருக்குப்பின் அவரது இரண்டு மருமகாரும் (nephews) கஜினி மகமதுவின் நாடனைத்தையும் ஏறக்குறைய வென்று ஆட்சிபுரிந்துவந்தனர். கோர் வம்சத்து இளைய தலைவரான மொய்ஸுடீன் முகம்மது (Muizzuddin Muhammed) என்பார் பஞ்சாபை வென்று தமது நாட்டுடன் சேர்த்துக்கொண்டபின் டில்லியை ஆண்டுவந்த பிருதிவிராஜ் சௌஹன் என்பாரோடும் போரிட்டார். கி.பி. 1192 - ல் நடை பெற்ற போரில் பிருதிவிராஜ் வெல்லப்பட்டதோடு கொல்லவும் பட்டார். டில்லிவரை பரந்திருந்த அவரது நாடனைத்தும் மகமதுவுக்குச் சொந்தமாயிற்று. ஆஜ்மீரும் அதைச் சுற்றியிருந்த நாடும் நாளடைவில் வெல்லப்பட்டன.

இங்ஙனம் இந்தியாவில் தமக்குக் கிடைத்த நாடுகளை, மகமது கோரி, தமது நம்பிக்கைக்குப் பாத்திரமானவரும் திறமைமிக்க வருமான பிரதிநிதி ஒருவரது, அதாவது, குத்புதீன் அய்பெக் என்பாரது கைகளில் ஒப்படைத்துவிட்டுச் சென்றார். நாடனைத்தும் தங்களுக்கு உண்மையில் சொந்தமாகவேண்டு மென்றால் முஸ்லிம்கள் இன்னும் பெரிதும் பாடுபடவேண்டும் என்பதை அய்பெக் நன்கு உணர்ந்தார். ஒருசில ஆண்டுகள் வரை அவர் கிழக்குமேற்காகவும், வடக்குதெற்காகவும் படைகளை நடத்திச் சென்று இராஜபுதனத்திலிருந்து அயோத்திவரையில் இடையிலிருந்த நாடுகளில் இருந்த கலகக்காரர்களையெல்லாம் வென்று தமக்குப் பணியாதவர்களை யெல்லாம் பணியவைத் தார். டில்லியிலிருந்த சௌஹான்கள் (Chauhans) மட்டும் அவரைத் தொடர்ந்து எதிர்த்துவந்த காரணத்தால், அவர் டில்லியையே தமது தலைநகராகக் கொண்டார் (கி.பி. 1193).

அப்பொழுதிருந்து அநேகமாக டில்லிதான் இந்தியாவின் தலைநகராக இருந்துவருகிறது. அதுபோலவே நில மார்க் கத்தில் அது எப்போதும் வட இந்தியாவுக்கு வழிவிடும் ஓர் வாசலாகவும் விளங்கிவருகின்றது. ஆறு ஆண்டுகளுக்கு ஓய்வுஒழிச்சலின்றி அவரும் அவரது துணையதிகாரிகளும் பாடு பட்டு வட இந்தியாவை வெல்ல முயன்றனர். எனினும், ஒருசில நாடுகள்மட்டுமே அவரது கைவசம் வந்தன. அவைகளிலுங் கூட, அவற்றின் தலைவர்கள் முழுவதுமாக வெல்லப்படவில்லை. பதினும் நூற்றுண்டின் இடைக்காலம்வரையில், வெல்லப்பட்ட இந்து தலைவர்களில் பலர் தமது இழந்த பதவிகளை மீண்டும் கைப்பற்றிக்கொள்வதை நாம் காண்கிறோம்.

கிழக்கே ஆண்ட முஸ்லிம்களின் அனுபவம் இதற்கு முற்றிலும் மாறுனதாயிருந்தது. பீஹாரை வென்றபின் முஸ்லிம்கள் வெகு விரைவில் வங்காளத்தையும் வென்று தன்னடிப்படுத்தினர். அப்படி வென்ற முஸ்லிம்களின் தலைவர் கல்ஜ் (Khalj) என்ற துருக்கிய குலத்தைச் சேர்ந்த பக்தியார் (Bakhtiyar) என்போரின் மகனுன இக்தியாருத்தீன் (Ikhtiyaruddin) என்பவராவர். அவர் வங்காளத்தில் புகுந்து அதன் தலைநகரான நாதியாவை (Nadiya) அடைந்தபோது அவருக்குத் துணையாகப் பதினெட்டுப் போர் வீரர்களே அவரருகில் இருந்தனர். அது சமயம் அவரது படையின் முக்கியமான பகுதியானது பின்னுல் மெல்ல வந்து கொண்டிருந்தது. ஆனுல், தம் அருகிலிருந்த பதினெட்டுக் குதிரை வீரர்களைக் கொண்டே அவர் அரண்மனையில் இருந்த காவ லாளிகளை யெல்லாம் கொன்று வங்காள மன்னரையும் அரண் மனையைவிட்டே ஓடும்படி செய்தார்.

கில்ஜி அரசர் இங்ஙனம் வங்காளத்தில் நுழைவதற்கு முன்னமே கோழை மனம் படைத்த வங்காளிகள் தலைநகரை விட்டுத் திரள்திரளாக வெளியேறிவிட்டனர். ஏனெனில், துருக் கர்கள் கையில் அந் நகரானது விழவேண்டுமென்பது விதிப்படி நடக்கவேண்டிய காரியமென அவர்கள் நம்பி யிருந்தனர். அவர்களது புனிதமான சமய நூல்களில் அப்படிப்பட்ட தீர்க்க தரிசனம் சொல்லப்பட்டிருந்தது. அந்தத் தீர்க்கதரிசனம் பலிக்க வேண்டிய காலம் வந்துவிட்டதென்று எண்ணியே அவர்கள் பயந்து நகரைவிட்டே ஓடிவிட்டனர். இத்தகைய தைரியத்தைக் கொண்டிருந்த மக்கள் முஸ்லிம் ஏகாதிபத்தியத்தை எந் நாளும் விரட்ட முடியாதென்பது தேற்றம். எனவே, இங்குமங்குமாகப் பேராசை பிடித்த ஆளுநர்கள் ஒரோவழிக் கிளர்ச்சிகளில் ஈடு பட்டனரேனும், நாட்டு மக்கள் பொதுவாக வாளாவிருந்தனர்.

# இந்தியாவின் முதல் முஸ்லிம் பேரரசு (கி.பி. 1200 - 1400)

கி.பி. 1206ஆம் ஆண்டில் மகமது கோரி ஓர் கொலையாளியின் கையில் சிக்கி மாண்டார். அவருடன் அவரது கட்டுப்பாடும் மாய்ந்தது, குத்புதீன் அய்பெக், சுல்தான் என்ற பட்டத்தைச் சூட்டிக்கொண்டார். வங்காளத்தை ஆண்டுவந்த இக்தியாருதீன் என்பாரும், முல்தான், உச் (Uch) எனும் நாடுகளின் ஆளுநராயிருந்த நாஸிருதீன் குபேக்கா என்பாரும் குத்புதீனைத் தங்களது தனித்தலைவராக ஏற்றுக்கொண்டனர். அதிலிருந்துதான் டில்லி சுல்தானிய அரசு என எல்லோராலும் அறியப்படுகிற முஸ்லிம் பேரரசு இந்தியாவில் தொடங்கியது எனலாம். அய்பெக்கால் தோற்றுவிக்கப்பட்ட அடிமை வமிசமானது முழுமையாகத் தொண்ணூறு ஆண்டுகள் ஆட்சிப் பீடத்தில் இருந்தது. அதன்கண் ஆற்றலும் அரக்கத்தன்மையும் கொண்ட பால்பன் போன்ற வல்லரசர்களும், பக்தியும் பண்பும் கொண்ட நாஸிருதீன் போன்ற பொம்மை அரசர்களும் காணப்பட்டனர். அவர்களின் பேரரசில், வட இந்தியாவில் ஒரிஸாவைத் தவிர ஏனைய பகுதிகள் அனைத்தும் அடங்கியிருந்தன. அவர்களுக்குப்பின் டில்லி அரசைக் கைப்பற்றிய கில்ஜிகள் காலத்தில் அதன் பரப்பு இன்னும் விரிவுற்றது. கில்ஜிகளின் ஆட்சி முப்பதாண்டுகள்வரை நீடித்தது. அவ் வாட்சிக்குப் பேரும் புகழும் ஏற்படுத்தியவர் அலாவுதீன் என்பவராவர். அவர் காலத்தில்தான் தக்காணம் முதன் முதலாக முஸ்லிம்களால் கைப்பற்றப்பட்டது. மேலும், ஆட்சித் துறை அமைப்பில் பல வகையிலும் ஓர் திருப்பம் ஏற்பட்டதும் அவரது காலத்தில்தானாகும். கில்ஜிகளுக்குப்பின் துக்ளக்குகள் ஏறக்குறைய ஒரு நூற்றாண்டுக் காலம் அதாவது, கி.பி. 1320 முதல் 1413 வரை இந்தியாவை ஆண்டனர். கில்ஜிகளின் காலத்தில் வட இந்தியா முழுவதிலும், தக்காணத்தின் பெரும் பகுதியிலும் பரவியிருந்த முஸ்லிம் பேரரசு மெல்ல மெல்லச் சுருங்கத் தலைப்பட்டது. மேலும், மகமதுபின் துக்ளக் பல புதுமைகளை நாட்டில் புகுத்தியதன்மூலம், முஸ்லிம்கள் கடைப்பிடித்துவந்த ஆட்சிக் கொள்கையை அறவே மாற்றிவிட்டார். கி.பி. 1325 முதல் 1351 வரை அவர் ஆட்சி புரிந்தார். அவரது ஆட்சிக் காலமாகிய 26 ஆண்டுகளும் இரக்கமற்ற அடக்குமுறைச் செயல்களும் ஒரே குழப்பமும் நிறைந்த ஒரு காலமாகவே காட்சியளித்தது. நாடு கொஞ்சங் கொஞ்சமாக நலிவுற்றுச் சிதற ஆரம்பித்தது. இறுதியாகக் கி.பி. 1398ஆம் ஆண்டில் அமீர் தைமூர் இந்தியாவின்மீது படையெடுத்தபோது, அப் பேரரசானது அடியற்ற மரமென

வீழ்ந்தது. பஞ்சாப் நாட்டைத் தைமூர் ஏற்கெனவே பரந்து கிடந்த தமது நாட்டுடன் சேர்த்துக்கொண்டார். அதன்பின் அவர் இந்தியாவைவிட்டு வெளியேறியபோது, டில்லி சுல்தானிய அரசு என்பது வெறும் பெயரளவில்மட்டுமே இந்தியாவில் வாழ்ந்தது. அதன்பின் சுல்தானிய வரலாற்று மேடையில் பல பொம்மை அரசர்கள் வந்துபோவதை நாம் பார்க்கிறோம். ஆனால், அவர்களில் எவரும் தம் பெயர்களை எதிர்காலம் நினைவு கொள்ளும் வகையில் எதையும் விட்டுவைக்காமலேயே மாய்ந்தனர். கைப்பற்றவும் ஒன்றாகத் தொகுக்கவும் முழுமையாக இரு நூறு ஆண்டுகள் பிடித்ததும், ஏறக்குறைய இந்தியா எங்கணும் பரவி யிருந்ததுமான ஓர் பேரரசு இப்போது முற்றிலும் சிதைவுற்றது. பல சிறுசிறு நாடுகள், பல்வேறு அளவில், பல்வேறு அதிகார வரம்போடு நாடெங்கும் தோன்றி சுயேச்சையாக இயங்க ஆரம்பித்தன. ஒரு நூற்றாண்டுக் காலம் வரை அச் சிறு நாடுகள் ஒன்றுக்கொன்று போராடிக்கொண்டு கிடப்பதையே நாம் காண்கின்றோம். வேறோர் அந்நியப் படையெடுப்பு நிகழ்வதற்கு, அதாவது, பாபர் இந்தியாவை வெல்லவும் முகலாயப் பேரரசுக்கு அடிகோலவும் இவையெல்லாம் ஓர் பீடிகை அல்லது முன்னேற்பாடாக (prelude) அமைந்தன.

## இந்தியாவில் ஏற்பட்ட இஸ்லாமிய அரசின் நோக்கத்திலும் வினைசெயல் வகையிலும் ஓர் மாற்றம் ஏற்படல்

டில்லி சுல்தானிய அரசானது தோன்றி நின்று அழிவுற்ற இருநூறு ஆண்டுக் காலத்தில் ஒழுங்காக ஆட்சி முறையை நிறுவப் பல முயற்சிகள் நடைபெற்றன. ஆனால், அவை யாவும் செப்பமற்றனவாயும் பண்படாத முயற்சிகளாகவுமே இருந்தன. அதேபோல ஆள்வோராய் இருந்த முஸ்லிம்களுக்கும், ஆளப்படுவோராயிருந்த இந்துக்களுக்கும் ஓர் ஒப்புரவை உண்டாக்கவும் ஆட்சித் துறைக் கொள்கைகள் பல வகுக்கப்பட்டன. இக் காலத்தே, முஸ்லிம் அரசர்கள், தங்கள் கொள்கைகளுக்கே மாறான ஒரு சூழ்நிலையில் ஆட்சி செலுத்தவேண்டியிருப்பதை உணர்ந்தனர். உருவ வழிபாடு செய்துவந்த இலட்சக் கணக்கான மக்களை அதற்கு முற்றிலும் மாறான குரானியச் சட்டங்களின்படி ஆளவேண்டிய ஓர் இக்கட்டான நிலையில் அவர்கள் இருந்தனர். இஸ்லாமிய அரசு கலையில் வல்லவர்களையே திகைப்பில் ஆழ்த்தக்கூடிய பிரச்சினைகள் பல தோன்றின. டில்லி சுல்தான்கள் அப் பிரச்சினைகளைத் தீர்க்க முயன்றபோது, இஸ்லாமிய அரசின் அடிப்படைக் கொள்கைகளுக்கே விரோதமாக அவர்கள் நடந்துகொள்ள வேண்டிய ஒரு கட்டாயம் ஏற்பட்டது. ஏனெனில், ஓர் இஸ்லாம்

நாட்டில்தான் இஸ்லாமியக் குறிக்கோள்கள் மிகச் சிறந்த முறையில் செயற்பட முடியும். இஸ்லாமிய அரசும் அங்குதான் சிறந்த முறையில் இயங்கமுடியும். ஆனால், இந்தியாவில் ஏற்பட்ட இஸ்லாமிய அரசுக்குத் தொடக்கத்திலேயே ஒன்றுக்கொன்று முரண்பட்ட இரு கொள்கைகள் மோதுவதால் விளையக்கூடிய ஓர் பிரச்சினை தோன்றிவிட்டது. தாருல்-ஹார்ப் (Dar-ul-Harb) என்ற சமயமும் தாருல்-இஸ்லாம் (Dar-ul-Islam) என்ற மதமும் வேறுபட்ட நலன்களை நாடுபவைகளாயிருந்தபோதிலும், ஒன்றாக நின்று செயற்படவேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. இந்தச் சிக்கலான நிலைக்கு எப்படியாவது ஓர் தீர்வுகாண வேண்டிய பொறுப்பு இஸ்லாமிய அரசின் தலையில் வந்து விடிந்தது. இம் முயற்சியில் ஈடுபட்டபோது, இயல்பாகவே இஸ்லாமிய அரசின் குறிக்கோளும் இஸ்லாமிய மதத்தின் குறிக்கோளும் ஒன்றுக்கொன்று பொருந்தாமற்போகவேண்டியதோர் நிலைமையானது தோற்றுவிக்கப்பட்டது. மகமதுவினால் தோற்றுவிக்கப்பட்டு, கலீஃபாக்களால் வளர்க்கப்பெற்ற இஸ்லாமிய அரசு ஒரு சமய அடிப்படையில் அமைந்த அரசாகவே (theocracy) விளங்கியது. உலகியல் துறைக்கும் ஆன்மிகத் துறைக்கும் அங்கு ஒருவரே தலைவராகத் திகழ்ந்தார். நடைமுறையில் அவை இரண்டும் ஒன்றுக்கொன்று ஈடுசெய்யும் முறையிலேயே அமைந்திருந்தன. ஏனெனில், இஸ்லாம் ஒரு சமயம் என்ற முறையில் நாட்டுக்கு வேண்டிய சட்டதிட்டங்களை வழங்கியது. அதாவது, தங்களுடைய உலகில் தேவைகளை நிறைவேற்றிக்கொள்வதற்காக முஸ்லிம் சகோதரர்களனைவரும் ஒன்றுசேர்ந்து அமைத்துக் கொள்ளக்கூடிய நிறுவனமொன்றை அது வழங்கியது. ஒவ்வொரு முஸ்லிமும் இஸ்லாமிய மதத்தைப் பரப்புவதற்காகக் கடவுளால் நியமிக்கப்பட்ட போர்வீரராகக் கருதப்பட்டார். எனவே, அரசின் அதிகாரத்தில் தனக்கு ஒரு பங்கு இருப்பதாக அவர்கள் நினைத்தது போன்றே, போரின் விளைவாகக் கிடைக்கும் கொள்ளைப் பொருள்களிலும் தங்கட்கு உரிமை இருப்பதாக அவர்கள் எண்ணினர். முஸ்லிம்கள் எங்குச் சென்றாலும் அங்குத் தனிச் சிறப்புரிமைகளைக் கொண்ட ஒரு சிறுபான்மைக் கும்பலாகவே இருந்துகொண்டு ஆட்சி புரிந்துவந்தனர். சிறப்பாக, இந்தியாவில்தான் அவர்கள் அத்தகைய நிலையில் பெரிதும் காணப்பட்டனர். அவர்களால் ஆளப்பட்ட இந்தியக் குடிமக்களின் எண்ணிக்கையானது ஆள்வோரின் எண்ணிக்கையைவிட இங்குப் பல மடங்கு அதிகமாயிருந்தது. இந்தியாவில் காணப்பட்டது போன்ற அவ்வளவு பெரிய முஸ்லிம்களல்லாதார் கூட்டத்தைக் குரானியச் சட்டப்படிக்கோ அல்லது இஸ்லாமியப் பண்பு மேலோங்கி நின்றதோர் சட்டதிட்டப்படிக்கோ ஆள்வதென்பது

முடியாத காரியமென்பதை முஸ்லிம் அரசர்களே மெல்லமெல்ல உணரத் தலைப்பட்டனர். இந்தியாவின் எண்ணற்ற மக்கட் கூட்டத்தையெல்லாம் வாள்முனையாலோ அல்லது வேறு வகையாலோ இஸ்லாம் மதத்துக்கு மாற்றிவிட முடியாதென்பதை அவர்கள் உணர்ந்தனர். முஸ்லிம் அரசர்கள் தங்களது சமயத்தில் எவ்வளவோ ஆர்வமுடையவர்களாயிருந்தபோதிலுங்கூடப் பலவந்தமாக இஸ்லாமிய சமயத்தை இந்துக்கள்மீது திணிக்க இயலாது எனக் கண்டுகொண்ட காரணத்தால், சமய அடிப்படை கொண்ட அரசின் சட்டங்களை அவர்கள் ஓரளவு தளர்த்த முன் வந்தனர். நாளடைவில் இஸ்லாமின் போர் உணர்ச்சியோடு கூடிய ஆவேசமெல்லாம் தணிந்தது. முஸ்லிம்கள் இந்தியாவைத் தமது நாடாக ஏற்றுக்கொண்டனர். இந்துக்களும் முஸ்லிம் ஆட்சிக்கும் ஆட்சியாளர்க்கும் பழக்கப்பட்டுப்போயினர். இந்த நிலையில் இருசாராரும் ஒருவர்க்கொருவர் விட்டுக்கொடுத்து ஒத்துப்போகிற ஒரு பழக்கம் தானாகவே ஏற்பட ஆரம்பித்தது. சமயத்தால் ஏற்படுத்தப்படும் செயற்கையான தடைகளையெல்லாம் மீறிக்கொண்டு மானிட இயல்பு தன் ஆதிக்கத்தை நிலைநாட்டலாயிற்று. ஒரே காற்றை உட்கொண்டு, ஒரே நீரைப் பருகி, ஒரே தாய்நாட்டின் மடியிலே தவழ்ந்து அடுத்தடுத்து வாழ்ந்துவந்த இந்தியக் குடிகளும் முஸ்லிம் ஆட்சியாளர்களும் தங்களிடையே காணப்பட்ட செயற்கையான வேறுபாடுகளையும் பகைமையுணர்வுகளையும் கொஞ்சங் கொஞ்சமாக மறக்கலாயினர். கருத்துகளையும் குறிக்கோள்களையும் பரஸ்பரம் பரிமாறிக்கொள்ளவும் பொதுவான சாதனங்கள் பல கண்டுபிடிக்கப்பட்டன. இரு சாராருக்கும் பொதுப்படையான சமய ஆராய்ச்சிகள் பெருகின. இந்து-முஸ்லிம் என்ற வேறுபாடில்லாது யாவரையும் தன்னகத்தே ஈர்த்த பல மத இயக்கங்கள் தோற்றுவிக்கப்பட்டன. ஹிந்தி, பாரசீகம், அராபி ஆகிய மொழிகள் யாவும் கலந்த ஓர் அவியலான உருது மொழியானது தோன்றி, வடஇந்திய இந்துக்களும் முஸ்லிம்களும் பரஸ்பரம் தங்களது கருத்துகளைப் பரிமாறிக்கொள்வதற்கோர் பொதுமொழியாக நாளடைவில் மாறியது. இந்த நிகழ்ச்சிகளெல்லாம் முஸ்லிம்களின் நோக்கத்தில் ஏற்படக்கூடிய ஓர் மாற்றத்தை முன்னறிவிப்பனவாயமைந்தன. நாளடைவில் ஏற்பட்ட இக் குறிக்கோள் மாற்றத்துக்கேற்ப முஸ்லிம் அரசு கலையிலும் ஒரு புதிய திருப்பம் ஏற்பட்டது. இந்தியாவிலிருந்த இஸ்லாமிய அரசின் பண்பும் அதற்கேற்பப் பெரிதும் மாறி அமையலாயிற்று. இக் காலப்பகுதிக்குரிய அலாவுதீன் கில்ஜி, மகமதுபின் துக்ளக் போன்ற அரசர்களும், முகலாயர்கள் காலத்தைச் சேர்ந்த ஷெர்ஷா போன்ற மன்னர்களும், குரானியச் சட்டங்கள் எல்லாராலும் மதிக்கத்தக்க புனிதமுடை

யவைகளே எனினும், கொள்கையளவில் எல்லாரையும் கட்டுப் படுத்தக்கூடியனவே எனினும், இந்தியச் சூழ்நிலையில் அவற்றை வைத்துப் பார்க்கும்போது அவை சற்றும் பொருந்தாதன என்பதை உணர்ந்தனர்.

நபிநாயகத்தின் சட்டதிட்டங்களைக் கொண்டோ அல்லது முஸ்லிம் சட்ட அறிஞர்களும் சமய அறிஞர்களும் தெரிவிக்கின்ற புலமை சான்ற கருத்துகளின்படியோ இந்தியாவை ஆளமுடியா தென அவர்கள் கண்டனர். இந்தியாவில் முஸ்லிம்கள் வெற்றி கரமாக ஆள்வதற்குத் தேவையாய் இருந்த கருவிகளும், முஸ்லிம் மக்கள் பெரும்பான்மையாக வாழ்ந்த பாரசீகம் அல்லது அரேபியா போன்ற நாடுகளில் முஸ்லிம் ஆட்சிக்குத் தேவையாய் இருந்த சாதனங்களும் முற்றிலும் வேறாக இருந்தன. இந்திய நாட்டின் பெரும் பரப்பும், அங்கு வாழ்ந்த மக்கட் கூட்டத்தின் பெருக்கமும் முஸ்லிம்களின் சமயச் சார்பான அரசின் வினைசெயல் வகையில் பெருத்ததோர் மாற்றத்தைச் செய்ய வேண்டியதன் இன்றியமையாமையை நன்கு புலப்படுத்தின. மேலும், இந்தியா வில் இருந்த முஸ்லிம் அதிகாரிகளில் பலர் மன்னருக்கு எதிராகச் சதி செய்பவர்களாகவும், சுயநலமிக்கவர்களாகவும், பொய்யர் களாவும் இருந்தனர். இந்தியக் குடிமக்களும் மன்னரைச் சதா எதிர்ப்பவர்களாகவும், வஞ்சகர்களாகவும், ஒரு சிறு வாய்ப்புக் கிடைத்தாலும் அதைப் பயன்படுத்திக்கொண்டு தம்மைத் தாம் உயர்த்திக்கொள்ளப் பாடுபடுபவர்களாகவும் இருந்தனர். நாட்டை ஆண்டுவந்த மத்திய இஸ்லாமிய அரசை வெறுப்பதில் இந்தியாவிலிருந்து நியமிக்கப்பட்ட முஸ்லிம் அதிகாரிகளும் இந்தியக் குடிமக்களும் ஒன்றாகச் சேர்ந்துகொண்டதுபோலத் தோன்றிற்று. நாட்டிற்கு உள்ளேயும் வெளியேயும் பகைவர்கள் அறவுரையானது ஆணைகளாக வடிவெடுத்தது. இத்தகைய சூழ்நிலையானது கலீஃபாவின் ஆட்சிபீடத்திலேயே, அதாவது, பாக்தாத்திலேயே அப்பாசித்துகளின் (Abbasids) ஆட்சிக் காலத் தில் நிலவிவந்தது.

## முஸ்லிம் சட்டத் துறையில் கோட்பாட்டுக் கிளைகள் பல தோன்றுதல்

உமயதுகள் (Ommeyeds) வீழ்ச்சியடைந்தபின்னர் அப்பாசித்து கள் ஆட்சிபீடத்துக்கு வந்தனர். சமய மறுமலர்ச்சியின் விளை வென அதைக் கருதலாம். பக்தியற்ற உமயதுகளின்கீழ் வெறும் பெயரளவில்தான் இஸ்லாம் சமயம் இருந்துவந்தது. மக்களின் சமய உணர்ச்சி அவர்களுக்கு விரோதமாக இருந்ததன் விளை

வாகவே அவர்கள் தோற்கடிக்கப்பட்டனர். நபிநாயகத்தின் அறிவுரைகளையும் சட்டங்களையும் அவர்கள் சிறிதும் மதிக்காமல் நடந்துகொண்டனர். சட்டமென்பது அவர்களின் விருப்பத்தின் விளைவாக ஏற்பட்டதொன்றாகவே விளங்கியது. கலீஃபா பதவியை அவர்கள் கைப்பற்றியபின், கலீஃபாவுக்கு அவரது காரியத்தில் உதவி செய்வதற்கென அமைந்திருந்த மகமதுவின் நெருங்கிய நண்பர்களின் பெருங் கூட்டமானது மெதீனாவிலேயே தங்கி விட்டது. அங்கே அவர்கள் அமர்ந்துகொண்டு, கடந்துபோன பழைய நந்நாள்களை எண்ணி எண்ணி வருந்தினர். அதனோடு அரசு பற்றியும் சட்டம்பற்றியும் புதிய பல கோட்பாடுகளைப் பின்னு கின்ற முயற்சியிலும் அவர்கள் ஈடுபட்டனர். அதே நேரத்தில் டமாஸ்கஸ் நகரத்தில் அரசாங்கமும் மக்கள் வாழ்க்கையும் வேறு வழிகளில் செல்ல ஆரம்பித்தன. எனினும், அவர்களது ஆட்சியை உதறித் தள்ளிவிட மக்களால் முடியாத காரணத் தால், அவர்கள் உள்ள நிலையை அப்படியே ஏற்றுக்கொண்ட னர். உண்மையான சமய நம்பிக்கையோடு கூடிய அரசிலாக் குழப்ப நிலைமையைக்காட்டிலும் நம்பிக்கையில்லாத, ஆனால், அதேசமயம் வலிமையும் நியாயமும் பொருந்திய அரசாங்கம் சிறந் தது என்ற கொள்கையின் அடிப்படையிலேயே அவர்கள் அங்ஙனம் செய்தனர். நாளடைவில் இந்தக் கொள்கையானது நபிகள்நாயகத் தாலேயே வாயாரச் சொல்லப்பட்ட வார்த்தைகளுள் ஒன்றாக மதிக்கப்படலாயிற்று. உமயதுகள் வீழ்ச்சியுற்று அப்பாசித்துகள் ஆட்சிக்கு வந்த பின்னர், பழைய முஸ்லிம் கட்சியினர், இஸ்லா மிய அரசின் பழைய மரபுகள் மீண்டும் உயிர்ப்பிக்கப்படலாமென எதிர்பார்த்தனர். இஸ்லாமியச் சட்டத்தாலேயே நாடு ஆளப்படு மென்றும், இஸ்லாம் சமயத்தில் உண்மையான நம்பிக்கையுள்ள வர்களுக்காக மட்டுமே இஸ்லாமிய அரசு நடைபெறும் என்றும் அவர்கள் நம்பியிருந்தனர். ஆனால், அவர்களில் பலரும் ஏமாற நேர்ந்தது. ஏனெனில், சமய நம்பிக்கையின் அடிப்படையில் அரசு அமைக்கப்பட்டதெனினும், சமயச் சட்டங்கள் மீண்டும் பழைய நிலைக்கு உயர்த்தப்பட்டனவெனினும், பொதுவாக மன்னர்களின் மனப்பான்மையில் ஓர் மாற்றம் தென்பட்டது. அப்பாசித்து மன் னர்களின் நோக்கங்களுக்கேற்ப சமயச் சட்டங்கள் மாற்றியமைக் கப்பட்டன. அதற்கெனப் பல சட்ட அறிஞர்கள் நியமிக்கப்பட் டனர். அவர்கள் சமயச் சார்பற்ற ஒரு நாட்டின் உடனடியான தேவைகளுக்கேற்பப் புனிதச் சட்டத்தின் பொருளை மாற்றியும் திரித்தும் கூறுவதை ஓர் மகிழ்ச்சியூட்டும் அறிவுப் பணியாகக் கருதினர். உமயதுகளைப் போன்று அப்பாசித்துகள் சமயச் சட் டத்தை அறவே கைவிட்டுவிட்டுத் தம் விருப்பங்களை மக்கள்மீது திணித்தார்களில்லை. அதற்கு மாறாக அவர்கள் சமயச் சட்டத்

தைத் தொடர்ந்து கடைப்பிடிக்கவே முயன்றனர். ஆனால், காலத்தின் தேவைக்கேற்பச் சட்ட அறிஞர்களால் மிகவும் திறமையோடு வலிந்து கற்பிக்கப்பட்ட பொருளைக் கொண்டதாகவே அச் சட்டங்கள் விளங்கவேண்டுமென அவர்கள் விரும்பினர். ஆகையால்தான், அவர்கள் சட்ட நிபுணர்களைப் பெரிதும் ஆதரித்தனர். அவர்களது ஆதரவின்கீழ் அச் சட்ட நிபுணர்கள் புதிய புதிய கோட்பாட்டுக் கிளைகளைத் தோற்றுவித்தனர். அபு ஹனீஃபா (Abu Hanifa), மாலிக் இப்னே ஹன்பால் (Malik ibn Hanbal), அஷ் ஷஃபி (Ash Shafi), அகமத் இப்னே ஹன்பல் (Ahmad ibn Hanbal) ஆகிய நால்வரும் நான்கு வகைக் கோட்பாட்டுக் கிளைகளை ஏற்படுத்தினர் (அவர்கள் முறையே A.H. 150, 241, 204, 241-ல் மாண்டவர்கள்). அவற்றால் முஸ்லிம் உலகத்தில் பிளவு ஏற்பட்டது. முஸ்லிம் மக்களின் விசுவாசமானது நான்காகப் பிரிந்தது. மத்திய ஆசியா, வட இந்தியா, துருக்கி ஆகிய நாடுகளில் வாழ்ந்தோர் ஹனீஃபாவையும், மேல் எகிப்தில் வதிந்தோர் மாலிக்கையும், கீழ் எகிப்து, சிரியா, தென் இந்தியா, மலேயா, ஆர்ச்சிபிலேகோ ஆகிய இடங்களில் உறைந்தோர் ஷாஃபியையும், மத்திய அரேபியாவில் வசித்த வகாபைட்டுகள் ஹன்பலையும் பின்பற்றலாயினர். இவர்கள் யாவரும் அவ்வக் காலத்துத் தம்மை ஆண்ட மன்னர்களின் தலைமையை ஏற்றுக்கொண்டனர். சமயத்துக்கேற்ற உத்தியாக (expediency)அவர்கள் அவ்வாறு செய்தனர். அதன் வாயிலாக, ஒரு சிறிதும் ஆன்மிக சம்பந்தமற்றதும், உலகியல் துறையையே முழுவதும் சார்ந்ததெனக் கூறக்கூடியதுமான ஒருவகைப் புதிய தலைமையை அவர்கள் ஏற்றுக்கொண்டனர். இப்படித்தான், சமயச் சட்ட விளக்கம் செய்த அறிஞர்கள், அப்பாசித்துகளுக்கு அவர்தம் ஆட்சிமுறைக் காரியங்களில் உதவிபுரிந்தனர். அவ்வறிஞர்கள் முஜ்தஹிதுகள் (Mujtahids) எனப்பட்டனர். சமயத் துறைக்கன்றி வெறும் உலகியல் துறைக்கு மட்டுமே தலைவர்களாக இருந்த காரணத்தால் அப்பாசித்து அரசர்கள், நபிநாயகர் மகமதுவைப்போல் அதிகாரத்துடன் சட்டங்களை இயற்ற முடியவில்லை. எனவேதான், புதிய சட்டங்களை ஆக்க அவர்கள் முஜ்தஹிதுகளின் உதவியை நாடினர். அவர்களால் இயற்றப்படக்கூடிய சட்டங்களின் முக்கியக் கோட்பாடுகள் எல்லாம் ஏற்கெனவே நான்கு பெருங் கோட்பாட்டுக் கிளைகளால் தீர்மானிக்கப்பட்டிருந்தன. அக் கிளைகளின் ஆசிரியர்கள் தாம் முஸ்லிம் சட்டத்துக்கு முதன்மையான கர்த்தாக்கள், முஜ்தஹிதுன் முத்லக் (Mujtahidun Mutlaq) எனக் கருதப்பட்டனர். ஆனால், கடவுளின் அருளைப் பெற்று அதனால் போதித்தவர் என்ற காரணத்தால் மகமது இஸ்லாமியச் சட்டத்துக்குத் தனித்

தலைவராக மதிக்கப்பட்டார். அவருக்கு அடுத்தபடியாக முதல் இடம் பெற்றவர்களே கோட்பாட்டுக் கிளைகளின் தலைவர் களாவர். அவர்களுக்கடுத்தபடியாக எண்ணப்பட்டவர்கள் ஒவ்வொரு கோட்பாட்டுக் கிளையிலும் இருந்த சட்ட வல்லுநர் களாவர். முஜ்தஹிதுன்ஃபில்-மதாஹிப் (Mujtahidunfi-l-Madhahib) அந்தந்தச் சமயப் பிரிவில் ஏற்பட்ட சிக்கல்களைத் தீர்த்துவைத்தனர். மூன்றாவதாக, சில்லறைச் சச்சரவு களைத் தீர்த்துவைத்த சட்ட வல்லுநர்கள் முஜ்தஹிதுன்பில் ஃபத்வா (Mujtahidun bilfatwa) இருந்தனர். இப்படியே அச் சங்கிலியானது தொடர்ச்சியாகப் போகிறது.[3]

## சிந்து நாட்டில் அராபியர்கள் ஏற்படுத்திய ஆட்சிக்கும் டில்லியில் துருக்கியர்கள் ஏற்படுத்திய சுல்தானிய ஆட்சிக்குமுள்ள வேறுபாடுகள்

இத்தகைய சட்ட மரபுகளுடனும் அரசாங்க வழக்காறு களுடனும்தாம் இஸ்லாம் இந்தியாவுக்குள் நுழைந்தது. முதன் முதலாக அது நுழைந்த இடம் சிந்து நாடாகும். அச் சமயத்தே டமாஸ்கஸ் நகரில் உமயதுகள் ஆண்டுகொண்டிருந்தனர். முகமது இப்னே காஸிமின் சிந்துப் படையெடுப்பானது 'சமயத்தைப் பரப்புவதற்காகச் செய்யப்பட்ட புனிதப் போரன்று. வெறும் நாடு பிடிக்கும் ஆசையில் தோன்றியதே அப் படையெடுப் பாகும்.'[4] ஏனெனில், உமையதுகளுக்கு இஸ்லாம் மதத்தில் அவ்வளவு ஆழ்ந்த பற்றுதல் கிடையாது. தெய்வபக்தியற்றவர்கள் என்றே அவர்களைத் திண்ணமாகக் கூறிவிடலாம். இந்த உண்மை யின் விளைவாக, சிந்து நாட்டில் அராபியர்கள் ஏற்படுத்திய ஆட்சி முறையில் பல மாற்றங்கள் நிகழ்ந்தன. நாம் ஏற்கெனவே பார்த்தபடி, இந்துக்களுக்குச் சமயப்பொறை வழங்கப்பட்டதோடு மட்டுமன்றி, அவர்களுக்கு அரசியல், சமயத் துறைகளில் பல சலுகைகளும் வழங்கப்பட்டன. நாட்டின் ஆட்சியாளர்களோடு அவர்களும் கலந்துகொண்டனர். எனவே, ஆட்சித் துறை யில் அவர்கள் பங்கெடுத்துக்கொள்ளவும் ஓர் வாய்ப்புக் கிட்டியது. ஆனால், இரண்டாம் முறையாக இஸ்லாம் வட மேற்குக் கணவாய்களின்மூலமாக இந்தியாவுக்குள் நுழைந்த போது, அதன் போக்கில் பெரியதோர் மாற்றம் தென்பட்டது. துருக்கியர்கள் அராபியர்களைப்போல் இல்லை. சில வணக்கத்தை

---

[3] D. B. Macdonald, 'Development of Muslim Theology, Jurisprudence and Constitutional Theory', pp. 112-13.

[4] C.H.I., Vol. III, p. 4.

இந்தியாவிலிருந்து அறவே ஒழித்துவிட்டு இஸ்லாமிய சமயத்தை இந்தியாவெங்கும் பரப்பவேண்டுமென்ற ஒரே ஆர்வத்துடன் துருக்கியர்கள் இந்தியாவுக்குள் நுழைந்தனர். எனவே, டில்லியில் அவர்கள் நிலையான ஓர் அரசை ஏற்படுத்தியபோது, இஸ்லாமின் வெற்றிக் கொடி அங்குப் பறக்கவிடப்பட்டது என்றே கூற வேண்டும். அப்பட்டமான இஸ்லாமிய அரசு அங்கு ஏற்பட்டது. இஸ்லாமிய மதத்துக்காகவென ஏற்பட்டதே இஸ்லாமிய அரசு என்ற கருத்து எங்கும் பரவியது. இஸ்லாமிய சமயச் சட்டங்கள் எங்கும் கடைப்பிடிக்கப்பட்டன. அச் சட்டங்களின் தன்மையை யொட்டி அரசாங்கத்தின் போக்கும் அமைந்தது. முஜ்தாஹிது களால் பொருள்பண்ணப்படுகின்ற இஸ்லாமியச் சமயச் சட்டங் களுக்கேற்ப நாட்டையாளும் ஒரு மரபினை அப்பாசித்து மன்னர்கள் ஏற்கெனவே ஏற்படுத்திவிட்டுப்போயிருந்தமையால், இந்திய ஆட்சியாளர்களின் வேலை மிக எளிதாய்ப்போயிற்று. பழைய மரபினை அப்படியே பின்பற்றுவதொன்றே அவர்கள் செய்ய வேண்டிய காரியமாயிருந்தது. அதில் ஒரே ஒரு வேறுபாடு மட்டும் காணப்பட்டது. அதாவது, இஸ்லாமியச் சட்டங்கள் யாவும் ஏற்கெனவே நன்கு வளர்ச்சிபெற்றுவிட்டமையால், அவற்றில் இந்திய ஆட்சியாளர்களின் சௌகரியத்துக்கேற்பப் புதிய மாற்றங்கள் எதுவும் செய்யப்படுதல் முடியாத காரியமா யிருந்தது. மேலும், இந்திய மன்னர்கள் வெறும் சுல்தான்களாக இருந்தனரேயன்றிக் கலீஃபாக்களாக இல்லை. எனவே, கலீஃபாக் கள் காட்டிய வழியில் அவர்கள் கண்ணை மூடிக்கொண்டு செல்ல வேண்டியவர்களாயிருந்தனர். இந்திய மன்னர்களைப்பொறுத்த வரை, அரசுபற்றிய காரியங்களில் அவர்கள் கலீஃபாவைப் பின் பற்றியதென்பது நடைமுறையில் முஜ்தாஹிதுகள் காட்டிய வழி யில் செல்வதாக இருந்ததேயன்றி வேறன்று. எனவே, குத்புதீன் அய்பெக் முதல் பிரோஷ் துக்ளக்வரை இந்தியாவை ஆண்ட முஸ்லிம் மன்னர்கள் யாவரும் முஜ்தாஹிதுகள் விருப்பப்படியே ஹனீஃபிய கொள்கைகளை மேற்கொண்டு ஒழுகினர். ஹனீஃபா வின் போதனைக்கேற்ப இந்துக்களையும், சுன்னிகள் அல்லாத ஏனைய முஸ்லிம் பிரிவினரையும் அவர்கள் ஒறுக்க ஆரம்பித்தனர். சமய ஒறுப்பு ஆணைகள் பல பிறப்பிக்கப்பட்டன. பிரோஷ் ஷா காலத்தே, 'சட்டத்தால் தடுக்கப்பட்ட யாவும், சட்டத்துக்கு முரணான அனைத்தும் கைவிடப்பட்டன.'[5] துக்ளக் வமிசத்தைத் தோற்றுவித்தவரின் மனப்போக்கும் அதுவாகவே இருந்தது. உலமாக்கள், முஜ்தாஹிதுகள் ஆகியோர் காட்டிய வழியில் பிரோஷ் ஷா தவறாது சென்றார். அவர்களின் சொற்படியே

[5] Elliot & Dowson, Vol. III, p. 380.

'ரவா.ஃபிஸ் (Rawafiz) எனப்பட்ட ஷீயா (Shias) பிரிவினரை அவர் ஒறுத்தார். ஏனெனில், அவர்கள் தங்களின் மதப்பிரிவுக்கு மக்களை மாற்ற முயன்றனர். தங்கள் சமயப் பிரிவின் கோட்பாடுகளைப்பற்றி அவர்கள் மக்களிடம் சொற்பொழிவாற்றித் தம் கருத்துகளை அன்னூர்க்குப் புகட்டினர்.'[6] அவர்கள் காட்டிய வழிப்படி, அதுவரை எவ்விதமான வரியாலும் துன்புறுத்தப்பெருத பிராமணர்கள்மீது அவர் ஜெஸியா வரியை விதித்தார்.[7] சட்டத்தால் அநுமதிக்கப்பட்ட வரிகள் மூன்றுகும். கராஜ் (Kharaj), அதாவது, விளைச்சலில் பத்தில் ஒரு பங்கு, ஜெஸியா, அதாவது, தலைவரி, ஜகாத் (Zakat), அதாவது, தானமாக வழங்கப்படும் பொருள், கொள்ளைப் பொருளில் ஐந்தில் ஒரு பாகம், சுரங்கங்களிலிருந்து கிடைக்கும் பொருள் ஆகியவையே வசூலிக்கத்தக்க மூன்று வரிகளாகும். இந்துக்களை நிரந்தர வறிஞர்களாக வைத்திருக்கவேண்டுவதும், அவர்களது செல்வத்தைச் சூறையாடலும், கொலை செய்தலும், அல்லது இவை யாவும் இயலாதபோது அவர்கள்மீது ஜெஸியா என்ற வரியை விதித்தலும் முஸ்லிம்களின் சமயஞ் சார்ந்த கடமைகள் எனக் கருதப்பட்டது.

மற்றும் பகல்வேளையில் முஸ்லிம் பெண்களை வெளியே போக விடுதலும், புனித நாள்களில் கல்லறைகளுக்குச் சென்று வருதலும் சட்ட விரோதமாகும். அரசர் உணவருந்தும்போது, தங்கத்தாலும் வெள்ளியாலும் செய்யப்பட்ட பாத்திரங்களை மேசைமீது வைத்துக்கொண்டு பயன்படுத்தலும் சட்ட விரோதமாகும். அதேபோன்று நான்கு அங்குலங்களுக்கு மேலாக ஓரங்களில் சரிகை வைத்த அல்லது பின்னல் வேலை செய்யப்பட்ட ஆடைகளை அணிந்துகொள்வதும் முஸ்லிம் சட்டத்துக்கு முரணானதாகக் கருதப்பட்டது. இங்ஙனம் அன்றாட வாழ்க்கை முறையிலும், நடவடிக்கைகளிலும், இன்னும் ஆயிரக்கணக்கான எத்தனையோ காரியங்களிலும் அரசின் கொள்கைகள் கடைப்பிடிக்கப்பட்டன. சட்டத்துக்குப் பொருள் விளக்கம் கூறிய உலமாக்கள், முஜ்தஹிதுகளின் அதிகாரங்களும் ஏனென்று கேட்பாரின்றி ஓங்கி வளர்ந்தன. சட்ட சம்பந்தமான ஆணைகளை வெளியிடுமுன் டில்லி சுல்தான்கள் அத்தகைய சமயத் தலைவர்களைக் கலந்தாலோசித்து அவர்தம் சொற்படியே அவைகளை வெளியிட்டனர். அந்த வகையில், அவர்களது இறைமை அல்லது முழுமையான அதிகாரமானது ஓரளவு குறைவுற்றது என்றே சொல்லவேண்டும்.

[6] Ibid., p. 379.
Ibid., p. 366.

## அரியணையேறும் உரிமையைப் பெறுவதில் குத்பாவுக்குத் தரப்பட்டிருந்த முக்கியத்துவம்

சட்ட சம்பந்தமான காரியங்களில் மட்டும்தான் உலமாக்களும் முஜ்தஹிதுகளும் ஆதிக்கம் செலுத்திவந்தார்களெனக் கூறுவதற்கில்லை. அரசரொருவர் பட்டத்துக்கு வந்தபோது அவர்கள் குத்பா படிக்கவேண்டுவது இன்றியமையாததாயிருந்தது. அரசர் முறையே தேர்ந்தெடுக்கப்பட்டதைப் பொதுவில் அறிவிக்கும் ஒரு சடங்காக அது கருதப்பட்டது. மக்களின் ஒப்புதலும் சமயத்தின் சம்மதமும் ஓர் அரசர்க்கு அப்போதுதான் கிடைத்தது. இந்தியச் சூழ்நிலையில் இச் சடங்கின் முக்கியத்துவத்தை நன்கு உணரவேண்டுமானால், அதன் கடந்த கால வரலாற்றை நன்கு ஆராய்தல் அவசியம்.

இஸ்லாமியக் கோட்பாடும் குறைஷித்துகளின் மரபுகளும் கலீஃபாவானவர் தேர்ந்தெடுக்கப்படுவதையே ஆதரித்தன. அதன்படியே முதல் நான்கு கலீஃபாக்களும் முஸ்லிம் தொழுகைக் கூட்டத்தவரால் (congregation) தேர்ந்தெடுக்கப்பட்டனர். ஆனால், உமயதுகளின் காலத்தில், கலீஃபாக்கள் தமது வழித்தோன்றல்களைத் தங்களின் ஆயுட் காலத்திலேயே நியமிக்கின்ற வழக்கம் ஏற்பட்டது. அத்தகைய நியமனம் ஏற்பட்டபோது, நாட்டிலிருந்த உயர் அதிகாரிகள் அனைவரும், காஜிகளும், படைத் தளபதிகளும் வந்து விசுவாசப் பிரமாணமொன்றை (oath of allegiance) எடுத்துக்கொள்வர். பின்னர் கலீஃபாப் பட்டத்தை அவர் உண்மையில் சூட்டிக்கொண்டபோதும் இதே நிகழ்ச்சி நடைபெற்றது. இந்த விசுவாசப் பிரமாணமானது 'இஜ்மாவுல்-உம்மத்' (Ijmaa-ul-Ummat) (மக்களின் ஒருமித்த கருத்து) எனப்பட்டது. அப் பிரமாணமானது கலீஃபாவுக்கு ஒரு புனிதத் தன்மையை வழங்கியது. மெக்கா, மெதீனா ஆகிய நகரங்களின் மசூதிகளில் புதிதாக நியமிக்கப்பட்ட சமயத் தலைவர்க்காகப் பொது வழிபாடுகள் நிகழ்த்தப்பட்டதன்மூலம் அவரது புனிதத் தன்மை மேலும் அதிகரிக்கப்பட்டது. தனக்குப்பின் பட்டத்துக்கு வருபவரை தனது ஆயுட் காலத்திலேயே நியமிக்கின்ற பழக்கமானது அப்பாசித்துகளின் காலத்தில் நன்கு நிலைபெற்றுவிட்டது. ஒருசில சமயங்களில் மட்டுமே அரசவையில் ஏற்படக்கூடிய வலிமிக்க சதிகளாலும், மெய்காப்பாளர்கள், சேனைத் தலைவர் போன்றவர்களால் ஏற்படக்கூடிய திடீர்ப் புரட்சியாலும் இவ் விதிக்கு விலக்கு ஏற்படுவதுண்டு. ஹரூன்-அல்-ரசீத் (Harun-al-Rashid) ஐந்தாண்டே நிரம்பப்பெற்ற தமது மைந்தனைத் தமது வாரிசாக நியமித்தார். ஒருவேளை அந் நியமனம் தவறினால் அதற்குப்பின் வரக்கூடிய வாரிசுதார்களையும் அவர் உய்த்

துணர்ந்து நியமித்தார். அவர்கள் அல் மாமுன் அல் மோதமின் என்பவராவர். இந்தியாவிலும் கஜினியிலும் மன்னர்கள் தாம் பெற்ற வெற்றியின் அடிப்படையிலேயே அரசுரிமையை வற்புறுத்தினர். ஆகையால், மன்னர் தேர்ந்தெடுக்கப்படவேண்டும் என்ற கொள்கையை அவர்கள் புறக்கணித்தனர். அப்பாசித்து மன்னர்களைப் போன்றவர்கள் தங்களது வாரிசுகளை நியமித்தனர். ஆனால், இஜ்மாவுல் உம்மத் எனும் விசுவாசப் பிரமாணத்தால் அன்றி, அமீர்கள், படைவீரர்கள் ஆகியோரால் அளிக்கப்பெற்ற ஆதரவாலும், தமது சொந்த வலிமையாலும், ஆளுமைத் திறத்தாலுமே ஒருவர் தமது அரச பதவியைப் பெற முடிந்தது. மன்னரொருவர் அரசெய்தியபோது அதிலே உலகியல் முறையும் சுயநலமுமே அதிகமாகத் தாண்டவமாடியதால், மன்னருக்கும் அம் மன்னர் பதவிக்கும் ஓர் புனிதத்தன்மை ஏற்படவேண்டுமானால், அதற்கு மதத்தின் சம்மதம் இன்றியமையாததென்பதை அனைவரும் உணர்ந்தனர். மற்றும், இந்திய சுல்தான்கள் முஸ்லிம் அரசர்களாக இருந்ததாலும், சில வணக்கம் செறிந்த ஓர் நாட்டில் இஸ்லாம் மதத்தை ஆதரிப்பவர்களாக இருந்ததாலும், அவர்கள் உண்மையிலேயே இறைமையைச் செலுத்துவதோடு சட்டப்படிக்கும் இறைவர்களாக விளங்கவேண்டுமானால், இஸ்லாமிய சமயத்தின் சம்மதம் மிக இன்றியமையாததாயிருந்தது. புதிய அரசரின் பெயரால் குத்பா படிக்கப்பட்டபோதுதான் அத்தகைய சம்மதம் ஓர் அரசருக்குக் கிட்டியது. இங்ஙனம் குத்பா படிப்பதன் மூலம் அரசரொருவர் தமது அதிகாரத்துக்குச் சமயத்தின் சம்மதத்தைப் பெற்ற காரணத்தால், அவர் சில சமயம் உலமாக்களின் அதிகாரம் தன்னுடையதைவிட உயர்ந்தது என்று எண்ணத் தொடங்கினர். அரசரொருவர் சட்டப்படி ஒரு நாட்டை ஆளும் உரிமை பெற்றவர் என்பதை வெளிப்படையாக அறிவிக்கும் அதிகாரம் உலமாக்களிடம் இருந்தது மட்டுமன்றி, நீதித்துறையிலும் அறநெறித் துறையிலும் அவரது ஆணைகள் செல்லுபடியாக வேண்டுமானால், உலமாக்கள், முஜ்தஹிதுகளின் ஆதரவு மிகத் தேவையாயிருந்தது. சட்டம், நீதி இவைபற்றிய சிக்கல்களில் அரசர் அவர்களது தீர்ப்புகளையே முடிவானதாகக் கொண்டார். அரசின் கொள்கைகளில்கூட அவர்கள் வாய்ப்பு நேரும்போதெல்லாம் தலையிடுவதற்குத் தயாராயிருந்தனர்.

## இஸ்லாமிய சமய அரசுக்கும் டில்லி சுல்தான்களுக்கும் இடையே இருந்த தொடர்பு

இந்திய சுல்தானின் பதவியானது உண்மையில் பெரிதும் விரும்பத்தக்கதொன்றாக இல்லை. ஓரளவு அடிமை நிலையிலிருப்பு

தாகவே அன்னூர் உணர்ந்தனர். அப்படி இருப்பதால் தனக்கும் தான் ஆளும் நாட்டுக்கும் ஒருவித நன்மையும் ஏற்படாது என்பதை அவர்கள் நன்கு உணர்ந்தனர். முஜ்தஹிதுகளால் பொருள் விளக்கம் கூறப்பட்ட சமயச் சட்டங்கள் இந்தியச் சூழ் நிலைக்கு ஒத்துவரவில்லை. இந்தியாவில் அப்போது வாழ்ந்த குடிமக்கள் கலக மனப்பான்மை கொண்டவர்களாயிருந்தனர். முஸ்லிம் அதிகாரிகளும் மன்னரது ஆணையை மதிக்காதவர்களா யிருந்தனர். முஸ்லிம்களல்லாதார் பெரும்பான்மையாக இருந்து கொண்டு மன்னரை நெருக்கியவண்ணமிருந்தனர். அந் நெருக் கத்தைச் சமாளிப்பது அரசர்க்கே சற்றுக் கடினமாயிருந்தது. இந் நிலையில் அவ் வரசர்கள் கண்டிப்பான முறையில் சமயச் சட்டங்களைக் கடைப்பிடிக்க இயலவில்லை. அதற்குப் பதிலாக, இஸ்லாமின் நலனுக்கு ஊறு நேராதபடி பார்த்துக்கொண்டு அதே சமயத்தில் பெரும்பான்மையினராக இருந்த சில வணக்கத் தவர்களைச் சாந்தப்படுத்த வேண்டுவதும், மன்னரை மதியாமல் கலக மனப்பான்மையுடன் இருந்த முஸ்லிம் அதிகாரிகளை வன்மை யாகத் தண்டிக்க வேண்டுவதுமே உசிதமான காரியம் என்பதை அவர்கள் உணர்ந்தனர். ஆனுல், அப்படிச் செய்வதென்பது இஸ்லாமியச் சட்டத்துக்கொவ்வாததென்பதையும் அவர்கள் அறிந்தனர். ஆனுல், பின்வரும் சூழ்நிலை அவர்களை அச் சட்டத் துக்கு மாருகப் போகும்படி தூண்டியது.

மங்கோலியர்கள் நாட்டை சதா அச்சுறுத்திக்கொண்டிருந் தனர். தைமூர் படையெடுப்புக்கு ஒரு நூற்றுண்டுக்கு முன் பிருந்தே அவர்கள் அடிக்கடி இந்தியாமீது படையெடுத்து வந்தனர். புதிய முஸ்லிம்கள் (New Muslims) என்ற கூட்டத்தார் ஓயாத தொல்லை தந்தனர்; அலாவுதீன் கில்ஜியின் காலத்தில் அத் தொல்லை அதிகமாயிருந்தது; பேரரசின் மாநிலங்கள் பலவற்றில் ஆட்சி புரிந்துவந்த அமீர்கள் கலகங்களைத் தூண்டி விட்டுக்கொண்டிருந்தனர். மகமதுபின் துக்ளக் காலத்தில் அத்தகைய கலவரங்கள் அதிகமாயின. இப்படி யெல்லாம் நாட்டிற்கு உள்ளும் புறமும் அபாயம் நிறைந்திருந்த வேளையில், இந்துக்களைத் திரள்திரளாகக் கொன்று குவிப்பதன்மூலமும், மதமாற்றம் செய்வதன்மூலமும், இஸ்லாம் மதத்தின் புகழை ஓங்கச் செய்கின்ற ஓர் கொள்கையை டில்லி சுல்தான்கள் கடைப் பிடிக்க முடியவில்லை. அக் கொள்கையின் அடிப்படையில் தொடர்ந்து இந்துக்கள்மீது நடவடிக்கைகளை எடுக்கவும் அவர் களால் முடியவில்லை. அதே சமயம், சட்டம் இடந்தரவில்லையே என்று இந்துக்களின் துயர் துடைக்காமலிருக்கவும் அவர்களால் இயலவில்லை, நாட்டில் எங்கு பார்த்தாலும் பாதைகளில்

திருடர் பயம் அதிகமாயிருந்தது; வியாபாரம் சீரழிந்துகொண்டு சென்றது; பஞ்சங்கள் ஆங்காங்கே ஏற்பட்டன; வருமானம் குன்றியது; கொலையும் கொள்ளையும் எங்கும் தாண்டவமாடின. பேரரசின் அமைதியையும் செல்வாக்கையும் கெடுக்கும் முறையில் பலவிதமான நிகழ்ச்சிகள் நாடெங்கும் தோன்றின. இதையெல்லாம் கண்ட டில்லி சுல்தான்கள் வாளாவிருக்க முடியாமல் தவித்தனர். அதிலும் இக் குறைகளையெல்லாம் தவிர்க்கக் கூடுமென நம்பிய சுல்தான்களுக்குச் சும்மாவிருப்பதென்பது மிகவும் கடினமாயிருந்தது. மக்களின் துயர்களைக் களைவதற்கான புதிய சட்டங்களை, அதாவது, சமயச் சட்ட அறிஞர்களால் ஒத்துக்கொள்ளப்படக்கூடாத சில சட்டங்களை ஆக்க அவர்கள் முன்வந்தார்கள். ஒரு சட்டமானது நாட்டுக்கு நலன் விளைத்தால் அதுவே போதுமென அவர்கள் எண்ணலாயினர். ஆனால், உண்மையிலேயே அக் காலத்தே, மன்னர்களுடைய அரசியற் கலைச்சொற்களில் நாட்டின் நலமும் அதை ஆளும் மன்னர்களின் நலமும் ஒன்றாகவே கருதப்பட்டது. மற்றும், நிலையான வருமான மூலம் (source), வெளிநாட்டுப் படையெடுப்பினின்றும் பாதுகாப்பு, வலிமை பெற்ற மத்திய அரசாங்க அமைப்பு, மன்னரிடம் மக்களின் மாறா விசுவாசம் இவையே ஓர் நலமுள்ள நாட்டின் இலக்கணங்களாகக் கருதப்பட்டன. இந்தியாவில் தாருல் இஸ்லாமும் தாருல் ஹார்பும் ஒன்றாக இணைந்து சுல்தானிடம் விசுவாசம் காட்டுவதும், அவரது ஆட்சியையும் அதிகாரத்தையும் ஆதரிப்பதுமே நாட்டு நலனுக்கோர் அறிகுறியாக எண்ணப் பட்டது. அத்தகைய நலனை ஓர் நாடு உறுதியாக அடைய வேண்டுமானால், முஸ்லிம் அரசியற் கலைச்சொற்களில் தாருல் இஸ்லாம், தாருல் ஹார்ப் என்ற இரு சொற்றொடர்களுக்கும் தரப்பட்டிருந்த நூதனமான முக்கியத்துவமானது அகற்றப் படுதல் அவசியமாயிற்று. மற்றும், இந்தியப் பேரரசின் எல்லைக்குள், ஒரு பிரதேசமானது இன்னொரு பிரதேசத்தின்மீது படையெடுத்து சதா சமயப் போர் செய்துகொண்டிருப்ப தென்பதும் முடியாத காரியம். அந்தச் சாதாரணக் காரணத்துக் காகவேனும் மேற்சொன்ன வேறுபாடுகள் நீங்கவேண்டுவது அவசியமாயிருந்தது. குறைந்தது டில்லி சுல்தானிய அரசின் எல்லைக்குள்ளாகவேனும் இவ்விருவகையான பிரதேசங்களும் தொடர்ந்து பகைமை பாராட்டிக்கொண்டிருத்தல் முடியாத காரியமாயிருந்தது. ஏனெனில், அப்படியிருப்பின் அது, வீடு இரண்டு பட்டால் கூத்தாடிக்குக் கொண்டாட்டம் என்ற நிலைக்கு நாட்டை இழுத்துச் சென்றுவிடும். அப்படியெல்லாம் நேராது தடுக்கவேண்டுமாயின், அதுவரை யாவராலும் ஒப்புக்கொள்ளப் பட்டதும், முஸ்லிம் சமய அடிப்படையில் அமைந்ததுமான அரசு

கொள்கையை விடுத்து அதற்கு மாறுன ஓர் அரசாங்கக் கொள் கையை வகுக்கவேண்டுவது அவசியமாயிற்று. அதனேடு இந்தியா வில் இஸ்லாமிய மதத்துக்கும் இஸ்லாமிய அரசுக்கும் இருந்த அடிப்படையான வேறுபாடுகளை ஒப்புக்கொள்ளவேண்டுவதும் அவசியமாயிற்று.

## அரசுகலைபற்றி அலாவுதீனின் கோட்பாடுகள்

இங்ஙனம் ஒப்புக்கொள்ள வேண்டியதன் அவசியத்தாலேயே டில்லி மன்னர்கள் உலமாக்கள், முஜ்தஹிதுகள் ஆகியோரின் பிடியினின்றும் விடுவித்துக்கொண்டு அரசியலைச் சுயேச்சையாக நடத்த முன்வந்தனர். இந்த மனப்பான்மையானது அலாவுதீன் கில்ஜியினுடைய அரசாங்க அமைப்பில் தெள்ளிதின் வெளிப் படுத்தப்படுகிறது. ஜியாவுதீன் பரணி மிகத்தெளிவான சொற் களில் இதுபற்றிக் கூறியுள்ளார். அது வருமாறு: ''அவர் அரச ராக ஆனபொழுது, அரசியலமைப்பு, ஒழுங்குமுறை, அரசாங்கம் என்பன வேறு; சட்டத்தின் விதிமுறைகள், ஆணைகள் என்பன வேறு என்ற ஓர் முடிவுக்கு வந்தார். அரசின் மேலான ஆணைகளை வெளியிடும் அதிகாரம் மன்னருக்கே உரியது எனவும், சட்ட சம்பந்தமான ஆணைகள், காஜிகள், மஃப்டிகள் ஆகியோரின் தீர்ப்புகளின்படி வெளியிடத்தக்கவை எனவும் அவர் கருதினர். இந்தக் கருத்தின்படி, அரசுபற்றிய எந்தக் காரியங்கள் அவரது பார்வைக்கு வந்தாலும், உடனே அவர் பொது நன்மைக்கு எது உகந்தது என்பதை மட்டுமே கருத்திற் கொண்டு அதை ஆராய்வது வழக்கம். மற்றபடி அது சட்டத்துக்கு ஒத்ததா அல்லது முரண்பட்டதா என்பதை அவர் கவனிப்பதில்லை. அரசியல் காரியங்களில் ஈடுபடும்போது அவர் சட்ட அறிஞர்களின் கருத்தைக் கேட்டுக்கொண்டிருப்பதில்லை...'[8] இந்தச் சந்தர்ப் பத்தில் பயானுவைச் (Bayana) சேர்ந்த காஜி மொஹிசுதீன் என்பாரோடு அலாவுதீன் நிகழ்த்தியதாகச் சொல்லப்படும் உரை யாடல் ஒன்றை நோக்குதல் பயனுடையதாயிருக்கும்.

இந்துக்களைத் தான் எப்படி நடத்தவேண்டுமென அலாவுதீன் ஒரு சமயம் காஜியைக் கேட்டார். அதற்கு மறுமொழியாகக் காஜி, இந்துக்களின் செல்வமானது கொள்ளையடிக்கப்படவேண்டு மென்றும், அவர்களை முற்றிலும் ஒழித்துக்கட்ட முடியுமானல் நலமாயிருக்குமென்றும், அது முடியாவிட்டால் அவர்களை அடிமைப்படுத்தி நிரந்தரமாகவே இழிநிலையில் வைத்திருக்க வேண்டுமென்றும் புகன்றார். தனது கருத்துகளுக்கு ஆதாரமாக

[8] Elliot & Dowson, Vol. III, p. 183.

அவர் அபு ஹனீஃபாவின் வாக்கியங்களை மேற்கோளாகக் காட்டினார். சுல்தான் மெல்லப் புன்முறுவல் பூத்துப் பின்வருமாறு கழன்றார்: 'உம்முடைய கூற்றுகள் எதையும் என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. ஆனால், ஒன்றுமட்டும் எனக்கு நன்றாகத் தெரிகிறது. குத்களும் (Khuts) முக்கதிம்களும் (கிராமத் தலைவர்) அழகிய குதிரைகளின்மீது சவாரி செய்கின்றனர்; நல்ல ஆடைகளை அணிகின்றனர்; பாரசீக வில்களைக்கொண்டு அம்பு எய்கிறார்கள்; ஒருவர்க்கொருவர் சதா போராடிக்கொண்டிருக்கின்றனர்; வேட்டைக்கு அடிக்கடி செல்கின்றனர். ஆனால், கராஜ் (கப்பம்), ஜஸியா (தலைவரி), காரி (வீட்டுவரி), சாரி (மேய்ப்பு நிலவரி) எதையும் அவர்கள் செலுத்துவதில்லை. ஒரு ஜித்தால் (jital)கூட அவர்களிடமிருந்து பெயர்வதில்லை. குத்களின்மீது தனியே அவர்கள் வரிகளை விதித்து வசூலித்துக்கொள்கின்றனர். அப் பணத்தைக் கொண்டு அவர்கள் குடித்து வெறிக்கின்றனர். விருந்து வைக்கின்றனர். ஆனால், அரசாங்கத்துக்கு அவர்களால் எந்த வரும்படியும் வருவதில்லை. அரசாங்கத்திடமிருந்து வேண்டுகோள் வந்தாலும் சரி வராவிட்டாலும் சரி, அவர்கள் அரசாங்கத்துக்கு எவ்விதத் தீர்வையும் செலுத்துவதில்லை. எனது அரசாங்க அதிகாரிகளுக்கும் அவர்கள் மரியாதை காட்டுவது கிடையாது. எனவே, நான் எனக்கு நியாயம் எனத் தெரிந்த நடவடிக்கைகளை அவர்கள்மீது எடுத்துள்ளேன். அதன்மூலம் குடிமக்களை நான் பணியவைக்கிறேன்......'

நாணயமற்ற முஸ்லிம் அதிகாரிகளை எப்படி நடத்தவேண்டுமென்பதுபற்றி அவர் காஜியிடம் அடுத்தாற்போல் ஓர் கேள்வி கேட்டார். நேர்மையற்ற முஸ்லிம், வருமானவரி அதிகாரிகள், குமாஸ்தாக்கள் ஆகியோரின் கைகளை 'அரசாங்க வருவாயை அபகரித்த குற்றத்துக்காக' வெட்டவேண்டுமெனத் தாம் உத்தரவு போட்டுள்ளது சரியா என்றும், இல்லையெனில் அவர்களை எப்படி நடத்தவேண்டுமென்றும் அவர் காஜியை வினவினார். அதற்கு மறுமொழியாக அவர், குற்றம் செய்த அதிகாரிகளுக்குச் சேரவேண்டிய சம்பளங்கள் தக்கவாறு வழங்கப்படவேண்டுமெனவும், அதன் பின்பும் அவர்கள் நேர்மையற்றவர்களாக நடந்துகொண்டால் அவர்கள்மீது அபராதம் விதிக்கலாம் அல்லது சிறையிடலாமேயன்றி வேறு தண்டனைகள் தரப்படலாகாதெனவும் பகர்ந்தார். அதைக் கேட்ட சுல்தான் கூறியதாவது: 'வருமான வரி அதிகாரிகள் தங்களது மதிப்பைக் காப்பாற்றிக் கொண்டு வாழும் வகையில் அவர்களுக்கு உதவிப் பணங்களை வழங்குமாறு நான் ஆணையிட்டுள்ளேன். அதன் பின்பும் அவர்கள் நாணயமற்ற முறையில் நடந்துகொண்டு வருமானத்தைக்

குறைப்பார்களானல் நீர் கூறியபடியே நான் அவர்களை நடத்து கிறேன்.'

மூன்ருவதாக அவர் தமது கொள்ளைப் பொருள்களைப்பற்றி ஓர் கேள்வியை விடுத்தார். தேவகிரியிலிருந்து தாம் கொணர்ந்த ஏராளமான செல்வமெல்லாம் தமக்கே உரியதா அல்லது அரசுக்கு உரியதா என அவர் ஓர் கடா எழுப்பினர். 'தேவகிரி யில் பெறப்பட்ட செல்வமெல்லாம் இஸ்லாமியப் படைவீரர் களின் வீரதீரத்தால் பெறப்பட்டவைகளேயாதலால், அங்ஙனம் கொள்ளப்பட்ட பொருள் அனைத்தும் பொதுக் கருவூலத்துக்கே சேரவேண்டும்' எனக் காஜி பதிலிறுத்தார். அவரது கூற்றுச் சற்றும் அறிவுக்கொவ்வாததொன்ருக அலாவுதீனுக்குப் பட்டது. அவர் முகம் சுண்டியது. தேவகிரியில் பெற்ற பணமானது தமது சொந்த முயற்சியால் பெறப்பட்டதொன்று என்றும், தாமும் தமது ஊழியர்களும் உயிரைப் பணயம் வைத்துப் போராடியதன் விளைவாய்ப் பெற்ற வெற்றியின் சின்னமே அதுவென்றும் அவர் காஜியிடம் சற்றுக் கடுகடுத்த முகத்துடன் கூறினர். 'இங்ஙன மாகப் பெற்ற தனம் எப்படி அரசுக்குச் சொந்தமாகும்?' என அவர் கோபத்தோடு காஜியைக் கேட்டார்.

கடைசியாக அவர், பொதுப் பணத்தில் தமக்கும் தமது மக்களுக்கும் எவ்வளவு தூரம் உரிமை யுண்டு என்பதை வினவினர். அதற்குக் காஜி கூறிய மாற்றமாவது: 'பெரிதும் அறிவு சான்ற கலீஃபாக்களின் அடிச்சுவடுகளைப் பின்பற்றி, அவர்களது மேலான கொள்கையின்படி நடக்க மேன்மைமிக்க அரசர் விரும்புவாரேயானல், சாதாரணப் போர்வீரன் ஒருவனுக் காக எவ்வளவு தொகை ஒதுக்கப்படுகிறதோ அவ்வளவு தொகையைமட்டுமே நீரும் உமது குடும்பமும் எடுத்துக்கொள்ள வேண்டும். அதாவது, இருநூற்றுமுப்பத்துநான்கு டங்காக்களை மட்டுமே உமக்காக நீர் எடுத்துக்கொள்ளலாம்' என்பதாகும். கடுங்கோபத்துடன் இவற்றை யெல்லாம் கேட்டுக்கொண்டிருந்த அரசர் பின்வருமாறு கூறினர்: 'என்னுடைய நடவடிக்கைகள் எல்லாம் சட்டத்துக்கு விரோதமானவை எனக் கூறிவிட்டீர் அல்லவா? இதோ நான் உண்மையில் என்ன செய்கிறேன் என்பதைப் பாரும். கணக்கெடுப்பின்போது குதிரை வீரர்கள் வரவில்லையானல், அவர்களது மூன்று ஆண்டுச் சம்பளத் தொகையை அவர்களிடமிருந்து எடுத்துக்கொள்ளும்படி நான் ஆணையிடுகிறேன். சாராயம் குடிப்பவர்களையும் சாராயம் விற்பவர்களையும் நான் சிறைக்கிடங்குகளில் அடைத்துவைக் கிறேன். ஒருவன் இன்னெருவனது மனைவியுடன் சோரம் போனல், மீண்டும் அத்தகைய குற்றத்தை அவன் செய்யாத

படி தடுக்கத்தகுந்த நடவடிக்கைகளை மேற்கொள்கிறேன். சோரம்போன பெண்ணைக் கொல்லும்படி செய்துவிடுகிறேன். எனக்கு விரோதமாகக் கலகம் செய்பவர்கள் நல்லவர்களா னாலும் கெட்டவர்களானாலும், கலகத்தில் பழக்கப்பட்டவர்களா யிருப்பினும் புதியவர்களா யிருப்பினும், அவர்களை யெல்லாம் நான் கொன்றுவிடுகிறேன். அவர்களின் பெண்டு பிள்ளைகளை யெல்லாம் பிச்சைக்காரர்களாக்கித் தெருத்தெருவாய் அலைய விடுகிறேன். மக்களிடமிருந்து பலவந்தமாகப் பணம் பறிக்கும் அதிகாரிகளைக் கொக்கிகளில் மாட்டியும் தடியால் அடித்தும் சித்திரவதை செய்து தண்டிக்கிறேன். பணப்பறி செய்தோர் அங்ஙனம் பறித்த பொருளில் கடைசி ஜித்தலை அரசாங்கத்துக்குச் செலுத்தும் வரை விலங்கிட்டுச் சங்கிலியால் கட்டிச் சிறையில் அடைத்து வைக்கிறேன்.' இங்ஙனம் கூறி முடித்த பின் மீண்டும் அவர் காஜியை நோக்கி, 'இவையெல்லாம் சட்டத் துக்கு விரோதமானவை என்று கூறுகின்றீர்?' என்று கேட்டார். இந்தக் கேள்வியானது காஜிக்கு அச்சமூட்டியது. தமக்கு முடிவு காலம் நெருங்கிவிட்டதாகவே அவர் நினைத்தார். தமது தலைப் பாகையே தம் கோடித்துணியாக மாறப்போவதாக அவர் எண்ணினார். பயத்தால் அவர் உடல் நடுங்கியது. எனினும், தாம் மேற்கொண்டுள்ள கடமைக்கு உண்மையாக நடந்து கொள்ளக் கருதி அவர் தழுதழுத்த குரலுடன், 'அரசே! இவை யெல்லாமே சட்டத்துக்கு முரணானவைகள்தாம். நபிநாயகத்தின் சொற்களிலோ, அல்லது கற்றறிஞர்களின் விளக்கத்திலோ இவற் றுக்கு ஆதாரம் எதுவுமில்லை' என்று பதிலிறுத்தார். சுல்தான் முகத்தைச் சற்றுக் கடுகடுப்பாக வைத்துக்கொண்டு மௌனமாக உள்ளே சென்றுவிட்டார். அடுத்த நாள் அவர் மீண்டும் அர சவைக்கு வந்தபோது காஜியை அவர் தண்டிக்கவில்லை. அவரது சட்ட அறிவை அவர் மெச்சியதோடு தகுந்த வெகுமதியும் கொடுத்தார். அதன்பின் அவர் பின்வருமாறு காஜியை நோக்கி மொழிந்தார்: 'நாட்டுக்கு நன்மை விளைப்பனவாகவும் மக்களின் நலனை வளர்ப்பனவாகவும் எவையெல்லாம் எனக்குத் தோன்று கின்றனவோ, அவற்றையெல்லாம் நான் ஆணைகளாக வெளியிடு கின்றேன். மனிதர்களில் பலர் கவலையீனர்களாகவும், மரியாதை யற்றவர்களாகவும், எனது ஆணைகளுக்குக் கீழ்ப்படியாதவர்களா கவும் இருக்கின்றனர். அத்தகைய மக்கள்மீது நான் சற்றுக் கடுமை யாகவே இருப்பது கட்டாயமாகிறது. அவர்களை எனக்குக் கீழ்ப் படியும்படி செய்ய எனக்கு வேறு வழியில்லை. இது சட்டத்துக்கு உட்பட்டதா இல்லையா என்பது எனக்குத் தெரியாது. அரசுக்கு நன்மை விளைக்கும் என்று எது எனக்குத் தெரிகிறதோ அல்லது காலம் இடம் சந்தர்ப்பத்திற்கேற்றது எது என எனக்குப்

படுகிறதோ அதை நான் சட்டமாக்குகிறேன்.'[9] அலாவுதீன் தனது அரசுகலையின் இரத்தினச் சுருக்கத்தை இங்கே தருவதைக் காண்கிறோம். நாட்டுக்கு நன்மை உண்டாக்குவது எது என அவர் நினைத்தாரோ அல்லது அவ்வப்போது சமயத்துக்கு உகந்தது எது என அவர்க்குத் தோன்றியதோ அதை அவர் ஆணையிட்டார். அது சட்டத்துக்கு ஒத்ததா இல்லையா என்பதைப்பற்றி அவருக்குச் சிறிதும் கவலையில்லை. அவரைப் பொறுத்தவரை, நாட்டுக்கு நன்மை பயப்பன எவையோ அவையே சட்டத்துக்கு உகந்தனவாகும். அதாவது, எவையெல்லாம் நாட்டில் மலிந்துகிடக்கின்ற தீமைகளை அகற்றுவதற்குப் பயன் பட்டனவோ அவையெல்லாம் சட்டத்துக்கு ஒத்தவையாக அவருக்குத் தோன்றின. இஸ்லாம் மதத்தின் குறிக்கோள்களை உட்கொண்டன என்பதற்காகவோ, அன்றி வெறுமனே அம் மதத் தின் புகழை ஓங்கச் செய்வன என்பதற்காகவோ அவர் எத்தகைய கொள்கையையும் கடைப்பிடிக்கவில்லை. இங்ஙனம் அவர் தம் முடைய செயல் வரம்புக்கும், முஸ்லீம் சட்ட அறிஞர்களின் செயல் வரம்புக்கும் உள்ள வேறுபாட்டினைத் தெளிவாக அச் சட்டக் காவலர்களுக்கு எடுத்து விளக்கினார். தம்முடைய வரம்புக்குள் தமக்குத் தனித்தலைமை உண்டென்பதையும், அதை நடைமுறையில் நடத்திக்காட்டத் தமக்கு உரிமை யுண்டென் பதையும் அவர் அவர்களுக்கு நன்கு விளக்கிக்காட்டினார்.

## மகமது துக்ளக்கின் அரசாங்கக் கோட்பாடு

மேற்கூறப்பட்ட உரையாடலின் போக்கும், மகமதுபின் துக்ளக் ஒரு காலத்தில் ஜியாவுதீன் பரணி (Ziauddin Barni) எனும் வரலாற்று ஆசிரியரோடு நிகழ்த்திய உரையாடலின் போக்கும் ஏறக்குறைய ஒரே மாதிரியானது என்றே கூறலாம். நாட்டில் ஏற்பட்டுவந்த கலகங்களின் காரணங்களையும், கலகம் செய்த மக்களின்மீது தாம் எடுத்துக்கொண்ட தண்டனை நடவடிக்கை களையும்பற்றி அவர் விவாதித்துக்கொண்டிருந்தபோது அவர் தமது வரலாற்றாசிரியரை நோக்கி, எத்தகைய சூழ்நிலையில் சியாசத் (siyasat) அல்லது தண்டனையானது—இந்தச் சந்தர்ப் பத்தில் கொலைத்தண்டனையைக் குறிக்கும்—கொடுக்கப்படுவது நியாயமானது எனக் கேட்டார். அதற்குப் பதிலாகப் பரணி பின் வரும் மாற்றம் அளித்தார்: 'ஏழு வகையான சூழ்நிலைகளில் அத் தகைய தண்டனை தரப்பெறுதல் நியாயமாகும்; அல்லது இச் சூழ் நிலைகளுக்கும் மீறிப் போவதாலோ அல்லது அதிகமாகப் போவ தாலோ கலகங்களும், தொல்லைகளும், சல்சலப்புகளும் ஏற்படு

[9] Elliot and Dowson, Vol. III, p. 186—88.

மானாலும் அத் தண்டனைகள் நியாயமானவையாகும். அவை யாவன: (1) உண்மை மதத்துக்குப் புறம்பாகப் போதலும் தொடர்ந்து அதில் பிடிவாதமாயிருத்தலும், (2) வேண்டுமென்றே கொலை செய்தல், (3) திருமணம் ஆன ஒருவர் இன்னொரு மனிதனின் மனைவியோடு சோரம் போதல், (4) மன்னருக்கு விரோதமாகச் சதி செய்தல், (5) கலகத்துக்குத் தலைமை தாங்கல் அல்லது கலகக்காரர்களுக்கு உதவி செய்தல், (6) மன்னரது விரோதிகள் அல்லது போட்டியாளர்களோடு சேர்ந்துகொண்டு அவர்களுக்கு வஞ்சமாகத் துப்பு அறிவித்தல் அல்லது உதவி செய்தல் அல்லது அவர்களின் துரோகச் செயல்களுக்கு எவ்வகையிலேனும் உடந்தையாயிருத்தல், (7) நாட்டுக்குத் தீங்கு விளைவிக்கும் வகையில் மன்னருக்குக் கீழ்ப்படிய மறுத்தல்' என்பனவாகும். சுல்தான் மீண்டும் அவரை நோக்கி அந்த ஏழு குற்றங்களில் எந்தெந்தக் குற்றங்களுக்கு அரச தண்டனையளிக்கலாமென்பது பற்றி நபிநாயகம் ஏதாவது கூறியிருக்கிறாரா எனக் கேட்டார். அதற்குப் பதிலாகப் பரணி கூறியதாவது: 'இந்த ஏழு குற்றங்களில் மூன்றைப்பற்றி, அதாவது, கொள்கை துறப்பு (apostasy), முசல்மான் ஒருவனைக் கொலை செய்தல், திருமணமான மங்கையுடன் சோரம்போதல் ஆகிய குற்றங்களைப்பற்றி நபிநாயகம் தமது கருத்தைத் தெரிவித்துள்ளார். ஏனைய நான்கு குற்றங்களுக்கு என்ன தண்டனை தரப்பட வேண்மென்பது நல்ல அரசாங்கத்துக்கும் கோட்பாட்டுக்கும் ஏற்பத் தீர்மானிக்கப்பட வேண்டியதாகும். இவ்விதம் கூறப்பட்ட கருத்து சுல்தானுக்குப் பெரிதும் பிடித்தமாகவே இருந்தது. எனினும்,அவர் இன்னொரு கருத்தையும் தெரிவித்தார். அதாவது, 'மன்னருக்கு விரோதமாக ஒரு சிறு செயலை ஒருவர் செய்தாலும் அவருக்கு நான் மரண தண்டனையை விதிக்கின்றேன். நான் சாகும்வரையில், அல்லது மக்கள் உண்மையாக ஊழியம் செய்கின்றவரையில், கலகத்தையும் அடங்காமையையும் மக்கள் கைவிடுகின்றவரையில் நான் இங்ஙனம் செய்துகொண்டேதான் இருப்பேன்.'[10] இத்தகைய உறுதியான தீர்மானத்திற்கு அவர் வந்ததற்குக் காரணம், அவர் ஒருசமயம் ஜியாவுதீனிடம் கூறிக்கொண்டிருந்தற்கேற்ப, வெளிநாட்டு அமீர்கள்[11] அவருக்கு சதா தொல்லை கொடுத்துக்கொண்டிருந்ததுதான் எனலாம். ஆனால், அவர் பேச்சுகளிலிருந்து நாம் தெரிந்துகொள்ளக்கூடியவை என்னவெனின், மகம்மதுவின் கட்டளைகளுக்கு ஏற்ப முதல் மூன்று குற்றங்களை மட்டும் அவர் கடுமையாகத் தண்டித்தாரில்லை என்பதும்,ஏனைய நால்வகைக் குற்றங்களையுங்கூட

[10] Ibid., Vol. III, Tarikhi Firoz Shahi, p. 255.

[11] Ibid., p. 259.

அவை மகமதுவால் ஏற்றுக்கொள்ளப்படாதவையே எனினும் மிகவும் கடுமையாகத் தண்டித்தார் என்பதுமேயாகும். பரணி என்பார் சொல்கிறபடி, 'நல்ல அரசாங்கத்தையும் கோட்பாட்டு உறுதியையும்' முன்னிட்டே அவர் அங்ஙனம் நடந்துகொள்ளுமாறு உந்தப்பட்டார். நாம் இப்போது ஆராய்ச்சிக்கு எடுத்துக் கொண்டுள்ள பொருளைப் பொறுத்தவரையில் நாம் கவனிக்க வேண்டியது என்னவெனில், ஒரு காரியம் சட்டத்தை ஒட்டியதா, சட்டத்துக்கு மாறுபட்டதா என்பதைப்பற்றிக் கவலைப்படாமல், தன் எண்ணப்படியே, அரசியல் காரியங்களில் நடவடிக்கை எடுத்துக்கொண்ட அரசர்களுக்கோர் சான்றாக விளங்கிய இன்னொரு சுல்தானை ஈண்டுக் காண்கிறோம் என்பதேயாகும்.

## இஸ்லாமிய அரசின் அதிகார எல்லையும், இஸ்லாமிய மதத்தின் செல்வாக்கு வரம்பும் தனித்தனியே பிரித்து அறியப்படுதல்

இங்ஙனமாக இஸ்லாமிய சட்டத்தையும் அரசையும் பிரித்து அறிகின்ற ஒரு மனப்போக்கு டில்லியில் மெல்ல மெல்ல வளர்வதைப் பார்க்கின்றோம். ஆட்சித்துறைபற்றிய விவகாரங்களில் சமயச் சட்டம் தலையிடுவது தகுமா என்ற கேள்வியும், சமயச்சட்ட அறிஞர்களும் சமயக் கொள்கை நிபுணர்களும் அரசுக்கு அல்லது அரசு பொறுப்பை மேற்கொண்டுள்ளவர்க்கு என்னென்ன செய்ய வேண்டுமென்பதை அதிகாரத்தோடு கூறத்தக்கவர்களா என்ற வினாவும் டில்லி சுல்தானிய அரசில் சிறிது சிறிதாக எழுப்பப் பட்டன. இங்ஙனம் சமயச் சட்ட அறிஞர்களும் சமயக் கொள்கை நிபுணர்களும் அரசுக்கு அதிகாரத்தோடு அறிவுரை கூறத்தக்கவர்களா இல்லையா என்ற கேள்வி எழுப்பப்பட்டதிலிருந்து, இந்தியாவில் இஸ்லாமிய அரசுக்கும் சமயத்துக்கும் இருந்த அதிகாரவரம்பும் தகுதியும் ஒன்றே எனக் கருதப்படுதற்கில்லை என்பது நன்கு தெளிவாயிற்று. அதாவது, அரசுமட்டும் தனிப்பட்ட முறையில் செயல்புரியக்கூடியதும், சமயமானது முற்றிலும் விலக்கப்படக்கூடியதுமான ஒருசில காரியங்கள் இருந்தன என்பது நன்கு உறுதியாயிற்று.

அலாவுதீன் கில்ஜி, மஹமது பின் துக்ளக் ஆகியோருடைய ஆட்சித்துறைக் கொள்கைகளை நாம் பரிசீலனை செய்கின்ற பொழுது, நாம் நம்மை அறியாமலேயே இம் முடிவுக்கு வரவேண்டியுள்ளது.

சான்றாக, அலாவுதீன், தாம் கொள்ளை அடித்த பொருளில் ஐந்தில் நான்கு பாகத்தைத் தமக்கென எடுத்துக்கொண்டார்.

மஹமது பின் துக்ளக்கும் அவ் விதமே செய்தார். ஆனுல், இஸ்லாமியச் சட்டப்படி ஐந்தில் ஒரு பகுதிக்குத்தான் அவர்கள் உரிமை கொண்டாட முடியும். அலாவுதீன், கராஜ் என்ற வரியை விளைச்சலில் ஐம்பது சதவிகிதமாக உயர்த்தினுர்; மஹமதுபின் துக்ளக் அதை இருபது சதவிகிதமாக ஆக்கினுர். ஆனுல், இஸ்லாமியச் சட்டம் அனுமதித்தது பத்து சதவிகிதமேயாகும். இஸ்லாமியச் சட்டத்தால் அனுமதிக்கப்பட்ட அளவுக்குச் சற்று அதிகமாகவே இவ்விரண்டு அரசர்களும் அப்வாபுகள் (தீர்வைகள்) என்ற வரியை விதித்தனர். உணவுப் பண்டங்களின் விலையைக் கட்டுப்படுத்தவும், போர்வீரர்களின் சம்பளங்களை ஒழுங்குபடுத்தவும், சாராயம் காய்ச்சப்படுவதையும் விற்கப்படுவதையும் தடுக்கவும், பிரபுக்களிடையே நடைபெற்ற திருமணங்களைக் கட்டுப்படுத்தவும் என ஏராளமான சட்டங்களை அலாவுதீன் உண்டாக்கினுர்.

அவர் தாமே நாட்டின் தலைமை நீதிமன்றமாக நடந்து கொண்டார். முஸ்லீம்களாய் இருப்பினும் அல்லது முஸ்லீம் அல்லாதாராய் இருப்பினும், அவர்கள் எந்தப் பதவியில் அல்லது அந்தஸ்தில் இருப்பினும், குற்றம் செய்தவர்களை மிகக் கடுமையாகத் தண்டித்தார். ஜியாவுதீன் பரணி என்பார் அவரைப்பற்றி எழுதுகின்றபொழுது, 'அவர் கொடுக்கின்ற தண்டனைகளில்கூடச் சட்டத்தின் விதிகளைப் புறக்கணிக்கிருர்'[12] என்று கூறுகிருர். மஹமதுபின் துக்ளக்கும் 'தாமே மேல்முறையீட்டுத் தலைமை நீதிமன்றமாக விளங்கினுர். எப்போதெல்லாம் அவருடைய தீர்ப்பு மஃப்டிகளின் தீர்ப்புக்கு விரோதமாக இருந்தனவோ, அப்போதெல்லாம் அவர்களது கருத்தை மாற்றுவதற்காக அவர் எல்லா விதமான வாதங்களையும் கையாள்வார். அது முடியவில்லையானுல், விடாப்பிடியாக அவர் தமது கருத்தையே சாதித்து, அவர்களுடைய தீர்ப்புகளை முற்றிலும் மாற்றியமைத்துவிடுவது வழக்கம். அதுமட்டுமன்று; நாட்டில் மிகமிக உயர்ந்த பதவியில் இருந்த அதிகாரிகளுக்கு அவர் நீதி செலுத்தும் அதிகாரங்களைக் கொடுத்திருந்தார். காஜிகளாகவோ, மஃப்டிகளாகவோ, அல்லது திறமை மிக்க சமயச் சட்ட அறிஞர்களாகவோ இல்லாதிருந்துங்கூட அவர் அவ்வதிகாரிகளுக்கு நீதி வழங்கும் அதிகாரங்களைக் கொடுத்தார்.'[13] இங்ஙனமாக டில்லி சுல்தானிய ஆட்சியின் போது இஸ்லாமிய அரசு, இஸ்லாமிய மதம் என்ற இரண்டின் அதிகார வரம்புகள் த னி த் த னி யே பிரிக்கப்படுவதற்கான

[12] Ibid., Vol. III, p. 206.

[13] G. Gardner Brown, 'Some Aspects of the Character and Policy of Muhammed bin Tughlaq,' The Journal of U.P. Historical Society, June 1918.

முயற்சிகள் நடைபெற்றன. அதனோடு அரசர் முஜ்தஹீதுகள், உலமாக்கள் முதலியோர் அரசுபற்றிய காரியங்களில் தலையிடுவதை மன்னர் தடுத்தார் என்பதையும் நாம் நன்கு உணரலாம். அவரே (அலாவுதீன் என்பாரின் சொற்களின்படி) அரசுபற்றிய எல்லாக் காரியங்களிலும் முடிவான தீர்ப்புகளை வழங்குபவராக இருந்தார். 'நாட்டுக்கு நன்மை பயப்பது எது' அல்லது (பரணி என்பாரது கூற்றுப்படி) 'நல்ல அரசாங்கத்துக்கும் கோட்பாட்டுக்கும் உகந்தது எது என்பதுபற்றியெல்லாம் முடிவான தீர்ப்பை அவரே கூறுபவராய் இருந்தார்.'

## இந்தோ-இஸ்லாமிய அரசின் அடிப்படை

உண்மையில் அரசியல் சந்தர்ப்பவாதம் (political expediency) என்பது 'நாட்டுக்கு நன்மை பயப்பது எதுவோ அதுதான்' என அலாவுதீனாலும், 'நல்ல அரசாங்கத்துக்கும் கோட்பாட்டுக்கும் உகந்த காரியங்களைச் செய்வதுவே அது' என பரணி என்பாராலும் கூறப்பட்டது. இதனால் முஸ்லீம் அரசர்களிடையே ஒரு புதிய கருத்து மாற்றம் விளைந்தது. கஜ்னவீடுகள் காலம்முதல் மஹமது காசிம் காலம்வரையில் ஆண்ட முஸ்லீம் அரசர்கள் இஸ்லாமியச் சட்டத்தைக் கண்டிப்பாகக் கடைப் பிடிக்கும் பழக்கத்தை ஏற்கெனவே விட்டுவிட்டனர். புதிய பாதையை அவர்கள் ஏற்கெனவே வகுத்துக்கொண்டனர். அங்ஙனம் அவர்கள் நடந்துகொண்டது டில்லி சுல்தான்களுக்குப் பெரிதும் உதவியாய் இருந்தது. ஏனெனில், இஸ்லாமிய அரசு, மதம் இவைகளின் அதிகார வரம்புகளைத் தக்கவாறு வரையறுக்க வேண்டுமென வற்புறுத்த அது அவர்களுக்கு உதவி செய்தது. மேலும், அவை இரண்டும் ஒன்றுக்கொன்று முரண் பட்டவை என்பதை அறிந்துகொண்டு அவ்வுண்மையை ஒப்புக் கொள்ளுவதற்கும் அது ஒரு துணையாய் அமைந்தது. சான்றாக, முஸ்லீம்கள் அல்லாத மக்கள் தொகுதியைச் சேர்ந்தவர்கள் படைக்கலங்கள் வைத்திருப்பதை அனுமதிக்கலாகாது என்ற கொள்கையையும், அன்னாரை நாட்டின் ஆட்சித் துறையிலிருந் தும் இராணுவ ஊழியத்திலிருந்தும் முற்றிலும் விலக்கிவிடுதல் வேண்டும் என்ற கொள்கையையும் சமயச் சார்பான முஸ்லீம் அரசு (theocracy) என்றுமே கடைப்பிடித்துவந்தது என்பதை யாவரும் நன்கு அறிவர். ஆனால், இந்தியாவைப் பொறுத்த வரையில், அப்படி இந்துக்களை ஒதுக்கிவைக்கும் கொள்கைமூலம் அரசாங்கத்தைச் செவ்வனே நடத்த முடியாதென்பதை டெல்லி சுல்தான்கள் பலர் உணர்ந்தனர். ஏனெனில், வேறொரு துணையும் இல்லாமல் முஸ்லீம்கள் தனியே இந்திய நாட்டைப்

பாதுகாப்பது, உள்நாட்டு அமைதியை நிலைநாட்டுவது, அரசின் பல்வேறு துறைகளை நடாத்துவதுபோன்ற பல்வேறு பொறுப்புகளை வெற்றிகரமாக மேற்கொள்ள முடியாத நிலையிலிருந்தனர். முஸ்லீம்கள் இந்தியாவை வென்று இங்கு நன்கு நிலைபெற்ற பின்னர் தாங்கள் எதையும் சொந்தமாகத் தனியே செய்து கொள்ள முடியாதென்பதை உணர்ந்துகொண்டனர். ஏற்கெனவே இருந்த அரசாங்க நிறுவனங்களை நன்கு பயன்படுத்திக்கொள்ள வேண்டுமென்பதை அவர்கள் நன்கு உணர்ந்தனர். குறைந்த பட்சம் அந் நிறுவனங்களின் அடிப்படையையேனும் அல்லது அவற்றின் அடிமட்டப் பகுதிகளையேனும் பயன்படுத்திக்கொள்ள வேண்டுவது மிக இன்றியமையாதது என அவர்களுக்குத் தென்பட்டது. ஏனெனில், அவைகளுக்குப் பதிலாக ஏற்படுத்தப்படக் கூடிய நிறுவனம் எதுவும் அப்போது அவர்களின் கைவசமில்லை. முஸ்லீம் ஆட்சி இந்தியாவில் தொடங்கிய காலத்திலிருந்தே இத் தகைய நிலைமையானது தொடர்ந்து காணப்பட்டுவந்தது. முகம்மது பின் காசிம் என்பவர் இந்துக்களுக்குத் தனிப்பட்ட சலுகைகளைத் தந்தார். தல ஆட்சி முறையையும் வரிவசூல் செய்யும் அதிகாரத்தையும் அவர் இந்துக்களிடமே பெரும்பாலும் ஒப்படைத்தார். கஜினி முகம்மது போன்றவர்களும் அவர்களது சந்ததியார்களும் எவ்வளவோ பிடிவாதமான வைதீகக் கொள்கையுடையவர்களாக இருந்தபோதிலுங்கூட, படைகளில் இந்துக்களைச் சேர்க்கும் வழக்கத்தை அவர்களால் முற்றிலும் கைவிட்டு விட முடியவில்லை. தங்களுடைய சொந்தப் படைகளோடு இந்தியப் படைகளையும் ஒன்றுசேர்ப்பதன்மூலமே தங்களின் படை பலம் பெருகுமென்பதை அவர்கள் நன்கு உணர்ந்தனர். எனவே, இஸ்லாமியச் சட்டத்தின் உட்கருத்துக்கு விரோதமாக இருந்த போதிலுங்கூட, சமயத்துக்கு ஏற்றபடி நடக்கின்ற அரசியல் சந்தர்ப்பவாதக் கொள்கையானது எளிதில் புறக்கணிக்கப்படக் கூடாததொன்று என்பதற்கு இது ஓர் தெள்ளத் தெளிந்த அறிகுறியாயமைந்தது. இந்தியத் தளபதிகளான செவந்தி ராய் (Sewand Roy), ஜெய்சென் (Jai Sen), விஜய் ராய் (Vijai Roy) முதலியவர்களையும் வேறு பலரையும் முஸ்லிம் மன்னர்கள் தங்கள் படைகளில் நியமிக்கவேண்டிய நிலைமை ஏற்பட்டது.[14] படையில், சான்றாக, மசூத் (Masud) என்ற மன்னரின் ஆட்சிக் காலத்தே திலக் (Tilak) என்னும் இந்தியத் தளபதி, ஒரு பெரிய இந்தியப் படையுடன் கஜினியிலிருந்து பஞ்சாபுக்கு அனுப்பப்பட்டார் என்பதை நாம் அறிவோம். பஞ்சாபில் இருந்துகொண்டு கலகம் செய்துவந்த அகமத் நியால்டஜின்

[14] Elliot & Dowson, Vol. II, pp. 59, 60, 125, 127-34.

(Ahmad Niyaltagin) என்ற ஆளுநரை அவர் வென்றதோடு மட்டுமன்றிக் கொன்றும் விட்டார் என்று கேள்விப்படுகிறோம். அதே பிரதேசத்தில் இன்னொரு பெரும் இந்தியப் படை திரட்டப் பட்டது. அதில் ஏராளமான இந்திய அதிகாரிகள் இருந்தனர். அகம்மது அலி நாஸ்டிஜின் (Ahmad Ali Noshtigin) என்பாரது மேலான தலைமையின் கீழ் அது திரட்டப்பட்டு, குர்டெஜ் (Gurdez), சிஸ்தான் (Sistan) ஆகிய பிரதேசங்களில் ஏற்பட்ட கலகங்களை அடக்குவதற்காகப் பயன்படுத்தப்பட்டது.[15] டில்லி சுல்தானிய அரசர்களின் காலத்தில் இந்திய அதிகாரிகள் பலரும் அவரவர் பதவிகளில் தொடர்ந்து நீடிக்குமாறு விடப்பட்டனர். குல்பர்க்காவின் தலைவர்[16] போன்ற, பாதி சுயேச்சையான அரசர்களின் நிலையிலிருந்த பெரும் இந்தியத் தலைவர்கள் முதல், முக்கடம்கள்,[17] ராணுக்கள், கிராம மகந்துகள்[18] போன்ற சிற்றதிகாரிகள்வரை எல்லா இந்திய அதிகாரிகளும் அவரவர் பதவிகளில் அப்படியே தொடர்ந்து நீடிக்குமாறு அனுமதிக்கப் பட்டனர். அவர்கள் ஒவ்வொருவரும் தங்கள் தங்களது அதிகார வட்டத்துக்குள் மத்திய அரசாங்கத்தின் பிரதிநிதிகளாக இருந்து பணியாற்றினர். தங்களின் பழைய வழக்கங்களைப் பின் பற்றியே அவர்கள் அரசருக்குச் சேரவேண்டிய வரிகளை வசூலித்தும் நீதிபரிபாலனம் செய்தும் வந்தனர். அவர்களில் பலர் இந்தியப் படைப்பகுதிகளைக்கொண்டே இராணுவத்தில் ஊழியம் புரியவும் நேர்ந்தது. சான்றாக, மாலிக்காபூர் எனும் தளகர்த்தர் அல்லாவுதீன் கில்ஜியால் வாரங்கல் நாட்டைத் தாக்க அனுப்பப் பட்டபோது அவருக்கு ராய் ரையான் ராம்தேவ் (Rai Rayan Ram Deo) எனும் தேவகிரியைச் சேர்ந்த இந்தியத் தலைவர் பெரிதும் துணைபுரிந்ததாகக் கேள்விப்படுகிறோம். டில்லியில் மன்னருக்கு அடிபணிந்து நின்ற நிலமானியப் பிரபு (vassal) ஒருவர் எவ்வளவு விசுவாசமாக மன்னரிடம் நடந்துகொள்வாரோ, அதைவிட அதிகமான கடமையுணர்ச்சியுடனும் விசுவாசத்துடனும் அவர் மாலிக்காபூருக்கு உதவி செய்ததாக நாம் அறியவருகிறோம். 'அதனோடு அவரால் தலைமை தாங்கி நடத்தப்பெற்ற மராட்டியக் குதிரை வீரர்களும் காலாட்படை வீரர்களும் சேர்ந்த படை ஒன்று'[19] பேரரசின் படையில் சேர்ந்தது. அலாவுதீனின் அரண்மனையை—ஹஸார் சுதூன் காவல் புரிந்துவந்த பாய்க்குகள்

[15] Ibid., Vol. II. pp. 130—132.
[16] Ibid., Vol. III, p. 248.
[17] Ibid., p. 185.
[18] Ibid., p. 261.
[19] Ibid., p. 202.

(Paiks) என்ற வீரர்களில் பெரும்பாலோர் இந்தியர்களாயிருந்த தாகவே தெரிகிறது. குஸ்ரோவ் என்பார் டெல்லி அரியணையைக் கைப்பற்றியபோது அவருக்கு உதவி செய்தவர்கள் இந்தியர்களே யாவர். ரந்தோல் (Randhol) போன்ற இந்தியத் தளபதிகளும் ஏனைய இந்தியப் போர்வீரர்களும் அவருக்குப் பக்கபலமாய் நின்று போர்செய்யாமல் விட்டிருந்தால், அவர் சுல்தான் குத்புதீனைக் கொன்று, டில்லி அரியணையைக் கைப்பற்றி, 'சுல்தான் நாஸிருதீன்' என்ற பட்டத்தைச் சூட்டிக்கொண்டதெல்லாம் முடியாமற் போயிருக்கும். இங்ஙனம் அரசாங்கத்தின் சிவில், இராணுவத் துறைகளில் இந்துக்கள் சேர்த்துக்கொள்ளப்பட்ட நிகழ்ச்சிக்கு எத்தனையோ பல சான்றுகளைக் காட்டலாம். எனவே, சமய அடிப்படையில் அமைந்த முஸ்லிம் அரசால் கடைப்பிடிக்கப்பட்ட ஒதுக்கல் கொள்கையானது (policy of exclusion) ஒப்புக் கொள்ளப்படக்கூடாதது என்பதையும், அரசியல் சமயோசிதக் கொள்கை அல்லது சந்தர்ப்பவாதக் கொள்கையே (political expediency) அதைவிடச் சிறந்தது என்பதையும் முஸ்லிம் மன்னர்கள் ஆரம்பத்திலேயே உணரத் தலைப்பட்டனர் என்பதை நாம் நன்கு அறுதியிட்டுக் கூறலாகும். இங்ஙனம் படிப்படியாக வளர்ச்சிபெற்ற (evolved) புதிய ஓர் அரசியல் செயல்முறையும் (technique), அரசியலமைப்பு, ஒழுங்கு முறை (polity), அரசாங்கம் என்பனவும் வேறு; சமயச் சட்டத்தின்பாற்பட்ட விதிகள் ஆணை கள் என்பன வேறு (பரணி என்பாரின் கூற்றுப்படி) என்ற கொள்கை யும் ஒப்புக்கொள்ளப்பட்டதன் அடிப்படையிலேயே நாம் இந்தோ-இஸ்லாமிய அரசு என அழைக்கப்படக்கூடிய ஓர் புதிய அரசு அமைந்தது எனக் கூறலாம். முன்னுரையாய் அமைந்த இச் சொற்களை இதனுடே நிறுத்திக்கொண்டு, இந்தோ-இஸ்லாமிய அரசின் நிர்வாக யந்திரம் அல்லது கட்டுக்கோப்பைப்பற்றிய விவரங்களை மேலே ஆராய்வாம்.

## அரசின் கட்டுக்கோப்பு

### (i) சுல்தான்

'சுல்தான்' எனும் பட்டத்தைக் கொண்டிருந்த மன்னரே நாட்டின் தலைவராகத் திகழ்ந்தார். ஆரம்பத்தில், அப் பட்ட மானது கலீஃபாவால் அளிக்கப்பெற்றதோர் பரிசாக இருந்தது. முதன்முதலாக அப் பட்டத்தைப் பெற்றவர் துருக்கியக் காவலர் களின் தளபதியான அஸ்னஸ் (Ashnas) என்பவராவர். அவருக்குப் பட்டம் வழங்கிய கலீஃபா, ஜாஃபர் ஹருன் வாஸிக் பில்லா (Jaafar Harun Wasik b' Illah—கி.பி. 842-849) என்பவர்.'[20]

---

[20] Ameer Ali, 'A Short History of the Saracens', p. 286.

அவர் ஆஷ்னஸ் என்பாரை சுல்தான் அல்லது பேரரசின் துணை வேந்தராக (Lieutenant of the Empire) நியமித்து, அணி கலன்கள் நிறைந்த அரைக்கச்சை ஒன்றையும் வாளையும் அவர் உடம்பில் அணிவித்து, அவரை அலங்கரித்தார். சுல்தான் என்ற சொல்லானது அரபிய மொழியிலிருந்து எடுக்கப்பட்ட தொன்றாகும். சுல்தான் என்றால் ஆள்பவர் என்பது பொருள். அப் பட்டமானது, ஒருவருக்கு வழங்கப்பட்டபோது நடைபெற்ற சடங்கானது நாட்டின் தலைசிறந்த சிவில், இராணுவ அதிகாரங்கள் யாவும் அப் பட்டத்தைப் பெற்ற ஒரே மனிதரிடம் இணைந் திருந்தது என்பதையே நன்கு சுட்டிக்காட்டியது.

ஆஷ்னஸ் என்பாருக்குப் பிறகு அப் பட்டம் ஒருவருக்கும் வழங்கப்படாமலேயே கொஞ்ச காலம் நிறுத்திவைக்கப்பட் டிருந்தது. இறுதியாக பூயித்துகள் அரண்மனையில் மேயர்கள் அதிகாரத்தைக் கைப்பற்றியபோதுதான் மீண்டும் இப் பட்டம் வழங்கப்பட்டது. இப் பட்டத்தை முதலில் வாங்கிய (கி.பி. 944) புயித் இளவரசர் மொயசுத் தொளலா அஹமத் (Muiz-ud-Dowla Ahmad) என்பவர் ஆவர். அவரது பெயர் நாணயங்களில் பொறிக்கப்பட்டது. ஆலயங்களில் தொழுகை நடந்தபொழுது கலீஃபாவின் பெயரோடு இவரது பெயரும் சேர்த்து ஓதப்பட்டது. 'இந்தப் பட்டமானது புயித் இளவரசர்களுக்குமட்டுமே கொடுக் கப்பட்டது ஒன்றன்று. பெரும்பெரு வெற்றிவீரர்களாகிய கஜினி முகமது, துஹ்ரில், மாலிக்ஷா, சலாவுதீன் முதலியோர்கள்மீதும் அப் பட்டம் வழங்கப்பட்டது. ஒரு தடவை சூடப்பட்டபின் அல்லது வழங்கப்பட்டபின் அது ஒரு பரம்பரைப் பட்டமாக மாறி யது. ஆனால், ஒருவர் இறந்து, இன்னொருவர் அப் பட்டத்தை அடைந்தபோது, முதன் முதலில் நடைபெற்ற சடங்குகள் செய்யப் பட்டன. பட்டம் கிடைக்கப்பெற்றவர்க்கு வழக்கமாகத் தரப் படுகின்ற தனிப்பட்ட சிறப்பு ஆடைகள் வழங்கப்பட்டன.

'ஒவ்வொரு முறையும் இப் பட்டம் வழங்கப்படுவதற்கு முன் னால் பட்டத்துக்கு உரியவர் அதற்காக விண்ணப்பம் செய்ய வேண்டும். அவ் விண்ணப்பம் அனேகமாக ஒப்புக்கொள்ளப்படுவது வழக்கம்.'[21] மஹமது கஜினியின் வழித்தோன்றல்கள் அனைவரும் சுல்தான் என்ற பட்டத்தைச் சூட்டிக்கொண்டனர். அதன்பின்

கலீஃபாவின் அழிவுக்குக் காரணமாயிருந்த, துருக்கியரும் மற்றைய அந்நியர்களும் நிறைந்த நிலைப்படையானது முதலில் அமைக்கப் பட்டது, கலீஃபா அல் முடாசிம் பில்லா (கி.பி.833-42) என்பவர் காலத்திலாகும்.

[21] Ibid., p. 412.

கோரி வம்சத் தலைவர்களும் அங்ஙனமே செய்தனர். ஆனால், சுல்தான் மஹமது கோரின் மரணத்துக்குப் பின்னர் மாநில அரசப் பிரதிநிதிகளும் இப் பட்டத்தைச் சூடிக்கொண்டனர். கிர்மான் என்ற மாநிலத்தின் ஆளுநராய் இருந்த தாஜுதீன் இல்திஷ் (Tajuddin Yildiz) என்பாரும், குத்புதீன் அய்பெக் (Qutb-uddin Aibak) என்பாரும் 'சுல்தான்' என்ற பட்டத்தைச் சூடிக்கொண்டனர். குத்புதீன் அய்பெக் என்பார் ஒரு புதிய அரச வம்சத்தையும் பேரரசையும் தோற்றுவித்த காரணத்தால், அப் பேரரசின் அரியணையில் அமர்ந்த ஒவ்வோர் அரசரும் சுல்தான் என்ற பட்டத்தைச் சூடிக்கொண்டார்கள். ஆனால், டில்லி சுல்தான்கள் தங்களுக்குப் பதவி வழங்கும்படி கலீஃபாவிடம் சில சமயம் கேட்பதுண்டு; ஏற்கெனவே இருக்கும் பதவியை நன்கு உறுதி செய்துகொள்வதற்காக அவர்கள் அங்ஙனம் செய்வது வழக்கம். இல்துமிஷ் (Iltutmish), ஃபிரோஸ் ஷா (Firoz Shah) போன்ற மன்னர்கள், தங்களது பட்டங்களை உறுதி செய்துதரும்படி பாக்தாத்திலிருந்த கலீஃபாவுக்கோ அல்லது எகிப்திலிருந்த கலீஃபாவுக்கோ விண்ணப்பம் செய்துகொண்டனர். ஆனால், அதன்மூலம் அவர்களின் உண்மையான அதிகாரமோ அல்லது பெருமையோ சற்றும் உயரவில்லை. என்றாலும், வேறொரு வகையில் அது முக்கியத்துவம் பெற்றது. உலகியல் துறையில் சுல்தான் பெற்றிருந்த அதிகாரத்துக்குச் சமயத்தின் சம்மதத்தையும் அறநெறியின் ஆதரவையும் ஒருங்கே பெற்றுத்தருவதுபோல் அது இந்திய முஸ்லிம்களுக்குத் தென்பட்டது. சுல்தான் மியூஜ் உத்தௌலா அஹமது என்பார் தமது பெயரை நாணயங்களில் பொறித்துக்கொண்டதாலும், குத்பா படிக்கப்பட்டபோது கலீஃபாவின் பெயரோடு அவரது பெயரும் சேர்த்து ஓதப்பட்டதாலும், டில்லி சுல்தான்கள் சிறிதும் அஞ்சாது தாங்களும் நாணயங்களில் பெயர்களைப் பொறித்துக்கொள்ளவும், குத்பாவைப் படிக்கும்போது தம் பெயர்களை வாசிக்கும்படி செய்யவும் முனைந்தனர். மஹமதுபின் துக்ளக்கைப்போன்ற சுல்தான்கள் குத்பா ஓதப்பட்டபோது கலீஃபாவின் பெயரையும் கூட ஓதுமாறு செய்தனர்.[22]

சுல்தான் வரம்பற்ற அதிகாரத்தைச் செலுத்துகின்ற ஓர் வல்லரசராகவே திகழ்ந்தார். ஆனால், உலேமாக்களும் முஜ்தாஹீதுகளும் சேர்ந்துகொண்டு அவரது அதிகாரத்தை ஓரளவு கட்டுப்படுத்தினர். சமயத்தைப்பற்றியும் சமயச் சட்டத்தைப்பற்றியுமான காரியங்களை அன்னாரின் தீர்ப்புக்கே விட்டுவிடுகிற பழக்கத்தை அப்பாஸித் மன்னர்கள் கைக்கொண்டிருந்தனர் என்று நாம் ஏற்கெனவே பார்த்தோம். அதே வழக்கம்தான் இந்தியா

[22] Elliot and Dowson, Vol. III, p. 250.

விலும் கடைபிடிக்கப்பட்டது. பெரும்பான்மையான சுல்தான் களால் புறக்கணிக்கப்படக்கூடாத ஒரு வகையான அதிகாரமாக அது திகழ்ந்தது. ஒருசில மிக வல்லமைவாய்ந்த சுல்தான்கள்கூட அவர்களின் பிடியில் சிக்கிப் பெரிதும் வாடினர். அபு ஜாஃபர் ஹாருன் வாஸிக் பில்லா (கி.பி. 842-849) (Abu Jaffar Harun Wasik b'Illah) போன்ற கலீஃபாக்களின் நன்முயற்சிகளே இத் தகைய சட்ட நிபுணர்களால்[23] தோற்கடிக்கப்பட்டனவெனின், டில்லி சுல்தான்களால் அவர்களை வெற்றிகரமாக எதிர்க்க முடியாமற் போனதில் விந்தையொன்றுமில்லை. அலாவுதீன் கில்ஜி, மகமது பின் துக்ளக் என்ற இருபெரு மன்னர் களைத் தவிர, வேறு எவருமே அவர்களுடைய ஆதிக்கத்தை மறுக்க முடியவில்லை. சமயச் சட்டங்களால் வரையறுக்கப்பட்டனவும், சமயச் சட்ட நிபுணர்களால் அறிவிக்கப்பட்டனவுமான விதிமுறை களுக்கு மாறாக நடக்க அவர்களில் எவருக்குமே துணிவில்லை. பிற்போக்குவாய்ந்த சட்ட நிபுணர்களால் அவ்வரசர்கள் எங்ஙனம் ஆட்டிவைக்கப்பட்டனர் என்பதை பிரோஸ் ஷா துக்ளக்கின் நடவடிக்கையினின்று நன்கு புரிந்துகொள்ளலாம். அவர் கூறிய தாகச் சொல்லப்படும் சொற்கள் வருமாறு: ''டில்லி யில் ருக்னுதீன் (Ruknuddin) எனும் மனிதர் ஒருவர் இருந்தார். அவரை எல்லோரும் 'மஹ்தி' என அழைத்தனர்...இயற்கைக்கு மாறான ஆன்மீக சாதனங்களைக் கைக்கொண்டும், ஏறுக்கு மாறான கருத்துகளைப் போதித்துக்கொண்டும் அவர் மக்களைத் தப்பான வழிகளில் இட்டுச் செல்லலானார். கடவுளின் தூதுவரான ருக்னுதீன் என அவர் தம்மைத் தானே அழைத்துக்கொண்டார். மூத்தோர்கள் இச் செய்திகளையெல்லாம் என் கவனத்துக்குக் கொண்டுவந்தனர். அவர் கூறியவற்றில் தாங்களே நேரில் கேட் டறிந்தவற்றை அவர் எனக்குச் சான்றாக எடுத்துக்காட்டினர். அதன்பின் அவரை என் முன்னிலையில் கொண்டுவரும்படி செய்து நன்கு விசாரித்தேன். அவர்மீது சாட்டப்பட்ட குற்றங் களுக்கும் இறுக்குத்தனத்துக்கும் பதில் கூறும்படி கேட்டேன். அதன்பின் அவர்மீது சமயத்துக்கு முரணாகப் போன குற்றமும் (heresy) தவறு செய்த குற்றமும் (error) சாட்டப்பட்டன. சட்ட வல்லுநர்கள் அவரைச் புறச்சமயி (infidel) எனக் கூறினர். இஸ்லாமிய மக்களிடையே அத்தகைய கீழானவும் விஷமத்தன மானவுமான கருத்துகளைப் பிரசாரம் செய்ததற்காக அவருக்கு மரண தண்டனை விதிப்பதே தகுந்தது என அவர்கள் கூக்குரலிட லாயினர்...அதன்பின் புனிதச் சட்டங்களை நன்கு கற்றுணர்ந்த பேரறிஞர்களின் தீர்ப்புக்கிணங்கக் குற்றம் செய்தவர் தண்டிக்கப்

[23]Ameer Ali, 'A Short History of the Saracens', p. 286.

பட வேண்டுமென...நான் ஆணையிட்டேன்...''[24] குஜராத்தில் வாழ்ந்த ஒரு ஷேக்கும் இவ்விதமே நடத்தப்பட்டார். அவர் பெயர் அய்ன் மஹ்ரு (Ain Mahru) என்பதாகும். அவர் 'அனல் ஹக்' (Ana-l-Hakk), அதாவது, 'நானே கடவுள்' என அடிக்கடி கூறிக்கொள்வது வழக்கம். அதுவே அவர் செய்த குற்ற மாகும்.

(a) **சுல்தான் நீதி, கௌரவம் ஆகியவற்றின் பிறப்பிட மாகவும், நிலத்துக்கும் நீருக்கும் இறைவராகவும் விளங்கல்:** இங்கே கூறப்பட்ட செய்திகளிலிருந்தும், ஏனைய சுல்தான் களின் நடவடிக்கைகளிலிருந்தும் சுல்தானே நாட்டினுடைய தலைமை நீதிமன்றமாக விளங்கினர் என்று நிச்சயமாகக் கூறலாம்; அது இஸ்லாமியக் கோட்பாட்டுக்கும் ஒத்ததாயிருந்தது. இஸ்லாமியச் சட்டப்படிக்கும் சட்ட அறிஞர்கள் கூறிய பொருள் விளக்கத்துக்கும் ஏற்பவே நீதியானது வழங்கப்படவேண்டியிருந்த தால், அரசே நீதியின் பிறப்பிடம் என்பதை இஸ்லாம் ஒத்துக் கொண்டது. கௌரவத்துக்கெல்லாம் அவரே பிறப்பிடமானவர் என்றும் அது கூறியது. ஏனெனில், குப்பையில் கிடந்த ஒரு மனிதனைக்கூட அரசாங்கத்தில் மிக உயர்ந்த பதவிக்கு உயர்த்தக் கூடிய அதிகாரம் அவரிடத்தே இருந்தது. கலீஃபாக்களைப் போன்றே சுல்தான்களும் தங்களுக்கென்று சொந்தமாக அமீர்கள், அமீருல் உமராக்கள், மாலிக்குகள் போன்றவர்களை வைத்துக் கொண்டனர். அலாவுதீனைப்போன்ற சுல்தான் ஒருவர் அலியாக இருந்த காபூல் என்பவரை மாலிக்காக[25] மட்டுமன்றி நயிபாகவும் (Naib), அதாவது, பேரரசரின் பிரதிநிதியாகவும் நியமிக்க முடிந்தது. மாலிக் என்ற பட்டமானது கண்ணியத்திலும் முக்கியத் துவத்திலும் சுல்தான் பதவிக்குச் சமமானதாய் இருந்தது.[26] மற் றும் நாட்டின் சுல்தானாக விளங்கியவரே அந் நாட்டிலிருந்த நிலம், நீர் யாவற்றுக்கும் இறைவராகவும் திகழ்ந்தார். அவர் விருப்பப் படி நிலங்களை மானியமாக வழங்கலாம் அல்லது அவருக்கு விருப்பமானபோது எந்த வகையான சொத்துகளையும் பறிமுதல் செய்யலாம். அலாவுதீன் என்பார் பின்வரும் உத்தரவு ஒன்றைப் பிறப்பித்ததாகக் கூறப்படுகிறது: 'எங்கேயாவது ஒரு கிராம

[24] Elliot & Dowson, Vol. III, p. 379.

[25] Ibid., p. 201.

[26] மாலிக் என்பது ஓர் அராபியச் சொல்லாகும். முதன் முதலில் அது அலெப்போவின் அரசரான நூருடீன் மகமது என் பார் மீது கலீஃபா அல் முக்தாஃபி பிமார் இல்லா என்பாரால் வழங்கப்பட்டது (கி.பி. 1135-1160). 'A Short History of Saracens,' pp. 341-42.

மானது சொந்த உரிமையின்படியோ (மில்க்), இனுமாகவோ அல்லது மானியமாகவோ (வாஃப்) ஒருவரால் வைத்துக்கொள்ளப்பட்டிருக்குமாயின், அந்தக் கிராமமானது அரசாங்கக் கருவூலத்தில் சேர்க்கப்படுவதாக'[27] மேற்சொன்ன விளக்கத்துக்கு உட்பட்ட எல்லா நிலங்களையும் அலாவுதீன் பறிமுதல் செய்தார். தமது ஆட்சியின் இரண்டாவது ஆண்டில் அலாவுதீன் தமக்கு முன்பு ஆண்ட சுல்தானது காலத்தில் இருந்த மாலிக்குகள், அமீர்கள் ஆகியோரின் சொத்துகளை யெல்லாம் பறிமுதல் செய்தார். அவர்களுடைய வீடுகளெல்லாம் கொள்ளையடிக்கப்பட்டன. அவர்களது கிராமங்களெல்லாம் அரசாங்கக் கருவூலத்தின் உடைமையாக்கப் பட்டன.[28] உண்மையிலேயே சுல்தான் நாட்டில் இறைவராக விளங்கினர்; ஏனெனில், அவரே நாட்டின் படைத்தலைவராகவும் இருந்தார். ஆனல், சுல்தான் ஓர் ஆற்றல் மிக்க, வல்லமை வாய்ந்த மனிதராக இல்லாதபோது அவரது அதிகாரத்தைப் பிரபுக்கள் வெற்றிகரமாக எதிர்க்க முன்வந்தனர். ஏனெனில், பிரபுக்களும் அக் காலத்தே படைகளை வைத்திருந்தார்கள். இடைக்கால ஐரோப்பாவின் பிரபுக்களைப்போல அவர்களும் ஏராளமான நிலங்களை அல்லது ஜாகீரை மானியமாகப் பெற்றிருந்தனர். அம் மானியத்திற்குப் பதிலாக ஓர் குறிப்பிட்ட அளவு படைப்பகுதியை அவர்கள் வைத்துப் பராமரிக்கவேண்டியிருந்தது. அவசியமானபோது அவர்கள் சுல்தானுக்கு அப் படையைக்கொண்டு ஊழியம் செய்தல் வேண்டும். படைபலமும் பணபலமும் ஒருங்கே கொண்டிருந்த அப் பிரபுக்கள், மன்னரை எதிர்க்கக்கூடியவர்களாகவும், அவரது தனித் தலைமைக்குப் பேரிடர் விளைவிப்பவர்களாகவும் இருந்தனர்.

(b) **தொழுகையின்போது சுல்தானின் தலைமை—இமாமின் முக்கியத்துவம்:** சமயத்துறையில் கலீஃபா செலுத்திவந்த இறைமையைக் கொண்டாட சுல்தானுக்குக் கொள்கையளவில் உரிமை எதுவுமில்லை எனினும், தொழுகை நடைபெற்றபோது அவரே அதற்குத் தலைமை தாங்கி நடத்தினர். அவர் வகித்துவந்த பதவியின் காரணமாக அவ்வுரிமை அவருக்கு வந்துற்றது. கலீஃபாவின் வாலிசுகள் (Walis) அல்லது நயிபுகள் (Naibs), அதாவது, மாநில ஆளுநர்கள் தாம் ஆட்சி புரிந்துவந்த இடங்களில் பொதுத் தொழுகைகள் அல்லது பேராலயத் தொழுகைகள் (Cathedral Service) நடைபெற்றபோது அவைகளுக்குத் தலைமை தாங்கி நடத்தலும், வெள்ளிக் கிழமைகளில் திருவுரை (குத்பா) நிகழ்த்தலும் நெடுநாளாகவே நன்கு நிலைநாட்டப்பட்ட வழக்கமாக

[27] Elliot & Dowson, Vol. III (Tarikhi Firoz Shahi), p. 179.
[28] Ibid., p. 163.

இருந்துவந்தது. எனவே, இந்திய சுல்தான்களுடம், பொதுத் தொழுகைகளைத் தலைமை தாங்கி நடத்தவும், வெள்ளிக் கிழமை களில் திருவுரைகளை ஆற்றவும் உரிமை பெற்றிருந்தனர். உண் மையில் டில்லியில் வழிபாடுகளை நடத்தியவர்கள் அதற்கென்றே தனிப்பட்ட முறையில் நியமிக்கப்பட்டிருந்த இமாம் என்ற அதிகாரியேயாவர். இமாமால் நடத்தப்பெற்ற தொழுகையில் சுல்தான்கள் வந்து கலந்துகொண்டனர்; அவ்வளவுதான். சுல்தான்கள் தலைநகரில் இல்லாத சமயங்களில், தொழுகையின் போது அவர்கள் இருக்கவேண்டிய இடத்தில், அவர்களது நயிபுகள் அல்லது பிரதிநிதிகள் இருந்து அதை நடத்தினர். வெள்ளிக் கிழமைகளிலோ அல்லது ஈத் (Id) விடுமுறை நாள் களிலோ, பொதுத் தொழுகை நடைபெற்ற வேளைகளில், சுல்தான்கள் அவற்றில் கலந்துகொண்டதெல்லாம் பெரிதும் அரசியல் காரணங்களுக்காகவேயன்றி வேறு சமய நோக்கங் களால் உந்தப்பட்டுச் செய்தார்களெனக் கூறுவதற்கில்லை. இங் ஙனம் இமாம் பதவியானது நாட்டின் மிக முக்கியமான பதவி களில் ஒன்ருய் மதிக்கப்படலாயிற்று.

**(c) மன்னர் மக்களால் தேர்ந்தெடுக்கப்படும் மரபுகள் மாறி, நியமன முறை வழக்கத்துக்கு வருதல்:** மன்னர் மக்களால் தேர்ந்தெடுக்கப்படவேண்டும் என்ற கொள்கையே முஸ்லிம் களிடையே ஆதியில் நிலவியது. ஆதி கலீஃபாக்கள் அனைவரும் அங்ஙனம் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களேயாவர். ஆனல், அந்த மரபானது நாளடைவில் கைவிடப்பட்டது. கலீஃபாப் பதவியானது ஒரு பரம்பரைப் பதவியாக மாறியது. அல் ஜஹிலியாக் (al-Jahiliya) காலத்தில், அதாவது, அரேபியாவில் இஸ்லாம் சமயம் தோன்ருத காலத்தில், அங்கு வாழ்ந்த பழங்குடி மரபினர் (tribes) தங்களது தலைவர்களைத் தாங்களே தேர்ந் தெடுத்துக்கொள்வது வழக்கமாயிருந்தது. ஆனல், உமயதுகள் (Umeyyads) கலீஃபாப் பதவியைக் கைப்பற்றிய பின்பும், ஹரூன்-அல்-ரஷீத் (Harun-al Rashid), அல்மாமுன் (al-Mamun) முதலிய பெரும் அப்பாசித் அரசர்கள் காலத்தும், மன்னர்கள் தேர்ந் தெடுக்கப்படும் பழக்கமானது மாறி அவர்கள் உண்மையில் நியமிக்கப்படுகின்ற வழக்கம் வந்துற்றது. இது உண்மை என்பது அல்மாமூன் எனும் அரசர் ஒரு சமயம் கரிஜி (Khariji) தலைவ ரொருவர்க்குக் கூறிய மாற்றத்திலிருந்து நன்கு புலனுகிறது. கரிஜி தலைவர் ஒரு நாள் அரசர் கொலுவீற்றிருந்த மண்டபத் தில் யாவருமறிய அரசரை விளித்து, 'தாங்கள் அமர்ந்துள்ள அரியாசனம் எத் தன்மைத்து என அறிய விரும்புகிறேன். மக்க ளுடைய ஒருமித்த இசைவினைப் பெற்றுத் தாங்கள் அங்கு

அமர்ந்துள்ளீர்களா அல்லது வன்முறையாலும் படைவலியாலும் அவ்விருக்கையைக் கைப்பற்றினீர்களா கூறுங்கள்' எனக் கேட்டார். உடனே அல்மாமுன் அதற்கு மறுமொழியாக, 'நீ கூறிய இரண்டில் எதனுலும் நான் அரியணையை அடையவில்லை. ஆனல், முஸ்லிம் மக்களின் காரியங்களைப் பார்த்துக்கொண்டு அவர்களை ஆண்டுகொண்டிருந்த ஒருவர் அதை எனக்கும் எனது உடன்பிறந்தார்க்கும் பரம்பரைச் சொத்தாக வழங்கிச் சென்ருர். அங்ஙனம் என்மீது அரசபாரம் வந்து வீழ்ந்தபோது, மக்களுடைய ஒருமுகமான சம்மதத்தைப் பெற்று அதை மேற்கொள்ளுதலே சாலச் சிறந்ததென்பதை உணர்ந்தேன். ஆனல், எக் காரணத்தை முன்னிட்டும் நான் அரசாட்சியைக் கைவிட்டேனுகில் இஸ்லாமுக்கு ஆபத்து விளையும் என்பதையும், பெருவழிகளில் கொள்ளைக் கூட்டத்தினர் நிரம்பி வழிய ஆரம்பித்துவிடுவர் என்பதையும், பொதுக் காரியங்கள் அனைத்தும் குழப்பத்தில் ஆழ்ந்துவிடுமென்றும் உணர்ந்தேன்......எனவே, நான் மக்களைக் காப்பாற்றுவான் வேண்டி எழுந்தேன். அவர்கள் தாங்களாகவே வரித்துக் கொண்ட ஒருவர் வரும்வரை அவர்களைக் காப்பது என் கடமை எனக் கருதினேன்......இப்பொழுதுங்கூட அவர்களால் ஒப்புக் கொள்ளப்பட்ட ஒரு மனிதர் வருவராகில் நான் இப் பதவியிலிருந்து விலகிக்கொள்கிறேன்'[29] எனக் கூறினர். ஒரு கலீஃபா இங்ஙனம் செய்து காட்டியதை இயல்பாகவே ஏனையோரும் பின்பற்ற ஆரம்பித்தனர். ஆனல், மன்னர் மக்களால் தேர்ந்தெடுக்கப்படும் வழக்கமும் நடுநடுவே கடைப்பிடிக்கப்பட்டது. துருக்கியத் தலைவரும், அமீர் சபுக்டிஜினுடைய எஜமானருமான பில்கதீஜின் (Bilkatigin) என்பவரின் மரணத்துக்குப்பின் அவரது வழித்தோன்றலான அமீர் பாரி (Amir Pari) என்பார் பட்டத்துக்கு வந்தார். ஆனல், அவரது தீநடத்தையின் (ஃபசாத்—fasad) விளைவாக மக்கள் அனைவரும் அவர்மீது வெறுப்படைந்தனர். எனவே, 'ஒருமித்த கருத்துடன் அவர்கள் சபுக்டிஜின் என்பாரைக் கஜினியின் தலைவராகத் தேர்ந்தெடுத்தனர்.'[30] கஜினி மகமதுவின் பெயரனை மௌதூத் (Maudud) என்பாரின் மரணத்துக்குப்பின் மசூத் என்பாரின் மகனை அலியும், மௌதூத்தின் மைந்தனை மகமதுவும், அதாவது, 'மாமனும் மருமகனுமான இருவரும், துருக்கியர்களாலும் பிரபுக்களாலும் சோடியாக அரியணையில் ஏற்றப்பட்டனர்.'[31] மொய்சுதின் பஹராம் ஷாவுக்குப் பின்னர் அலாவுதீன் மாசூத் ஷா (கி.பி. 1242-46) என்பாரை

---

[29] Ameer Ali, 'A Short History of the Saracens', p. 281.
[30] Elliot & Dowson, Vol. II, 'Tabkati Nasiri,' p. 268.
[31] Ibid., p. 274.

மக்கள் தேர்ந்தெடுத்ததிலிருந்து, பொதுமக்களின் கருத்துக்கு எவ்வளவு வலிமை உள்ளதென்பதை நாம் நன்கு உணரலாம். இப்படித்தான் தளபதிகளும் பிரபுக்களும் சேர்ந்து அலாவுதீனை அரியணையில் அமர்த்தினர். 'ஏற்கெனவே மாலிக் இஜூதீன் பால்பன் (Malik Izzuddin Balban) எனும் அரசர் அரியணையில் அமர்ந்துகொண்டிருந்தார். நகரனைத்திலும் தானே மன்னரென்று பறையறையும்படி பால்பன் ஆணையிட்டார். எனினும், அதை மக்கள் ஒப்புக்கொள்ளவில்லை.'[32] ஃபிரோஸ் ஷா துக்ளக்கும் இங்ஙனம்தான் தளபதிகள், பிரபுக்கள் ஆகிய அனைவருடைய ஒருமித்த இசைவின்பேரில் அரியணையில் ஏற்றப்பட்டார். அச் சமயம், மகமது துக்ளக்கின் சகோதரியின் மைந்தர் ஒருவர் மன்னராதற்குரிய உரிமையைப் பெற்றிருந்தார். அவரது பெயர் தாவார் மாலிக் (Dawar Malik) என்பதாகும். அவரைப் புறக் கணித்துவிட்டே பிரபுக்களும் தளபதிகளும் ஃபிரோஸ் ஷாவை சுல்தானாக்கினர். ஃபிரோஸ் ஷாவுக்கு உண்மையில் சுல்தான் பதவி மீது அப்போது ஆசையில்லை. எனினும், அவரது விருப்பத்துக்கு விரோதமாகவே அவர்மீது சுல்தான் பதவி சுமத்தப்பட்டது.[33] எனவே, டில்லி சுல்தானியப் பதவியை அடைதற்குரிய வழி நியமன வழியேயன்றித் தேர்தல் வழியன்று என்று அறுதியிட்டுக் கூறலாம். சுல்தான்கள் சில சமயங்களில் மரணப் படுக்கையி லிருந்த மன்னர்களால் நியமிக்கப்பட்டனர்; வேறு சில சமயங் களில் அவர்கள் பிரபுக்களாலும் தளபதிகளாலும் நியமிக்கப் பட்டனர். அங்ஙனம் நியமிக்கப்பட்ட பின்பே மக்களின் சம்மதத்தை மன்னர்கள் பெறுதல் வழக்கம். இத்தகைய கொள் கையையே மாமுன் என்பார் கரிஜித் தலைவருக்கு நன்கு திறமை யோடு எடுத்துக்கூறினர். ஆனல், நடைமுறையைப் பொறுத்த வரையில் சுல்தான் பதவியானது கலீஃபாப் பதவியைப்போல இரத்தம் சிந்திய போராட்டங்களின்மூலமாகவே அடையப் பெற்றது அல்லது ஆற்றல் மிகுந்த படைத்தலைவர்களாலும் பிரபுக்களாலும் அது தீர்மானிக்கப்பட்டது. மன்னரொருவரது மரணத்துக்குப்பின் யார் பட்டத்துக்கு வருவது என்பது டில்லி யில் எங்ஙனம் தீர்மானிக்கப்பட்டது என்பதற்கு அலாவுதீன் கில்ஜி, மகமது பின் துக்ளக் ஆகியோர் பதவியைக் கைப்பற்றக் கடைப்பிடித்த முறைகளும், 'நாற்பதின்மர்' (The Forty) என்ற துருக்கிய அடிமைகள் பட்ட உரிமையைத் தீர்மானிப்பதில் செலுத்திய செல்வாக்குமே சிறந்த சான்றுகளாகும். இவைகள் பாக்தாத்தில் அதே காரணத்துக்காக நடைபெற்ற நிகழ்ச்சிகளை

[32] Ibid., p. 342.

[33] Ibid., Vol. III (Tarikhi Firoz Shahi), p. 276.

நமக்கு நினைவுறுத்துகின்றன. அதனோடு கோட்பாட்டுக்கும் நடைமுறைக்கும் எவ்வளவு தூரம் வேறுபாடு காணப்பட்டது என்பதையும் அவை நமக்குத் தெள்ளிதின் புலப்படுத்துகின்றன.

(ii) **பிரபுக்கள்**

மன்னருக்கு அடுத்தபடியாகப் பிரபுக்கள் பெருமையுடன் விளங்கினர். அவர்கள் அரசரிடமிருந்து பரப்பு மிக்க ஜாகீர்களையும், சிறப்பு மிக்க பட்டங்களையும், பெரும் பெருஞ் சேனைகளின் தலைமைப் பதவிகளையும், ஆளுநர் பதவிகளையும் பெற்றிருந்தனர். பால்பனது ஆட்சிக் காலத்தில் 'பழையனவும் புதியனவுமான எல்லாவகைக் குதிரைப் படைகளும் காலாட்படைகளும், அநுபவம் நிறைந்த மாலிக்குகள் தலைமையின்கீழும், வீரதீரமும் விசுவாசமும் நிறைந்தவர்களாய்த் தங்கள் தொழிலில் முதன்மையாகத் திகழ்ந்த தலைவர்களின் கீழும்தாம் அமைக்கப்பெற்றிருந்தன'.[34] பட்டத்துக்கு வரும்போதோ, அல்லது வெற்றிகளைப் பெறும்போதோ, சுல்தான் பல பதவியுயர்வுகளையும் பட்டங்களையும் வழங்குவது வழக்கம். அலாவுதீன் அரியணை ஏறியபோது 'அவரது சகோதரனுக்கு உலுஃ கான் (Ulugh Khan) என்ற பட்டத்தையும், மாலிக் நுஸ்ரத் ஜலேசரி (Malik Nusrat Jalesari) என்பவருக்கு நுஸ்ரத் கான் (Nusrat Khan) என்ற பட்டத்தையும், மாலிக் ஹுஸாபாருடீன் (Malik Huzabbaruddin) என்பவருக்கு ஜஃபர் கான் (Zafar Khan) என்ற பட்டத்தையும், ஆமீரே மஜ்லிஸாயிருந்தவரும் (Amir-i-Majlis) தமது மனைவியின் உடன்பிறந்தாருமாகிய சஞ்சார் (Sanjar) என்பவருக்கு அல்ப் கான் (Alp Khan) என்ற பட்டத்தையும் வழங்கினர். தன்னுடைய நண்பர்களையும் முக்கிய ஆதரவாளர்களையும் அவர் அமீர்களாக நியமித்தார். ஏற்கெனவே அமீர்களாயிருந்தவர்களை அவர் மாலிக்குகளாக நியமித்துப் பதவியுயர்வு தந்தார். அவரோடு ஒட்டிக்கொண்டிருந்த பழைய நண்பர்கள் அனைவருமே நல்ல பதவிகளுக்கு உயர்த்தப்பட்டனர். அதனோடு தம்மைச் சார்ந்த பிரபுக்களான கான்கள் (Khans), மாலிக்குகள் (Maliks), அமீர்கள் (Amirs) யாவருக்கும் அவர் நிறையப் பணம் கொடுத்து, அதைக்கொண்டு புதிய குதிரைகளையும் வேலையாள்களையும் வாங்கிக்கொள்ளுமாறு செய்தார்'.[35] அதேபோன்று குவாலியர் நாட்டை வென்றபின் இல்தத்மிஷ் எனும் சுல்தான் பிரபுக்களுக்கும், பெரும் அதிகாரி

---

[34] Ibid., p. 157.
[35] Ibid., p. 157.

களுக்கும் பதவியுயர்வு வழங்குமாறு பணித்தார். 'மாலிக் ஜியாவுதீன் மகமது ஜுனெய்தி (Malik Ziauddin Muhammed Junaidi) என்பவர் தலைமை நீதிபதியாகவும் சேனாதிபதி யாகவும் நியமிக்கப்பட்டார். ரஷீதுதீன் (Rashid-uddin) என்பார் கொத்தவாலாக நியமிக்கப்பட்டார். இவ் வாட்சி யின்மீது நல்லெண்ணமுடைய மின்ஹஜ் சிராஜ் (Minhaj Siraj) என்பவர் சட்ட அதிகாரியாக (Sadar) நியமிக்கப் பட்டதோடு, சமயப் பிரசாரத்தை மேற்பார்வையிடும் அதிகார மும், சமய, அறநெறி, நீதி சம்பந்தமான எல்லாக் காரியங் களையும் கண்காணிக்கின்ற பொறுப்பும் அவரிடம் ஒப்படைக்கப் பட்டன'[36].

### (iii) ஜாகீர் முறை

பிரபுக்களில் மூன்று வகுப்பினர் இருந்தனர். ஏறுவரிசையில் கூறும்போது, அவர்களை அமீர்கள், மாலிக்குகள், கான்கள் என அழைக்கலாம்.[37] அலாவுதீன் அரியணை ஏறியபோது அவர் தமது நண்பர்களையும் முக்கிய ஆதரவாளர்களையும் அமீர் பத விக்கு உயர்த்தினர். அமீர்களாய் ஏற்கெனவே இருந்த நண்பர்களை மாலிக்குகளாகவும், மாலிக்குகளாயிருந்தவர்களை கான்களாகவும் உயர்த்தினர்.'[38] இந்தப் பிரபுக்கள் பெரும் பெரும் ஜாகீர்களுக்குச் சொந்தக்காரர்களா யிருந்த தோடு பெருஞ் சேனைகளையும் வைத்திருந்தனர். பால்பன் காலத்தே சர்-ஜான்தாராக (Sar-jandar) இருந்த மாலிக் பக்பக் (Malik Bakbak) என்பார் 'நாலாயிரம் குதிரைகளுக் குரிய ஜாகீரையும், படௌன் (Badaun) என்ற மானிய நிலப் பகுதியையும்'[39] கொண்டிருந்தார். சுல்தான் மகமது பின் துக்ளக் அரசு எய்தியபோது, பதினெட்டு ஆண்டுகளே நிரம்பப் பெற்றிருந்த ஃபிரோஸ் துக்ளக்கை அரண்மனை முதன்மைப் பிரபுவின் துணைவராக (Deputy of the Lord Chamberlain), அதாவது, நாயிபி அமீர் ஹஜீபாக (Naib-i-Amir Hajib) நியமித்த தோடு, நாயிப் பார்பக் (Naib Barbak) என்ற பட்டத்தையும், 12,000 குதிரை வீரர்களுக்கு அதிபதி என்ற படைத்தலைமையை யும் அவருக்கு நல்கினர்.[40] அலாவுதீன் மசூத் ஷாவின் (கி.பி. 1242)ஆட்சிக் காலத்தில், நாகோர் (Nagor), மண்டவர் (Mandawar), ஆஜ்மீர் (Ajmer) எனும் மாவட்டங்கள் மாலிக் இஜ்ஜுடின்

[36] 'Tabkati Nasiri,' Ibid., Vol. II, p. 327.
[37] Ibid., Vol. III (Tarikhi Firoz Shahi), p. 157.
[38] Ibid., p. 99. [39] Ibid., p. 101.
[40] Ibid., p. 274.

பால்பன் (Malik Izzuddin Balban) என்பாருக்கும், பதௌன் என்ற நாடானது மாலிக் டாஜுடின் சன்சார் கட்லக் (Malik Tajuddin Sanjar Katlak) என்பாருக்கும்[41] வழங்கப்பட்டன. உண்மையிலேயே பிரபுக்களுக்கு ஜாகீர் வழங்கும் வழக்க மானது டில்லி சுல்தானியர்களின் ஆட்சியின்கீழ்ப் பெருவாரியாகக் கைக்கொள்ளப்பட்டது. சுல்தான் பால்பன் ஒரு சமயம் தமது அரிஸ் (Ariz) எனும் அதிகாரியை (படைவீரர்களை ஒன்று திரட்டும் அதிகாரி) அழைத்து, நிலமானியம் வழங்கப்பெற்ற ஷாம்ஸி (Shamsi) இராணுவ வீரர்களைக் கணக்கெடுத்து, அவர்தம் பெயர்ப் பட்டியல் ஒன்றைத் தயாரிக்குமாறு ஆணையிட்டார். அதிலிருந்து உண்மையிலேயே இராணுவ ஊழியம் செய்த மானியதாரர்கள் எத்தனை பேர், ஊழியம் எதுவுமே செய்யமுடியாதவர்கள் எத்தனை பேர், இன்னும் எந்தவிதமான இராணுவ ஊழியத்தையும் செய் தறியாதவர்கள் எத்தனை பேர் என்பதைக் கண்டறிந்துகொள்ள அவர் விரும்பினார். அதன்படியே அப் பட்டியலிலிருந்து 'ஷம்சுதீன் (இல்துமிஷ்) படையினைச் சேர்ந்த சுமார் இரண்டா யிரம் குதிரை வீரர்கள் தோயாப் (Doab) பள்ளத்தாக்கில் கிராமங்களைச் சம்பளமாகப் பெற்றிருந்தனர்'[42] என்பது அவருக்குத் தெரியவந்தது. அலாவுதீன் கில்ஜி, ஆட்சியைக் கைப் பற்றிய சின்னாள்களுக்குள்ளாக, தமக்கு முன்பு ஆண்டுவந்த சுல்தானுக்குத் துரோகம் இழைத்த பிரபுக்களையெல்லாம் கண் களைக் குருடாக்கிக் கொன்று குவித்தார். 'அவர்களின் வீடுகளை யெல்லாம் அவர் பறிமுதல் செய்தார். அவர்களின் கிராமங்கள் யாவும் பொதுக் கருவூலத்தின் கண்காணிப்புக்குள் கொண்டுவரப் பட்டன.'[43]

ஃபிரோஸ் ஷாவைப்பற்றி ஜியாவுடீன் பரனி என்பார் எழுது கையில், 'சுல்தான் தாராள சிந்தை உள்ளவர். வருமானங்களை வழங்குவதில் அவர் மிகமிகத் தாராளமாயிருந்தார்......ஒரு சிலருக்கு அவர் 10,000 டங்காக்களும், வேறு சிலருக்கு 5,000 டங் காக்களும், இன்னும் சிலருக்கு 200 டங்காக்களுமாக அவரவர் களின் பதவிகளுக்கேற்ப அவர் பொருள் வழங்கினார்....சுல்தான் அலாவுதீன் இவ் வழக்கத்தைப்பற்றிச் சற்று மனம் ஒப்பாமலேயே பேசுவது வழக்கம்.'[44] அலாவுதீன் ஒருவர்தாம் இவ் வழக் கத்தை ஒப்புக்கொள்ளாததுமட்டுமன்றி அதைத் தடுக்கவும் நடவடிக்கைகளை எடுத்துக்கொண்டவர். ஆனால், அவரால்கூட

---

[41] 'Tabkati Nasiri', Ibid., Vol. II, p. 342.

[42] 'Tarikhi Firoz Shahi', Ibid., Vol. III, p. 107.

[43] Ibid., p. 163.

[44] Ibid., p. 289.

அதை முற்றிலும் ஒழிக்க முடியவில்லை. ஏனெனில், கிராமங்களைத் தானமாக அவரே வழங்கியுள்ள சில சந்தர்ப்பங்களை நாம் அறிவோம். அலாவுல் முல்க் (Alaul-Mulk) என்ற டில்லி கொத்தவால் அலாவுதீனுக்குச் சில நல்ல அறிவுரைகளைப் புகன்றபோது அவருக்கு இனாம்கள் கிடைத்தன. புதிய மதம் ஒன்றைத் தோற்றுவிக்க வேண்டுமென்றும், உலகமனைத்தையும் வென்றுவிட வேண்டுமென்றும் அலாவுதீன் கனவு கண்டுகொண்டிருந்தபோது, அக் கனவுகளையெல்லாம் விட்டுவிடும்படி அலாவுல் முல்க் அவருக்கு அறிவுரை புகன்றார். அதை அலாவுதீன் ஏற்றுக்கொண்டு, அவருக்கு இரண்டு கிராமங்களை இனாமாக வழங்கினார்.[45] ஆனால், அலாவுதீனால் பறிமுதல் செய்யப்பட்ட ஜாகீர்களின் எண்ணிக்கைக்கு அதிகமான ஜாகீர்களை ஃபிரோஸ் ஷா தமது அரசாங்க அதிகாரிகளுக்கு வழங்கினார். ஜாகீர் வழங்கும் வழக்கம் நாடெங்கும் பரவியது. ஆட்சித் துறையில் திறமை குன்றுவதற்கும், பொதுவாக எல்லாத் துறையிலும் ஓர் நலிவு ஏற்படவும், அவ்வழக்கம் ஒரு பெருங் காரணமாயமைந்தது. ஏனெனில், ஜாகீர் முறையால் பரம்பரையாகப் பதவி வகிப்போரின் எண்ணிக்கை பெருகிற்று. பரம்பரைப் பதவி எங்கு ஏற்படுகிறதோ அங்கு ஊழலும் திறமைக் குறைவும் அரசாங்கத்தில் தோன்றுவது இயல்பு. அவ் விதிக்கு ஃபிரோஸ் ஷாவின் அரசாங்கமும் விலக்காக இல்லை. ஃபிரோஸ் ஷா, ஜாகீர்களைத் தாராளமாக வழங்கினதுமட்டுமல்லாமல் ஜாகீர்தாரர் இறந்துபோனால் அவரது ஜாகீர் யாருக்கு வழிமுறையாகச் செல்லவேண்டும் என்பதுபற்றியும் ஒரு விதியை வகுத்துவிட்டிருந்தார். அதன்படி படையில் பணிபுரிந்துவந்த ஒருவர் திடீரென இறந்துபோனால் அல்லது பணிபுரியமுடியாத ஒரு நிலையை அடைந்துவிட்டால், அவரது மைந்தன் அவரது பதவியைப் பெறவேண்டும்; அவருக்கு மகன் இல்லாதிருந்தால் மருமகனுக்கு அப் பதவி செல்லவேண்டும்; மருமகனும் இல்லாமற்போனால் அவரது அடிமை அப் பதவியைப் பெறலாம்; அடிமை இல்லையானால் அவரது மிக நெருங்கிய உறவினருக்கு அப் பதவி கொடுக்கப்படவேண்டும்; உறவினர்களும் இல்லையானால் அவரது மனைவிகள் அதனைப் பெறலாம்.[46] ஜாகீர்கள் வழிவழியாக வருவதைக் கட்டுப்படுத்துவதற்காகவென இவையெல்லாம் ஏற்பட்ட காரணத்தால், வரலாற்றாசிரியர், 'அவரது (ஃபிரோஸ் ஷா) ஆட்சிக் காலம் முழுவதிலும் அவர் ஓர் கொள்கையைக் கடைப்பிடித்தார். அதன்படி ஒருவனுடைய வழியுரிமையானது (succession) எல்லா வகையான சூழ்நிலை

---

[45] Ibid., p. 171.

[46] Ibid., p. 289.

களிலும் தெளிவாகத் தீர்மானிக்கப்பட வேண்டுமென்பதை அவர் ஓர் விதியாக ஏற்படுத்தினர்[47] என்று குறிப்பிடுகின்றார். இதிலிருந்து, ஜாகீர் முறையானது எவ்வளவு பரவலாக நாட்டில் இருந்தது என்பது தெரிகிறது. அப்படி இருந்தபோதிலுங்கூட, சுல்தானே எல்லா உடைமைகளுக்கும் சொந்தமானவராயும், நிலம், நீர் யாவற்றிற்கும் அவரே தலைவராயும் கொள்கையளவில் மட்டுமன்றி நடைமுறையிலும் திகழ்ந்தார். அவர் விரும்பி அளித்த உடைமையை அவர் வேண்டியபோது திருப்பப் பெற்றுக் கொள்ளலாம். ஆகையால்தான், பற்பல சொத்துகள் பல சமயங் களில் அரசரது கருவூலத்தோடு தாமாகவே சேர நேர்ந்தது. பிரபுக்கள் இறந்தவுடன் அவர்களின் உடைமைகள் யாவும் அரசருக்குச் சொந்தமாகிவிட்டன. அதன்பின் பிரபுக்களின் மக்கள் சாதாரணப் பொது மக்களைப்போலவே வாழ்க்கையைத் தொடங்கவேண்டியவர்களாயிருந்தனர்.

### (iv) பேரரசின் பரப்பும் அதன் ஆட்சித்துறைப் பகுதிகளும்

பேரரசின் பரப்பைப் பொறுத்தவரையில் அது காலத்துக்குக் காலம் மாறுபட்டுக்கொண்டே வந்தது. சுல்தான் முகமதுவின் காலத்தில் இந்தியாவிலிருந்த பஞ்சாப், முல்தான்போன்ற பகுதி களை மட்டுமன்றி, இந்திய எல்லைக்கும் அப்பாற்பட்ட பரந்த நிலப் பகுதிகளையும் தன்னகத்தே கொண்டு விளங்கியது. அப்போது காபூல் அதன் தலைநகராயிருந்தது. மகமது கோரியின் ஆயுட் காலத்தில் மேற்கே குஜராத்திலிருந்து கிழக்கே வங்காளம் வரை யிலும் அவரது ஆட்சி பரவியிருந்தது. அநேகமாக வட இந்தியா முழுவதையும், மாள்வா நாட்டின் பெரும் பகுதியையும் அவர் வென்று தன் அடிப்படுத்தினர். குத்புதீன் அய்பெக் அவரது பிரதி நிதியாக டில்லியிலிருந்துகொண்டு இவ்வெல்லா இடங்களையும் ஆண்டுவந்தார். அடிமை வம்சமானது இந்தியாவில் நன்கு நிலை பெற்றுவிட்டதாலும், மங்கோலியர்கள் மத்திய ஆசியாவைத் தாக்க ஆரம்பித்ததாலும், இந்திய எல்லைகளுக்கு அப்பாற்பட்ட பிரதேசங்களெல்லாம் இந்தியப் பேரரசினின்றும் துண்டிக்கப் பட்டன. டில்லி சுல்தான்கள் தங்கள் கவனத்தை யெல்லாம், இந்தியா அனைத்தையும் வெல்லும் முயற்சியில் செலுத்தலாயினர். கில்ஜிகளின் காலத்தே பேரரசு மிகப் பரவலாய் விரிந்தது. மகமது பின் துக்ளக் ஆட்சியின் ஆரம்ப காலங்களில், பேரரசில் 'இந்துஸ் தானம், குஜராத், மாள்வா, மராத்தா (நாடு), திலாங், கம்பிலா, துர்சமுந்தார், மாபார், லக்னௌடி, சத்காவோன் (சிட்டகாங்),

[47] Ibid.

சனர்காவோன், டிர்ஹட்'[48] ஆகிய இடங்கள் அடங்கியிருந்தன. ஹிந்துஸ்தானத்தில் அப்போது ஐக்கிய மாகாணம், பஞ்சாப், மாள்வா, இராஜபுதனத்தின் ஒரு பகுதி ஆகிய இவைகளும் அடங்கியிருந்தன. இவைகளெல்லாம் சேர்ந்த நாடு அநேகமாக இந்தியா அனைத்தையுமே உட்கொண்டது எனலாம். அதில் இரண்டு தனிப்பட்ட ஆட்சித்துறைப் பகுதிகள் இருந்ததாகக் கூறலாம். ஒன்று சுல்தானுக்கு நேரிடையாகவும், இன்னொன்று அவரது மறைமுகமான ஆட்சியின்கீழும் கட்டுப்பட்டிருந்தது. சுல்தானின் மறைமுகமான ஆட்சியிலிருந்த நிலப்பகுதிகள் உள்வட்டாரச் சிற்றரசர்களாலேயே உண்மையில் ஆளப்பட்டுவந்தது. நிலமானியப் பிரபுக்களின் நிலையிலேயே அவர்கள் இருந்துவந்தனர். வெல்லப்பட்ட சிற்றரசர்களிடம், அவர்கள் ஆண்டுவந்த நாட்டையே திருப்பிக்கொடுத்துத் தமக்கு உட்பட்டு நடப்பதையும் கப்பம் கட்டுவதையும் மட்டுமே வற்புறுத்துகின்ற வழக்கமானது கஜ்னவீடுகளின்[49] காலத்திலிருந்தே சுல்தான்களின் ஒரு நிலையான கொள்கையாக இருந்துவந்துள்ளது. சான்றாக, ஷம்சுதீன் இல்துமிஷ், ஜலோர் (Jalor) என்ற நாட்டை அதன் இந்து அரசரான உத்தி ஷா (Uddy Shah) என்பாரிடமிருந்து கைப்பற்றியபோது, அவர் அதை அவ் இந்து அரசருக்கே திருப்பிக் கொடுத்துவிட்டதாக அறிகிறோம். அப்படித் திருப்பிக் கொடுக்கப்பட்டபோது, 'கப்பப் பணத்தைச் செலுத்தவும், வழக்கமான ஊழியங்கள் புரியவும்'[50] இந்திய மன்னர்கள் ஒப்புக்கொண்டதன் பேரிலேயே அவை கொடுக்கப்பட்டதாகக் கூறப்படுகிறது. அதுபோன்றே மகமது கோரியும் ஆஜ்மீரைப் பிருதிவிராயின் மகனுக்கும், டில்லியை அதை ஆண்டுவந்த மன்னர்களுக்குமாகத் திருப்பிக் கொடுத்தார். 'கப்பப் பணம் செலுத்தவும், வழக்கமான ஊழியங்கள் புரியவும்'[51] அவர்கள் ஒப்புக்கொண்டதன் பேரிலேயே அவை அவர்களுக்குத் திருப்பித் தரப்பட்டன. மாலிக் நாயிப் கபூர், தேவகிரியை வென்று, அதன் அரசராயிருந்த ராம் தேவைச் சிறைப்பிடித்து டில்லிக்குக் கொண்டுவந்தபோது, அலாவுதீன் கில்ஜி அவரை விடுவித்து, மீண்டும் 'அவரது உடைமைகளை அவருக்கே கொடுத்து உறுதி செய்தார்' என்றும், அதன் பின்னர் ராய் மிகப் பணிவோடு நடந்துகொண்டதோடு அவர் உயிரோடிருந்த வரை ஒழுங்காகக் கப்பப் பணத்தைச் செலுத்திக் கொண்டு வந்தார்'[52] எனவும் கேள்விப்படுகிறோம். இந்த உள்

[48] Ibid., Vol. III, p. 236.
[49] Al Utbi-Tarikhi Yamini, Ibid., Vol. II, pp. 18 & 32.
[50] Hasan Nizami, Ibid., Vol. II, p. 238.
[51] Ibid., p. 216.
[52] Ibid., Vol. III (Tarikhi Firoz Shahi), p. 200.

நாட்டுத் தலைவர்களின் பட்டப் பெயர்கள் நாட்டுக்கு நாடு வேறு பட்டன. குஜராத்தில் அவர்கள் முக்கதிம்கள், ராணுக்கள், மகந்துகள்[53] எனவும், மாள்வா, மகாராஷ்டிரம், ஹிந்துஸ்தானம் ஆகிய இடங்களில் ராய்கள்[54] எனவும் அழைக்கப்பட்டனர். தேவகிரியை ஆண்ட ராம் தேவை, ராய் ராயன்[55] (Rai Rayan) என அழைத்து அலாவுதீன் கௌரவித்தார். இத்தகைய சிற்றரசர்கள் நாட்டில் ஏராளமாயிருந்திருக்க வேண்டுமெனத் தெரிகிறது. அவர்கள் மிக விழிப்போடு கண்காணிக்கப்பட்டு வந்தனர். அவர்களில் பலர் அடிக்கடி அரசவைக்கு வந்து போகும்படி பணிக்கப்பட்டனர்.

மற்ளுெரு வகையான பிரதேசங்களைப் பொறுத்தவரையில், அவைகள் மாநிலங்களாகவும், மாவட்டங்களாகவும், வட்டங்களாகவும் பிரிக்கப்பட்டிருந்திருக்க வேண்டுமெனத் தெரிகிறது. நன்கு வரையறுக்கப்பெற்ற பெரும்பெரு மாநிலங்கள் பல பேரரசில் இருந்ததாகத் தெளிவாகத் தெரிகிறது. அவைகளின் எண்ணிக்கை ஒவ்வொரு காலத்திலும் வெவ்வேருக இருந்துவந்துள்ளது. சான்ருக, ஆரம்பகாலக் கில்ஜிகளின் ஆட்சியின்கீழ்க் காத்ரா, அயோத்தி,[56] குஜராத்[57] ஆகிய மாநிலங்கள் இருந்ததாகவும், மதுமது பின் துக்ளக்கின் காலத்தில் சுனர்கான் (Sunargaon), லக்னௌடி, மராத்தா நாடு, தெலிங்காணு,[58] பீடார், அயோத்தி,[59] முல்தான்,[60] குஜராத்[61] ஆகிய நாடுகள் பேரரசில் இருந்ததாகவும் அறிகிருேம்.

ஒரு மாநிலமானது பொதுவாகப் பல மாவட்டங்களாக அல்லது பகுதிகளாகப் (divisions) பிரிக்கப்படுதல் வழக்கம். அவை ஒவ்வொன்றும் ஷிக் (shik) என அழைக்கப்பட்டன. ஒவ்வொரு ஷிக்கும் பல வட்டங்களாகப்( இக்தாத்—iktaat) பிரிக்கப்பட்டது. சான்ருக, பஞ்சாப் ஒரு மாநிலமாக இருந்தபோது, ஹிஸ்ஸார் ஃபிரோஸாவானது (Hisar Firoza) ஒரு மாவட்டமாக (ஷிக்) இருந்தது. அம் மாவட்டத்தில் ஹன்ஸி (Hansi), ஆக்ரா,

[53] Ibid., p. 261.
[54] Ibid., p. 240.
[55] Ibid., p. 200.
[56] Ibid., p. 148.
[57] Ibid., p. 178.
[58] Ibid., pp. 242-5.
[59] Ibid., p. 248.
[60] Ibid., p. 245.
[61] Ibid., p. 254.

ஃபடேஹபாத் (Fatehabad), சால்மே (Salmeh) வரையிலிருந்த சர்சுதி (Sarsuti), கிஸ்ராபாத் (Khizrabad) போன்ற வட்டங்களும் இன்னும் சிலவும் இருந்தன.[62] சுல்தான் மகமது பின் துக்ளக் மராத்தா நாட்டை நான்கு மாவட்டப் பகுதிகளாக அல்லது ஷிக்குகளாகப்[63] பிரித்தார். ஒவ்வொரு வட்டத்திலும் பல பர்காஞக்களும், கிராமங்களாலான பர்காஞக்களும்[64] இருந்தன.

## (v) ஆட்சித்துறை அமைப்பு

(a) **அமைச்சர்கள் :** மேற்சொல்லப்பட்ட ஆட்சித்துறைப் பகுதிகளுக்கு நேரான ஆட்சித்துறை அமைப்புகளும் அவ்வப் பகுதிகளின் தலைநகர்களில் அமைந்திருந்தன. இந்த அமைப்பு களில் பல தரப்பட்ட அதிகாரிகள் அடங்கியிருந்தனர். அவர்கள் ஆட்சித்துறைப் பகுதிகள் அனைத்திலும் பரவலாக நியமிக்கப்பட்டிருந்தனர். இந்த அதிகாரிகளுக்கும் சுல்தானுக்குமிடையே மத்திய ஆட்சித்துறை நிறுவன மொன்று இருந்தது. அதில் பேரரசைப் பொதுவாக ஆட்சி புரிந்துவந்த நாட்டின் தலையாய அதிகாரிகள் பலர் அடங்கி யிருந்தனர். அவர்கள் சுல்தானுக்கு உடனடியாகக் கீழே இருந்த வர்களாவர். சுல்தானின் செயலாளர்களைப் போன்று அவர்கள் செயலாற்றினர். சுல்தானுக்கே அவர்கள் நேரிடையாகப் பொறுப்பு வாய்ந்தவர்கள். பிரதேசங்களின் பரப்புக்கேற்பவும், ஆட்சித்துறைகளின் வகைக்கேற்பவும் அவர்களின் எண்ணிக்கை யானது மாறிக்கொண்டே யிருந்தது. ஆனல், அவர்களது வல்லமையும் முக்கியத்துவமும் சுல்தானின் திறமைக்கேற்பவே அமைந்தது. மகமது கஜினியின் காலத்திலிருந்து ஃபிரோஸ் ஷாவின் காலம்வரை அமைச்சர்களின் அவை போன்றதொரு நிறுவனம் அரண்மனையில் இருந்துவந்ததாகத் தெரிகிறது. சுல்தான் அடிக்கடி அதைக் கலந்தாலோசித்தே காரியங்கள் செய்வது வழக்கம். அத்தகைய அமைச்சர்களில் தலைமை அமைச் சராக விளங்கியவர் வஸீர் (Wazir) என அழைக்கப்பட்டார். அவர் சுல்தானின் நம்பிக்கைக்கு உகந்தவராகவும், மிக வல்லமை வாய்ந்தவராகவும் விளங்கினுர். கஜனவீடுகளின் காலத்தே சுல்தானின் மிக முக்கிய அதிகாரிகளாக ஐவர் இருந் திருப்பதாகத் தெரிகிறது. அவர்கள் வஸீர், சேஞதிபதி, அரிஜ் (சம்பளம் வழங்குபவர்), ஹஜீப் (அரண்மனை முதல்வர்), திவான் அல்லது அமைச்சர் என்போர்களாவர். கஜினி மகமதுவின்

---

[62] Ibid., p. 300.
[63] Ibid., p. 251.
[64] Ibid., p. 272.

காலத்தும்[65] அமீர் மசூத் (Amir Masud) என்பாரின் காலத்தும்[66] காணப்பட்டபடி இரண்டு முக்கிய அகமுடையார்களைப் (Chamberlain) பல சமயங்களில் சுல்தான்கள் அமர்த்திக் கொள்வது வழக்கம். இவர்களோடுகூட ஒரு சேனதிபதியும் இருந்திருப்பதாகத் தெரிகிறது. ஆனால், மகமது கஜினி போன்ற அரசர்கள் இருக்குமிடத்திலும், ஏன் அக் கால அரசர்கள் எவர் ஆண்ட இடத்திலும் சேனதிபதியின் அவசியம் அவ்வளவு அதிகமாக இருந்திராதென்றே கூறவேண்டியுள்ளது. மகமது கஜினியின்கீழ் சேனதிபதி ஒருவர் இருந்ததாக நாம் கேள்விப்படுகிறோமில்லை. ஆனால், மசூத் என்பார் ஒரு சேனதிபதியை நிச்சயமாக வைத்திருந்ததாகத் தெரிகிறது.[67] மேலும், தலைமைக் காஜி,[68] கொத்தவால்[69] போன்ற அதிகாரிகளும் தலைநகரில் இருந்து பணிபுரிந்தனர். அவர்கள் முறையே அவரவர்களினுடைய துறைகளின் தலைவர்களாக இருந்து பணியாற்றினர். இவர்களைத் தவிர இன்னும் வேறு இரண்டு அதிகாரிகளுமிருந்தனர். அவர்கள் முறையே முஷ்ரிஃப் (Mushrif)[70] என்றும் முஸ்தஃபி (Mustaufi)[71] என்றும் அழைக்கப்பட்டனர். அவர்களின் கடமைகள் என்ன என்பது கஜ்னவீடுகளின் காலத்தே பெரிதும் நிச்சயமற்றதாகவே இருந்தது. ஆனால், அப்பாசித் காலிஃப்புகளின் காலத்தில் அவர்கள் ஏராளமான அதிகாரங்களுடன் விளங்கினர். அதனோடு உயர்ந்த அந்தஸ்தும் அவர்களுக்கு அப்போது கொடுக்கப்பட்டிருந்தது. இவர்களுள் வஸீர், திவான், அரிஜ், ஹஜீப் ஆகிய அதிகாரிகள்மட்டுமே சுல்தானின் ஆழ்ந்த நம்பிக்கையைப் பெற்றிருந்தனர். மிக முக்கியமான ஆலோசனைகளை நிகழ்த்திய போதும், தனிப்பட்ட முறையில் ஓய்வெடுத்துக்கொண்ட போதும், சுல்தான் அவர்களை அருகிலேயே வைத்துக்கொண்டிருப்பது வழக்கம். முக்கியமான நடவடிக்கை எதையும் எடுக்குமுன் அவர் அவர்களைப் பொதுவாகக் கலந்தாலோசிப்பது வழக்கம்.

(b) **வஸீரும் அவரது கடமைகளும்:** அமைச்சரவையில் தலைசிறந்த பதவியை வகித்தவர் வஸீர் எனும் அதிகாரியாவார். வஸீரைத் தனது கலீஃபா, அதாவது, பிரதிநிதி எனச்

[65] Ibid., Vol. II (Tarikhi Yamini), p. 35.
[66] Ibid., Vol. II (Baihaki-Tarikh-us-Sabuktigin), p. 135.
[67] Ibid., pp. 94 & 135.
[68] Ibid., pp. 94 & 96.
[69] Ibid., pp. 111 & 146.
[70] Ibid., p. 112.
[71] Ibid., p. 112.

சுல்தான் மசூத் அழைப்பது வழக்கம். இராணுவ காரியங்களைத் தவிர[72] ஏனையவற்றுள் எல்லாம் அவரே தலைமை தாங்கி நடத்தினார். எனவே, அவரது நியமனத்தில் மன்னர் பெரிதும் விழிப்பாக இருந்தார். மன்னருக்குப் பெரிதும் கவலையை அளித்த பிரச்சினைகளுள் வஸீர் நியமனமும் ஒன்றாகும். வஸீர் நியமிக்கப்படுமுன் சுல்தானும் அவரும் ஓர் ஒப்பந்தத்தைத் (covenant) தமக்குள் செய்துகொண்டனர். அதை மனப் பூர்வமாக ஏற்றுக்கொள்வதாக மிக உருக்கமான முறையில் இருவரும் ஒப்புக்கொண்ட பின்னரே வஸீர் தமது பணியைத் தொடங்கினார். வஸாரத் (Wazarat) பதவியின் தோற்றம், வளர்ச்சி ஆகியவைபற்றி டாக்டர் ஆர். பி. திரிபாதி (Tripathi) என்பார் தந்துள்ள போற்றத்தக்க விளக்கத்திலிருந்து, அப் பதவியானது எல்லா வகையிலும் எவ்வளவு முக்கியத்துவம் பொருந்தியதாயிருந்ததென்பது தெற்றெனத் தெரிகிறது. அப் பதவியின் சிறப்பைப் பல கோணங்களிலிருந்தும் அவர் படம் பிடித்துக் காட்டுகிறார். ஆனால், டில்லி சுல்தான்கள் கஜ்னவீடு களின்கீழ்ப் பணிபுரிந்த வஸீர்களைப்பற்றிப் பேசுகையில், அவர் சற்று அளவுக்கு மீறியே அவர்களைப் புகழ்ந்துவிடுகிறார். அள வோடும் துல்லியமாகவும் அவரது கூற்றுகள் அமைவதற்குப் பதிலாக, உணர்ச்சிவசப்பட்டதாயும் பொதுப்படையாகவுமே அவை பெரிதும் அமைந்துள்ளதாகத் தெரிகிறது. கொள்கை யளவில் வஸீர் பதவி எவ்வளவு முக்கியமானதாயிருந்த போதிலும், நடைமுறையில் சுல்தானின் செயலாளர் போன்றே வஸீர் தம்மைக் கருதிக்கொண்டார். அவரது உண்மையான நிலையும் அதுவாகவே இருந்தது. ஏனெனில், எதேச்சாதிகாரி களான மன்னர்கள் சிலருடைய வெறுப்புக்காளான வஸீர்கள் தமது பதவிகளை மட்டுமன்றி உயிரையும் இழக்கவேண்டி நேர்ந் துள்ளது. ஏட்டளவில் அவரது பதவி மிக மேம்பட்ட தொன்றாயும், அவரது அதிகாரம் மிக உயர்ந்ததொன்றாயும் இருந்தபோதிலும், நடைமுறையில், சுல்தானின் திறமைக்கும் மனத்திட்பத்துக்கும் ஏற்பவும், பிரபுக்கள் அவரை எந்த மனப்பான்மையுடன் நடத்தினர் என்பதற்கேற்பவுமே அவை செயற்பட முடிந்தது.

இந்த முடிவு சரியானதே என்பதற்கு டாக்டர் திரிபாதியே சில சான்றுகளைத் தந்துள்ளார். மகமது கஜினியால் முதன் முதலில் நியமிக்கப்பட்ட வஸீரான அப்துல் அப்பாஸ் ஃபாஸல் பின் அகமது (Abdul Abbas Fazl bin Ahmad) என்பார் நாளடைவில் சுல்தானின் ஆதரவை இழந்து இறுதியில் 'ஈவிரக்கமற்ற சித்திர

[72] Ibid., Vol. III, p. 104.

வதையின் காரணமாக இறந்தார்'[73] எனவும், 'பிரபுக்களின் பொருமையும், தனக்கு மிகப் பிரியமான ஓர் அடிமையை சுல்தானிடம் ஒப்படைக்க மறுத்ததும்', அரச வருமானத்தை அபரித்துக்கொண்டதாக அவர்மீது சாட்டப்பட்ட குற்றமுமே அவர் அங்ஙனம் துன்புற்று இறந்ததற்குக் காரணம் எனவும் திரிபாதியே கூறியுள்ளார். அதற்கடுத்து வஸீராக நியமிக்கப்பட்ட அப்துல் காஸிம் அகமது பின் ஹஸன் அல் மெய்மாண்டி என்பார் (Abdul Qasim Ahmad bin Hasan al Maimandi) ஆற்றல் வாய்ந்த நிர்வாகியா யிருந்ததோடுகூட, 'சுல்தானுல் மட்டுமன்றிப் பிரபுக்களாலும் விரும்பப்பட்டார்' எனக் கூறப்படுகிறது. அப்படிப்பட்டவர்கூட, பதினெட்டு ஆண்டுகள் வஸாரத் பதவியிலிருந்த பின்னர் 'பதவியிலிருந்து நீக்கப்பட்டு, இந்தியாவின் கோட்டைகளிலொன்றில் சிறைவைக்கப்பட்டார்.' பிரபுக்களின் ஆதரவைப் பெற அவர்களைச் சதா பாராட்டிக்கொண்டிருப்பதில் அவர் அக்கறை காட்டாததும், அவர்களின் சுகபோகங்களைப் புறக்கணித்ததுமே அவரது வீழ்ச்சிக்குக் காரணமெனத் தெரிகிறது. பிரபுக்களின் எதிர்ப்புக் காரணமாகத் தமது வஸீரை இரண்டுமுறை பதவியினின்றும் நீக்க வேண்டி ஏற்பட்டுவிட்டதால், அவர்களுக்குப் பிடித்தமான நான்கு பேர்களை வஸீர் பதவிக்குச் சிபாரிசு செய்யும்படி அவர் அப் பிரபுக்களைக் கேட்டுக்கொண்டார். அதன்படியே சிபாரிசு செய்யப்பட்ட நான்கு பேர்களில் ஒருவரை சுல்தான் தமது வஸீராக வரித்துக்கொண்டார். ஹஸ்னக் (Hasnak) என்பாரே அங்ஙனம் தேர்ந்தெடுக்கப்பட்டவர். அவர் மகமது இறக்கும் வரையில் வஸீர் பதவியிலேயே இருந்தார். ஆனால், மசூத் என்பாரின் ஆட்சிக் காலத்தில் அவர் பதவியினின்றும் நீக்கப்பட்டதோடு, அவமானப்படுத்தப்பட்டுப் பலரறியக் கொல்லப்பட்டார். சுல்தானுக்கும்,[74] பூ சுஹல்[75] (Bu Suhal) போன்ற ஒரு சில பிரபுக்களுக்கும் கோபமுண்டாக்கும் முறையில் நடந்துகொண்டதே அவர் செய்த குற்றமாகும். அவருக்குப்பின் வந்த குவாஜா அகமத் ஹாஸன் (Khwaja Ahmad Hasan) என்பார் அடக்கமே உருவானவர். கடவுளிடம் பயபக்தி உள்ளவர். கருணையுள்ளமும் நாணயமும் மிக்கவர். பேராசையும் அதிகாரப் பித்துமற்றவர். ஆகவே, அவரால் பிரபுக்களுக்கு

---

[73] Tripathi, 'Some Aspects of Muslim Administration', p. 165.

[74] Baihaki-Tarikh-us-Sabuktigin—Elliot & Dowson, Vol. II, pp. 89, 98.

[75] Tripathi, 'Some Aspects of Muslim Administration', p. 722.

ஒருவிதத் தொந்தரவுமில்லை. பிரபுக்கள் சென்ற வழியில் அவர் குறுக்கிடாததால் அவர்மீது அவர்களுக்கு மனத்தாங்கல் எதுவும் ஏற்பட வழியில்லை. டாக்டர் திரிபாதி என்பார் குறிப்பிட்டுள்ளபடி, 'ஆரம்பகாலக் கஜ்னவீடுகளின் வஸீர்களாயிருந்தவர்கள்...... மிகுதியான பணபலமும் படைபலமும் உடையவர்களாயிருந்த தாகத் தெரியவில்லை.'[76] இடைக்காலத்தே (medieval times) நிலவிய அரசாங்க அமைப்பில் பிரபுக்களே பெரிதும் ஆதிக்கம் செலுத்தினர். இராணுவத் தன்மையுடையதாகவும், யதேச் சாதிகாரியான ஓர் மன்னரைத் தலைவராயுடையதாகவும் அரசாங்கம் அமைந்திருந்தது. அத்தகைய ஒரு சூழ்நிலையில் சிறிதே செல்வமுடையவர்களும், இராணுவ பக்கபலமில்லாத வர்களுமாயிருந்தவர்கள் ஒருசிறிதும் மதிக்கப்படாததில் வியப் பொன்றுமில்லை. எனவே, வஸீருக்கென்று தனியேஒரு மதிப்போ, அதிகாரமோ இருந்ததாகத் தெரியவில்லை. அவரது அதிகாரமெல் லாம் சுல்தானிடமிருந்து கடன் வாங்கப்பட்டதொன்றேயன்றி வேறல்ல. பிரபுக்கள் ஒன்றுசேர்ந்துகொண்டு அவரை எதிர்த்த போது சுல்தாலுல்கூட அவரைக் காப்பாற்ற முடியாமற்போயிற்று. அதனுற்றான் அக் காலத்தே தம் விருப்பப்படியெல்லாம் நடக்கக் கூடிய நிலையிலிருந்தவர்கள் ஒன்று அரசர்கள் அல்லது பிரபுக்கள் மட்டுமே என அறுதியிட்டு நாம் கூறமுடிகிறது. அதுவும் வல்லமை மிக்க யதேச்சாதிகாரிகளாக இருந்தவர்கள்மட்டுமே, அதாவது, பால்பன், மகமது பின் துக்ளக், கஜினி முகமது அல்லது மசூத் போன்றவர்கள் மட்டுமே தத்தம் பிரியம்போல் நடக்க முடிந்தது. அதேபோல இராணுவ பலங்கொண்ட பிரபுக்கள் மட்டுமே விருப்பம்போல் நடந்துகொள்ள இயன்றது. இவ்விரு கூட்டத் தினர்க்கிடையில் உண்மையான அதிகாரத்தைச் செலுத்தக்கூடிய வர்களாக வேறெருவரும் இல்லை. வஸீராயிருப்பினும் அல்லது எந்த ஓர் அமைச்சராயிருப்பினும் அவருக்குப் பிரபுக்களின் ஆதரவு இருக்குமாலுல்மட்டுமே உண்மை அதிகாரமுள்ளவர்களா யிருந்தனர். பிரபுக்களின் ஆதரவைப் பெறுதற்குரிய தந்திரத் தோடுகூடிய திறமை இருந்த அமைச்சர்கள் மட்டுமே செல் வாக்குடன் விளங்கினர். இந்த வகையில் பார்க்கும் போது வஸீர் மட்டுமன்றி எல்லா அமைச்சர்களுமே முக்கியத்துவம் வாய்ந்தவர்களாகவே காணப்படுகின்றனர். முக்கியமான காரியங்களில் ஈடுபடுமுன், சுல்தான் வஸீரை மட்டுமன்றி எல்லா அமைச்சர்களையும் கலந்தாலோசித்தார் எனக் கூறுவதன்மூலம், அமைச்சர்கள் அனைவரும் முக்கியத் துவம் வாய்ந்தவர்களே என்பதை டாக்டர் திரிபாதியே

---

[76] Ibid. p., 72.

நன்கு எடுத்துக் காட்டுகிறார். அதனோடு அமைச்சர்களின் எதிர்ப்புகளைஅரசர் கவனித்தார் என்றும், ஆனால், பெரும்பாலும் அவர்களை மீறியே அவர் காரியங்களைச் செய்தார் எனவும் அவ் வாசிரியர் குறிப்பிட்டுள்ளார். இடைக்கால யதேச்சாதிகாரிகள் தாங்கள் வல்லவர்களாயும் திறமைசாலிகளாயுமிருந்தால் எங்கு இருந்தாலும் அவர்கள் இதே மாதிரிதான் நடந்துகொண்டனர். அது கஜினியாயிருந்தாலும் அல்லது டில்லியாயிருந்தாலும் அவர்களின் நடத்தை ஒன்றாகவே இருந்தது. எனவே, மகமது கஜினி தமது வஸீரிடம் 'நாட்டு விவகாரங்களனைத்தையும் படைநிர்வாகமனைத்தையும்' ஒப்படைத்துவிட்டதாகக் கூறுகிற போதும், அல்லது மசூத் என்பார் தமது வஸீரைத் தமது 'கலீஃபா' என அழைக்கின்றபோதும், எல்லா மக்களும் வஸீருக்குத் தங்குதடையின்றிக் கீழ்ப்படிய வேண்டுமெனத் தாம் எதிர்பார்ப்பதாக அறிவிக்கின்றபோதும் நாம் ஏதோ பெரிய நிகழ்ச்சி நடந்துவிட்டதாக எண்ணி இறும்பூதெய்துதற்கில்லை.

நாட்டின் நிர்வாகப் பொறுப்பை உண்மையில் மேற் கொண்டவர்கள் அமைச்சர்களேயாதலால், அமைச்சரவையின் உறுப்பினர்கள் என்ற முறையில் அவர்கள் அனைவருமே அதிகார மும் முக்கியத்துவமும் பெற்றிருந்தார்கள். சுல்தான் அனுமதி யளித்தபோது மட்டுமே, வஸீர் தனிப்பட்ட அதிகாரத்தையும் சிறப்புரிமையையும் கொண்டாட முடிந்தது. ஏனெனில், வஸீரையன்றி வேறு அமைச்சர்களோடும் மன்னர் நம்பிக்கைக் குகந்த இரகசிய ஆலோசனைகளை நடத்தினார். குவாஜா அஹ்மது ஹாஸன் என்பார் வஸீராக நியமிக்கப்பட்டதற்கு முன் நடைபெற்ற நிகழ்ச்சிகளை வரையவந்த அபுல் ஃபாசல் பைஹாகி (Abul Fazl Baihaki) என்பார் பின்வரும் நிகழ்ச்சியைக் குறிப்பிடு கின்றார். "பூ சுஹல் சௌசாமி (Bu Suhal Zauzami) என்பார் அவரோடு (அமீர்) தொடர்பு கொண்டுள்ளார். அவரது (அமீரின்) விவகாரங்களனைத்தையும் அவரே ஏற்பாடு செய்துவைக்கிறார்... அமீர் அவரோடும் அப்துஸ் (Abdus) என்பாரோடும் நிச்சயமாகவே தனிமையில் இருந்து ஆலோசிக்கிறார். இவ்விரு மனிதர்களுமே அவரால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஆலோசகர்களாக இருக்கிறார் கள்..."[77] இந்த பூ சுஹல் என்பவரே சுல்தானைத் தூண்டிவிட்டு காஜா ஹஸ்னக் (Khwaja Hasnak) என்பார் கொல்லப்படுமாறு செய்தார். பல சமயங்களில் வஸீர்கள் தம் பதவியினின்றும் நீக்கப் பட்டுவேறு பதவிகளுக்கு நியமிக்கப்பட்டுள்ளனர். காஜா அஹ்மது வஸீராக நியமிக்கப்பட்டபின் 'வஸீர் பதவியினின்றும் நீக்கப்

[77] Elliot & Dowson, Vol., II, p. 62.

பட்ட பூ சுஹல் ஹமாதுனி' (Bu Suhal Hamaduni) என்பார் 'நாட்டின் விவகாரங்களைக் கண்காணிக்கும் பணியில் அமர்த்தப் பட்டார்.'[78] உண்மையில் செயலாளரும் அகமுடையாரும் (chamberlain) சுல்தானின் மிக நம்பகமான அதிகாரிகளா யிருந்தனர். அவர்கள் வகித்துவந்த பதவிகளின் இயல்பே அத்தகைய நிலைமையை ஏற்படுத்தியது எனலாம். டில்லி சுல் தான்கள், கஜினிகளின் வரலாற்றில் இத்தகைய நிகழ்ச்சிகளுக்கு ஏராளமான சான்றுகளைக் காட்டலாம். இறுதியாகக் கூறுமிடத்து, வஸீரும் ஏனைய அமைச்சர்களைப்போலவே, யதேச்சாதிகார அரசர்களின் பலத்துக்கும் மனப்போக்குக்குமேற்பவும், இராணுவ பலம் கொண்ட பிரபுக்களின் மனப்பான்மைக்கேற்பவுமே அதிகாரத்தையும் சிறப்புரிமையையும் நிலையாகப் பெறமுடிந்தது எனலாம்.

நாட்டின் சிவில் விவகாரங்களை நடத்துவதே பொதுவாக வஸாரத்தின் முக்கியக் கடமைகளாயிருந்தன. குவாஜா அஹ்மத் ஹாஸன் என்பார் வஸீராக நியமிக்கப்பட்ட வரலாற்றை வரைந்துள்ள பைஹாகி (Baihaki) என்பவரின் கூற்றுகளிலிருந்து அவரது கடமைகள் என்னென்ன வென்பது நன்கு புலப்படு கின்றது. தான் வஸீராக நியமிக்கப்படுமுன் தனது கடமைகளைப் பற்றி முற்றிலும் தான் அறிந்துகொள்ளவேண்டுமென அவர் ஓர் நிபந்தனை விதித்தார். அமீர் மாசூதுக்கு இச் செய்தி தெரிவிக் கப்பட்டபோது அவர் கூறியதாவது: 'ஒன்றுகூடிக் குடித்து விருந்து வைத்துக் கேளிக்கைகளிலீடுபடுதல், பிறரோடு சண்டை யிடுதல், சௌகன் (chaugan) சங்காகக் (chankahak) என்ற விளையாட்டுகளில் கலந்துகொள்ளல் ஆகியவற்றை மதிப்பதைத் தவிர வேறு எல்லாவிதமான கடமைகளையும் அவரிடம் (காஜா விடம்) ஒப்படைக்கிறேன்.'[79] நீதி பரிபாலனம் செய்வது அவரது கடமைகளில் ஒன்றாகும். நாள்தோறும் தமது தரம் (Taram) என்ற அத்தாணி மண்டபத்தில் அவர் நீதியை வழங்குகிறார்.[80] அவரது சொந்த அலுவலகத்தில் பொது ஆட்சித்துறை விவ காரங்களை அவர் கவனிக்கிறார். 'தனது அறிவுக்கெட்டியவரை சிறந்த முறையில் அவர் காரியங்களை நிர்வகித்தார்.' அரசின் வெவ்வேறு துறைகளை ஒருங்கிணைத்து ஒருமுகமாக இயங்கச் செய்யும் (co-ordinate) ஓர் அதிகாரிபோன்று அவர் விளங்கினர். அதே சமயம் அவைகளை யெல்லாம் மேற்பார்வையிடுவதற்கும், நெறிப்படுத்துவதற்கும், கட்டுப்படுத்துவதற்குமான மேலான

[78] Ibid., p. 74.
[79] Ibid., p. 65.
[80] Ibid., pp. 62, 72.

அதிகாரங்களையும் அவர் பெற்றிருந்தார். மேற்பார்வை யிடல், நெறிப்படுத்தல், கட்டுப்படுத்தல் என்ற இப் பொது அதிகாரங்களை அவர் செலுத்திவந்தார் என்பது, மசூத்தின் வஸீராயிருந்த குவாஜா அஹ்மது ஹாஸன் என்பாரின் குறிப்பிடத்தக்க சிறு கூற்றுகளினின்றும் நன்கு தெரியவருகிறது. லாஸரின் இராஜப் பிரதிநிதியாக (Viceroy) இருந்த அஹமது நியால்டிஜின் என்பாருக்கு அவர் விடுத்த அறிவுரை அறிக்கையின் இறுதியில் பின்வரும் சொற்கள் காணப் படுகின்றன: 'சிறியனவும் பெரியனவுமான நாட்டின் விவகாரங் களனைத்தையும் கவனித்துக்கொள்வதைத் தவிர எனக்கு வேறு வழியில்லை. உனது நலனையும் உன்னைப் போன்ற அனைவரின் நலனையும் காப்பதைத் தவிர வேறு கடமைகள் எனக்கில்லை.'[81] தாம் கேட்கிற எல்லாக் கேள்விகளுக்கும் உடனே பதில் கொடுக் கத்தக்க வகையில் நன்கு தயாராகத் தம்மிடம் வரும்படி இராணுவ சிவில் அதிகாரிகளுக்கு அவர் அவ்வப்போது ஆணைகளை விடுக்க முடியும்.[82] அரசின் பல்வேறு காரியங்களும், பல்வேறு துறைகளால், அதாவது, 'எத்தனை அமைச்சர்களிருந்தார்களோ', அத்தனை நிர்வாகத் துறைகளால் நிர்வகிக்கப்பட்ட போதிலும், வஸீருக்கும் ஏனைய அமைச்சர்களுக்கும் ஓர் வேறுபாடு இருந்தது. 'ஆணைகளுக்குக் கீழ்ப்படிவதற்கு மட்டுமே ஏனைய அமைச்சர் கள் தகுதியுள்ளவர்களாயிருந்த[83]போது, வஸீர் ஒருவர் மட்டுமே அவசியமான அறவுரையையும் ஆலோசனையையும் வழங்குகின்ற (சுல்தானுக்கு) ஓர் அதிகாரத்தைக் கொண்டாடக் கூடியவராக[84] விளங்கினார். மாநிலங்களின் அரசப் பிரதிநிதி களுக்கு அவர்கள் நியமிக்கப்பட்ட வேளையில் ஓர் அறிவுரைக் கொத்து போன்ற ஒன்றை வெளியிடும் அதிகாரத்தைப் பெற்ற வர் வஸீர் ஒருவரேயாவர்.[85] அவருக்கென ஒரு தனி ஹஜீபும் (அகமுடையார்),[86] செயலாளர்களும்,[87] இன்னும் அவரது பதவிக் கேற்ற ஆடம்பரங்கள் அனைத்தும் அவரிடம் தரப்பட்டிருந்தன.

வஸீரைத் தவிர வேறு பல அமைச்சர்கள், ஒவ்வொரு வரும் ஒரு குறிப்பிட்ட துறைக்குத் தலைவராக விளங்கினர். வஸீர் நியமிக்கப்பட்டது போலவே அவர்களும் வேலையில்

---

[81] Ibid., Vol. II, p. 121.
[82] Ibid., p. 72.
[83] Ibid., p. 64.
[84] Ibid., p. 65.
[85] Ibid., pp. 119, 120.
[86] Ibid., p. 120.
[87] Ibid., pp. 71, 128.

அமர்த்தப்பட்டனர். அதாவது, நியமிக்கப்பட்ட அதிகாரியாலும் அரசராலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட ஓர் உருக்கமான ஒப்பந்தத்தின் பேரிலேயே அவர்கள் நியமிக்கப்பட்டனர். இப்படிப்பட்ட நியமனங்களுக்கு இரண்டு சான்றுகளைக் காட்டலாம். ஒன்று லாகூரின் அரசப் பிரதிநிதியாயிருந்த அஹ்மத் நியால்டிஜின் என்பாரின் நியமனமாகும்; இன்னொன்று, புல் காஸிம் புல் ஹாகா (Bul Kasim Bul Haka) என்பாரின் நியமனமாகும். புல் காஸீம் லாகூரில் 'மிக நம்பகமான அதிகாரியாக' விளங்கியவர். அதே சமயம் அவர் 'அரசவையின் கட்டளைகளுக்குக் கட்டுப்பட்டவர்.'[88] நியால்டிஜின் என்பார் நியமிக்கப்பட்டபோது கடைப்பிடிக்கப்பட்ட முற்சடங்குகள் வருமாறு: 'அரசரின் அதிகாரப் பத்திரமும் விதிகளும் நன்கு முத்திரையிடப்பட்டன. அவைகள் அஹ்மதிடம் எடுத்துச் செல்லப்பட்டன. உருக்கமான சபதமொன்றும், வேறு பல நிபந்தனைகளடங்கிய பத்திரமும் அவர் முன்னிலையில் வைக்கப்பட்டன. வழக்காற்றின்படி அவர் சபதமெடுத்துக்கொண்டார். அதன்பின் அதில் அவர் கையொப்பமிட்டார். அதன்பின் அத் தாள்கள் அரசரிடம் காண்பிக்கப்பட்டுப் பதிவேடுகளின் காப்பாளரிடம் (record keeper) ஒப்படைக்கப்பட்டது.'[89]

(c) **சேனுதிபதி** (Commander - in - Chief): எவ்வளவு முக்கியமான அதிகாரியாக வஸீர் விளங்கினுரோ அதே அளவு முக்கியத்துவம் வாய்ந்தவராக சேனுதிபதி விளங்கினுர். சுல்தான் படையினைத் தாமே நேராக நடத்திச் சென்றுலுங் கூட, அவரது தளபதிகள் படைகளைச் செலுத்தத் தவறிய சமயங்களில் மட்டுமே, அவர் படைகளுக்குத் தலைமை தாங்கினுர். எனவே, கஜினி முகமது போன்ற பெரிய வெற்றி வேந்தர்களின் ஆட்சிகளில் தவிர ஏனைய ஆட்சிகளிலெல்லாம் சேனுதிபதிகள் பெரிதும் செல்வாக்கும் அதிகாரமும் கொண்டவர்களாகவே விளங்கினர். ஆளுநர் ஒருவர் கலகத்திலீடுபடுதல் போன்ற நெருக்கடியான சமயங்களில் அவரைக் கலந்தாலோசித்தல் மன்னரின் கடமையாகக் கருதப்பட்டது. அம் மாதிரி சமயங்களிலெல்லாம் போர்க்கால ஆலோசனை சபைகளைச் (War Council) சுல்தான்கள் ஏற்படுத்தினர். அச் சபைகளுக்கு சேனுதிபதியும் பெருந் தளபதிகளும் மட்டுமே அழைக்கப்பட்டனர். அத்தகைய சபை ஒன்று சுல்தான் மசூத் காலத்தே கூட்டப்பட்டதாக அறிகிறேம். அச் சபைக்கு 'சேனுதிபதியும், தளகர்த்தர்களும், படையதிகாரி

---

[88] Ibid., Vol. II, p. 120.
[89] Ibid., p. 119.

களும்' அழைக்கப்பட்டனர்.[90] படையானது வஸீரின் அதிகார வரம்புக்குட்படாதிருந்த காரணத்தால் அவர் அச் சபைக்கு அழைக்கப்படவில்லை.

(d) **முக்கிய அகமுடையார் (Amir - i - Hajib):** சுல்தானின் நம்பிக்கைக்குப் பாத்திரமான அதிகாரிகளுள் ஒருவரும், அது காரணமாகப் பெரிய அந்தஸ்தும் செல்வாக்கும் கொண்டவருமாக விளங்கியவர் முக்கிய அகமுடையார் (Amir-i-Hajib) ஆவார். சாதாரண சமயங்களிலும், மிக முக்கியமான சமயங்களிலும், எப்போதும் அவர் சுல்தானின் அருகில் இருந்துகொண்டிருந்தார். பொதுவாக, இரகசியமான பல முக்கியச் செய்திகள், முறையீடுகள் யாவும் அவர் மூலமாகவே சுல்தானுக்கு அனுப்பப்பட்டன.[91] எல்லாவிதமான இரகசியக் கடிதப் போக்குவரத்துகளையும் சுல்தான் அவரிடமே ஒப்படைத்திருந்தார்.[92] அரண்மனைக் காவலர்கள் அவரது கட்டுப்பாட்டுக்குள் இருந்தே பணிபுரிந்தனர். அக் காவலர் கூட்டத்தில் ஒரு பகுதி அரசரின் மெய்காப்புப் படையாக விளங்கியது.[93] அதுவும் அவரது கண்காணிப்புக்குட்பட்டிருந்தது. பொதுவாக அவர் நாட்டில் மிக முக்கியமான அதிகாரியாகவும், அரசரிடம் நெருங்கிப் பழகிவந்த காரணத்தால் மிகுந்த சக்தியும் செல்வாக்கும் உடையவராகவும் விளங்கினர். வஸீர் உட்பட அரசவையிலிருந்த எல்லா அதிகாரிகளும் அவரிடம் சற்று அச்சத்துடனும் மரியாதையுடனுமே நடந்துகொண்டனர். சில சமயங்களில் அவர் கஜினி மகமதுவின் மகனை மகமதுவின் காலத்து இருந்ததைப்போன்று நாட்டின் சேனுதிபதியாகவும் விளங்கினர்.[94] அரண்மனையில் ஒருவரேயன்றிப் பல அகமுடையார்கள் இருந்தனர் என்பது ஈண்டுக் குறிப்பிடப்பெறுதல் அவசியம். ஆனல், அவர்கள் யாவர்க்கும் ஒருவர் தலைவராக விளங்கினர். சில சமயங்களில் அகமுடையார்கள் (ஹஜிபுகள்) முக்கியமான ஆளுநர் பதவிகளில் அமர்த்தப்படுவதுமுண்டு. அரியாருக் (Ariyaruk) என்பார் ஒரு சமயம் ஹஜீபாக[95] இருந்தவர். பின்னல் அவர் லாகூரின் ஆளுநராக நியமிக்கப்பட்டார்.

(e) **திவான் — அரசின் செயலாளர் (Dewan — Secretary of State):** அரசவையில், சீரிலும் செல்வாக்கிலும் அகமுடையாரைப்

[90] Ibid., p. 125.
[91] Ibid., p. 79.
[92] Ibid., p. 81.
[93] Ibid., p. 68.
[94] Ibid., Vol. II, p. 270.
[95] Ibid., p. 108.

பெரிதும் ஒத்தவராய் விளங்கியவர் திவான் அல்லது அரசின் செயலாளர்[96] என்பவராவர். அவரது அலுவலகம் தாவத் கானு[97] (Dawat Khana) என அழைக்கப்பட்டது. அரச கட்டளை களையும் (firmans), செய்திக் கடிதங்களையும் (despatches), வேறு முக்கியமான பல பத்திரங்களையும் எழுதி அமைப்பதே இவரது கடமையாகும். இவைகளை யெல்லாம் அவர் தாமாகவே எழுத வேண்டுமெனப் பொதுவாக எதிர்பார்க்கப்பட்டது.[98] நாட்டின் முக்கியமான பத்திரங்கள், நியமனக் கடிதங்கள், நாட்டின் பல பாகங்களிலிருந்து வருகின்ற கணக்குப் பதிவேடுகள் முதலி யவைகள் இவரது அலுவலகத்தில் பாதுகாக்கப்பட்டன. சுல் தான், வஸீர் ஆகிய இருவருக்கும் நம்பகமான அதிகாரியாக அவர் அடிக்கடி விளங்கினுர். மசூத் என்பாரின் ஆட்சிக் காலத்தே, பூ நஸ்ர் மிஷ்கான் (Bu Nasr Mishkan) என்பார் அரசின் செயலாள ராகப் பணியாற்றினுர். அப்போது அவர் சுல்தானுக்கும் வஸீ ருக்கும் நடைபெற்ற நம்பகமான செய்திப் போக்குவரத்துகளைக் கவனித்துக்கொண்டார். அவர்கள் இருவரும் அவர்மூலமாகவே கருத்துகளைப் பரிமாறிக்கொண்டனர்.[99] மிகுந்த சாதுரியமும் போற்றத்தக்க நாணயமுமுள்ளவராக அவர் விளங்கினுர்.

(f) **படை ஊதியத் தலைவர்—அரிஜ்** (Paymaster General—Ariz): திவானுக்கு அடுத்தபடியாக முக்கியத்துவம் பெற்று விளங் கியவர் அரிஜ் அல்லது படை ஊதியத் தலைவர் என்பவராவர். மசூத் என்பாரின் அரிஜாக விளங்கிய பூ சுஹல் சௌசாமி[100] (Bu Suhal Zauzami) என்பாரின் கடமைகளைப் பற்றி பைஹாகி (Baihaki) என்பார் விளக்கமாக எழுதியுள்ளார். மசூதின் வஸீர், தாம் பதவியேற்றவுடனேயே தமது சுல்தானுக்குப் பின்வரும் செய்தியை அனுப்பினுர்: அதாவது, 'செய்திகளைத் தொகுத்து சுல்தானுக்கு அறிவிக்கும் பணியானது ஒழுங்காகவும் சரியாகவும் நடைபெறுவதில்லை. பூ சுஹல் சௌசாமி ஒரு மதிப்புக்குரிய கௌரவமான மனிதர். மேன்மை தங்கிய அரசருக்குச் சரியெனப் பட்டால், எல்லாக் கடமைகளிலும் மிக முக்கியமான இப் பணி யைச் செய்ய அவர் அம் மனிதரை அழைத்துப் பதவியை வழங்கலாம்.' வழக்கமான முறையில் பதவிச் சின்னம் (investiture) வழங்கப்பட்ட பின் 'அமீர்...அவருக்குத் தமது பாராட்டுதல்களைத் தெரிவித்துக்கொண்டார். பின்னர் அவரைக்

[96] Ibid., pp. 63, 130.
[97] Ibid., p. 67.
[98] Ibid., p. 127.
[99] Ibid., pp. 63, 73.
[100] Ibid., p. 106.

குவாஜாவிடம் (Khwaja) செல்லுமாறும், அவரது கட்டளை களின்படி நடந்துகொள்ளுமாறும் பணித்தார்; அதனோடு இராணுவ நிர்வாகம்பற்றிய காரியங்களைத் தனிப்பட்ட முறை யில் கவனித்துக்கொள்ளுமாறும் ஏவினார்.'[101] இதிலிருந்து, அரிஜ் என்பாரின் இரண்டு முக்கியமான கடமைகள் தெரியவருகின்றன. முதலாவதாக அவர் ஒற்றுத் துறையை(Intelligence Department) நன்கு அமைத்துக் கண்காணிக்க வேண்டும். இரண்டாவதாகப் 'படையில் ஒழுங்கும் கட்டுப்பாடும் நிலைநாட்டப்படுதல் வேண்டி,'[102] இராணுவ நிர்வாக சம்பந்தமான எல்லாச் செய்திகளையும் உடனுக்குடன் அரசருக்குத் தெரிவிக்க வேண்டும். இப் பணியில் வஸீர் அவருக்கு 'எல்லாவிதமான துணையையும் அறிவுரையையும்' வழங்க வேண்டுமென எதிர்பார்க்கப்பட்டது. மாநிலங்களில் பல ஒற்றர்களையும் செய்தி அனுப்புபவர்களையும் அவர் நியமித்தார்.

**வஸீருக்கும் ஏனைய துறைகளின் தலைவர்களுக்குமிடையே இருந்த தொடர்பு:** கொள்கையளவில் ஆட்சித் துறைகள் எல்லா வற்றினுடைய தலைவர்களும் வஸீருக்குக் கட்டுப்பட்டவர்கள். வஸீர் நல்ல திறமையுள்ளவராகவும், சுறுசுறுப்பும் சமயோசித அறிவுமுள்ளவராகவும் இருந்தால், அவர் அத் தலைவர்கள்மீது ஏராளமான செல்வாக்கையும் கட்டுப்பாட்டையும் செலுத்த முடிந்தது. உண்மையிலேயே அவர்கள் வஸீரின் ஆணைகளுக்காகக் காத்திருந்தனர். ஆனால், வஸீரின்சொந்த ஆற்றலைப் பொறுத்தே அவர்கள் அவ்வாணைகளுக்குக் கீழ்ப்படிவதும் படியாததும் அமைந் தது. மற்றும் சுல்தானும், இராணுவப் பலங்கொண்ட பிரபுக்களும் அவருக்கு அளித்த ஆதரவைப் பொறுத்தும் அவரது செல்வாக்கு அமைந்தது. வஸீரை ஏளனம் செய்த பிரபுக்களையும் ஆளுநர் களையும் சுல்தான்கள் பார்த்தும் பாராததுமாக விட்டுவிட்ட சமயங்கள் பல உண்டு. அதே சமயம் வஸீரை ஒருசிறிதே அவ மதித்தவர்களுக்கும் சுல்தான் மரணதண்டனை விதித்த காலங் களும் உண்டு. சுல்தானின் இச்சையைப் பொறுத்தே எல்லாம் அமைந்தன. வஸீரை, சுல்தானின் தனிப் பிரதிநிதியாகக் (Viceroy) கருதுவது அப்பாசித் மன்னர்கள் காலத்திலிருந்தே வழிவழி வந்த வழக்கமாயிருந்தது. நாட்டின் முழு நிர்வாகப் பொறுப்பும் ஒரு யதேச்சாதிகாரியின் கைகளில் ஒப்படைக்கப் பட்டிருந்ததால், அப்படிப்பட்ட அரசப் பிரதிநிதி ஒருவர் நாட் டிற்குப் பெரிதும் தேவைப்பட்டார். எனவே, மத்திய அரசாங்கத்

---

[101] Ibid., Vol.II, p. 73.

[102] Ibid.

துறைகளைப் பற்றி மட்டுமல்லாமல் மாநில அரசாங்கத் துறைகளைப் பற்றியும் அவர் நன்கு அறிந்துவைத்திருக்க வேண்டுமென்றும், இருவகை அரசாங்கங்களும் ஒழுங்காக இயங்கு மாறு செய்யவேண்டுமென்றும் எதிர்பார்க்கப்பட்டது. சுல்தானே இறுதியில் எதையும் சுயமாகத் தொடங்கக்கூடிய அதிகாரத்தைப் பெற்றிருந்ததால், வஸீர், அவர் ஆட்டிய வழி ஆடுகின்ற ஓர் அணுக்கச் செயலாளர் போன்றே காணப்பட்டார். எனினும், நிர்வாக சம்பந்தமான அன்றாடச் சிறு நடவடிக்கைகளிலெல்லாம் அரசர் எப்போதுமே தலையிடுகிற வழக்கமில்லை. போர், சமா தானம் போன்ற பெருநிகழ்ச்சிகளைப் பற்றிய கொள்கைகளை வகுப்பதில்கூடச் சில சமயங்களில் வஸீர் சுயமாக முடிவெடுத்துக் காரியங்களைச் செய்யக்கூடியவராயிருந்தார். சுல்தான் மறுப்புக் கூறுதவரையில் அவர் சொந்தமாகவே காரியங்களைச் செய்தார். ஆனால், எதைச் செய்தாலும் அதை உடனே சுல்தானுக்குத் தெரிவித்து அவரது இசைவினைப் பெற்றுக்கொள்ளுதல் அவரது கடமையாகும். முடிவில், நாம் முன்பே கூறியபடி, எல்லாம் சுல்தானுடைய திறமையைப் பொறுத்தே அமைந்தன.

(g) **மத்திய ஆட்சித்துறையின் மற்ற அதிகாரிகள்:** மத்திய ஆட்சித் துறையைப் பற்றிய விளக்கமானது முற்றுப் பெற வேண்டுமானால், முக்கிய நீதிபதி,[103] கொத்தவால்[104] (Kotwal), சிறைக்கூட ஆளுநர்,[105] முஷ்ரிஃப்[106], முஸ்தாஃபி[107] முதலிய அதிகாரிகளைப்பற்றியெல்லாம் கூறுவது இன்றியமையாத தாகும். முக்கிய நீதிபதி அல்லது காஜி உல் குஸாத் (Qazi-ul-Qusat) என்பார்தான் நீதித் துறையின் தலைவராயிருந்தவர். ஏனெனில், தலைநகரிலும்[108] மாநிலங்களிலும்[109] ஏராளமான நீதிபதிகள் அவருக்குக்கீழ் பணிபுரிந்துவந்தனர் என்பதை நாம் அறிவோம். நீதித்துறை நாட்டின் மிக முக்கியமான ஆட்சித் துறையாகக் கருதப்பட்டது. ஏனெனில், 'வரி திரட்டல், சிவில் நிர்வாக காரியங்கள் என்ற இருமுக்கியப்பணிகளும் அத்துறையின் பொறுப்போடு சேர்க்கப்பட்டிருந்தது. காஜியின் கடமைகளும் ஆளுநரின் கடமைகளும் வெவ்வேறாகப் பிரித்துணரப்பட்டன. 'சிவில் காரியங்களைக் கவனித்துக்கொள்ள வேண்டுவதும், வரி

---

[103]Ibid., Vol. II, p. 96.
[104]Ibid., pp. 60, 146, 151.
[105]Ibid., p. 94.
[106]Ibid., p. 112.
[107]Ibid., pp. 112, 149.
[108]Ibid., p. 95.
[109]Ibid., pp. 94, 117.

வசூல் செய்வதும் காஜியின் கடமைகளாகும். ஆனுல், ஆளுநரோ வெனின், தமது சௌகரியப்படி போர் செய்தல், கப்பப் பணத்தை வாங்குதல்...'[110] போன்ற காரியங்களைக் கவனித்துக்கொண்டார். எனவே, தலைநகரிலிருந்த வஸீரின் கட்டளைகளுக்கேற்பவே மாநிலக் காஜிகள் நடந்துகொண்டனர். பெயரளவில் மட்டுமே முக்கிய நீதிபதி, மாநிலக் காஜிகளின் தலைவராக இருந்தார். மிக முக்கியமான வழக்குகள் விசாரிக்கப்பட்ட வேளைகளில், வஸீரே நீதிமன்றத்திற்குத் தலைமை வகித்தார். முக்கிய நீதிபதியும், மற்ற நீதிபதிகளும், வரி நிர்ணயிப்பாளர்களும்[111] (assessors) நீதிமன்ற உறுப்பினர்களாக அமர்ந்திருந்தனர்.

கொத்தவால்: தலைநகரின் கொத்தவாலாக இருந்தவர் பொதுவாகப் பெரிதும் குறிப்பிடத்தக்க ஓர் இராணுவ அதிகாரியாயிருந்தார். பெருங்கலகங்களை அடக்கவும், வெளிநாட்டுப் படையெடுப்புகளை முறியடிக்கவும் அவர் அடிக்கடி வெளியே அனுப்பப்பட்டுவந்தார்.[112] தனிப்பட்ட முறையில் கவனித்துக்கொள்ளப் படவேண்டிய அரியாரக் போன்ற கண்ணியமிக்க உயர் சிறைவாசிகள் அவருடைய பொறுப்பில்தான் விடப்பட்டனர்.[113] தலைநகரின் அமைதியையும் ஒழுங்கையும் பாதுகாக்கவேண்டிய பொறுப்பு அவரையே சார்ந்ததாகும். சுல்தானும் வஸீரும் தலைநகரிலில்லாத வேளைகளில் அரச குடும்பத்தைப் பாதுகாக்க வேண்டிய தனிப் பொறுப்பும் அவரிடமே ஒப்படைக்கப்பட்டிருந்தது. அச் சமயங்களில் அரச குடும்பத்தைச் சேர்ந்த நிதிக்குவைகளையும் (treasures), தலைநகரின் அமைதியையும் பாதுகாக்க வேண்டியவரும் அவரே.[114] இவைகளைப்பற்றி விழிப்பாயிருக்க வேண்டுமென அவருக்குத் தனிப்பட்ட முறையில் அறிவுரை வழங்கப்பட்டது.

**சிறைக்கூட ஆளுநர்** (Governor of Prison): நாட்டின் பொதுச் சிறைக்கூடமானது சிறைக்கூட ஆளுநர் ஒருவரின் பொறுப்பில் இருந்தது. அவரும் ஓர் இராணுவ அதிகாரியாகவே இருந்தார். அவரிடம் எப்போதும் ஓர் சிறு படையானது இருந்துவந்தது. குவாஜா ஹஸ்னக் (Khwaja Hasnak) என்பார் பொதுவில் யாவருமறிய விசாரணை செய்யப்பட இருந்தபோது, 'சிறைக்கூட ஆளுநர், பல்வகை வீரர்

[110] Ibid., p. 118.
[111] Ibid., p. 94.
[112] Ibid., p. 146.
[113] Ibid., pp. 111.
[114] Ibid., pp. 151-152.

களோடும் அலி ராய்ஜ் (Ali Raiz) என்பாரோடும் அவருடன் இருந்தார்; அவர்கள் அனைவரும்அவரை அரசவைக்கு அழைத்துச் சென்றனர்' எனக் கேள்விப்படுகிறோம்.[115]

முஷ்ரீஃபுல் மும்லிகாத் (Mushrif-ul-Mumlikat) : முஷ்ரீஃபுல் மும்லிகாத் எனும் அதிகாரி, 'சாரசன்கள் வரலாறு' (History of the Saracens) என்ற நூலின் ஆசிரியரின் கூற்றுப்படி, 'அரசாங்க அலுவலகங்களை அவ்வப்போது பரிசோதித்து, உள்ள நிலைமையை விவரமாக அரசருக்கு அறிவித்து வந்த பொதுக் கண்காணிப்பாளராக'[116] (General Controller) விளங்கியவராவர். டாக்டர் முகமது[117] என்பார் அவர்களை, அதாவது, முஷ்ரீஃபுகளை, ஒற்றுத்துறையைச் சேர்ந்த அதிகாரி களெனக் கருதுகிறார். டாக்டர் திரிபாதி, டாக்டர் முகமதின் கருத்துக்கு மாறுபடுகிறார். 'அரசாங்கத்தின்பால் கொண்டு வரப்பட்ட சிறியனவும் பெரியனவுமான எல்லாப் பொருள் களுக்கும் கணக்கு வைத்துக்கொள்வதே' முஷ்ரீஃபின் கடமை என்பது அவரது கருத்தாகும். நைஜாமுல் முல்க் (Nizam-ul-Mulk) பற்றிய 'சியாசத்நாமா' (Siyasatnama) என்ற நூலை ஆதாரமாகக் கொண்டே அவர் அங்ஙனம் கருதுகிறார்.[118] அவரது கருத்துச் சரியென்றே தோன்றுகிறது. ஏனெனில், 'சாரசன்களின் வரலாறு' என்ற நூலின் ஆசிரியர், முஷ்ரீஃபுல் மும்லிகாத் என்பார் ஒரு பொதுக் கண்காணிப்பாளர் என்று கூறுகின்றபொழுது, டாக்டர் திரிபாதியின் கருத்தை அப்படியே ஒப்புக்கொள்கிறாரென்றே கூறலாம். 'நாட்டின் பொருளாதார விவகாரங்களைக் கண் காணிப்பது அவரது கடமையாகும்'[119] என பைஹாகி என்பார் கூறுவதும் அக் கருத்தையே பெரிதும் ஒத்துள்ளது. ஏராளமான கணக்கர்கள் அவருக்குத் துணைபுரிந்தனர். முஷ்ரீஃபுகள் பொது வாக 'அரசவையின் பெருமக்களாக' விளங்கியவர்கள். படிப்படி யாகவே அவர்கள் அந்த 'அந்தஸ்தைப்' பெற்றனர்.[120]

முஷ்தஃபி (Mustaufi) : முஷ்தஃபி எனும் அதிகாரி, டாக்டர் திரிபாதி என்பாரின் கூற்றுப்படி, 'வரிவசூல் தொகையைத் திரட்டல் (ஹசில்—hasil), இருப்புத் தொகையைப் (பாக்கி—baqi) பாதுகாத்தல்' என்ற இரு பணிகளையும், 'ரொக்கக் கணக்குகளை

---

115 Ibid., p. 94.
116 'History of the Saracens', p. 419.
117 'Life and Times of Mahmud of Ghazni', p. 144.
118 'Some Aspects of Muslim Administration', p. 211.
119 Elliot & Dowson, Vol. II, p. 94.
120 Ibid., p. 112.

மேற்பார்வையிடல்'[121] என்ற பணியையும் மேற்கொண்டிருந் தார். பைஹாகி என்பார் அவரது பணிகளைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். இந்துஸ்தானத்துக்குப் போய் வஹிண்டில் (Waihind) மாரிக்காலத்தைக் கழிக்கவேண்டுமென மசூத் என்பார் தீர்மானித்தபோது, 'அவர் நாளில் பெரும் பகுதியை மன்சூர் முஷ்டாஃபியிடம் தனியே பேசுவதில் கழித்தார். தமது நிதிக்குவைகளைச் சுமக்க எத்தனை ஒட்ட கங்கள் தேவை என்பதுபற்றியும், தமது அதிகாரிகள், படைகள் ஆகியவைபற்றியும் இருவரும் பேசிக்கொண்டிருந்தனர்'[122] எனப் பைஹாகி கூறியுள்ளார். மற்றும், போதிய ஒட்டகங்கள் கிடைக் காமையால் மீண்டும் சுல்தான் அவரைத் தனியே அழைத்து, 'இன்னும் அதிகமான ஒட்டகங்களை வருவித்துத் தரும்படி'[123] கேட்டதாகவும் அவர் கூறியுள்ளார். இந்த பூ மன்சுர் முஷ்டாஃபி என்பாரை 'அமைச்சர் அலுவலகங்களின் காப்பாளர்' என்றும் பைஹாகி கூறுகிறார்.[124] 'அய்னி அக்பரி'யில் அவர் கணக்குத் தணிக்கைத் துறையில் (Accounts Department) ஓர் அதிகாரியாயிருந்ததாகவும், ஊதியம் வழங்கல், ஜாகீர் வழங்கல் ஆகியவைகளுடன்தான் அவர் பெரிதும் தொடர்புகொண்டிருந் தாரென்றும் கூறப்படுகிறது.[125] உண்மையில் அக்பரது காலத் தில் முஷ்டாஃபிகள், கணக்குத் தணிக்கைத் துறையின் சிவில் சம்பந்தமானவும் இராணுவ சம்பந்தமானவுமான காரியங்களைக் கவனித்துக்கொண்டனர். கஜ்னவீடுகள் காலத்தில் டாக்டர் திரிபாதி என்பார் கூறுகிறபடி 'ரொக்கக் கணக்கு'களை (cash accounts) உட்கொண்ட காரியங்களை அவர் நிச்சயமாகக் கவனித்துவந்ததாகத் தெரிகிறது. ஆனால், அவரது உண்மை நிலையானது, அலுவலக மேற்பார்வையாளர் அல்லது ஓர் ஆட்சித் துறையின் குமாஸ்தா, கணக்குத் தணிக்கையாளர் முதலிய'[126] பதவியாளர்களின் நிலையையே பெரிதும் ஒத்திருந்தது எனலாம்.

(h) **மாநில ஆட்சித்துறை** (Provincial Administration): இதுகாறும் தரப்பட்டது கஜினியில் இருந்த மத்திய அரசாங் கத்தைப்பற்றிய சுருக்கமேயாகும். மாநில ஆட்சித் துறையைப் பற்றி இனி ஆராய்வோம். மாநில அரசாங்கம் ஏறக்குறைய மத்திய அரசாங்கத்தின் மறு பகர்ப்பாகவே (replica)

---

[121] 'Some Aspects of Muslim Administration', p. 211.
[122] Elliot & Dowson, Vol. II, p. 149.
[123] Ibid., p. 152.
[124] Ibid., p. 78.
[125] Blochman, pp. 261-63.
[126] Tabakati-Nasiri, p. 650, Note 1.

விளங்கியது. சான்ருக, பஞ்சாப் மாநிலத்தின் ஆட்சித் துறையில், ஓர் ஆளுநர் அல்லது அமீர், காஜி ஷிராஜ், (Kazi Shiraj), செய்திகளை மேற்பார்வையிடும் அதிகாரி (Superintendent of News Carriers) ஆகிய மூன்று சம அந்தஸ்துள்ள அதிகாரிகள் தலைவர்களாக இருந்தனர். ஆளுநரே படைத் தலைவராகவும் விளங்கிஞர். 'அவர் பேரும் புகழும் கண்ணியமும் கொண்டு விளங்குகிருர். படைகளை நடத்திச் செல்லவும், கப்பப் பணத்தை வசூல் செய்யவும் அவருக்கு அதிகாரம் இருந்தது. சிவில் விவகாரங்களைக் கவனித்துக்கொள்வதும், வரி வசூல் செய்வதும் காஜியின் கடமைகளாகும். ஆனல், படைத் தலைவராக இருப்பவர் சௌகரியப்பட்டபோது போர்செய்கிருர்; கப்பப் பணத்தை வசூலிக்கிருர்; யானைகளைக் கைப்பற்றுகிருர்; அடங்காத இந்துக்களை ஒறுக்கிருர்.'[127] இதிலிருந்து, சிவில் விவகாரங்களுக்குக் காஜியும், இராணுவக் காரியங்களுக்கு கவர்னர் அல்லது ஆளுநரும் தலைவர்களாக விளங்கினர் எனத் தெரிகிறது. காஜிக்கு உதவியாக அமில் (Aumil) அல்லது வரிவசூல் செய்பவரும், முஷ்ரீஃப் (கணக்குத் தணிக்கைத் தலைவர்) என்பாரும் இருந்தனர்.[128] காஜியோடுகூட அரசரின் அணுக்கத் துணையாளராயிருந்தவர் செய்தி எடுத்துச் செல்வோரின் மேற்பார்வையாளராவர். அவர் அரசருக்கு 'மிக நம்பகமான அதிகாரியாவார்'. மாநிலத்தில் 'நடப்பன யாவற்றையும்' மத்திய அரசவைக்கு அனுப்பிவைப்பதில் ஆளுநரோடு ஒத்துழைத்தலே அவரது கடமையாகும். 'மத்திய அரசவையின் ஆணைகளுக்கேற்பவே அவர் நடக்கவேண்டும்'.[129] ஆளுநர் அல்லது அமீருக்குக் கீழ் அவரது அலுவலகத்தில் வேலைபார்த்தவர்கள் ஹஜிப்[130] (Hajib), முஸ்தஃபி[131] (Mustaufi), முஷ்ரீஃப்[132] (Mushrif), டபிர் (Dabir) அல்லது செயலாளர் எனும் அதிகாரிகளாவர். ஆளுநர் ஒருவேளை அரசகுலத்தைச் சார்ந்த ஓர் இளவரசராக இருந்தால், அவருக்குச் சில சமயம் மூன்று அகமுடையார்கள் (chamberlains) கூட இருப்பது வழக்கம். பொதுவாக மத்திய அரசவையின், அதாவது, வஸீரின் ஏவலுக்கேற்பவே மாநில அரசாங்கம் இயங்கியது. ஆனல், பல சமயங்களில் மாநில ஆளுநர் ஆற்றல் மிக்கவராயும், அதிகார ஆசை மிக்கவராயுமிருக்க, மத்திய அரசவை

---

[127] Elliot & Dowson, Vol II, p. 118.
[128] Ibid, p. 119.
[129] Ibid., pp. 119, 120.
[130] Ibid., pp. 121, 134, 135.
[131] Ibid., pp. 112, 134.
[132] Ibid., p. 134.

யானது திறமை குன்றியதாகவும் திடசித்தமற்றதாகவுமிருப்பது (weak and vacillating) வழக்கம். அச் சமயங்களிலெல்லாம் ஆளுநர் தம் பிரியப்படியே நடந்துகொள்வார்.

கஜினி சுல்தான்களின்கீழ் இயங்கிவந்த ஆட்சித் துறையின் அமைப்பு ஏறத்தாழ இவ்வளவுதான் எனலாம். மசூத் காலத்திலிருந்து அவ்வாட்சித்துறை நலிய ஆரம்பித்துவிட்டதென்பதை நாம் ஏற்கெனவே பார்த்தோம். மெல்ல மெல்லக் கஜினிப் பேரரசு பல சிறு நாடுகளாகச் சிதறியது. பஞ்சாப் மாநிலம் மட்டுமே அப் பேரரசின் பிடியில் சிக்கிக் கிடந்தது. ஏனைய இடங்கள் யாவும் சுயேச்சை அடைந்துவிட்டன. அவைகளை கோரி சகோதரர்கள் மீண்டும் கைப்பற்றினர். பதின்மூன்றும் நூற்றாண்டின் தொடக்கத்திலும், குத்புதீன் அய்பெக் அரசெய்திய பின்பும் புதியதொரு சுல்தானிய அரசு டில்லியில் ஏற்பட்டது. அச் சுல்தான்கள் டில்லியிலேயே தங்கி இந்துஸ்தானத்தை வெல்வதையே தமது முக்கியக் குறிக்கோளாகக் கொண்டனர். அவர்கள் தம் முழுக் கவனத்தையும் இந்துஸ்தானத்தின் மீதே செலுத்தினர். அதன் எல்லைக்கு அப்பாற்பட்ட காபூல், கஜினி நாடுகளை அவர்கள் அறவே புறக்கணித்தனர். படிப்படியாக அவர்கள் இந்தியா அனைத்தையும் ஏறக்குறையக் கைப்பற்றிக்கொண்டனர். எனவே, நாம் ஏற்கெனவே குறிப்பிட்டுள்ளபடி, கஜினி சுல்தான்களின் ஆட்சி முறையும், குறிக்கோள்களும், கோட்பாடுகளும் புதிய டில்லி சுல்தானிய அரசின் தேவைகளுக்கேற்பவும் புதிய சூழ்நிலைகளுக்கேற்பவும் சற்றே மாற்றியமைக்கப்பட வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. ஆட்சித்துறை அமைப்பின் பல்வேறு பாகங்களைப்பற்றிய விவரங்களைப் பொறுத்தவரை நாம் முக்கியமாகக் கவனிக்கவேண்டியது என்னவெனில், அவை நாளுக்கு நாள் விரிந்துகொண்டே சென்றன என்பதும், அதே சமயத்தில் அதிகாரம் மையத்தில் செறிவதற்கான முயற்சிகள் ஓயாது நடைபெற்றுக்கொண்டே வந்தன என்பதுமாகும். வலிமைமிக்க சுல்தான்கள் இங்கொருவர் அங்கொருவராகச் சில சமயங்களில் தோன்றுவர். அவர்கள் காலத்தில் அதிகாரங்கள் எல்லாம் மையத்தில் அதிகமதிகமாகக் குவியும். அவர்கள் இறந்தவுடன் மீண்டும் மத்திய ஆட்சி தளர்வுறும்; நாடெங்கும் குழப்பம் தோன்றும். இவை டில்லி சுல்தானிய ஆட்சியில் வழக்கமாக நடைபெறும் நிகழ்ச்சிகளாயிருந்தன. என்றாலும், முழுமையாகப் பார்க்குமிடத்து, கஜனவீடுகளின் முறையைவிடப் பலவகைகளில் அது குறிப்பிடத்தக்க முன்னேற்றமடைந்திருந்ததென்பதில் ஐயமில்லை. இந்த முன்னுரையோடு டில்லி சுல்தானிய அரசின் ஆட்சித்துறை நிறுவனத்தை ஆராயப் புகுவோமாக.

## டில்லி சுல்தானிய அரசின் மத்திய ஆட்சித்துறை

### (a) நாயாபி மாம்லிகாத்

டில்லி மத்திய அரசாங்க நிறுவனத்தில், கஜினியில் இருந்ததைப் போன்றே சுல்தானுடைய கட்டளைகளுக்கு நேரடியாகக் கட்டுப்பட்டிருந்த பல அரசாங்கத்துறைத் தலைவர்கள் (Departmental Heads) இருந்தனர். சுல்தானது வல்லமைக்கும் வலிமைக்கும் தக்கபடி அத் தலைவர்களின் முக்கியத்துவமும் வல்லமையும் அமைந்திருந்தன. அவர் ஒரு திடசித்தமில்லாதவராயும் (vacillating), வலிமையற்றவராயுமிருந்ததால், அவர்கள் அவரைத் தம் கையில் சிக்கிய பொம்மையைப்போல் ஆட்டிவைத்தனர். திறமைமிக்கவராயும் வலிமையுள்ளவர்களாயுமிருந்த அரசர்கள், அவர்களைத் தம் பிரியம்போல் ஆட்டிவைத்தனர். சுல்தானுக்கு அடுத்தபடியாக இருந்த அதிகாரி, கஜினியில் இருந்தவரைப் போலன்றி நாயாபி மாம்லிகாத் என்ற பெயரில் டில்லியில் பணியாற்றினுர். அவரே நாட்டின் பகரத் தலைவர் (Deputy) அல்லது துணைத்தலைவராக (lieutenant) விளங்கினுர்.[133] சுல்தான் ருக்னுதீன் ஃபிரோஸ் ஷா (Ruknuddin Firoz Shah, *1236*) சுல்தான் நாஸிருதீன் மகமது (Sultan Nasiruddin Mahmud, *1246-66*) ஆகியோரின் ஆட்சிக் காலங்களில் இந்த அதிகாரியானவர் மிகச் சிறப்பான இடத்தைப் பெற்றிருந்தார் எனக் கேள்விப்படுகிறோம். அரசர் வயதுவராத சிறுவராயிருந்தால் அவரே இடைக்காலப் பாதுகாப்பாளராக (regent) இருந்து ஆட்சியை நடத்தினுர்; அரசர் தலைநகரில் இல்லாத வேளைகளில் அவருக்குப் பதிலாக அவரது அதிகாரத்தைச் செலுத்தியவரும் அவ்வதிகாரியே யாவார். நாஸிருதீனைப் போன்று அரசர் பலவீனராயிருந்த போது அவர் வைத்ததே சட்டமாயிருந்தது. அச் சமயங்களில் அவர் ஓர் யதேச்சாதிகாரி போன்று நடந்துகொண்டார். நாஸிருதீன் காலத்து நாயாபாகப் பல்லாண்டுகள் பணிபுரிந்த பால்பன், 'படைகளை நடத்திச்செல்லும்'[134] அதிகாரத்தையும் கூடச் செலுத்திவந்தார். அதாவது, நாட்டின் சேனுதிபதியாகவும் அவர் விளங்கினுர். இத்தகைய சூழ்நிலையில் கஜனவீடுகளின் வஸீரைவிட டில்லி சுல்தான்களின் நாயாபே உண்மையான அரசப் பிரதிநிதியாகத் திகழ்ந்தார் எனக் கூறலாம், ஏனெனில், கஜ்னவீடுகளின் காலத்து வஸீர் அரசாங்கத்தின் சிவில் துறைக்குமட்டுமே தலைமை தாங்கி

[133] 'Tabakati-Nasiri', Trans. by Raverty, pp. 661, 694, 702, 802.

[134] Ibid., p. 820.

ஞர். அப்படியிருந்தவரைத்தான் மசூத் எனும் சுல்தான் தமது கலீஃபா, அதாவது, பிரதிநிதி என அழைத்தார். ஆனால், டில்லி சுல்தானியர்கள் கால நாயாபுகள் இராணுவத்துறைக்கும் தலைமை தாங்கிவந்தார்கள். நாட்டின் படைகளை அவர் நடத்திச் சென்ற சமயங்கள் பல என்பதை நாம் அறியவருகிறோம். எனவே, நாட்டின் படைகளுக்கு அவரே சேனாதிபதியாக விளங்கியிருக்கவேண்டுமென்று தோன்றுகிறது.

(b) வஸீரும் ஏனைய அமைச்சர்களும்

நாயாபுக்கு அடுத்தபடியாக வஸீர் என்பார் அரசாங்கத்தில் மிக முக்கியமான இடத்தை வகித்தார். நாட்டின் மிக வலிமையுள்ள அதிகாரியாக அவர் விளங்கினாரென்பதில் ஐயமில்லை.[135] அவர் பெரும்பாலும் மதசம்பந்தமானவும் நிதிசம்பந்தமானவுமான அதிகாரங்களையே செலுத்திவந்தார். சுல்தான் நஸிருதீன் காலத்தே (கி.பி. 1246-1266) மதத்துறைத் தலைவராயிருந்த சதருல் முல்க் (Sadr-ul-Mulk) என்பாரின் பதவியையும், நாட்டின் வஸீராக இருந்த வஸீரதி மமாலிக் (Wazarat-i-Mamalik) என்பாரின் பதவியையும்[136] ஒருவரே வகித்துவந்ததாகக் கேள்விப்படுகிறோம். சதருல் முல்க் என்பார் செய்யவேண்டுமென எதிர்பார்க்கப்பட்ட பணிகள் என்னென்னவென்பதைப் பின்னர் பார்ப்போம். வஸீருக்கு அடுத்தபடியாக முக்கிய அதிகாரிகளாய் விளங்கியவர்கள் ஏனைய அமைச்சர்களாவர். அவர்களுள் அமீரி ஹஜிப்[137] (அகமுடையார் பிரபு—Lord Chamberlain) என்பார் வழக்கம்போல் மன்னரின் நம்பிக்கைக்குப் பாத்திரமான அமைச்சராயிருந்துகொண்டு அதன் மூலமாக நாட்டில் ஏராளமான செல்வாக்கைச் செலுத்திவந்தார். மாலிக் உல் ஹுஜாப் (Malik-ul-Hujjab), அதாவது, அகமுடையார்களின் தலைவர்[138] அல்லது அமீர் உல் ஹுஜாப் (Amir-ul-Hujjab), அதாவது, அகமுடையார்களின் பிரபு (Lord Chamberlain)[139] என்ற ஓர் அதிகாரியைப் பற்றியும் நாம் கேள்விப்படுகிறோம். டில்லி அரசர்களாகட்டும் அல்லது கஜினி அரசர்களாகட்டும், இரு சாராருமே ஏராளமான அகமுடையார்களை வைத்திருந்தனர் என்பது யாவருமறிந்த தொன்றேயாம். அவ்வகமுடையார் சிலர் பொதுவாக எப்போதும் அரசருக்கு மிக அண்மையில் இருந்துகொண்டு

[135] Ibid., pp. 661, 693, 710.
[136] Ibid., p. 698.
[137] Ibid., pp. 661, 684, etc.
[138] Ibid., p. 820.
[139] Ibid., p. 699.

அவருக்குப் பணிவிடை புரிந்துவந்தனர். வேறு சிலர் அரசரின் குடும்பத்தைப்பற்றிய வெவ்வேறு காரியங்களைக் கவனித்துக்கொண்டனர். இன்னும் சிலர் மாநில விவகாரங்களைக் கவனிக்கவோ அல்லது போர்ப்படைகளை ஒட்டிய காரியங்களை மேற்கொள்ளவோ அனுப்பப்பட்டனர். பேரரசானது பரப்பில் விரியவிரிய அகமுடையார்களின் எண்ணிக்கையும் பெருகியது. நாளடைவில் அவர்கள் அனைவரையும் கட்டுப்படுத்தி வேலை வாங்குதற்காக ஒரு தலைமை அகமுடையார் தேவைப்பட்டிருக்க வேண்டும். அத் தேவையை நிறைவேற்றியவர்தாம் மாலிக் உல் ஹுஜாப் என்பவராவர். அமீரி ஹஜீபுடன்கூட நயபி அமீரி ஹஜீப் (Nayab-i-Amir-i-Hajib)[140] என்ற அவரது பிரதிநிதி ஒருவரும் இருந்தார். 'அரண்மனைக் காவலர்களின்' தலைவராக[141] ஹஜீப் பணியாற்றிவந்தார் என்பதை நாம் ஏற்கெனவே கண்டோம். கஜ்னவீடுகள் காலத்திய சிபாதார் (Sipah-dar) எனப்பட்டவரும், டில்லி சுல்தான்கள் காலத்திய ஸரிஜம்தார் (Sar-i-Jamdar)[142] எனப்பட்டவரும் அநேகமாக அமீரி ஹஜீப் அல்லது மாலிக் உல் ஹுஜாப் என்ற அகமுடையார்கள் தலைமைப் பிரபுவின் துணையதிகாரிகளாக இருந்திருக்கவேண்டுமெனத் தெரிகிறது.

அமீரி ஹஜீபுக்கு அடுத்தபடியாக வைத்து எண்ணப்படத் தக்கவர் திவானி அரிஜ் மமாலிக் (Diwani-Ariz-Mamalik)[143] என்பவர். அவர் போர்வீரர் கணக்கெடுப்புத் துறைக்குத் (Department of Muster Rolls) தலைவராயிருந்தார். பெரும்பாலும் அவர் அமீர் உல் ஹுஜாப், கொத்தவால் முதலியவர்களைப் போன்று ஓர் இராணுவ அதிகாரியாகவே இருந்தார்.[144] அவரது பணிகள் கஜ்னவீடுகள் காலத்தில் என்னென்னவாயிருந்தன என்பதுபற்றி நாம் ஏற்கெனவே பார்த்தோம். டில்லி சுல்தான்கள் காலத்தும் அவர் ஏறக்குறைய அதே பணிகளையே செய்துவந்ததாகத் தெரிகிறது. அரிஜுக்கு ஓர் துணையதிகாரி இருந்தார். அவரும் 'படைகளைப்பற்றிய காரியங்களை நிர்வகித்துவந்தார்.'[145] இவர்களேயன்றி முஷ்ரிஃபி மமாலிக் (Mushrif-i-Mamalik)[146] எனும் ஓர் அதிகாரியும் (அரசின் அல்லது நாட்டின் செயலாளர்) இருந்தார். அவர் அஷ்ரிஃபி மமாலிக் (Ashrifi-

[140] Ibid., pp. 709, 759, 820.
[141] Elliot & Dowson, Vol. II, p. 68.
[142] Tabakati Nasiri, pp. 603, 728.
[143] Ibid., pp. 548, 709, 856.
[144] Ibid., p. 709.
[145] Elliot & Dowson, Vol. III, p. 348.
[146] Tabakati Nasiri, pp. 638, 652, 710.

Mamalik) என்றும் அழைக்கப்பட்டார். இந்தப் பதவியோடு சில சமயங்களில் 'சதருல் முல்க்' பதவியும் ஒன்றுசேர்க்கப்பட்டது. நாஸிருதீன் ஆட்சிக் காலத்தின் பன்னிரண்டாவது ஆண்டில் அது அங்ஙனம் நிகழ்ந்தது.[147] இவ்வதிகாரிதான் சுல்தானுடைய முக்கியமான ஆணைகளையெல்லாம் எழுதியவர். இவருடைய அலுவலகத்தில்தான் அரசின் எல்லாப் பத்திரங்களும் பத்திரமாக வைக்கப்பட்டிருந்தன.

இன்னும் ஏறக்குறைய ஒரே அந்தஸ்திலிருந்த இரண்டு அதிகாரிகளைப்பற்றியும் கேள்விப்படுகிறோம். அவர்கள் அநேகமாக ஒரே வகையான பணியை மேற்கொண்டிருந்திருக்கக்கூடுமெனத் தெரிகிறது. அவர்களில் ஒருவர் சதர்-உல்-முல்க் (Sadr-ul-Mulk) என்பவர். அவர் நீதிபதி அல்லது நாட்டின் நிர்வாகத் தலைவராக இருந்தார். இன்னொருவர் காஜி மமாலிக் (Kazi-Mamalik) என்பவராவர். அவர் காஜி-உல்-குஷாத் (Kazi-ul-Kuzat), அதாவது, நாட்டின் தலைமைக் காஜி எனவும் அழைக்கப்பட்டார். சுல்தான் நாஸிருதீன் காலத்தே (கி.பி. *1246-66*) சதருல் முல்க் பதவியை வகித்தவரே இரு முறை, முஷ்ரீஃபி மமாலிக் அல்லது அஷ்ரீஃபி மமாலிக்[148] பதவியையும், வஸாரத்[149] பதவியையும் வகித்தாரெனக் கூறப்படுகிறது.

சதருல் முல்க் என்ற அதிகாரியும் டில்லி சுல்தான்கள் காலத்து சதரே ஜஹான் (Sadr-i-Jahan)[150] என அழைக்கப்பட்ட அதிகாரியும் ஒருவராகவே இருக்கக்கூடுமெனத் தெரிகிறது. ஆனால், அக்பர் கால சதரே ஜஹானும் சதருல் முல்க்கும் ஒரே பதவியை வகித்தவர்கள் என்பதில் ஐயமில்லை. அக்பர் காலத்தில் அவர் பேரரசின் நான்காந்தர அதிகாரியாக விளங்கினர். சமய சம்பந்தமான காரியங்களுக்கும் தரும கைங்கரியங்களுக்குமாக ஒதுக்கப்பட்ட நிலங்களான மததிமாஷ் (Madad-i-Maash) என்ற நிலபுலன்களின் நிர்வாகப் பொறுப்பு இவ்வதிகாரியின் கைகளில் ஒப்படைக்கப்பட்டிருந்தது. அரசரின் இசைவுக்குக்கூடக் காத்திராமல் மேற்சொன்ன நல்ல காரியங்களுக்காக நிலங்களைத் தம் விருப்பப்படி மானியமாக வழங்கக்கூடிய வரம்பற்ற அதிகாரத்தை அவர் பெற்றிருந்தார்.[151] சட்டத்தைப் பொறுத்த பிரச்சினைகளில் அவரே முடிவான தீர்ப்பளிக்கக்கூடிய அதிகாரியாய் விளங்கி

---

[147] Ibid., pp. 652, 711.
[148] Ibid., pp. 652, 711.
[149] Ibid., p. 698.
[150] Ibid., p. 698.
[151] 'Ain-i-Akbari', Blochman's Trans., 271.

ஞர். நீதி வழங்குவதில் அவருக்குத் துணைபுரிந்தவர் காஜி மமாலிக் எனப்படுபவராவார். அக்பர் கால மதாதி மாஷுக்குச் சமமான பைதுல்-மல் (Bait-ul-Mal) நிதியைக் கண்காணித்துவந்தவரும் அவரே. குரானின் கட்டளைப்படி பெய்துல்-மல்நிதிகள் 'கடவுளுக் காகவும், அவரது தூதருக்காகவும், அவருடைய பக்தர்களுக்காக வும், திக்கற்றவர்கள், ஏழைகள், பிரயாணிகள் ஆகியோருக்காக வும்'[152] மட்டுமே செலவழிக்கத்தக்கனவாகும்.

காஜி-மமாலிக் அல்லது காஜி-உல்-குஸாத் என்பார் ஒருவேளை சதருல் முல்க் என்பாரின் கட்டளைகளுக்கேற்பவே நடந்துகொண் டிருக்கக்கூடுமெனத் தெரிகிறது. சமயச் சட்டப்படி நீதி வழங் கலும், சமயத்துக்கும் அறப்பணிகளுக்குமென அர்ப்பணிக்கப் பெற்ற நிலங்களையும் நிதிகளையும் நிர்வகித்தலுமே அவரது முக்கியமான கடமைகளாகும். அயோத்தி,[153] குவாலியர்[154] போன்ற இடங்களில் பணிபுரிந்த மாநிலக் காஜிகள் ஒருவேளை அவருக்குப் பெயரளவில் கட்டுப்பட்டிருந்திருக்கக்கூடும். காஜிகள் பொதுவாக மூன்று பணிகளைப் புரிந்துவந்தனர். அதாவது, 'காஜி, கதீப் (Khatib), இமாம் (Imam) ஆகிய மூவரின் பணி களையும் அவர் புரிந்ததோடு, சட்ட சம்பந்தமான எல்லாக் காரியங்களுக்கும் அவர் தலைமை வகித்தார்.'[155] ஒவ்வொரு ஜமி மசூதியுடனும் (Jami Masjid) ஒரு கதீப் (Khatib)[156] நியமிக் கப்பட்டிருந்தார். அவரே குத்பாவை ஓதியவர். தலைநகர் போன்ற முக்கியமான நகரங்களிலிருந்த சமயக் கல்லூரிகள் (Colleges)[157] யாவும்காஜிகளின் மேற்பார்வையிலேயே இருந்தன. புதிதாக அரசர் ஒருவர் பட்டமெய்துமுன், அவரது பதவியைச் சட்டரீதியாக்குவதற்காக வெளியிடப்படும் ஆணையொன்றுண்டு. அதற்கு ஜுலுஸ் (julus) என்று பெயர். அந்த ஜுலுஸை வழங்கி யவர் சதருல் முல்க் என்பவரே என்பதை அறியும்போதுதான் அவர் எவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்த அதிகாரி என்பது தெரிகின்றது. அமீரி தாத் (Amir-i-Dad) அல்லது தலைமை நீதிபதி (Chief Magistrate) என்பார் ஒருவேளை காஜியை யொத்த ஓர் அதிகாரியாயிருந்திருக்கக்கூடும். குவாலியர் நகரில் ஓர் அமீரி தாத் இருந்ததாகக் கேள்விப்படுகிறோம். டில்லியிலும்

[152] Tabakati Nasiri, p. 62, note 5.
[153] Ibid., p. 664.
[154] Ibid., p. 644.
[155] Ibid., p. 620.
[156] Ibid., p. 755.
[157] Ibid., p. 644.

முல்தானிலும்[158] கூட அப்படிப்பட்ட அதிகாரிகள் இருந்தன ரெனத் தெரிகிறது. மாலிக்-உல்-உம்ரா (Malik-ul-Umra) சிபா சாலார் (Sipah-Salar) அல்லது ஆளுநர் எனப்பட்ட இராணுவ அதிகாரிகளும் சிலர் இருந்தனர். எனவே, அமீரி தாட் என்பார் ஒருவேளை கிரிமினல் வழக்குகளை மட்டுமே விசாரிக்கும் அதிகாரி யாக இருந்திருக்கக்கூடும். ஏனெனில், சதருல் முல்க்கின் துறைக்கு அப்பாற்பட்டவராகவும், அதே சமயம் ஆளுநராகவும் அவர் அடிக்கடி குறிப்பிடப்படுகின்றார்.

இதுகாறும் கூறப்பட்டவர்கள்தாம் மத்திய அரசாங்கத்தின் அதிகாரிகளாவர். எனவே, அவர்கள் தங்களுடைய சொந்த மத்திய அரசாங்கத் துறைகளையேயன்றி அவற்றோடு தொடர் புடைய மாநில அரசாங்கத் துறைகளையும் கண்காணித்து வந்தனர். 'இந்து நாட்டின் முஜியா (Muizziah) ஷாம்ஸியா (Shamsiah) சுல்தான்களின்' இந்த மத்திய அரசாங்க அமைப் பையே கில்ஜிகளும் துக்ளக்குகளும் சிறிதும் மாறுபாடின்றி அப்படியே கடைப்பிடித்தனர். அது மீண்டும் கஜ்னவீடுகளின் காலத்தே நிலவிய நிறுவனத்தையே பெரிதும் ஒத்திருந்தது. இக் காலத்தே காணப்பட்ட முக்கியமான வேறுபாடு ஒன்றே ஒன்று தான் எனலாம். நாயாபத் (Nayabat) என்ற புதியதோர் பதவி யின் வளர்ச்சியே அவ் வேறுபாடாகும். மாலிக் நைஜாமுதீன் (Malik Nizamuddin) என்பார் கைகுபாத் (Kaiqubad)[159] என்ற சுல்தான் காலத்தே நாயாப் பதவியை வகித்தார்; அதனோடு அவர் டாட்பக் (Dadbak) பதவியையும் வகித்தார். மாலிக் காஃபூர் என்பார் அலாவுதீன் கில்ஜியின் நாயாபாக விளங்கினார்.[160] மக மது துக்ளக்கின்[161] பிரதிநிதியாகவும், ஃபிரோஸ் துக்ளக்கின்[162] கானி ஜஹானாகவும் (Khani Jahan) விளங்கியவர் மாலிக் கிவாமுல் முல்க் காஜா-இ-ஜஹான் (Malik-Kiwam-ul-Mulk Khwaja-i-Jahan) என்பவராவார். இப் பதவியின் முக்கியத்துவ மானது நாளடைவில் பெருக ஆரம்பித்ததோடு, வஸாரத் (Wazarat) பதவியின் முக்கியத்துவம் மெல்ல மெல்லக் குறைய ஆரம்பித்தது. அலாவுதீன் கில்ஜியின் காலத்தே 'வஸீரைப் பற்றி அனைவரும் மறந்துவிட்டனர். உண்மையில் மாலிக் டாஜுல்முல்க் கஜுரி (Malik Tajul Mulk Kajuri) என்பாரே

158 Ibid., pp. 644, 605, 482, 476.

159 'Barni, Tarikhi Firoz Shahi', Elliot & Dowson, Vol. III, p. 126.

160 Ibid., p. 200.

161 Ibid., p. 279.

162 Ibid., p. 293.

சுல்தானின் வஸீராகக் கருதப்பட்டார்.[163] குஸ்ரோவ்கான் (Khusro Khan) என்பார் பின்னர் வஸீராக நியமிக்கப்பட்டார். அப்படிப்பட்ட 'மிகச் சாதாரண மனிதர் ஒருவர் வஸாரத் பதவி யில் அமர்த்தப்பட்டதிலிருந்து, அப் பதவி எவ்வளவு தாழ்நிலை எய்திவிட்டதென்பது தெரிகின்றது.'[164] அப் பதவியின் அதிகார மும் செல்வாக்கும் இங்ஙனம் நாளடைவில் குறையக் குறைய, வெறும் நிதித்துறைத் தலைவராகமட்டுமே அவர் மதிக்கப் பட்டார். ஃபிரோஸ் ஷாவின் காலத்திலெல்லாம் நிதித்துறை யானது திவானி-வஸாரத்[165] என்றே அழைக்கப்படலாயிற்று. இவையெல்லாம் அக்பர் பின்னால் எடுத்துக்கொண்ட ஓர் நடவடிக்கைக்கு முன்னேற்பாடாகவே அமைந்தன எனலாம். அக்பர் காலத்தே, வக்கீல் என்பார் துணைப் பிரதிநிதி அல்லது நாயாபாகவும், வஸீர் என்பார் நிதி அமைச்சராகவும் நியமிக்கப் பட்டனர். வஸீர் பொருளாதாரத் துறைப் பொறுப்பு முழு வதையும் மேற்கொண்டுவிட்டதால், அஷ்ராஃப்-உல்-முமாலிக் (Ashraf-ul-Mumalik) அல்லது நிதிக் கண்காணிப்பாளர் என்ற அதிகாரி திட்டவட்டமாகவே அவருடைய கட்டுப்பாட்டுக்குள் வந்துவிடலானார். ஃபிரோஸ் ஷா துக்ளக்[166] காலத்தே அஷ்ராஃப்-உல்-முமாலிக் ஒருவர், வஸீரால் பதவியைவிட்டு நீக்கப்பட்டு விட்டதாக அறிகிறோம். மேலும், அல்தத்மிஷ் ஆட்சிக் கால மாகிய அவ்வளவு முந்திய காலத்திலிருந்தே, படிப்படியாயமைந்த அதிகாரிகளின் கூட்டமொன்று நாட்டில் ஏற்பட்டுவிட்டது. அதில் முறையே வஸீர், நாயிப் வஸீர், முஸ்டாஃபி, முஷ்ரீஃபி[167] அல்லது அஷ்ராஃபி மமாலிக், காஜிநாடார் (Khzinadar), பால்லதார் (Bhalladar) ஆகியோர் அடங்கியிருந்தனர்.

### (c) நாயாபி வஸீர்

கஜ்னவீடுகள் காலத்தே இல்லாமலிருந்து, டில்லி சுல்தான்கள் காலத்தே புதிதாகத் தோற்றுவிக்கப்பட்ட பதவிகளுள் நாயாபி வஸீர் பதவியும் ஒன்றாகும். அது சுல்தான் அல்தத்மிஷ் காலத்தி லேயே தோன்றிவிட்டது.[168] பல நாயாபி வஸீர்கள் மாநில கவர்னர்களாக அல்லது ஆளுநர்களாக நியமிக்கப்படுவதைப்

[163] 'Some Aspects of Muslim Administration', p. 180.
[164] Ibid., p. 181.
[165] Elliot & Dowson, Vol. III, pp. 355, 359, 369.
[166] Ibid., Vol. III, p. 369.
[167] 'Some Aspects of Muslim Administration', p. 214.
[168] Elliot of Dowson, Vol. III, pp. 253, 368.

பார்க்கிறோம். சான்றாக, தெலிங்கானா,[169] குஜராத்,[170] டில்லி[171] போன்ற இடங்களுக்கு அவர்கள் ஆளுநர்களாகச் சென்றதைப்பற்றிக் கேள்விப்படுகிறோம். இராஜ தர்பாரோடு (Royal Durbar) தொடர்பு கொண்ட இரண்டு புதிய மிக முக்கிய மான பதவிகளைப்பற்றியும் அறியவருகிறோம். அவைகளை வகித்த ஒருவர் வக்கீலிதார் (Wakil-i-dar)[172] என்றும், இன்னொருவர் உலுக் பார் பக் (Ulugh Bar Bak)[173] என்றும் அழைக்கப் பட்டார். முதலாவது கூறப்பட்டவர், சுல்தான் இல்லாதபோது அவருக்குப் பதிலாக அரியணையில் அமர்ந்து அதிகாரம்புரிந்தவர்; இன்னொருவர் பலவகைச் சடங்குகளுக்குத் தலைமை தாங்கியவர். கஜ்னவீடுகள் காலத்தே அவரைப்பற்றிய பேச்சே காணோம். டில்லி சுல்தான்கள், மிக விசித்திரமான முறையில் தங்களது நாட்டில் ஓடுகின்ற ஆறுகள்பற்றியும், அவற்றில் மிதந்து செல்லும் படகுகளைப்பற்றியும் மிக அக்கறை கொண்டிருந்ததாகத் தெரிகிறது. ஷஹ்னஹி பார் (Shahnah-i-Bahr)[174] எனும் ஓர் அதிகாரியை அவர்கள் நியமித்துள்ளனர். அவர் நதிகள், படகுகள் ஆகியவற்றைக் கண்காணித்துவந்தார். நதிகளில் பொருள் சுமந்துகொண்டு ஓடியாடும் ஓடங்களைப் (ferries) பார்த்துக் கொள்வதும், அவைகளிடமிருந்து சுங்கவரி வசூல் செய்வதும், இன்னும் அது சம்பந்தமான பல சிறிய காரியங்களை யெல்லாம் கவனித்துக்கொள்வதும் அவரது முக்கியக் கடமையாகும். இந்தப் பதவியும் அமீரி தாத் (Amir-i-dad) என்ற பதவியும் கஜ்னவீடுகள் காலத்தே இல்லாதவையாகும். குறைந்தது பின்னர்க் கூறப் பட்ட பதவியாகிலும் கஜ்னவீடுகள் காலத்து நிச்சயமாக அறியப் படவில்லை எனக் கூறலாம்.

ஜலாலுதீன் கில்ஜியின் காலத்தே வஸாரத் துறையில் திவானி வாகூஃப் (Diwani Waqoof) என்ற புதிய பதவியானது உண்டாக்கப்பட்டது. 'செலவுபற்றிய தாள்களை' மேற்பார்வை யிடுவது அவரது கடமையாகும். அலாவுதீன் கில்ஜி திவானி முஷ்டக்ராஜ் (Diwani Mustakhraj) என்ற ஓர் புதிய பதவியைத் தோற்றுவித்தார். 'வரிவசூல் செய்பவர்கள் அல்லது அவர்களின் பகரர்கள் (agents) ஆகியோரால் வசூலிக்கப்படாமல் விடப் பெற்ற நிலுவைத் தொகைகளைப்பற்றிப் பரிசீலனை செய்து

---

[169] Ibid., p. 243.
[170] Ibid., p. 253.
[171] Ibid., p. 368.
[172] 'Tabakati Nasiri', p. 759.
[173] Ibid., p. 694.
[174] Ibid., p. 757.

அவற்றை வசூலிப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்யவேண்டியது' அவரது கடமையாகும். திவானி அமீரி கோஹி (Diwani Amiri Kohi) என்ற மூன்றுவது புதிய பதவியொன்றை மகமது துக்ளக் ஏற்படுத்தினர். 'சுல்தானுல் புதிதாய் ஏற்படுத்தப்பட்ட குடியேற்றத் திட்டங்களையும், விவசாயப் பரிசோதனைகளையும் கண்காணித்து நிர்வகித்தல்'[175] அவரது கடமையாகும். இவை களெல்லாம் இவற்றை உண்டாக்கியவர்களின் மரணத்துக்குப் பின் மறைந்தொழிந்தன. ஃபிரோஸ் துக்ளக் இரண்டு புதிய துறைகளை அமைத்தார். ஒன்று அடிமைகளைக் கட்டி மேய்ப் பதற்கும், இன்னொன்று அரசருக்குச் சொந்தமான நிலங்களை—இம்லாகி காஸ் (Imlaki Khas)[176]—மேற்பார்வையிடுவதற்கும் பயன்படுத்தப்பட்டன.

இவர்களேயன்றி டில்லி சுல்தான்களின் குடும்பங்களோடு தொடர்பு கொண்டிருந்த சில அதிகாரிகளும் இருந்தனர். அவர் களும் கஜ்னவீடுகள் காலத்தே இல்லாதவர்களேயாவர். சான்ருகச் சரே ஜான்தார் (Sar-i-jandar)[177] என்னும் (உயிர்) காவலர் படைத்தலைவர், அமீரி ஷிகார் (Amir-i-Shikar) என்ற வேட்டைத் தலைமைப் பிரபு,[178] அமீரி ஆக்கூர் (Amir-i-Akhur) என்ற குதிரைக் கொட்டில்களின் தலைமைப் பிரபு,[179] அவரது துணைப்பகரராக விளங்கிய நாயாபி அமீரி ஆகூர் (Nayabi Amir-i-Akhur),[180] பாலாதார் (Bahlah-dar) என்ற அரசர் செலவுப் பண உடையார் (bearer of the privy purse),[181] அல்லது அரச ஆடை யலங்கார உடையார் (Jama-dar) (keeper of the wardrobe),[182] அமீரி மஜ்லிஸ், அதாவது, மந்திராலோசனை மன்றத் தலைமைப் பிரபு (Lord of the Council),[183] சாஸ்னிகிர் (Chasnigir) அதாவது, அரண்மனை மடைப்பள்ளிக் கண்காணிப்பாளர், அவரது பகரர்,[184] இறுதியாக ஷாநஹி (Shahnagi) என்ற அரச குடும்பச் சிறு நிறுவனங்களான யானைக்கொட்டில்[185] போன்றவைகளை

[175] 'Some Aspects of Muslim Administration,' pp. 217-19.
[176] Ibid., pp. 220—221.
[177] 'Tabakati Nasiri', p. 603.
[178] Ibid., p. 603.
[179] Ibid., p. 642.
[180] Ibid., p. 752.
[181] Ibid., p. 752.
[182] Ibid., p. 754.
[183] Ibid., p. 761.
[184] Ibid., p. 761.
[185] Ibid., p. 761.

மேற்பார்வையிட்டுவந்த அதிகாரி ஆகிய புதிய பல பதவியாளர்களைப்பற்றி நாம் அறியவருகின்றோம். ஃபிரோஸ் ஷாவைப் பற்றிப் பேசும்போது அவரது அரசாங்க நிறுவனங்கள் பற்றிப் பின்வருமாறு கூறுகின்றனர்: 'அவரிடம் முப்பத்தாறு அரச நிறுவனங்கள் இருந்தன. அவைகளுக்காக ஏராளமான பொருள்கள் திரட்டப்பட்டன........இவைகளுக்காக ஆண்டொன்றுக்கு ஆகும் செலவு ஏராளமாயிருந்தது. நிறுவன அதிகாரிகள் சிலருக்கு முறையாகச் சம்பளம் (ரயதி—rayati) வழங்கப்பட்டது. வேறு சிலருக்கு நிலையான வருமானம் கிடையாது (ghair rayati—கயிர் ரயதி). ரயதி நிறுவனங்களாக இருந்தவை, யானைகள், குதிரைகள், ஒட்டகங்களின் பட்டிகளைப் பற்றியவையும், மடைப்பள்ளி, அரண்மனைச் சமையல்காரர்கள் பற்றியவையும், மெழுகுவத்தித் துறை, நாய்ப் பட்டிகள் துறை, நீர் குளிர்விக்கும் துறை போன்ற இன்ன பிறவற்றைப் பற்றியனவுமாகும். முறையாக ஊதியம் வழங்கப்படாத நிறுவனங்கள் ஆடையலங்காரம், ஆலம் கானு (Alam Khana) அல்லது விருதுகள், கம்பளக் கிடங்குகள் ஆகியவை பற்றியனவாகும். அவைகளுக்கு வேண்டிய புதிய பொருள்கள், ஒவ்வோர் ஆண்டிலும் தேவைக்கேற்றபடி வாங்கப்பட்டன.'[186]

## மாநில ஆட்சித்துறை

மாநில அரசாங்கங்களின் போக்கில் மாற்றமொன்றுமில்லை. கஜ்னவீடுகள் காலத்து இருந்த அரசாங்க அமைப்புகள் அதே போன்றுதான் டில்லி சுல்தான்கள் காலத்தும் இயங்கிவந்தன. இங்குமங்கும் அவ்வமைப்பில் சிறிது விரிவாக்கம் செய்யப்பட்டது; அவ்வளவுதான். மத்திய அரசாங்கத்தில் ஏற்பட்டதையொட்டி அதிகமான ஆட்சித் துறைகள் ஏற்பட்டன; அதற்கேற்ப அதிகமான அதிகாரிகள் நியமிக்கப்பட்டனர். ஆனால், மாநிலங்கள் முன்பு இருந்ததைவிட அளவில் மிகப் பெரியனவாகவும் பரப்பில் விரிந்தும் அமைக்கப்பட்டிருந்தன. எனவே, அவற்றை ஆண்ட ஆளுநர்கள் கைகளில் ஏராளமான செல்வம் வந்து சேர்ந்தது. எனவே, மாநில அதிகாரிகள் பல சமயங்களில் தம் மனம் போன போக்கிலேயே போகலாயினர். தலைநகரிலிருந்த யதேச்சாதிகாரியை அப்படியே ஒருசிலர் பின்பற்றினர்; வேறு சிலர் அவரையும் விஞ்சினர். தகுந்த சந்தர்ப்பம் வாய்த்தபோது

[186] Elliot & Dowson, Vol. III, p. 356.

அவர்கள் சுல்தானை எதிர்க்கவும் துணிந்தனர்.[187] மாநில அரசாங்கங்களின் போக்கில் யதேச்சாதிகாரத் தன்மையும், மத்திய அரசாங்கக் கட்டுப்பாட்டை வெறுக்கும் இயல்பும் காணப்பட்டன. அய்பெக் காலத்திலிருந்து பதினுன்காம் நூற்றுண்டு முடிய, டில்லி சுல்தானிய வரலாற்றில், பேராசையும் பேரெதிர்ப்பும் கொண்ட ஆளுநர்களால் தூண்டிவிடப்பட்ட கிளர்ச்சிகள் மலிந்து கிடப்பதைக் காணலாம்.

மாநில அரசாங்க அமைப்புபற்றிய விவரங்கள் அனைத்தையும் ஈண்டு விவரித்தல் முடியாத காரியம். எனினும், ஒருசில முக்கிய நிறுவனங்களைப்பற்றிக் கூறுதல் இன்றியமையாததாகும். மாநிலத்தின் தலைவராக விளங்கியவர் நாயாப் எனும் அதிகாரி யாவார். அவர் கஜ்னவீடுகளின்கீழ்ப் பணி புரிந்த கலீஃபாவை ஒத்தவர். அரசரின் பிரதிநிதி அல்லது வைஸ்ராயாக விளங்கியவர். பொதுவாக அவர் ஓர் பெரிய ஜாகீர்தாராகவும், அரசவைப் பெருமக்களில் ஒருவராகவும் இருப்பது வழக்கம். அவரது ஆட்சிக்குட்பட்ட பெருநகரங்களில் கொத்தவால்கள், கதீபுகள் (Khatibs), காஜிகள் (Kazis) என்ற அதிகாரிகள் ஆட்சி புரிந்தனர். மாநிலத் தலைநகரில் இருந்த அரசாங்க அமைப்பு, மத்திய அரசாங்க அமைப்பை ஒட்டியே அமைக்கப்பட்டிருந்ததெனக் கூறலாம். மத்திய அரசாங்கத்தின் சிறிய உருவம் (miniature) என அதைக் கருதலாம். ஏனெனில், அதில் காணப்பட்ட அரிஜ் (Ariz), ஹஜிப் (Hajib), முஷ்ரிஃப் (Mushrif), முஷ்தாஃபி (Mustaufi) போன்ற அதிகாரிகள் மாநில அரசாங்கத்திலும் காணப்பட்டனர். ஒவ்வொரு மாநிலமும் பல பகுதிகளாக, அதாவது, ஷிக்குகளாகப் (Shikks) பிரிக்கப்பட்டிருந்தது. ஒவ்வொரு பகுதியும் சிபா-சாலார் (Sipah-salar) என்ற ஓர் இராணுவ அதிகாரியின் ஆட்சிக்கு உட்பட்டிருந்ததாகத் தெரிகிறது. திபல்பூரில் (Dipalpur) இருந்ததைப்போன்று அவர் ஒரு சிறு படைக்குத் தலைமை பூண்டிருந்தார். திபல்பூரைச் சார்ந்த அபுகர் (Abuhar) எனுமிடம் ஒன்று இருந்தது. அது ஒருவேளை அதே பெயரைக் கொண்ட ஒரு மாவட்டத்தின் தலைநகராக இருந்திருக்கக்கூடும். அந் நகரில் அமல்தார் (Amaldar) என்ற ஓர் ஆட்சியாளர் இருந்ததாகத் தெரிகிறது. அவர் 'சிறியன முதல் பெரியனவரை எல்லாப் பெரும் பண்ணைகளையும், மினி, பட்டிப்

[187] சான்ருக, மாலிக் ஷெர்கானி சஞ்சார் என்பார் சுல்தான் நாஸிருதீன் ஆட்சிக் காலத்தே கலகத்தில் இறங்கினுர் ('Tabakati Nasiri', p. 695); மகமது பின் துக்ளக் காலத்துக் கலகத் தலைவர்களையும் சான்ருக்க் காட்டலாம் (Elliot & Dowson, Vol. III, p. 247).

(Mini, Bhatti) பழங்குடி மக்களுக்குச் சொந்தமான எல்லாக் காடுகளேயும்'[188] கண்காணித்தார். ஒரு மாவட்டத்தி லிருந்த கிராமத் தொகுதிகள் அங்கங்கே இருந்த உள்ளூர்த் தலேவர்களால் ஆளப்பட்டுவந்தன. அவர்கள் இந்துக்களா யிருந்தால் ராணுக்கள் என அழைக்கப்பட்டனர். அவைகள் சில சமயங்களில் ஜாஹிர்தார்களால் ஆளப்பட்டன. அவர்கள் அநேகமாக அரசவையிலிருந்த முஸ்லிம் பெருமக்களாயிருந்தனர். கிராமங்களில் வரிவசூல் செய்தவர்கள் முக்கடம்கள் (Muqaddims) என்ற அதிகாரிகளாவர். சௌத்ரி (Chaudhary) என்பார் பொரு ளாளராயும் (Treasurer), அதே சமயத்தில் ஆவணம் அல்லது பதிவேட்டுக் காவலராயும் (Record-keeper) இருந்த ஓர் அதிகாரி யாவார். கேந்திர நிலேயங்களில் (strategic places) படைகள் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தன. சமாஞ, அம்ரோகா, பரன், கோல், அகமதாபாத் [189] முதலியன அவற்றுள் ஒருசில நிலேயங் களாகும். படைவீரர்களுக்கும் பிரபுக்களுக்கும் நிலங்களே மானியமாக வழங்குகிற வழக்கம் நெடுங்காலமாகவே இருந்து வந்தது. அலாவுதீன் அதைத் தடுக்க முயன்றும் பயனில்லே. ஃபிரோஸ் ஷாவின் காலத்தில் இம் முறை இன்னும் மிகவிரிவாக வும், பெருத்த உற்சாகத்தோடும் கடைப்பிடிக்கப்பட்டது. படை வீரர்கள் பொதுவாகத் 'தங்களே நல்ல சௌகரியமான நிலேயில் வைத்துக்கொள்வதற்குப் போதுமான அளவு நிலங்களேப் பெற்றனர். நிலேயிலாப் படையைச் சேர்ந்தவர்கள் (irregulars—ghair wajh) அரசாங்கக் கருவூலத்திலிருந்து ஊதியம் பெற்றனர். இம் முறையில் சம்பளம் பெருத ஏனைய படைவீரர்கள் அரசாங்க வருமானத்திலிருந்து அவர்களது தேவைக்கேற்றபடி நிதி ஒதுக்கத் தைப் (assignments) (itlak—இட்லாக்) பெற்றனர்.'[190] இந்த முறைப்படியேதான் படைவீரர்களுக்குச் சம்பளம் வழங்கப் பட்டது. ஏனைய அதிகாரிகளுக்கு நில மானியங்கள் தரப் பட்டன அல்லது மாவட்ட வரி வருமானத்தில் நிதி ஒதுக்கம் செய்யப்பட்டது. அதாவது, அவ் வருமானத்தில் ஒரு பகுதியை அவர்கள் தமக்கென எடுத்துக்கொண்டனர். ஃபிரோஸ் ஷாவைப் பற்றிப் பெருமையோடும் மனநிறைவோடும் சொல்லப்படுவ தென்னேயெனில், 'அவர் தமது பிரதேச வருமானத்தையெல்லாம் மக்களுக்கே பரவலாகப் பிரித்து வழங்கிவிடுகிருர். மானிய நிலங் களின் பல்வேறு மாவட்டங்களுங்கூட அவர்களிடையே பிரித்துத் தரப்படுகின்றன. வஸீராயிருந்த கானி ஜஹான், தமது நண்பர் குழாம், மைந்தர்கள் பரிவாரங்களுக்கெனப் பெற்ற

[188] Elliot & Dowson, Vol. III, p. 272.
[189] Ibid., p. 248.
[190] Ibid., Vol. III, p. 346.

உதவிப் பணத்துக்கும் மேலாகப் பதின்மூன்று இலட்சம் டங்காக் களையோ அல்லது அதற்குப் பதிலாகப் பலவகையான மானிய நிலங்களை அல்லது மாவட்டங்களையோ பெற்றார். ஏனைய அதிபதிகளும் அவ்வாறே அவரவர் தகுதிக்கேற்பப் பணமும் நிலமும் பெற்றனர். சிலர் எட்டு இலட்சமும், வேறு சிலர் ஆறு இலட்சமும், இன்னும் சிலர் நான்கு இலட்சமுமான டங்காக் களைப் பெற்றனர்.'[191] அதன் விளைவாகப் பிரபுக்கள் பெருஞ் செல்வந்தர்களாக மாறினர். மஜ்லிஸி காஸைச் சேர்ந்த நாயிப் அமீர் தாம் இறந்தபோது, ரொக்கமாக ஐம்பது இலட்சம் டங்காக் களையும், அதனோடு பல வீடுகளையும், விலையுயர்ந்த பொருள்களை யும், ஏராளமான நகைகளையும் தமக்குப்பின் விட்டுச் சென்றார் எனக் கூறப்படுகிறது. அலாவுதீன் கில்ஜியின் ஆட்சியின் காலத்தே, முக்கடம்களும் சௌத்ரிகளும்தாம் கிராமங்களில் வரி வசூல் செய்தனர். அவர்கள்தாம் முஸ்லிம் ஆட்சி அனைத்திலும் அப் பணியைச் செய்துவந்தனர்.

ஃபிரோஸ் ஷாவின் காலத்தே 'மானியங்களின் கணக்குகள் தணிக்கை செய்யப்பட்டன. மானியதாரர் தமது மானியத்தைப் பற்றிய கணக்கை ஒப்புவிக்க அவரது நிலபுலன்களிலிருந்து அரசவைக்கு வரவழைக்கப்பட்டு, அரசாங்கக் கருவூலத்தில் கணக்கை ஒப்புவிக்கும்படி கட்டளையிடப்பட்டார். கணக்குத் தணிக்கை கருவூலத்தில் நடைபெற்றது. அதன் விளைவுகள் அரசருக்கு அறிவிக்கப்பட்டன. கையிருப்பு எவ்வளவு இருக்க வேண்டுமென்பது தீர்மானிக்கப்பட்டது. மானியத் தலைவர் நன்கு விசாரிக்கப்பட்டபின் தமது மானிய நிலங்களுக்குத் திரும்பிப் போகுமாறு பணிக்கப்பட்டார். கார்கானக் களின் (ஃபிரோஸ் ஷாவின் காலத்திலிருந்த முப்பத் தாறு நிறுவனங்கள்) நிர்வாகிகளுங் (முகரிர் — muharrir) கூட, ஒவ்வோர் ஆண்டின் முடிவிலும் கருவூலத்துக்கு வந்து தங்க ளுடைய கணக்குகளைப்பற்றிய சுருக்கத்தைச் சமர்ப்பிக்க வேண்டும்; அதனோடு ரொக்கப் பணத்திலும் பண்டசாலைப் பொருள்களிலும் எவ்வளவு மீதமாகியுள்ளதென்பதையும் காட்ட வேண்டும்.[192] இப்படியெல்லாம் தணிக்கை செய்யப்பட்ட பின்னும் ஆட்சித்துறையில் ஊழல் மலிந்துகிடந்தது. முக்கிய மாகப் படைநிர்வாகத்தில் அது அளவுக்குமீறிக் காணப்பட்டது. 'ஒன்றுக்கும் உதவாத குதிரைகள்கூட (திவானின்) பதிவகத் துக்குக் கொண்டுவரப்பட்டுப் பயனுள்ளவையெனப் பதியப்

[191] Ibid., p. 347.
[192] Ibid., Vol. III, p. 357.

பெற்றன'[193] எனக் கூறப்படுகிறது. பதிவேடுகளில் காணப் பட்ட குதிரைகளின் எண்ணிக்கைக்கும், உண்மையில் கொண்டு வரப்பட்ட குதிரைகளின் எண்ணிக்கைக்கும் ஒருவித சம்பந்தமு மில்லாதிருந்தது. பொய்க் கணக்குகள் மலிந்தன. இலஞ்சம் வாங்கிக்கொண்டு இல்லாததை இருப்பதாகப் பதிவு செய்யும் அதிகாரிகள் பலர் இருந்தனர். இத்தகைய காரணங்களால் படைகளின் வலிமையும், பொது ஆட்சித்துறையின் திறமையும் குன்றலாயின. ஆட்சிக்கு ஆட்சி அவற்றின் தரமும் திறமும் மாறுபடலாயின.

## வருமானமும், மக்கள்தொகையும், மக்களின் பொது நிலைமையும்

டில்லி சுல்தானிய அரசின் வருமானமானது ஃபிரோஸ் ஷா காலத்தே ஆறு கோடியே எட்டு இலட்சம் டங்காக்களாக—60,800,000—இருந்தது. ஆனால், நாம் ஏற்கெனவே கண்டபடி, 'இவ்வளவு பெரிய வருமானத் தொகையனைத்தும் முறையே பலருக்குமாகப் பிரித்துக் கொடுக்கப்பட்டுவிட்டது. ஒவ்வொரு கானும் அவரது உயர்வான நிலைமைக்கேற்ப ஒரு பெருந்தொகை யைப் பெற்றார். அமீர்களும் மாலிக்குகளும் அவரவர் கண்ணி யத்துக்கேற்ற ஊதியங்களைப் பெற்றனர். ஒவ்வோர் அதிகாரியும் சுகமாகவும் சௌகரியமாகவும் வாழ்வதற்குரிய அளவு சம்பளம் பெற்றனர்.'[194] ஃபிரோஸ் ஷாவின் படைகளில் அடிமைகள் நீங்கலாக 80,000 குதிரை வீரர்களும், சில சமயங்களில் 90,000 குதிரை வீரர்களும் இருந்தனர். நாட்டின் நிலைமையும் நாட்டு மக்களின் நிலைமையும் பொதுவாகச் செல்வாக்கு மிக்கதாகவே இருந்தது. தோயாப் படுகையில் இருந்த கிராமங்களுள் ஒரு கிராமங்கூட அக் காலத்தில் தரிசாகக் கிடந்ததில்லை என்றும், 'ஓர் அடி நிலம்கூடச் சாகுபடி செய்யப்படாமல் இருந்ததில்லை' என்றும் கூறப்படுகிறது. தோயாபைச் சேர்ந்த ஐம்பத்திரண்டு பர்கானாக்களிலும் வளம் கொழித்தது. இதே வளமான நிலை யானது எங்குப் பார்த்தாலும் காணப்பட்டது. 'அலாவுதீன் காலத்தே காணப்பட்ட ஒப்புயர்வற்ற நிர்வாகத்தின் காரணமாக வாழ்க்கைக்கு இன்றியமையாத பொருள்கள் எல்லாம் ஏராள மாகக் கிடைத்தன. ஆனால், கடவுளின் கருணையின் காரணமாக ஃபிரோஸ் ஷாவின் ஆட்சிக் கால முழுவதிலும் தானியங்களின் விலை மலிவாகவே இருந்தது. அதற்காக அவர் ஒருவித முயற்சியும்

[193] Ibid., Vol. III, p. 347.
[194] Ibid., p. 346.

எடுத்துக்கொள்ளவில்லை என்றாலும், தானியங்கள் தொடர்ந்து எளிய விலைக்கே கிடைத்துக்கொண்டிருந்தன. ஒரு மணங்கு கோதுமை எட்டு ஜித்தால்களுக்கும், பார்லியும் பயறு வகைகளும் ஒரு மணங்கு நான்கு ஜித்தால்களுக்கும் விற்கிற அளவுக்கு டில்லியில் தானியம் மலிந்து கிடந்தது. படைவீரன் ஒருவன் தனது குதிரைக்குத் தீனி வைக்கப் பத்துச் சேர் தானியத்தை (தாலிதா—dalida) வாங்க ஒரு ஜித்தால் செலவழித்தால் போதுமானதாய் இருந்தது. எல்லா வகையான துணிமணிகளும் மிக மலிவான விலைக்குக் கிடைத்தன. வெண்பட்டுத் துணிகளும், பல்வேறு நிறம் பொருந்திய பட்டுத் துணிகளும் மிதமான விலைக்கு விற்கப் பட்டன. எல்லாப் பண்டங்களின் விலையும் மலிந்ததற்கேற்ப இனிப்புத் தின்பண்டங்களின் விலையும் குறைக்கப்பட வேண்டுமென ஆணைகள் பிறப்பிக்கப்பட்டன. பருவமழை பெய்யாததனாலும் வேறு காரணங்களினாலும் ஒரோவழி விலைகள் உயர்ந்து ஒரு மணங்கு ஒரு டங்காவுக்கு விற்கப்படுமானால், மிகக் குறுகிய காலத்துக்குமட்டுமே அத்தகைய நிலைமை நீடித்தது.'[195] இதனோடு ஒப்பிடும்போது அலாவுதீன் கில்ஜியின் காலத்தில் விலை அவ்வளவு மலிவாக இருந்ததாகக் கூற முடியாது. அலாவுதீன் காலத்தே நிர்ணயிக்கப்பட்ட தானியங்களின் விலைப்பட்டியல் வருமாறு:[196]

| | | | | |
|---|---|---|---|---|
| கோதுமை ஒரு | மணங்கு | ... | $7\frac{1}{2}$ | ஜித்தால்கள் |
| பார்லி | ,, | ... | 4 | ,, |
| அரிசி | ,, | ... | 5 | ,, |
| மாஷ் (அல்லது வெட்ச்) | ,, | ... | 5 | ,, |
| நுகுத் (அல்லது வெட்ச்) | ,, | ... | 5 | ,, |
| மோத் (அல்லது வெட்ச்) | ,, | ... | 3 | ,, |

அலாவுதீன் கில்ஜி 'தொப்பிகளிலிருந்து மிதியடிகள் வரை, சீப்புகளிலிருந்து ஊசிகள்வரை எல்லா வகையான பண்டங்களும், மக்களுக்கு மலிவான விலைக்குக் கிடைக்கும்படி செய்யப்'[197] பெருமுயற்சி எடுத்துக்கொண்டார். இங்ஙனம் அலாவுதீன் கில்ஜியின் காலத்தும் ஃபிரோஸ் துக்ளக்கின் காலத்தும் உணவுப் பண்டங்களின் விலையானது தொடர்ச்சியாக மலிந்திருந்ததைப் பார்க்கும்போது, மக்களுடைய பொதுவான வாழ்க்கை நிலையானது இன்று இருப்பதைப் போன்று அவ்வளவு பரிதாபகரமாக அன்று இருக்கவில்லை என்றே தோன்றுகிறது.

[195] Ibid., Vol. III, p. 345.
[196] Ibid., p. 192.
[197] Ibid., p. 196.

இடைக்காலப் பொருளாதார அமைப்பில் மக்களுக்கு வேண்டிய இன்றியமையாத தேவைப் பொருள்கள் யாவும்' தட்டின்றிக் கிடைக்கக்கூடிய ஒரு நிலைமை இருந்தது. இன்று நாட்டை அலைக் கழிக்கின்ற பஞ்சமும் பட்டினியும் அக் காலத்தே காணப்படாத காட்சிகள் எனலாம். மக்கள்தொகை அக் காலத்தே இக் காலத்தில் இருப்பதைவிடக் குறைவாக இருந்தது அதற்கொரு முக்கியக் காரணமாகும். ஃபிரோஸ் ஷாவின் பேரரசில் மிக வளமாக இருந்த பகுதிகள் ஆறு கோடி டங்காக்கள் வருமானம் தந்தன. பேரரசின் பாதிப்பகுதி இங்ஙனம் வளமாக இருந்தது. இன்னொரு பகுதியில் நான்கு கோடி வருமானம் கிடைத்தது. எனவே, மொத்த வருமானம் பத்துக் கோடியாகும். இந்தியாவில் அப்பொழுது வாழ்ந்த மக்கள் ஒவ்வொருவரும், ஒரு டங்கா வீதம் வரி செலுத்தி யிருப்பார்களேயானால், அங்ஙனம் செலுத்திய மக்கள் தொகையினர் நூறு மில்லியனாகவே இருந்திருக்கமுடியும். பதின்மூன்று, பதினான்காவது நூற்றாண்டுகளில் இந்தியாவின் மக்கள்தொகை ஏறக்குறைய பத்துக் கோடியாகும். ஆகையால்தான், அரசர்களின் அடக்குமுறையாலும், உள்நாட்டுத் தொல்லைகளினாலும், வெளிநாட்டுப் படையெடுப்புகளினாலும் இந்திய நாடு அலைக்கழிக்கப் பட்டிருந்தபோதுங்கூட மக்கள் ஓரளவு செல்வாக்குடன் வாழ முடிந்திருக்கிறது. அக் காலத்தே போக்குவரவுச் சாதனங்கள் மிகக் குறைவாகவே இருந்தன. பண்டங்களையும் செய்திகளையும் அனுப்ப இயற்கையான பெருவழிகளாக ஆறுகள்தாம் பயன்பட்டன. அசோகர் காலத்துத் தூண்களை ஃபிரோஸ் ஷா துக்ளக் எப்படி நதிவழியாகப் பெரும்பொருள் செலவழித்து டில்லிக்குக் கொண்டுவந்தார் என்பதுபற்றிய சுவையான விளக்கம் நமக்குக் கிடைத்துள்ளது. மஹமது ஷாவின் ஆட்சிக் காலத்தில் மாள்வா நாட்டில் பாதைகள் எல்லாம் மிக மோசமான நிலையில் இருந்ததாகக் கேள்விப்படுகிறோம். முற்றிலும் எதேச்சாதிகாரத்தன்மை வாய்ந்த ஓர் அரசாங்கத்தின்கீழ் வாழ்ந்த மக்களிடையே தேசீய உணர்வோ அல்லது ஓர் ஒற்றுமையோ உண்டாவதற்கு ஏற்ற சூழ்நிலை காணப்படவில்லை. முஸ்லிம் குடிமக்களிடம் மட்டுமே ஒற்றுமை நிலவியது. அவர்களின் நலன்கள் பொதுவாக இருந்த காரணத்தால், அவர்கள் தோளோடு தோள் நின்று போர்செய்து தங்களுடைய நலன்களைப் பாதுகாத்துக்கொண்டார்கள். ஓர் நாட்டை வென்று அதில் குடியேறிய ஓர் படையின் உறுப்பினர்கள் என்ற முறையில் அவர்கள் ஒருவருக்கொருவர் உதவியாக இருந்து ஒற்றுமையோடு வாழ்ந்தனர்,

## சுல்தானியர்கள் காலத்து அரசர்

இறுதியாக டில்லி சுல்தானிய அரசில் மன்னருடைய நிலையைப்பற்றி ஒருசிறிது ஆராய்வோம். பொதுவாக அவர் ஓர் யதேச்சாதிகாரியாக இருந்தார். தான் பெற்ற வெற்றியின் மூலமாகவோ, அன்றி பரம்பரையாகப் பெற்ற ஓர் உரிமை காரணமாகவோதான் இந்திய ஆட்சியைத் தான் பெற்றுள்ளதாக அவர் கருதினர். இஸ்லாம் மத விசுவாசிகளின் தலைவர் என்ற முறையில் தம்மால் வெல்லப்பட்ட நாடுகளின்மீது தமக்குப் பரம்பரையான உரிமை உண்டென்றும் அந் நாடுகளை ஆளக் கலிஃபாவின் ஒப்புதலைத் தாம் பெற்றவர் என்றும் அவர் கூறிக்கொண்டார். அவர் அங்ஙனம் கொண்டாடிய உரிமையானது குரானியப் புனிதச் சட்டத்துக்கு ஒத்ததே என அவர் கருதினர். முஸ்லிம் சமுதாயத்தினரிடையும், முஸ்லிம்கள் அல்லாத வகுப்பாரிடையும் அவர் பெற்றிருந்த மதிப்புக்கும், செலுத்திய அதிகாரத்திற்கும் தக்கபடியே அவரது இறைமையின் தன்மை அமைந்தது. முஸ்லிம்களுக்கு மதக்காவலராயும், மத விசுவாசிகளில் கடவுளால் தேர்ந்தெடுக்கப்பட்ட முதல்வராயும் அவர் காட்சி அளித்தார். ஆனல், முஸ்லிம்கள் அல்லாதவர்களுக்கு அவர் ஒரு வரம்பற்ற வல்லரசராயும் வெளிநாட்டுப் படையெடுப்பாளராகவுமே தோன்றினர். அவர் வாயிலிருந்து உதிர்ந்த சொற்களே நாட்டின் சட்டங்களாய் அமைந்தன. ஆனல், அவை குரானுடைய கோட்பாடுகளுக்கு முரணுகவோ, புனிதச் சட்டத்துக்குப் புறம்பாகவோ இருக்கக்கூடாது. கலீஃபாவின் பிரதிநிதி என்ற முறையில் இஸ்லாம் மதத்தை ஓங்கச் செய்வதும், இஸ்லாம் சமயத்தவரைப் பாதுகாப்பதும் அவரது கடமையாகும். ஜிம்மிகளின் மன்னர் என்ற முறையில் அவர்களை நிராயுதபாணிகளாகச் செய்வதும், இழிவுபடுத்துவதும், எப்போதும் தனது கட்டுப்பாட்டுக்குள் அவர்களை வைத்திருக்க வேண்டுவதும் அவரது மற்ருெரு கடமையாகும். இங்ஙனம் இரண்டு பொறுப்புகள் அவர்கள்மீது சுமத்தப்பட்டிருந்த காரணத்தால் டில்லி சுல்தான்கள் சில சமயங்களில் விசித்திரமான முறையில் நடந்துகொள்ள நேர்ந்தது. அவர்களுடைய அதிகாரம் குறைக்கப்படுவதையும், இறைமையின் தரம் குறைவதையும், குருமார்களின் ஆதிக்கம் ஓங்குவதையும் கண்ட டில்லி சுல்தான்கள் சில சமயங்களில் பொறுமை இழந்து குரானியக் கட்டளைகளுக்கும் சமயச் சட்டங்களுக்கும் விரோதமாகப் போக ஆரம்பித்தனர். சான்ருக, கொள்ளை அடித்த பொருளில் ஐந்தில் ஒரு பாகத்தையே எடுத்துக்கொள்ள வேண்டுமென்பது குரானியக் கட்டளையாயிருக்க, சுல்தான்கள்

அதை மீறித் தாம் விரும்பும் அளவு அவற்றை எடுத்துக் கொண்டனர்.

இக் காலத்தே ஆண்ட அரசர்களில் எவருமே மக்களுக்குச் சமயப் பொறையை வழங்கக்கூடியவர்களாக இல்லை. 'அரசாங்கமும் அரசியல் அமைப்பு ஒழுங்குமுறையும் என்பது ஒன்று; சட்டத்தின் விதிகள், கட்டளைகள் என்பன வேறொன்று' என்று கருதிய அலாவுதீன் கில்ஜிகூட ஷியாக்களுக்கும் சுன்னிகளுக்கும் அல்லது ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் ஒரே மாதிரியாகச் சமயப் பொறையை வழங்க முன்வரவில்லை. நாட்டில் சில புதிய முறைகளை அவர் புகுத்தியபோது, அரசியல் அதிகாரத்தைத் தனது கைகளில் குவித்துக்கொள்ள வேண்டுமென்ற நோக்கத்தோடும், நாட்டின் செல்வமனைத்தையும் ஒருங்கு சேர்த்து அதைக் கொண்டு மங்கோலியப் படையெடுப்பை முறியடித்து உள்நாட்டு அமைதியைப் பாதுகாக்க வேண்டுமென்ற நோக்கத்துடனுமேயே அவர் அவ்வாறு செய்தாரேயன்றி வேறன்று. மத விவகாரங்களில் அவர் தலையிடவில்லை. முஸ்லிம் சமய அறிஞர்களும் சட்ட நிபுணர்களும் அரசுபற்றிய காரியங்களில் தலையிடுவதைமட்டுமே அவர் தடுத்தார். மகமதுபின் துக்ளக்கும்கூட, அதேபோன்றுதான், முஸ்லிம் மத குருமார்களின் தலையீட்டை அரசாங்கத்தின் வரம்பினின்றும் நீக்கிவிட வேண்டுமென்று முயற்சி செய்தார். எனினும், டில்லி சுல்தானிய அரசர்களில் பெரும்பாலோர் மதமானது அரசின்மீது மிக அதிகமான ஆதிக்கத்தைச் செலுத்துவதாகவே உணர்ந்தனர். மேலும், நீதியை வழங்கியும், சமய ஆணைகளை வெளியிட்டும், குரானியக் கட்டளைகளை நன்கு உணர்ந்து கடைப்பிடித்தும் வந்தவர்களான உலேமாக்கள், காஜிகள், சதர்கள் ஆகியோர் தங்களுடைய யதேச்சாதிகாரத்தைப் பெரிதும் குறைத்துவிடுவதாகவும் அவர்கள் எண்ணினர். உண்மையில் அச் சமய வல்லுநர்கள் நாட்டில் செலுத்திவந்த செல்வாக்கும் அதிகாரமும் கொஞ்சநஞ்சமல்ல. அவர்கள்தான் மன்னருடைய தடையற்ற யதேச்சாதிகாரத்துக்கு ஓரளவு முட்டுக்கட்டை போடுபவர்களாயிருந்தனர். ஆனால், திறமையும் தகுதியும் ஒருங்கே வாய்ந்த அரசர்கள் சிலர், அவர்கள் செலுத்திவந்த அதிகாரத்தையும் அதிகார வரம்பையும் கட்டுப்படுத்தும் முறையில் கொஞ்சங் கொஞ்சமாகப் பல நடவடிக்கைகளை மேற்கொள்ளலாயினர். 'நாட்டின் நன்மைக்காகவும் நாட்டு மக்களின் நலனுக்காகவும் மட்டுமே' தாம் ஆணைகளை வெளியிடுவதாகவும், அவை சட்டத்துக்கொத்தனவா, மாறுபட்டனவா என்பதைப்பற்றித் தனக்கொன்றும் அக்கறையில்லை என்றும் அலாவுதீன் கில்ஜி ஒரு சமயம் தமது காஜியிடம்

பச்சையாகக் கூறிவிட்டார். அப்படிப்பட்ட மனப்போக்கை மன்னர்கள் கைக்கொள்ள வேண்டுவது தடுக்க முடியாத தொன்ருகிவிட்டது. அரேபியாவில் பதினேழாம் நூற்ருண்டில் நிலவிய நிலைமைக்கும், இந்தியாவில் பதின்மூன்று பதினான்காவது நூற்ருண்டுகளில் நிலவிய நிலைமைக்கும் எவ்வளவோ வேறுபாடு காணப்பட்டது. மதமாற்றம் செய்யவோ அல்லது பூண்டோடு ஒழித்துவிடவோ கூடாத அளவில் பெரும்பான்மையினராக இருந்த இந்துக்களின் மத்தியில் ஆட்சி புரிய நேர்ந்த சுல்தான்கள் தங்கள் மனப்பான்மையையும் குறிக்கோளையும் மாற்றிக்கொள் வதைத் தவிர வேறு வழியில்லாமற்போயிற்று. அவர்களது போக்கில் காணப்பட்ட மாற்றமானது, சூழ்நிலையின் காரணமாக அவர்கள்மீது வலியச் சுமத்தப்பட்டதோர் மாற்றமேயன்றி வேறன்று. எனவேதான், முஸ்லிம் ஆட்சித் துறையில் குரானியக் கொள்கைகளும் கட்டளைகளும் முற்றிலும் கடைப்பிடிக்கப்படுத லென்பது முடியாத காரியமாய்ப் போய்விட்டது. குரானியக் கட்டளைகளுக்குப் புறம்பாகச் செல்லவும், முஸ்லிம் சட்ட நிபுணர் களின் செல்வாக்கைக் கட்டுப்படுத்தவும், தங்களுடைய விருப்பம் போல் ஆணைகளை வெளியிடவும் முயன்றதன் விளைவாக, டில்லி சுல்தான்கள் உண்மையில் ஒரு வகையான தனிப்பட்ட யதேச் சாதிகாரத்தை நிறுவவே முயன்றனரென்பதில் ஐயமில்லை. ஆனுல், சமய நிறுவனத்தையும் அரசையும் ஒன்ருக இணைப்பதன் மூலம், இஸ்லாம் மதத்தால் தோற்றுவிக்கப்பட்ட யதேச்சாதி காரத்தினின்றும் அது பெரிதும் வேறுபட்ட தொன்ருகவே இருந்தது. ஆனுல், தங்கள் சொந்த நலன்களைக் கருதியும், முஸ்லிம் கள் மட்டுமேயன்றி இந்துக்களும் முஸ்லிம்களும் சேர்ந்த தங்க ளுடைய குடிமக்கள் கூட்டத்தின் விசுவாசத்தைக் கருதியும், பெரிதும் பதமாக்கப்பட்டதோர் மிதமான யதேச்சாதிகாரத் தையே டில்லி சுல்தான்கள் செலுத்திவந்தனர் என்பதைத் திண்ணமாகக் கூறலாம்.

# 12. வட்டாரச் சிறு நாடுகளின் தோற்றமும் புத்தாக்கம் செறிந்ததோர் வரலாற்றுக் காலமும்

## புத்தாக்கம் செறிந்த வரலாற்றுக் காலம்

1398ஆம் ஆண்டில் நடைபெற்ற அமீர் தைமூரின் படையெடுப்பும், துக்ளக்குகளின் வீழ்ச்சியும் டில்லி சுல்தானிய ஆட்சி வரலாற்றில் ஓர் குழப்பமான காலத்தைத் தோற்றுவித்துவிட்டுச் சென்றன. சுல்தானிய நாடுகளிடையே கொஞ்சநஞ்சம் காணப்பட்ட பிடிப்பும் பிணிப்பும் தளர்ந்தன. ஒற்றுமை மறைந்து வேற்றுமை தலைகாட்டத் தொடங்கியது. மாநிலங்கள் தம்மை ஆண்டுவந்த அரசப் பிரதிநிதிகளின் தலைமையில் ஆங்காங்கே சுயேச்சை பெற்றன. வடக்கிலும் தெற்கிலும், கிழக்கிலும் மேற்கிலும் ஏராளமான சுதந்திர நாடுகள் எழுந்தன. பின்னர் அந் நாடுகள் தமக்குள்ளேயே ஒன்றுக்கொன்று போரிடத் தொடங்கின. அதனல் அரசியல் இறைமையானது இடம்விட்டு இடம் மாறத் தலைப்பட்டது. தனித்தலைமையானது ஒரு வட்டாரத்திலிருந்து இன்னொரு வட்டாரத்துக்குத் தாவ ஆரம்பித்தது. அரசியல் அதிகாரம் இங்ஙனம் வட்டாரங்களிடையே பிரிய ஆரம்பித்ததால் அரசாங்கத்தின் நடவடிக்கைகள் ஆங்காங்கே பெருகின. அதிகாரம் வட்டாரங்களில் மேன்மேலும் செறிவதற்கும், வட்டார நலனிலும் ஒற்றுமையிலும் அதிக நாட்டம் ஏற்படவும் வசதியான சூழ்நிலை ஏற்பட்டது. முஸ்லிம் சுல்தான்கள் டில்லியில் இருந்துகொண்டு இந்தியாவிலுள்ள வட்டாரங்கள் அனைத்தின்மீதும், இந்து-முஸ்லிம் என்ற பாகுபாடின்றி மக்கள் அனைவர்மீதும் ஆட்சி செலுத்திவந்த நிலை மாறியது. ஆங்காங்கே நாட்டின் பல்வேறு பகுதிகளில் இந்து அரசர்களும் முஸ்லிம் மன்னர்களும் தனித்தனியே சுயேச்சையான நாடுகளைத் தோற்றுவித்தனர். அவர்கள் தத்தம் நாடுகளில் வாழ்ந்த இந்து, முஸ்லிம்

ஆகிய இரு வகுப்பார்மீதும் ஆதிக்கம் செலுத்தலாயினர். நாடனைத்துக்கும் பொதுவாயிருந்த பரவலான டில்லி சுல்தானிய அரசுக்குப் பதிலாகச் சற்று நெருக்கமான, ஆனால், தனித்தனியா யிருந்த சிறு நாடுகளின் ஆட்சி வளரலாயிற்று. அரசியல் துறையில் தொகுப்புணர்ச்சி (universalism) மாறிப் பகுப்புணர்ச்சி (regionalism) தோன்ற ஆரம்பித்தது. ஒருமை உணர்வு, பன்மை உணர்வுக்குப் பலியாகியது. இங்ஙனம் அமைந்த நாடுகளில் சில இந்து அரசர்களால் ஆளப்பட்டன. எனினும், அவற்றில் வாழ்ந்த மக்கள் தொகையில் ஒரு பகுதியினர் முஸ்லிம்களாயிருந்தனர். வேறு சில நாடுகள் முஸ்லிம் மன்னர்களால் ஆளப்பட்டன; எனினும், அங்கு வாழ்ந்த மக்களில் ஒரு பகுதியினர் இந்துக்களா யிருந்தனர்.

இதுவன்றியும், இக் காலத்திய இந்து-முஸ்லிம் சமுதாய மானது, புதிய சில மத இயக்கங்களால் பெரிதும் பாதிக்கப் பட்டது. அவ் வியக்கங்கள் புதிய குறிக்கோள்களை வற்புறுத்தின. சிறப்புக்குரியவை எவை என்பதுபற்றிப் புதிய கோட்பாடுகளை அவை வகுத்தன. புதிய வாழ்க்கை முறைக்கு அவை வழிகோலின. அப்போதைக்கு இருந்த நிலையை அவை வன்மையாய் எதிர்த்தன. அதன்மூலம் வெளிப்போந்த சக்திகள், சாதிப் பிரிவுகள் நிறைந்த இந்து சமுதாயத்தையும். தூய்மையை அளவுக்குமீறி வற்புறுத்திய சுன்னி சமுதாயத்தையும் ஓர் உலுக்கு உலுக்கிவிட்டன. அதனால் அச் சமுதாயங்களின் அடிப்படைகளே ஆட்டங் கொள்ளலாயின. ஆனால், சுன்னி சமயமானது இந்து சமயத்தைவிட மிக அதிகமாகக் கால்கொண்டிருந்தது. அதன் செல்வாக்கு சமுதாயத் துறையில்மட்டுமன்றி அரசியல் துறை யிலும் ஊடுருவிச் சென்றது. அது தனக்கென்று ஒரு சமுதாய அமைப்பைக் கொண்டிருந்ததோடல்லாமல் தனி அரசியல் அமைப்பையும் கொண்டிருந்தது. அவ் வமைப்பின் குறிக் கோளாவது, சுன்னி சமயப் பிரிவுக் கொள்கையின் வழியே இஸ்லாம் மதத்தை மேம்படுத்துவதாகும் எனத் தெளிவாகக் குறிப்பிடப்பட்டது. இத்தகைய சமுதாய அரசியல் அமைப்பைத் தான் புதிய மத இயக்கங்கள் மிக வன்மையோடு ஓர் உலுக்கு உலுக்கிவிட்டன. இங்ஙனம் தோற்றுவிக்கப்பட்ட புதிய சமய மரபுகள், இஸ்லாம் மதத்திலேயே ஓர் பிளவு ஏற்பட்டு விட்டதையே சுட்டிக்காட்டின. அதனோடு இந்திய சுன்னி சமுதாயத்தில் அதுவரை இருந்துவந்த கட்டுப்பாடும் ஒற்றுமையும் தளர்ந்தன. இத்தகையதோர் சமுதாய நெருக்கடிக் காலத்தே தான் தங்கள் மதத்தைக் காக்க விரும்பிய இஸ்லாமிய சமய குரவர்கள், தங்களுடைய மதிப்பையும் மானத்தையும் ஓரளவு

விட்டுக்கொடுத்தாகிலும் அரசர்களின் ஆதரவைப் பெறவேண்டு மென நினைக்கலாயினர். இதைச் செய், அதைச் செய் என அரசனை யும் அரசையும் யதேச்சாதிகார முறையில் அதட்டுவதற்குப் பதிலாக, நிலைமையைச் சமாளிப்பதற்காக எப்படி வேண்டு மானாலும் தனது அதிகாரத்தைப் பயன்படுத்திக்கொள்ளும்படி அவர்கள் முஸ்லிம் அரசுக்கும் அரசனுக்கும் பூரண உரிமை அளித்துவிட்டனர். இங்ஙனம் சமயக் காவலர்களே அரசர்களைச் சார்ந்து நிற்கத் தலைப்பட்டுவிட்டதன் காரணமாக, அரசர்கள் தங்களுக்கென ஓர் தனித் தலைமையை வகுத்துக்கொள்ள லாயினர். அத் தனித்தலைமைதான் நாளடைவில், அரசின் குறிக்கோள் எனக் கருதப்படுகின்ற இறைமையாக (sovereignty) மெல்லமெல்ல மாறியமைந்தது.

இங்ஙனம் அரசர்களின் தனித்தலைமையானது நாளுக்கு நாள் ஓங்கி வளர்ந்துகொண்டே சென்றது; அதே சமயத்தில் புதிய மத இயக்கங்கள், மக்களிடையே ஓர் புதிய மனப்பான்மையை ஏற்படுத்திவிட்டன. புதிதாய் அமைந்த சுயேச்சை நாடுகளில் இந்துக்களும் முஸ்லிம்களும் முன்பிருந்ததைவிட அதிகமாக நெருங்கிப் பழக ஓர் வாய்ப்பு ஏற்பட்டது. இவை யாவும் சேர்ந்து இவ்விரு சமுதாயங்களிடையே புதியதோர் உறவு முறையானது ஏற்படுத்தப்பட வேண்டியதன் அவசியத்தை வற்புறுத்தலாயின. அதை உணர்ந்த அரசர்கள் புதிய கொள்கைகளைப் புகுத்தவும், புதிய ஆட்சிக் கலைநுட்பங்களைக் கடைப்பிடிக்கவும் முன்வந்தனர். அதனோடு மக்களுடைய மொழி, கலை, இலக்கியம், இசை ஆகிய வற்றையும் அவர்கள் பெரிதும் தாராள மனப்பான்மையுடன் ஆதரிக்கலாயினர். எனவே, பல்வேறு மக்களும் தத்தம் தனித் தன்மைகளை வெளிப்படுத்துதற்கான புதுப்புது முறைகள் படிப் படியாக வளர்ந்தன. அத்தகைய தனித்தன்மை வெளிப்பாட்டு முறைகளில் (forms of self-expression) இந்துக்கள், முஸ்லிம்கள், சுன்னிகள், ஷியாக்கள், வைஷ்ணவர்கள், ஸூபிகள் போன்ற எல்லாவகை மக்களின் எண்ணங்களும் குறிக்கோள்களும், தேட் டங்களும் நாட்டங்களும், விருப்புகளும் வெறுப்புகளும் கோயில் கொண்டிருந்தன. அரசியல் துறையிலே ஓர் புத்தாக்கம், ஆட்சிக் கலையிலே ஓர் தாராளத் தன்மை, கலைத்துறையிலே ஓர் புதிய மொழி ஒரு புதிய இலக்கியம் ஆகியவற்றின் தோற்றம், ஆன்மீகத் துறையிலே மக்களுடைய பல்வேறு ஆன்மீகக் குறிக்கோள் களிடையே ஏற்பட்ட ஒரு பிணைப்பு—இவைகள்தாம் அக்பரும் பெருமை சான்ற முகலாயர்களும் ஆட்சிபுரிந்த காலத்துக்கு முற்பட்ட காலத்தை அணிசெய்த தனிப்பெருஞ் சிறப்புகளா மென்க.

## அரசியல் நிலைமை

ஒன்றரை நூற்றுண்டை உட்கொண்ட இக் காலமானது சிறந்ததோர் எதிர்காலத்தை உருவாக்கக்கூடிய பேராற்றல்கள் பலவற்றைத் தன்னகத்தே கொண்டு விளங்கியது. இக் காலம் முழுவதிலும் உயிரோட்டம் நிறைந்த அரசியல் வாழ்வு தழைத்தது. ரஷ்புருக் வில்லியம்ஸ் என்பார் கூறுகிறபடி பதினைந்தாம் நூற்றுண்டானது, 'ஒரு தொடர்போ, நிலைபேருன தன்மையோ இன்றித் தனக்கென ஓர் வடிவமில்லாத, பகுத்தறிவுக் கொவ்வாத' ஓர் காலமாயிருந்திருக்கக்கூடும். ஆனுல், அதுதான் பதினாறும் நூற்றுண்டின் சமுதாயமானது நன்கு நிறுவப்பெறுவதற்கோர் அடிப்படையாய் அமைந்ததென்பதை நாம் மறக்கக் கூடாது. உண்மையில் இந் நூற்றுண்டானது இந்திய வரலாற்றில் பல வகைகளில் தனிச் சிறப்புப் பெற்று விளங்குகிறது. இந் நூற்றுண்டில்தான் அரசியல் சக்திகள் பல புதிய முறையில் ஒன்றோடொன்று கலக்க ஆரம்பிக்கின்றன. அக் கலப்பின் விளைவாகப் பல புதிய நாடுகள் எழுந்ததும் இக் காலத்தில்தானுகும். அமீர் தைமூரின் படையெடுப்பு எனும் பேரதிர்ச்சியைத் தாங்கமாட்டாமல் டில்லி சுல்தானியக் கட்டடமானது இடிந்து தரையில் வீழ்ந்தது. தைமூர் டில்லியை விட்டுத் தம் நாட்டுக்குத் திரும்பியபோது, ஏற்கெனவே பல அரசர்களின் தன்னலத்தாலும், தகாத நடத்தையாலும், திடமின்மையாலும் திறமையின்மையாலும், வலிகுன்றிப் போயிருந்த டில்லி சுல்தானிய அரசானது இயல்பாகவே மாண்டொழிந்துபோயிற்று. இச் சமயத்திற்றுன், சிந்து, காஷ்மீர், மீவார், மாள்வா, குஜராத், காந்தேஷ், ஜான்பூர், வங்காளம் ஆகிய நாடுகள் சுயேச்சை பெற்ற நாடுகளாக மாறின என நாம் கேள்விப்படுகிறோம். இவைகளுடன்கூடத் தக்கணத்தில் தலைதூக்கி நின்ற பாமினி, விஜயநகர அரசுகளும் தோன்றின. ஒரிஸ்ஸாவானது டில்லி சுல்தானிய அரசில் ஒரு பகுதியாக இல்லாமலிருந்த காரணத்தால், அது எப்போதும்போலவே சுயேச்சையாக இருந்தது. எனவே, பழைய டில்லி சுல்தானிய அரசின் ஒரு சாயையென விளங்கிய புதிய அரசு டில்லியைச் சுற்றியுமிருந்த ஒரு சில மாவட்டங்களுக்குமட்டுமே உரிமை கொண்டாட முடிந்தது. தைமூரின் பிரதிநிதிகளாயிருந்து ஆண்டுவந்த சையதுகள் அந்தச் சில மாவட்டங்களோடு திருப்தி அடைந்தார்கள். விரைவில் அவர்கள், லோடிகளின் ஆற்றல்மிக்க தலைவனுன பஹ்லோல் லோடிக்கு வழி விட்டுவிட்டு, மெதுவாக அரச பீடத்தை விட்டகன்று சென்றுவிட்டனர். லோடிகளின் ஆட்சியின் கீழ் பஞ்சாப், இன்றைய மத்தியப் பிரதேசம், பீஹாரின் ஒரு சில பகுதிகள் ஆகியவை அடங்கியிருந்தன. ஆனுல், அவர்கள்கூட

நெடுநாள் செங்கோல் ஓச்ச முடியவில்லை. அவர்களுள் மிகத் திறம் பெற்றவர்கள்கூடத் தமது குலத்தவரிடையே ஒழுங்கையும் கட்டுப்பாட்டையும் ஏற்படுத்த முடியாமல் தவித்தனர். ஏனெனில், ஆப்கானியர்களது சமுதாய-அரசியலமைப்பில் மன்னரென்பவர் பெயருக்குமட்டுமே தலைவராகக் கருதப்பட்டார். உண்மையாகவே நாட்டை ஆண்டவர்கள், நாடனைத்தையும் தமக்குள் பங்கு போட்டுக்கொண்டு வாழ்ந்த நிலமானியப் பிரபு வர்க்கத்தவர்களேயாவர். மன்னர் என்பார் சமமானவர்களிடையே ஒரு முதல்வராகக் (primus-inter-pares) கருதப்பட்டார். எனவே, மையத்தில் அதிகாரம் செறிந்ததோர் (centralized) வலிமையான அரசாங்கம் ஏற்படுவதற்கு அங்கு வழியில்லாமற் போய்விட்டது. மத்திய அதிகாரியை, அதாவது, அரசரையே எதிர்க்கக்கூடிய மனப்பான்மையை அது பிரபுக்களிடையே வளர்த்தது. இத்தகைய சூழ்நிலையில் சிக்குண்டிருந்த அரசரைப் பிரபுக்கள் புறக்கணித்தனர். பயத்தோடும் பக்தியோடும் மன்னருக்குக் கீழ்ப்படிவதற்குப் பதிலாக அடங்காப்பிடாரிகளாகப் பிரபுக்கள் அவரது அதிகாரத்துக்கே சவால் விடுக்க அடிக்கடி முன்வந்தனர். அரச பதவியின் நிலையான தன்மையை சதா ஐயுறப்படக்கூடிய ஒரு சூழ்நிலை ஏற்பட்டது. அரசர் தம்மைச் சார்ந்தவர்களையே கட்டுப்படுத்த முடியாதவராயிருந்தார். ஆப்கானிய அரசியலமைப்பு முறையின் இயல்பு இங்ஙனமிருக்குமானால், அதைச் சுற்றியிருந்தவர்கள் அதை மதிக்கவேண்டுமென எதிர்பார்ப்பது இயலாததொன்றென்பதில் ஐயமில்லை. எனவே, தலைநகருக்கு வெகு அண்மையிலேயே, லோடி அரசரை வென்றவரும், தோல்வி என்பதே இன்னதென்று அறியாதவருமான ராணா சங்கராம சிங் எனும் மீவார் நாட்டு மன்னர் தமது ஆட்சியை நிலைநாட்டினார். உண்மையிலேயே வட இந்தியாவில் அப்போது அரசியல் துறையில் ஓர் தொடர்போ, ஆட்சித்துறையில் ஓர் ஒற்றுமையோ காணப்படவில்லை. இத்தகையதோர் இக்கட்டான சமயத்தில்தான் முகலாயர்கள் இந்தியாவுக்குள் நுழைந்தனர். அவர்களின் வருகையானது வட இந்தியாவில் அப்போது தலைசிறந்து விளங்கிய இரு பெருஞ் சக்திகளுக்கு, அதாவது, லோடிகள், இராஜபுத்திரர்கள் ஆகிய ஈரினத்தாரின் ஆட்சிகளுக்கும் சாவு மணி அடித்தது.

லோடி வம்சத்தாரின் கடைசி அரசரான இப்ராஹிம் லோடியும், இராஜபுத்திர அரசர்களில் மிகப் பெருமைவாய்ந்தவராயிருந்த சங்கராம சிங்கும், தைமூரின் பெயரரான பாபர் எனும் முகலாய வெற்றி வீரரால் முற்றிலுமாக முறியடிக்கப்பட்டனர். டில்லிப் பேரரசு மீண்டும் தோற்றுவிக்கப்பட்டது.

ஆனால், பத்தாண்டுகளுக்குமேல் ஒரு சிறு காலத்துக்கே அது நீடித்தது. முகலாயர்கள் நாட்டை விட்டு ஓட்டப்பட்ட பின்னர், ஷெர் ஷா என்பார் வந்து, பேரரசை மீண்டும் உயிர்ப் பித்தார். பேரரசின் அடிப்படையானது ஆழமாகவும் அகல மாகவும் அமைக்கப்பட்டது. ஆகையால், பின்னால் வந்த அக்பருக்கு வேலை எளிதாகப் போயிற்று. இங்ஙனம் டில்லியில் லோடிகள் நுழைந்ததும் பின் வெளியேறியதுமான துன்பியல் நாடகமொன்று நடந்துகொண்டிருந்தபோதும், இராஜ புத்திரர்களின் எழுச்சியால் லோடிகளின் ஆட்சிக்கு அபாயம் நேர்ந்தபோதும், இந்தியாவின்மீது படையெடுத்த முகலாயர் களுக்கும் அவர்களை எதிர்த்த லோடிகளுக்கும் இராஜபுத்திரர் களுக்கும் பானிபட் போர்க்களத்திலும் (1526), பின் கன்வா போர்க்களத்திலும் (1527) நடைபெற்ற கைகலப்புகளில் முகலாயர்கள் வெற்றி பெற்றபோதும், மக்களது அரசியல் வாழ்வில் புதிய மாற்றத்தை விளைத்த பல சூழ்நிலைகள் இங்ஙனம் வட இந்தியாவில் மாறிமாறி ஏற்பட்டுவந்தபோதும், இந்தியா வின் ஏனைய பகுதிகளில் விரவிக்கிடந்த சின்னஞ்சிறு நாடு களிடையே பொறாமையும் பூசலும் போர்களும் நடைபெற்ற வண்ணமிருந்தன. அதன் விளைவாக வலிமைமிக்க பரந்த நிலையான முடியரசுகள் எங்குமே உருவாக வழியில்லாமற் போயிற்று. இந்தியத் தீபகற்பப் பகுதியில் பாமினி, விஜய நகர அரசுகள் சதா ஒன்றுக்கொன்று எதிராகப் போரிட்டுக் கொண்டும் சதி செய்துகொண்டும் இருந்தன. அதன் விளைவாக பாமினி நாடானது ஐந்து சிறிய நாடுகளாக, அதாவது, கோல் கொண்டா, பீஜபூர், அகமது நகர், பீடார், பீரார் என்ற சுல்தானிய அரசுகளாகப் பிரிந்தன. விஜயநகரப் பேரரசும் நலிய ஆரம்பித்தது. இக் கால இறுதியில், அது வீழ்ச்சியை நோக்கி விரைந்து செல்லலாயிற்று. 1565-ல் முடிவாக அது சிதைந்தது.

நாட்டின் மத்திய பாகங்களிலும் இதுபோன்றே ஓயாத போர்களும் பூசல்களும் காணப்பட்டன. மீவார், மாள்வா, குஜராத் ஆகிய நாடுகள் ஒன்றுக்கொன்று போரிட்டுக் கொண்டன. அதன் விளைவாக மாள்வா துண்டாடப்பட்டது. உண்மையிலேயே, அது இரண்டு பாகங்களாகப் பிரிக்கப்பட்டு, ஒன்று மீவாரின் ஆட்சி வரம்புக்குள்ளும், இன்னொன்று குஜராத் தின் அதிகார எல்லைக்குள்ளும் வந்தது. ஆனால், குஜராத்தோ, அன்றி மீவாரோ அதனால் ஒன்றும் இன்பம் காணவில்லை. ஏனெனில், அதனால் இரு நாடுகளுக்கும் சச்சரவுகளே ஏற் பட்டன. தெற்கத்திய நாடுகளுக்கும் மத்திய நாடுகளுக்கும்

இடைத் தடை நாடாக (Buffer State) இருந்த காந்தேஷ் மிக முக்கியமான இடத்தை வட இந்திய அரசியலரங்கில் வகித்தது. மீவார், குஜராத், விஜயநகரம் ஆகிய அரசுகளைவிட இன்னும் நீண்ட காலம்வரை அது தன் சுயேச்சையைக் காப்பாற்றி வந்தது. வடக்கே சிந்து, முல்தான், காஷ்மீர் ஆகிய நாடுகள் ஏனைய நாடுகளைப்போன்று அவ்வளவு நீண்ட காலம் தங்கள் சுயேச்சையைக் காப்பாற்றிக்கொள்ள முடியவில்லை. ஏனெனில், எல்லைப்புறங்களிலிருந்த காரணத்தால் வடமேற்கிலிருந்தும் மேற்கிலிருந்தும் அவை பல தாக்குதல்களுக்கு உட்பட்டன. கிழக்குப் பகுதியில் ஜான்பூரின் சுயேச்சை மிக அபாயகரமான நிலையிலேயே எப்போதும் இருந்துவந்தது. இறுதியில் லோடிகளால் அதன் சுயேச்சை முற்றிலுமாக ஒழிக்கப்பட்டது. கிழக்கே இருந்த வங்காளம், ஒரிஸா ஆகிய இரு நாடுகளும் இந்திய அரசியல் வாழ்வில் ஏற்பட்ட முக்கிய அரசியல் மாற்றங்களில் சிக்கிக்கொள்ளாமலிருந்த காரணத்தால் நெடுநாள்கள் சுயேச்சையை அனுபவித்துவந்தன. ஏனைய நாடுகளோடு ஒப்பிடும்போது, அவ்விரு நாடுகளும் சுயேச்சையும் முன்னேற்றமும் நிறைந்த அமைதியான அரசியல் வாழ்வை நெடுங்காலம் அனுபவித்தன என்றே கூறலாம். ஏனைய நாடுகளில் காணப்பட்ட அரசியல் பொறுமைகளும் பேராசையும் அவற்றில் காணப்படவில்லை. வங்காளமாகிலும், ஜான்பூரோடு நிகழ்ந்த சச்சரவுகளில் சில சமயம் கலந்துகொள்ள நேர்ந்தது. ஆனால், ஒரிஸாவோவெனின், காந்தேஷைப்போன்று தெற்கு நாடுகளுக்கும் கிழக்கு நாடுகளுக்கும் இடைத்தடை நாடாக இருந்துகொண்டு எதிலும் கலந்துகொள்ளாமல் காலங்கடத்திவந்தது. ஒருபுறம் கடலாலும் இன்னொரு புறம் மலையினாலும் சூழப்பட்டு, இடையே அமைந்திருந்த காரணத்தால், காந்தேஷைப் போல் ஒரிஸாவும் நெடுநாளைக்கு, அதாவது, வங்காளத்தையும் ஏனைய கிழக்கத்திய நாடுகளையும்விட அதிகமான காலத்துக்குச் சுயேச்சையை அனுபவித்துவந்தது.

## வரலாற்று உண்மைகள் தவறான முறையில் திரித்துக் கூறப்படல்

இந்தியாவின் இக் கால நிலைமையைப்பற்றி ரஷ்புரூக் வில்லியம்ஸ் என்பார் ஓர் விளக்கம் தந்துள்ளார். ஆனால், அவர் கூறியுள்ள முறைப்படி நாம் இக் கால இந்திய நிலையை விளக்கப் புகுவோமானால், அது நம்மைத் தவறான பாதைக்கு இட்டுச் சென்றுவிடுமென்பது உறுதி. அவரது கூற்றுப்படி, இக் காலத்தே இந்தியாவானது வடக்கே இரண்டும் தெற்கே இரண்டுமாக

நான்கு பெரும் பிரிவுகளாக அல்லது பிராந்தியங்களாகப் பிரிக்கப்படலாம். அவற்றில் இரண்டு இந்து அரசர்களுக்கும், மற்றிரண்டு முஸ்லிம் அரசர்களுக்கும் சொந்தமாயிருந்தன. 'முதலாவதாக, முகமதிய மன்னர்களுக்குச் சொந்தமாயிருந்த வடக்கத்திய மண்டலத்தைக் குறிப்பிடலாம். அது சிந்துவின் முகத்துவாரத்திலிருந்து வங்காள விரிகுடாவரை ஒரு பெரும் அரைவட்டமெனப் பரந்து கிடந்த நிலப்பரப்பாகும். (உண்மையில் சிந்து என்னும் சொல்மூலம் அவர் சிந்து நதியையே குறிப்பிடுகின்றார்)......இரண்டாவதாகக் குறிப்பிடத்தக்கது தெற்கத்திய முஸ்லிம் பிராந்தியமாகும்......இங்ஙனம் வடக்கிலும் தெற்கிலும் பரவியிருந்த முஸ்லிம் நாடுகளுக்கிடையே, ஆப்பு செருகப்பட்டதேபோல், இராஜபுதன நாடு அமைந்திருந்தது. இரஜபுத்திர வம்சத்தையே பூண்டோடு வேரறுப்பது போல் அமைந்த ஓர் போராட்டத்தைப் பல நூற்றுண்டுகளாக அந் நாடு நடத்தியதுமன்றி, வெல்லுதற்கரிய நாடெனப் பெயரெடுத்து இறுதியில் வெற்றிவாகை சூடி வெளிவந்தது. அதனுல் அது அழியா வரம் பெற்றதோர் நாடெனத் திகழ்ந்தது. தெற்கத்திய முகமதியப் பிராந்தியத்துக்கும் தெற்கே இன்னெரு பெரும் இந்திய வல்லரசு தலைதூக்கி நின்றது. அது தனது அண்டையிலிருந்த வடக்கத்திய நாடுகளோடு நடத்திய ஓயாத போராட்டமே பதினைந்தாம் நூற்றுண்டைய தென்னிந்திய வரலாற்றைப் பெரிதும் நிறைத்துவந்ததெனலாம். கிழக்கே ஒரிஸா எனும் இந்து நாடு ஒன்று இருந்தது......வங்காள நாடானது தெற்கே பரவிக்கொண்டு செல்வதைத் தடுப்பதில்[1] அது ஓரளவு வெற்றிபெற்றது.' இங்ஙனம் ரஷ்புருக் வில்லியம்ஸ் என்பார் இந்திய நிலைமையை வருணிப்பதைப் பார்க்கும்போது, சமயக் கொள்கைகளின் அடிப்படையிலேயே அரசியல் சக்திகள் அருகருகே ஆதிக்கம் பெற்றிருந்ததுபோல் தோற்றமளிக்கிறது. ஆனல், உண்மையான நிகழ்ச்சிகளை வைத்துப் பார்க்கும்போது அத்தகைய முடிவானது தவறு என்பது நன்கு புலனாகிறது.

மீவார் நாடு ஓர் இந்து இராஜ்யமாயிருந்ததால்தான் வடக்கிலும் தெற்கிலும் அமைந்திருந்த முஸ்லிம் பிராந்தியங்களின் பகைமையை அது தேடிக்கொள்ளவில்லை என்றும், விஜயநகர நாடும் ஒரிஸா நாடும் இந்து இராஜ்யங்களாயிருந்தமையால் தான் முஸ்லிம் மன்னர்கள் மேலும் தெற்கில் பரவுவதை அவைகள் கண்டிப்பான முறையில் தடுக்கவில்லை என்றும் நாம் கற்பனை செய்வதால், சமயச் சார்பான கொள்கைகளின் அடிப்

[1] Rushbrook Williams, 'An Empire Builder of the Sixteenth Century', pp. 4-5.

படையிலேயே இராஜ்யங்களுக்கிடையே அரசியல் தொடர்புகள் அமைந்திருந்தன என்று நாம் கருதுகிறோமென்று ஏற்படுகிறது. அதாவது, அப்படிக் கூறுவதால், ஒரே மதத்தைப் பின்பற்றிவந்த நாடுகள் அல்லது இன்னும் திட்டவட்டமாகக் கூறவேண்டுமானால் ஒரே சமயக் கொள்கைகளைக் கைக்கொண்ட மன்னர்கள் யாவரும் ஒரே கட்சியாகத் திரண்டனர் என்பதை நாம் ஒப்புக் கொண்டவர்களாகிவிடுகிறோம். ஆனால், அப்படிச் சொல்வது நிலைமையை உள்ளபடி உணர்ந்தவர்களின் கூற்றாகத் தோன்ற வில்லை. ஏனெனில், இந்த நாடுகளின் வரலாற்றைப் பார்க்கும் போது, முஸ்லிம் நாடுகள் எனக் கூறப்படுகின்ற இராஜ்யங்கள் இந்து இராஜ்யங்களோடு சேர்ந்துகொண்டு ஒரு முஸ்லிம் இராஜ்யத்தைத் தாக்குவதையும், இந்து இராஜ்யங்கள் முஸ்லிம் இராஜ்யங்களோடு கைகோத்து நின்றுகொண்டு ஓர் இந்து இராஜ்யத்தைத் தாக்குவதையும் நாம் பல சமயங்களில் பார்க் கின்றோம்.[2] மேலும், அகமது நகரம், பீஜபூர், கோல்கொண்டா போன்ற ஷியா நாடுகளெல்லாம் பூண்டோடு ஒழிக்கப்படத் தக்கன எனச் சுன்னி அரசர்களுக்குத் தோன்றியது. இந்த நாடு களிடையே போரை விளைப்பதற்கான ஒரு சாக்காகச் சமயச் சார்பான கொள்கைகள் பல சமயங்களில் அமைந்தன என்பதை நாம் மறுக்க முடியாதென்றாலும், பெரும்பாலும் அளவுக்கு மீறிய தற்பெருமையும் தன்மான உணர்வும் கொண்ட வல்லரசர்களின் சொந்த விருப்பு வெறுப்புகளாலேயே நாடுகள் பல இரத்த வெள்ளத்தில் தோயவேண்டிய கட்டாயம் நேர்ந்தது என்பதை நாம் அடிக்கடி கேள்விப்படுகிறோம். இதற்குச் சான் றாகப் பல நிகழ்ச்சிகளைக் கூறலாம். அழகிய ஓர் பெண்ணை—ஓர் பொற்கொல்லனின் மகளை[3]—அடைவதற்காகவும், மற்றோர் அரசருக்கென வைக்கப்பட்டிருந்த குதிரைகளை வாங்குவதற் காகவும், அல்லது தனது எதிரியின் பெயரை ஓர் பெண்நாய்க்கு ஒருவர் சூட்டியதற்காகவும் நாடுகளிடையே போராட்டங்கள் எங்ஙனம் தொடர்ந்து நடைபெற்றன என்பதை நாம் வரலாற் றின் ஏடுகளில் பரக்கக் காணலாம். இத்தகைய நிகழ்ச்சிகள் ஏராளமாக நடைபெற்றுள்ளன. மேற்சொல்லப்பட்டவை அவற்றுள் ஒருசிலவேயன்றி வேறல்ல. எனவே, சமயச் சார்பு

[2] Ferista, Vol. III, pp. 110, 117; Vol. II, pp. 379, 407; C.H.I., Vol. III, p. 444; 'Oxford History of India', p. 290; 'பர்ஹன் நைஜாம் ஷா *(1508-53)* என்பார் 1550ஆம் ஆண்டளவில் ஓர் விஜயநகர இந்து அரசரோடு சேர்ந்துகொண்டு பீஜப்பூர் சுல்தானை எதிர்த்ததன்மூலம் ஓர் புது வழியைக் கடைப் பிடித்தார்.'

[3] Ferista, Vol. III, pp. 380 et seq.

களை ஒட்டியே அரசியலில் நாடுகளிடையே தொடர்புகள் ஏற்பட்டன என்றும், அதற்கேற்பவே அவை முஸ்லிம் நாடுகளெனவும் இந்து இராஜ்யங்களெனவும் இரு பிரிவுகளாகப் பிரிந்து நின்றன என்றும், அவற்றிடையே நிலவிய சமயப் பகைமையே இக்காலத்திய குழப்பத்துக்கும் போராட்டத்துக்கும் காரணமாயிருந்தது என்றும் கூறுவது சரியன்று.

இதற்கு மாருக, இக் காலத்திய குழப்பத்துக்கும் முரண்பாட்டுக்கும் அடிப்படையில் ஓர் தீவிரமான அரசியல் போட்டி அல்லது தனித்தலைமைக்கான போராட்டம் காரணமாக இருந்துள்ளதென்பதை நாம் அறியவருகிறோம். மேலும், புவியியல் காரணங்களை முன்னிட்டே அரசியல் கூட்டுகள் இந்தியாவில் ஏற்பட்டன என்பதும் இதிலிருந்து மிகச் சிறந்த முறையில் வெளிப்படுகின்றது. அதாவது, நாடுகள் ஒருங்குசேர்வதற்கும் போரிடுவதற்கும் புவியியலே பெரிதும் காரணமாயிருந்துள்ளதென்பது இதனுல் நன்கு பெறப்படுகின்றது. சான்ருக, ரெய்ச்சூர் படுகை எனும் நிலப்பரப்பு, விஜயநகர, பாஹ்மினி இராஜ்யங்களிடையே போராட்டம் ஏற்படுதற்கோர் காரணமா யிருந்தது என்பதை அறிகிறோம்.[4] அதன்மூலம் இரு நாடுகளுமே தங்களது எல்லையாக ஒரு நதி தீரத்தைப் பெறவேண்டுமென விரும்பின என்பதையும் நாம் அறியவருகிறோம். இதுபோலவே, மீவாரும் குஜராத்தும் தங்களது அரசியல் பேராசைக்கு ஓர் இலக்காக மாள்வாவை ஆக்கிக்கொண்டதற்கும் அதன் புவியியலமைப்பே காரணமெனலாம். ஜான்பூரின் அமைப்பும் இவ்விதம் இருந்த காரணத்தால்தான் டில்லியை ஆண்டுவந்த லோடி ஆப்கானியர்களோடு அது மோதவேண்டிய நிலையும், இறுதியில் அது அவ்வாப்கானியர்களால் வெல்லப்பட்டு அவர்தம் நாட்டோடு சேர்த்துக் கொள்ளப்பட வேண்டிய நிலையும் ஏற்பட்டது. இதுபோன்றே, தெற்கில் கோதாவரி நதியையும், வடக்கே கங்கை நதியையும் தனது எல்லையாகக் கொள்ளவேண்டுமென்று ஒரிஸா கொண்டிருந்த பேராசையின் விளைவாகவே[5] வங்காளமும், ஒரிஸாவும், பாஹ்மினி இராஜ்யங்களும் ஒன்ருேடொன்று போரிட்டுக் கொண்டன. ஒரிஸாவின் பேராசைக்கு அணைபோட வேண்டுமென்று வங்காளமும் பாஹ்மினி இராஜ்யங்களும் முயன்றதன் விளைவாகவே பல போராட்டங்கள் அவற்றிடையே நிகழ்ந்தன. இங்ஙனம் அரசியல் பேராசைகளின் விளைவுகளும் எதிர் விளைவுகளுமாகச் சேர்ந்து, புவியியல் கட்டுப்பாடுகளால் சில சமயம் உந்தப் பெற்றும், வேறு சில சமயங்களில் தடை செய்யப்பெற்றும், இந்

[4] Ferista, Vol. II, pp. 370, 390-91.

[5] Ferista, Vol. III, p. 354.

நாடுகளைத் தீவிரமான அரசியல் வாழ்க்கையின் கேந்திரங்களாக மாற்றிவிட்டன. இச் சச்சரவுகளுக்கெல்லாம் டில்லியே ஓர் கேந்திர நிலையமாக இருந்த ஒரு நிலை மாறிப்போய்விட்டது. இக் காலத்திய நாடுகளிடையே புதுப்புது விதமான கூட்டுறவுகள் தோன்றின. சான்ருக, இஸ்லாம் மதத்தின் போதனைகளுக்கு மாருக, முஸ்லிம் மன்னர்கள் சிலர் இந்து அரசர்களோடு சேர்ந்து கொண்டு, முஸ்லிம் நாடுகளை எதிர்த்தனர். இந்துக்களைப்பற்றி முஸ்லிம்கள் கொண்டிருந்த அபிப்பிராயத்தில் ஓர் மாற்றம் ஏற்பட்டுவிட்டதை அது சூசகமாக அறிவித்தது. இங்ஙனம் இக் காலத்திய வரலாற்று ஏடுகளை நாம் நன்கு அலசி ஆராயுங்கால், ஓர் உண்மை தெளிவாகத் தென்படுகின்றது. அதாவது, ரஷ் புரூக் வில்லியம்ஸ் என்பார் நம்மை நம்பவைக்க எண்ணுகின்றபடி, இக் காலத்திய போராட்டங்களுக்கு அடிப்படையான காரணம் இந்து-முஸ்லிம் பகைமையன்று என்பதும், கட்புலனுக்கெட்டாத சூழ்நிலைகளின் கூட்டுறவினுல் பரஸ்பரம் ஏற்பட்ட இணக்கத்தின் விளைவாகவே இக் கால வரலாற்று நிகழ்ச்சிகள் நடைபெற்றன என்பதுமே அவ்வுண்மையாகும். இவ்வுண்மை மறுக்கவொண் ணுதது. ஏனெனில், இடைக்கால இந்தியாவின் வரலாற்றில் இச் சமயத்தில்தான் முதன் முதலாக இதுவரை இந்துக்கள் முஸ்லிம் மன்னர்களின் ஆட்சியின் கீழ் வாழ்ந்துவந்த நிலை மாறி, இனிமேல் முஸ்லிம்கள் இந்து அரசர்களின் ஆதிக்கத்தின்கீழ் வாழ வேண்டிய நிலைமை ஏற்பட்டது.

மேலும், இந்தியாவிலிருந்து சிலைவணக்கத்தை ஒழித்துவிட வேண்டுமென்று கங்கணங் கட்டிக்கொண்டு வாளேந்திய கையுடன் முஸ்லிம் மன்னர்கள் இந்தியாவுக்குள் நுழைந்த காலம் மலையேறிப் பல நூற்ருண்டுகள் கடந்துவிட்டன. அத்தகைய வீரதீரச் செயல்கள் பயனற்றவை என்பதைக் காலம் நன்கு காட்டி விட்டது. தடுக்க முடியாதபடி தானுகவே இந்துக்களோடு ஏற்பட்ட தொடர்பின் விளைவாக முஸ்லிம்கள் ஓர் கசப்பான உண்மையைத் தெளிவாக உணர்ந்துகொண்டனர். முஸ்லிம்களின் மதவெறியும் இராணுவ மனப்பான்மையும் பொது நன்மைக்கு எவ்வளவு இடையூறு விளைவிக்க வல்லதோ, அதேபோன்று இந்துக்களின் சீற்றத்தோடு கூடிய தனிமையும், செல்லத்தகாத சினமும் பொது நன்மைக்கு அபாயத்தை விளைவிக்கக்கூடியவை என்பதை அவர்கள் உணர்ந்துகொண்டனர். இரு சாராருமே, தங்களுக்குப் பொதுவான சில குறிக்கோள்கள் உண்டு என்பதையும், அவைகளை அடையவேண்டின் புதிய முறையில் தங்களது உறவுமுறையை அமைத்துக்கொள்வது இன்றியமை யாதது என்பதையும் அறிந்தனர். இவ்வறிவானது, அரசாங்க

நடைமுறையில் படிப்படியாய் மலர்ந்த ஓர் புதிய செயற்பண்பு மூலம் நன்கு வெளிப்படலாயிற்று. அரசியல் துறையில் இந்துக் களுக்கும் முஸ்லிம்களுக்குமிடையே பரஸ்பரம் ஓர் நம்பிக்கை யையும் ஒத்துழைப்பையும் வளர்க்கவேண்டுமென்பதே அப் புதிய பண்பின் குறிக்கோளாயிருந்தது. அரசியல் துறையில் அது ஓர் புதிய செயற்பண்பாக (technique) எங்ஙனம் படிப்படியாக மலர்ந்ததோ, அதேபோன்று வேறு பல துறைகளிலும் அது பல வகையில் வெளிப்படலாயிற்று. புதிய மொழி ஒன்று அதன் விளைவாகத் தோன்றி படித்தர வளர்ச்சி பெறலாயிற்று. நுண்கலைகளிலும் கட்டடக் கலையிலும் புது முறைகள் பல தோன்றி வளர்ந்தன. புதிய புதிய சமய இயக்கங்களும் ஆங்காங்கே தோற்று விக்கப்பட்டன. அரசியல் துறையில் இக் காலமானது எவ்வளவு சிறப்புடன் விளங்கியதோ, அதேபோன்று கலாசாரத் துறையிலும் இது மேம்பட்டு விளங்கியது. அரசியல் துறையில் இக் காலம் எப்படி இருந்ததென்பதைப் பின்னர் விரிவாக ஆராய்வோம். எனவே, அதை ஒதுக்கிவைத்துவிட்டுக் கலாசாரத் துறையில் இக் காலமானது எய்தியிருந்த மேம்பாட்டை இனி வரப்போகும் பக்கங்களில் ஆய்வோமாக.

## ஒருவரோடொருவர் தொடர்பு கொள்வதிலும் ஒருவரை யொருவர் புரிந்துகொள்வதிலும் புதியமுறைகள் தோன்றிப் படிப்படியாக வளர்தல்

முஸ்லிம்கள் இந்தியாவுக்குள் வந்த ஒருசில நூற்றுண்டுகளுக் குள்ளாகவே, இந்துக்களுடன் கலாசாரத் தொடர்பு கொள்ளவும், கருத்துகளையும் குறிக்கோள்களையும் அன்னுருடன் பரிமாறிக்கொள்ளவும் இரு சாராருக்கும் பொதுவானதொரு சாதனம் தேவை என்பதை அன்னூர் நன்கு உணர்ந்து கொண்டனர். அரசாங்கத்தைச் செம்மையான முறையில் நடத்தவும் மக்களோடு நன்கு கலந்து பழகவும் வேண்டிய கட்டாயம் முஸ்லிம்களுக்கு ஏற்பட்டபோது, அவர்கள் தாங்கள் யார்மீது தங்களது ஆட்சியை வலிய சுமத்தினுர்களோ எந்த மக்க ளிடையே வாழவேண்டுமெனத் தீர்மானித்துவிட்டார்களோ, அம் மக்களைத் தாங்கள் நன்கு புரிந்துகொள்ளவும், அதேபோல் அம் மக்கள் தங்களை நன்கு புரிந்துகொள்ளும்படி செய்யவும் அவர்கள் பல வழிகளிலும் தம்மை அறியாமலேயே முயற்சி செய்யலாயினர். இம் முயற்சியானது கில்ஜிகள் காலத்தும், ஜியாவுதீன் பரணி (Ziauddin Barni) காலத்தும் வெற்றி பெற்று, உருது என்ற ஓர் புதிய மொழி தோன்றியது. அம் மொழியானது இக் காலத்தே, அதாவது, பதினைந்து, பதினுறும்

நூற்ருண்டுகளில் மிக வேகமாக முன்னேற்றமடைந்தது. உரை நடையும் செய்யுளும் அம் மொழியில் செழித்து ஓங்கி அதை வள மாக்கின. ஒருவரோடொருவர் மனம்விட்டுப் பேசிக்கொள்ளவும், கலாசாரத் தொடர்பு கொள்ளவும், பரஸ்பரம் ஒருவரை ஒருவர் புரிந்துகொள்ளவும் அதனுல் வழி ஏற்பட்டது. அதன்மூலம் இரு வகுப்பாரிடையேயும் காணப்பட்ட கரடுமுரடான இயல்புகள் மென்மையடைந்தன.

நுண்கலையிலும் கட்டடக் கலையிலும் புத்தம் புதிய பாணிகள் (styles) அருகருகே தோன்றி வளரத் தொடங்கின. ஆங்காங்கே ஆண்ட உள்நாட்டு அரசர்களின் வள்ளன்மையும் ஆதரவுமே அவை தோன்றுவதற்குக் காரணமாயிருந்தனவெனலாம். கண்ணியமும் கம்பீரமும் மிக்கதாய், மாண்டுவில் கண்கவர் வனப்புடன் விளங்கிய ஜஹாஸ் மஹாலும் (Jahaz Mahal) ஹிந்தோலா மஹாலும் (Hindola Mahal), ஒரே சீரான அமைப்பும் (symmetry) கலைநயமும் (grace) ஒருங்கே கொண்டதாய், 'கவிநய மும் படைப்புணர்வோடுகூடிய தெய்விக ஊக்கமும்' செறிந்ததாய் அகமதாபாத்தில் விளங்கிய தீன் தர்வாஜாவும் (Tin Darwaja) ஜமி மசூதியும் (Jami Masjid), ஒருவித உயிரூட்டத்திலும் எளிமையிலும் சிறந்து ஜான்பூரில் அமைந்திருந்த அடலா மஜீதும் (Atala Masjid) லால் தர்வாஜாவும் (Lal Darwaja), கோர் (Gour) நகரத்தே 'வியக்கத்தக்க துணிவுடன் திட்டமிடப்பட்டு' இணையற்ற முறையில் கட்டி முடிக்கப்பட்ட சத் கும்பாஜும் (Sat Gumbaj), குல்பர்காவில் விளங்கிய ஜமி மசூதியின் தவமிக்க எளிமையும், தௌலதாபாத்தில் இருந்த சந்த்மினூரின் (Chand Minar) நேர்த்தியான புறத்தோற்றமும் குறைகாண வொண்ணுச் சீர்மையும் நாகரிகமான நுணுக்க வேலைப் பாடுகளும், பீடாரில் மகமது கவானுல் கட்டப்பட்ட கல்லூரியின் 'இளக்கமான உருவமும் திரட்சியும், ஒளியும் நிழலும் மாற்றி மாற்றிப் பயன்படுத்தப்பட்டதன் சிறப்புகளும்'—இவை யாவும் இந்துக்கள், முஸ்லிம்கள் ஆகிய இரு சாராரின் மேதைத் தன்மைகளும் நல்லமுறையில் குழைந்து இணைந்ததால் ஏற்பட்ட சீரிய விளைவுகளைத் தம்மகத்தே தேக்கிக்கொண்டுள்ளன. உள் நாட்டு, வெளிநாட்டுக் கட்டடக் கலைகளின் கலவையை நாம் இவைகளில் காணலாம். இவைகளெல்லாம் அரும்பெருஞ் சாதனைகள் என்பதில் ஐயமில்லை. இவைகளை எல்லாம் உள்நாட்டு மன்னர்கள் சாதிக்க இயன்றதென்ருல், அதற்குக் காரணம், அவர்கள் எதற்கெடுத்தாலும் டில்லியை எதிர்பார்த்துக்கொண் டிருந்த பழக்கத்தைக் கைவிட்டுவிட்டதேயாகும். இவைகள் யாவும், இக் காலத்து மக்களின் வாழ்வில் தனியாட்சி செலுத்தி

வந்ததோர் மனப்பான்மையை, அதாவது, விட்டுக்கொடுக்கும் மனப்பான்மையை உட்கொண்டு விளங்குவதை நாம் நன்கு காணலாம்.

இதே உணர்வால் உந்தப்பட்டுப் புதியதோர் மத இயக்கமும் இக் காலத்தே எழுந்தது. புதிய குறிக்கோளை அது மக்களின் உள்ளத்தே புகுத்தியது. புதியதோர் சாதனையை மக்கள் சாதிக்கக் கூடுமென்ற நம்பிக்கையை அது யாவருக்கும் ஊட்டியது. அவ் வியக்கம் பொதுவாகப் பக்தி இயக்கமென்று யாவராலும் அழைக்கப்படுவதாகும். அது பற்பல நூற்றுண்டுகளுக்கு முன்னமேயே தோன்றிவிட்டதோர் இயக்கமே எனினும், இக் காலத்தே அது நன்கு விழிப்புற்றுப் புதியதோர் வாழ்வினை அடைந்தது. அதன் குறிக்கோளில் கமழ்ந்த தெய்விக மணமும், தன்னை அறிந்து இன்பமுறுதற்கு அதனுல் காட்டப்பட்ட புதிய நெறியும் மக்களைப் பெரிதும் கவர்ந்து அவர்களிடம் ஓர் தெய்வீக ஊக்கத்தை ஏற்படுத்தியது. அவ் வூக்கத்தால் உந்தப்பட்ட மக்கள் தம்மையே முற்றிலும் மறந்து அதில் ஈடுபடலாயினர். புத்தரது காலத்துக்குப்பின் ஒருவரும் செய்தறியா ஒன்றை இராமானந்தர் (கி.பி. 1300-ல் பிறந்தவர்) செய்து காட்டினுர். அதாவது, வட இந்திய மக்களுக்கு அவர்களது சொந்தத் தாய் மொழியிலேயே அவர் மதபோதனை அளித்தார். பக்திக் கலையின் உளங்கவர் கொள்கைகளை அவர் யாவர்க்கும் புரியும் வகையில் எடுத்து விளக்கினுர். அதனேடு அவர் சாதி, சமய வேறுபாடின்றி, ஆண், பெண் என்ற பாகுபாடின்றி யாவரையும் தமது சமயப் பிரிவில் சேர்த்துக்கொண்டார். கபீர் என்ற முஸ்லிமும், தீண்டத்தகாத சாமார் (சக்கிலியர்) வகுப்பைச் சேர்ந்த ரோஹி தாஸும், தீண்டத்தாகதவர்களைவிடக் கேவலமாக மதிக்கப் பெற்ற பெண்குலத்தில் பிறந்த பத்மாவதியும் அவரது பெருஞ் சீடர்களாயினர். அவரது பணியை வல்லபரும், சையதன்யரும், மற்றும் பல மராட்டியத் துறவிகளும் தொடர்ந்து செய் தனர். தன்னைத் தான் அறிதல் என்ற புதிய கனவில் மிதந்துகொண்டு மக்கள் தூய பேரின்பத்தில் திளைக்க விரும் பினர். அப் பேரின்ப நாட்டத்திலேயே அவர்கள் பொழு தெல்லாம் கழிந்தது. இந்தியா சில காலத்துக்கு இவ்வுலக வாழ்க்கையின் அற்பத்தனத்தை மறந்தது. உலக வாழ்வின் சுகபோகங்களையும் துயரங்களையும் மக்கள் தம்மை அறிந்து இன்ப முறும் முயற்சியில் மறந்துபோயினர். தம்மைத் தாம் அறிந்து கொள்ள அவர்கள் அன்பு வழியைக் கடைப்பிடித்தனர். அன்பு ஒன்றின்மூலமே, அதாவது, வேற்றுமைகளையெல்லாம் கடந்ததும், வாழ்வின் போக்கை அப்படியே மாற்றிவிடக்கூடியதும், மக்களனை வரையும் ஒன்றுபடுத்தக்கூடியதுமான அன்பு ஒன்றின் மூல

மாகவே மனிதன் இறைவனோடு இரண்டறக் கலந்து அதனால் வருகின்ற பேரின்ப சுகம் என்ற தெய்விக அநுபூதியைப் பெற முடியும் என அவர்கள் நம்பினர். அகில உலக சகோதரத்துவமே அவ் வியக்கத்தின் குறிக்கோளாய்த் திகழ்ந்தது. இந்துவும் முஸ்லிமும், அரசனும் ஆண்டியும், பிராமணனும் சூத்திரனும் யாவரும் சகோதரர்கள்; அவர்கள் ஒருவரை ஒருவர் சகோதர பாசத்தோடு நேசிக்கவேண்டும்; அப்படிப்பட்ட அன்பு ஒன்றின் மூலமே பக்தியினால் வரும் பெரும் பயனை எய்த முடியும் என அவ் வியக்கத் தலைவர்கள் போதித்தனர். தெய்வ கடாட்சம் பெற்றிருந்த இந்து பக்தர்கள் போதித்த இதே பக்தி மார்க்கத்தையே முஸ்லிம்களான ஸுஃபி கவிஞர்களும் போதித்தனர். ஷிராஜ் (Shiraz), நிஷாபூர் (Nishapur) தோட்டங்களில் இருந்து கொண்டு அவர்கள் பொழிந்த கவிதைமாரியில் பக்தி மார்க்கக் கருத்துகள் தொனித்தன. எனவே, முஸ்லிம்களிடையேயும் இக் கருத்துகள் பரவலாயின. இயல்பாகவே அவர்கள் இம் மார்க்கத்தை மனமுவந்து ஆதரிக்க முன்வந்தனர். அவ்வாதரவின் விளைவாக ஏற்பட்ட சிறந்த பலன்களையெல்லாம் பெருமைசால் முகலாயரின் காலத்து மக்கள் துய்த்தனர்.

காலத்தின் போக்கு இங்ஙனம் நுண்கலையையும் கட்டடக் கலையையும், மொழியையும் சமயத்தையும் ஊடுருவிச் சென்று மாற்றியமைத்துக்கொண்டு சென்ற வேளையில், அரசாங்கம் மட்டும் அதன் பிடியினின்றும் தப்பித் தனித்திருப்பதென்பது முடியாத காரியமாய்ப் போயிற்று. மக்களின் வாழ்வில் ஓர் உள்ளுணர்வானது ஊடுருவி நிற்கும்போது, அது வாழ்க்கையின் எல்லாப் பகுதிகளிலுமே நன்கு உணரப்படுமென்பது உறுதி. அதுவும் மக்கள் தம் வாழ்வைச் சீராக அமைத்துக்கொண்டு பாதுகாப்புடன் இருக்கப் பாடுபடுகின்ற ஒரு துறையில் அவ்வுணர்வு பெரிதும் உணரப்படுமென்பது ஒருதலை. எனவே, இக் கால உள்ளுணர்வு அல்லது மனப்போக்கை ஒட்டி, எங்ஙனம் வெவ்வேறு நாடுகள் ஒவ்வொன்றும் தத்தம் குடிமக்களின் பாதுகாப்புக்கும் ஒழுங்குமுறைக்கும் வழிவகுத்தன என்பதை, அதாவது, இக் கால மனப்போக்கை எதிரொலிக்கும் வகையில் வெவ்வேறு நாடுகளின் ஆட்சித்துறைக் கொள்கையானது எங்ஙனம் மாற்றியமைக்கப் பட்டதென்பதை இனி ஆராய்வோம்.

## நாடுகளின் ஆட்சித்துறைக் கொள்கையில் ஏற்பட்ட மாற்றம்

இக் காலத்தே ஆண்ட முஸ்லிம் மன்னர்களின் ஆட்சித் துறைக் கொள்கையானது, இதற்குமுன் ஆண்ட மன்னர்கள்

ஏற்றுக் கடைப்பிடித்துவந்த ஆட்சி, கலைச்செயல் முறையினின்றும் பெரிதும் வேறுபட்டதாயிருந்தது. முந்தைய மன்னர்களில் மிகவும் மதவெறிகொண்ட கஜினி முகமது, பால்பன் போன்றோர்கூட இந்துக்களைப் பதவிகளில் அமர்த்தாமல் இருக்க முடியவில்லை என்றாலுங்கூட, அதாவது, இராஜபுத்திரர்கள் போன்றவர்களை இராணுவப் பணியில் ஈடுபடுத்தாமல் இருக்க அவர்களால் முடியவில்லை என்றாலுங்கூட, நாட்டின் சிவில் துறைகளின் பொறுப்பை இந்து அமைச்சர்களிடம் ஒப்படைக்க அவர்கள் முன்வரவில்லை. அங்ஙனம் செய்வது தங்களது மதக்கொள்கைகளுக்கே விரோதமானதென அன்னார் நினைத்தனர். டில்லி சுல்தானிய வரலாற்றில் இந்து ஒருவர் அமைச்சர் பதவியில் அமர்த்தப்பட்ட ஒரு நிகழ்ச்சியை நாம் காணமுடியாது. அன்று சுல்தான்கள் அங்ஙனம் நடந்துகொண்டது உண்மையிலேயே இஸ்லாம் மதக் கட்டளைகளுக்கு முற்றிலும் ஏற்றதாகவே இருந்தது. எனவே, ஆட்சித்துறை அமைப்பில் அதே போக்கையே முஸ்லிம் மன்னர்கள் இதுகாறும் கடைப்பிடித்துவந்தனர். டில்லி சுல்தானிய ஆட்சியின்போது அலாவுதீன் கில்ஜி, முகமது பின் துக்ளக் போன்ற அரசர்கள், நாட்டின் சிறந்த நலன்களை வளர்க்கக்கூடியதென எதைத் தாங்கள் கருதினார்களோ அதை நடைமுறையில் கடைப்பிடிக்க ஓரளவு முயற்சி செய்தனர். அங்ஙனம் செய்தபோது அவர்கள் குரானின் கட்டளைகளுக்கு விரோதமாகவோ அல்லது முஸ்லிம் மத அறிஞர்களின் ஆணைகளுக்கு முரணாகவோதான் நடந்து கொண்டார்கள். எனினும், இக் காலத்தே டில்லி சுல்தானிய அரசு சிதைவுற்றுப் பல சிறு நாடுகளாகப் பிரிந்துவிட்ட காரணத்தாலும், புதிய முறையில் இந்துக்களோடு தொடர்பு கொள்ள வேண்டிய கட்டாயம் ஏற்பட்டதாலும், சுல்தான்களிலேயே முன்னேற்ற மனப்போக்குப் படைத்த ஒருசிலர் தமது முன்னையோர் கடைப்பிடித்த முறைகளைவிடச் சற்றுத் தாராள நோக்குடன் கூடிய முறைகளைக் கடைப்பிடிக்க முன்வந்தனர். இதற்கு முற்பட்ட காலத்தே, அலாவுதீன் கில்ஜி அல்லது முகமது பின் துக்ளக் போன்ற சுல்தான்கள், நாட்டின் அவசரத் தேவைகளை முன்னிட்டு அரசியல் காரியங்களில் தமது விருப்பப்படியே யாவும் நடைபெற வேண்டுமென வற்புறுத்தியதன்மூலம் குரானின் கட்டளைக்ளுக்கோ அல்லது இஸ்லாமிய சமய அறிஞர்களின் ஆணைகளுக்கோ முரணாகப் போக முயன்றனரென்றால், இக் காலத்தே ஆண்ட முஸ்லிம் மன்னர்களில் சிலர் இந்துக்களோடு ஒத்துப் போகும் கொள்கையைச் சிறப்பான முறையில் தாமாகவே கடைப்பிடிக்க முன்வந்தனர். அலாவுதீன் கில்ஜியும் முகமது பின் துக்ளக்கும் பொதுநலனைப்பற்றிக் கொண்டிருந்த கருத்தை இக் கால மன்னர்கள் உண்மையிலேயே மாற்றிக்கொண்டனர்

எனலாம். நாம் ஏற்கெனவே கண்டபடி, அப் பொதுநலனுனது குடிமக்களின் மனநிறைவில்தான் அடங்கியுள்ளதாக அவர்கள் அறிந்துகொண்டனர். பொதுவாக இந்துக்களும் முஸ்லிம்களும் திருப்தியோடு வாழ்ந்தால்தான் பாராளும் மன்னர்களிடம் அவர்கள் மனப்பூர்வமான விசுவாசத்தைச் செலுத்த முடியும் என்பதை அவர்கள் அறிந்தனர். எனவே, பொது நன்மையைப்பற்றிய இந்தப் புதிய கருத்தானது அந் நன்மையை எய்துதற்கான புதிய முறைகளைக் கடைபிடிக்குமாறு மன்னர்களைத் தூண்டியது. ஆட்சிக் கலையில் ஒரு புதிய மாறுபட்ட செயல்முறையைக் கடைப்பிடிக்க வேண்டுவதன் அவசியத்தை அவர்கள் உணர்ந்தனர். அப்படி உணர்ந்து அவர்களால் கடைப்பிடிக்கப்பட்ட புதிய முறைகளில் ஒன்று, முஸ்லிம்களால் ஆளப்பட்ட நாடுகளில் வதியும் இந்துக்களை சிவில், இராணுவம் ஆகிய இரு துறைகளிலும் உள்ள அதிகார பீடங்களில் அமர்த்த வேண்டுமென்பதாகும். உண்மையிலேயே அது முற்றிலும் புதியதோர் முறை என்பதில் ஐயமில்லை. ஏனெனில், இக் காலத்துக்கு முற்பட்ட காலத்தே இந்துக்கள், அதிலும் சிறப்பாக இராஜபுத்திரர்கள் இராணுவத் துறையில் பணிபுரிய முஸ்லிம் மன்னர்களால் நியமிக்கப்படுவது வழக்கமாயிருந்ததென்றுலும், சிவில் ஆட்சித்துறையில் அவர்கள் சேர்த்துக்கொள்ளப்படவே இல்லை. இது ஒரு மத சம்பிரதாயமாகக் கருதப்பட்டது. இந்துக்களை சிவில் ஆட்சி முறையில் சேர்த்துக்கொள்வதும், இஸ்லாமிய விசுவாசிகள்மீது ஆதிக்கம் செலுத்துமாறு அவர்களை அநுமதிப்பதும் இஸ்லாமிய அரசு ஒன்றின் சிறப்பியல்புக்கே முற்றிலும் மாறுனதொன்றுகக் கருதப்பட்டது. எனவே, அத்தகைய செயலை முஸ்லிம்கள் மனமார வெறுத்தனர். அவ் வெறுப்பு மக்கள் மனத்தில் நன்கு வேரூன்றி விட்ட காரணத்தால், பிற்பட்ட இக்காலத்தில்கூட, அம் மரபினைக் கடைப்பிடித்தவர்கள் புகழப்பட்டனர். பலவீனம் காரணமாக ஒருசிலர் அதைக் கைக்கொள்ளத் தவறியபோதெல்லாம் அவர்கள் அதை மீண்டும் கைக்கொள்ளுமாறு வற்புறுத்தப் பட்டனர்.[6]

---

[6]Ferista, Vol. IV. p. 258—சுல்தான் முகமதுவின் காலத்தே, சதிக்கும்பல் ஒன்று, 'எந்த இந்துவும் அரண்மனையில் சிவில் பதவி எதையும் வகிக்கக்கூடா'தென்ற கொள்கையைக் கடைப்பிடிக்குமாறு மன்னரிடம் வற்புறுத்தியது—Ferista, Vol. II, p. 436—அலாவுதீன் ஷா பஹ்மினி II என்பார் 'நாஸரீன்களோடோ, பிராமணர்களோடோ உரையாடுவது கூடக் கிடையாது; அரசாங்கத்தில் சிவில் பதவிகளை வகிக்கவும் அவர் அநுமதிப்பதில்லை.'

## இந்துக்கள் முக்கியமான பதவிகளில் அமர்த்தப்படல்

இங்ஙனமெல்லாம் இருந்தபோதிலுங்கூட, இக் காலத்தே வாழ்ந்த பெருமைமிக்க மன்னர்களில் முன்னேற்றப் போக்குப் படைத்த ஒருசிலர் இந்துக்களை சிவில் அரசாங்கப் பதவிகளில் நியமித்தனர். இக் காலத் தாராளத் தன்மை வாய்ந்த அரசாங்கத்துக்கு அவர்களது நடத்தை ஒரு முன்மாதிரியாய்த் திகழ்ந்தது. அக்பரது காலத்து நடைமுறைகளுக்கு அது ஓர் அடிப்படையாக விளங்கியது. சான்றாக, காஷ்மீரில் ஆண்ட மன்னர்களில் அஞ்சத்தக்க மதவெறியர் என்று பெயரெடுத்த ஷிகந்தர் பூட்ஷிகான் (Sikandar Bootshikan) எனும் முஸ்லிம் மன்னர் 'சிவா தியூ பாத் (Seeva Dew Bhat) எனும் பிராமணரொருவரைத் தலைமை அமைச்சர் பதவிக்கு உயர்த்தினார்.'[7] காஷ்மீர் மன்னர்களில் இன்னொருவர் மாலிக் தாஜ் பட் (Malik Taj Bhat) எனும் இந்து ஒருவரைச் சேனாதிபதியாக வைத்துக்கொண்டார்.[8] மாள்வாவை ஆண்டுவந்த 2ஆம் சுல்தான் முகமது இராஜபுத்திரர்களிடம் ஏராளமான நம்பிக்கை வைத்திருந்தார். இராஜபுத்திரர்களின் தலைவராக அப்போது திகழ்ந்த மெதினி ராய் (Medini Rai) என்பவரே அவரது தலைமை அமைச்சராக வீற்றிருந்து, அரசாங்க சம்பந்தமான காரியங்களில் அவருக்கு ஓர் வழிகாட்டியாக விளங்கினார். அதிகாரம் வாய்ந்த சிவில் பதவிகள் பெரும்பாலானவற்றிலும், அரண்மனையில் நம்பிக்கைக்குகந்த பதவிகளிலும் இராஜபுத்திரர்கள் அமர்த்தப்பட்டனர்.[9] அவரது தந்தையிடம் பசந்த ராய் (Basant Rai)[10] என்ற இந்து அமைச்சர் வேலைபார்த்துவந்தார். கோல்கொண்டாவில் இந்துக்கள் ஆட்சித்துறை அலுவல்களில் தாராளமாகச் சேர்த்துக்கொள்ளப்பட்டனர். நிர்வாகத்தில் மிக உயர்ந்த பதவிகளுங்கூட அவர்களுக்குக் கிடைத்தன. ஜக்தேவ் ராவ் என்பார் ஜம்ஷெட் குதப் ஷா என்ற மன்னரிடம் 'இராஜ்ஜிய முதல் அதிகாரியாக' விளங்கினார். அதன்பின் இப்ராஹிம் குதப் ஷா என்பவருடைய ஆட்சிக் காலத்தில் அவர் தலைமை அமைச்சர் பதவியைப் பெற்றார்.[11] அச் சமயத்தில் ஜஹத் ராவ் எனும் மற்றோர் இந்து, கோல்கொண்டா கோட்டையின் ஆளுநராக இருந்துவந்தார்.[12] அஹமத் நகரில் ஆண்டுவந்த முதலாம் பர்ஹான் நிஜாம் ஷா என்பவர் பல இந்துக்களைப் பெருஞ் சிவில்

[7] Ferista, Vol. IV, p. 464.
[8] Ibid., p. 478.
[9] Ibid., pp., 84, 256-58.
[10] C. H. I., Vol. III, p. 365.
[11] Ferista, Vol. III, pp. 390, 399.
[12] Ibid., p. 393.

அதிகாரங்களில்அமர்த்தினர். நர்சூ பண்டிட், சாம்பாஜி சித்நவிஸ், கோபால்ராவ் முதலியோர் அத்தகைய உயர்ந்த அதிகாரிகளாய் இருந்தவர்களாவர். மேலும், காவூர் சீன் (Kawur Sein) எனும் பிராமணர் ஒருவர் அவருடைய தலைமை அமைச்சராக விளங்கினர்.[13] 'முகுந்தராவ் எனும் மராத்தியரும் அவரது சகோதரரும்...பஹ்மினி அரசாங்கத்தில் மிக உயர்ந்த பதவிகளில் இருந்தனர்'[14] என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

## ஆஃப்கானியர்களின் குறைபாடுகள்

ஆனால், இந்த மனப்பான்மையானது டில்லியில் ஆண்ட ஆஃப்கானிய மன்னர்களை ஒருசிறிதும் கவரவில்லை. ஏனெனில், முதலாவதாக, அவர்கள் அண்மையில் இந்தியாவுக்குள் நுழைந்த பண்பற்ற, குழுப்பற்று நிறைந்த ஓர் இராணுவப் பிரபு வர்க்கத்தைச் சேர்ந்தவர்களாக இருந்தனர். இரண்டாவதாக, அவர்களிடம் மதவெறி நிறைந்திருந்தது. இந்தியர்களுடைய ஆதிக்கத்தை இந்தியாவிலிருந்து முற்றிலும் ஒழித்துவிட வேண்டுமென்பதும், இஸ்லாமியச் சட்டத்துக்கு ஏற்ற முறையில் ஆட்சி புரியவேண்டுமென்பதுமே அவர்களின் ஒரே ஆவலாக இருந்தது. ஆனால், அவர்கள் இந்தியாவில் அப்போது நிலவிய சூழ்நிலையின் உண்மைகளை நன்கு புரிந்துகொள்ளத் தவறிவிட்டார்கள். ஏனெனில், நாடு முழுவதும் தங்கள் கைவசம் வருவதற்குமுன் ஒழிக்கப்பட வேண்டியவர்கள் இந்திய இராஜபுத்திரர்கள்மட்டுமன்றி இந்துஸ்தானிய முஸ்லிம்களும் ஆவர் என்பதை அவர்கள் அறியவில்லை. இந்துக்கள், முஸ்லிம்கள் ஆகிய இருவகைப்பட்ட எதிரிகளோடும் ஆஃப்கானியர்கள் மோத நேர்ந்தபோது, அவர்களில் ஒரு வகுப்பாரைத் தங்கள் கைக்குள் போட்டுக்கொண்டு இன்னொரு வகுப்பாரை அதன் துணைகொண்டே அழிக்கத்தக்க தந்திரத்தை அவர்கள் கடைப்பிடிக்கவில்லை. மேலும், அவர்கள் தங்களுடைய காரியத்தில் வெற்றி பெறுவதற்குப் பெரிதும் துணையாய் இருந்திருக்கக்கூடிய ஒன்றுபட்ட இராணுவ அமைப்பும் குறிக்கோளில் ஒருமையும் அவர்களிடம் சிறிதும் காணப்படவில்லை. எனவே, அவர்கள் தங்களுடைய சொந்தக் குலத்தவர்களைத் தவிர வேறெவரது ஒத்துழைப்பையும் நம்பிக் காரியத்தில் இறங்கக் கூடாத நிலையில் இருந்தனர். அவர்களது குலத்தவர்களோவெனில் தமக்குள் சதா போரிட்டவண்ணம் இருந்தனர். அதன் விளைவாகப் பேரரசு ஒன்றைத் தோற்றுவிப்பதில் அவர்கள் வெற்றி

[13] Ibid., pp. 220, 222, 223, 233.
[14] Ferista, Vol. III, p. 31.

பெருமற்போயினர். ஒற்றுமை சிறிதுமற்றஆஃப்கானியர்களுடைய பலவீனத்தையும், அவர்களது ஆட்சிமுறையின் பலவீனத்தையும் ஷெர்ஷா என்பவர் தெளிவாக உணர்ந்திருந்தார். அப் பல வீனத்தை மேற்கொள்ள ஆட்சி முறையையே முற்றிலும் மாற்றிச் சீரமைக்க அவர் பெரிதும் முயன்ருர். அப்படிச் செய்த போது அவர் ஆப்கானிய ஆட்சியில் தொன்றுதொட்டுக் கடைப் பிடிக்கப்பட்டுவந்த மரபுகளின்றும் சற்றே விலகி நடக்கலாஞர். சிவில் ஆட்சித்துறையின் அடித்தளங்களில் அவர் இந்துக்களை நியமித்தார். பிரம்மஜித்கார்[15] எனும் இந்தியத் தளபதியை அவர் வைத்திருந்தார் என்பதை நாம் அறியவருகிருேம். மேலும், சர்ஹிண்ட் எனும் சர்க்கார் பகுதியானது மஸ்னதி அலி காவாஸ் கான் (ஷெர்ஷாவின் ஆட்சிக் காலத்தில்) என்பவருக்கு ஜாகீராக வழங்கப்பட்டிருந்தபோதுங்கூட, உண்மையில் அது காவாஸ் கானின் பகரராக இருந்த மாலிக் பஹவந்[16] என்பவராலேயே ஆளப்பட்டுவந்தது என்றும் நாம் கேள்விப்படுகிருேம். இந்து ஒருவர் மாலிக் பதவியைப்போன்ற உயர்ந்த பதவிக்கு வர முடிந்ததைப் பார்க்கும்போது, ஷெர்ஷாவின் ஆட்சிக் காலத்தில் இந்துக்கள் எவ்வளவு நல்லமுறையில் நடத்தப்பட்டிருக்கவேண்டு மென்பது தாஞகவே புரிகின்றது. இந்துக்களிடம் ஷெர்ஷா கலப் பற்ற நேய மனப்பான்மை காட்டிஞர் என்று கருதக்கூடா தெனினும், மேற்சொன்ன நிகழ்ச்சியானது உண்மையில் குறிப் பிடத்தக்க சிறப்பு வாய்ந்தது என்பதில் ஐயமில்லை. அதன்மூலம் அவர் ஏனைய ஆஃப்கானிய மன்னர்கள் யாவரும் நடந்துகொண்ட முறைக்கு மாருக நடந்துகொண்டார் எனலாம். உலேமாக்களின் ஆணைகளுக்கும் குரானின் கட்டளைகளுக்கும் ஏனைய ஆஃப்கானிய மன்னர்கள் காட்டிவந்த மதிப்பும் மரியாதையும் அவரிடம் சற்றுக் குறைவாகவே காணப்பட்டன. அவருடைய ஆட்சிக் காலத்தே இஸ்லாம் சமயமானது பெரிதும் பெருமைப்படுத்தப்பட்ட தென்பதும், இந்துக்கள் மத ஒறுப்புக்கு ஆளாக்கப்படவில்லை என்பதும்[17] உண்மையே எனினும், அரசியல் உபாயத்தை சமயத் தேவைகளுக்கு உட்படுத்த அவர் முன்வரவில்லை. ஷெர்ஷாவிடம் ஏதாவது குறை காணப்பட்டதென்ருல் அது இக் குறையேயன்றி வேறில்லை. திறமைமிக்க இராஜதந்திரத்தைக் கடைப்பிடிக்கும் வல்லமை அவரிடம் காணப்படவில்லை. ஆஃப் கானிய ஆட்சியை மீண்டும் உயிர்ப்பிக்கவும் பேரரசை மீண்டும் நிறுவவும் வேண்டுமாஞல், ஆஃப்கானியரிடையே இருந்த பிளவு

[15] Elliot & Dowson, Vol. IV, 'Tarikhi Sher Shahi', p. 383.
[16] Ibid., p. 415.
[17] Qanungo, 'Sher Shah', 426.

களை அகற்றி அவர்களை ஒன்றுபடுத்திவிடுவதும், கண்ணியமிக்க ஆட்சிமுறையை நிறுவிவிடுவதும் மட்டுமே போதாது என்பதை அவர் நன்கு புரிந்துகொள்ளவில்லை. பேரரசு ஒன்றை நன்கு நிறுவவேண்டுமென்றால் அதற்கு சமயோசித அறிவும், எதிர்கால நோக்குடன்கூடிய இராஜதந்திரமும் நிரம்பவும் தேவை என்பதை அவர் புரிந்துகொள்ளவில்லை. எனவேதான், அக்பருக்கு முன் அவரது பெருமை பெரிதும் குன்றிவிடுகின்றது. அக்பர் தமது இராஜதந்திரத்தின்மூலமாக முரட்டுப் பிடிவாதமும் வல்லமையும் வாய்ந்த இராஜபுத்திரர்களைத் தமக்கு உற்றுழி உதவும் நண்பர்களாக ஆக்கிக்கொண்டு அவர்களது துணையின்மூலமே ஆஃப்கானியர்களை ஒழித்துக்கட்டினர். ஆனல், ஆஃப்கானியர்களிலேயே மிகப் பெருமை வாய்ந்த ஒருவர் இந்த உண்மையைப் புரிந்துகொள்ள முடியவில்லை. அதாவது, இராஜபுத்திரர்களுடைய ஆக்கத்தையும் இந்துஸ்தான முஸ்லிம்களுடைய அதிகாரத்தையும் ஒருங்கே ஒழிக்கவேண்டுமென்றால் தக்க சமயத்தில் தக்கபடி திட்டமிடப்பட்ட இராஜதந்திர முறைகளின்மூலம் ஒரு கட்சியை நட்பாக்கிக் கொண்டு அதன்மூலம் இன்னெரு கட்சியை அழிப்பது என்பது மிகவும் எளிதானதும் பயன்தரத்தக்கதுமான உபாயம் என்பதை அவர் அறிந்துகொள்ளவில்லை. லோடிகள், சூர்கள் ஆகிய முஸ்லிம் வகுப்பைச் சேர்ந்தவர்களில் ஒருவர்கூடச் சூழ்நிலைக்குத் தக்கபடி இவ்விதம் நடந்துகொள்ள வேண்டுமென்பதன் அவசியத்தைப் புரிந்துகொண்டாகத் தெரியவில்லை. ஆகவே, ஆஃப்கானியப் பேரரசில், சிவில் ஆட்சிமுறையின் அடித்தளத்தில் இந்துக்கள் நியமிக்கப்படுவதென்பது மிக அரிதாகவே நடைபெறும் நிகழ்ச்சியாக இருந்தது. அதே போல இந்துஸ்தான முஸ்லிம்களும் நம்பிக்கைக்குரிய பதவியில் அமர்த்தப்படுவது என்பது அரிதாகவே இருந்தது. இந்த வகையில் பல வட இந்திய மன்னர்களும் தென்னிந்திய அரசர்களும் ஆஃப்கானியர்களைவிடச் சற்று விவேகமாகவே நடந்துகொண்டுள்ளனர் என்பதை அறிகிறோம். எங்கெல்லாம் அவர்கள் அவ்விதம் நடந்துகொண்டார்களோ அங்கெல்லாம் அவர்களது ஆட்சியானது நீண்ட காலம் நீடித்தது.

## சமயப் பொறை என்னும் புதியதோர் மதக்கொள்கை

இந்துக் குடிமக்களிடம் சமாதான மனப்பான்மையுடன் நடந்துகொள்ள வேண்டுமென்று முஸ்லிம் மன்னர்கள் கொண்டிருந்த விருப்பத்தைப் புதியதொரு மதக்கொள்கையைக் கடைப்பிடிப்பதன்மூலம் அவர்கள் வெளிப்படுத்தினர். இந்துக்களைச் சமாதானப்படுத்த அவர்கள் கையாண்ட வழிகளுள் இது மற்றென்றாகும். இந்தியாவை முஸ்லிம்கள் ஆட்சி புரிந்த

வரலாற்றில் முதன்முதலாக இப்போதுதான் குரானின் கட்டளை களுக்கு விரோதமாகச் சமயப் பொறைக் கொள்கையானது புகுத்தப்பட்டது. அவர்களின் ஆட்சிக் காலம் முழுவதிலும் எல்லா இராஜ்யங்களிலும் சமயப் பொறைக் கொள்கையானது கடைப் பிடிக்கப்படவில்லையென்றாலும், ஒருசில தாராள குணம் படைத்த முற்போக்குவாதிகளான மன்னர்களால் அது இங்குமங்கும் இப்போதும் அப்போதுமாகக் கடைப்பிடிக்கப்பட்டுவந்தது. அது ஒன்றே புதிய ஒரு சகாப்தம் உதித்துவிட்டதென்பதை நிச்சயமாக எடுத்துக்காட்டியது. ஆட்சி புரியும் சமுதாயம் ஒன்றினுடைய நன்மையை மட்டுமே கருத்திற் கொள்ளாது எல்லாச் சமுதாயங் களின் நலனையும் மன்னர்கள் கருதுகின்ற காலம் தோன்றியது. இடைக்கால இந்திய வரலாற்றில் முதன்முதலாக முஸ்லிம்களும் இந்துக்களும் வாழ்கின்ற ஒரு நாட்டில் சமயத் துறையில் சகிப்புத் தன்மைக் கொள்கையைக் கடைப்பிடிக்காவிட்டால் அது இறுதி யில் மக்களுடைய நன்மைக்கே கேடு சூழ்ந்துவிடும் என்ற உண்மை யானது தக்க சான்றுகளுடன் வெளிப்படுத்தப்பட்டதும் இக் காலத்தில்தானாகும்.

காஷ்மீரில் ஜய்னுல் ஆபிதின் (Zainul Abidin) என்ற மன்னர் முதன்முதலாக இக் கொள்கையைக் கைக்கொண்டு நடந்தார். 'நாட்டுக்கு வெளியே துரத்தப்பட்ட பிராமணர்களை யெல்லாம் அவர் திரும்ப அழைத்துக்கொண்டார். எல்லாச் சமயங்களுக்கும் பொதுவாக சமவுரிமையைத் தாம் வழங்கியிருப்பதாக அவர் வெளிப்படையாக அறிவித்தார். இடிக்கப்பட்ட கோயில்கள் மீண்டும் கட்டப்பெறுவதற்கு அவர் இசைவு தந்தார். ஒவ்வொரு தனிமனிதரும் அவரவர் எந்தெந்தச் சமயத்தைக் கற்று வளர்ந் தனரோ அந்தந்த மதத்துக்குரிய கடவுளரை வழிபடும் உரிமை யைப் பெற்றனர்.'[18] பல காரியங்களில் அவர் அக்பரது முன் னோடியாய்த் திகழ்ந்தார். முஸ்லிம்களல்லாதார்மீது விதிக்கப் பெற்ற ஜஸியா அல்லது தலைவரியை அவர் ரத்து செய்தார். 'உயிர்க்கொலை புரிவதில் அக்பர் காட்டிய வெறுப்பு இவர்பாலும் காணப்பட்டது. வேட்டையாடுவதை அவர் நிறுத்தினார். ரம்ஸான் மாதத்தில் புலால் உண்பதை அவர் அறவே நிறுத்திக் கொண்டார்.'[19] மாள்வாவை ஆண்ட மகமது கில்ஜி என்பார் 'வீரம் நிறைந்தவர்; மரியாதை தெரிந்தவர்; படித்தவர்; நியாயமானவர். அவரது ஆட்சியின்கண் இந்துக்களும் முகமதி யர்களும் ஒருவர்க்கொருவர் நட்போடு கலந்து பழகிக்கொண்டு

[18] Ferista, Vol. IV, p. 469.

[19] C. H. I., Vol. III, p. 282.

மகிழ்ச்சியுடன் வாழ்ந்தனர்'[20] என்று கூறப்படுகிறது. குஜராத் நாட்டை ஆள்வதற்கென டில்லி அரசாங்கத்தால் நியமிக்கப்பட்ட ஃபர்குத்-உல்-முல்க் (Furhut-ul-Mulk) என்பார், 'தமது நாட்டில் சுயேச்சையாக ஆள விருப்பங் கொண்டவராய், அவ் விருப்பத்தை நிறைவேற்றிக்கொள்வதில் மக்களின் ஆதரவைப் பெறுவான் வேண்டி......இந்து சமயத்துக்கு அவர் ஊக்கமளித்தார். அப்படிச் செய்ததன்மூலம் அவர் சிலைவணக்கத்தை ஒழிப்பதற்குப் பதிலாக அது மேலும் வளர்ச்சியடைவதற்கே வழி வகுத்தார்'[21] என்று கூறப்படுகிறது. பீஜப்பூரை ஆண்டுவந்த யூசுஃப் அதில் ஷா (Yusuf Adil Shah) என்பார் ஷீயா மதத்தைத் தழுவியவராயிருந்த போதிலும், 'ஒவ்வொரு மனிதரும் அவரவர்க்குகந்த கொள்கைகளை அவரவர் விருப்பப்படி தங்குதடையின்றிக் கடைப்பிடிப்பதற்கான உரிமையை வழங்கினுர்—எமது மதம் எமக்கு, உமது மதம் உமக்கு என்ற கொள்கையை அவர் கைக்கொண்டு ஒழுகினுர். அதனுல் காலப்போக்கில் எல்லா மக்களுக்கும் பொதுவான மனநிறைவு ஏற்பட்டது.'[22] பல்வேறு நாடுகளைச் சேர்ந்தவர்களும் பல்வேறு சமயத்தைச் சார்த்தவர்களுமான ஏராளமான மனைவியரைக் கொண்டிருந்த ஃபிரோஸ் ஷா பஹ்மினி (Firoz Shah Bahmani) என்பார் 'எல்லாச் சமயக் கொள்கைகளையும் சமமாக மதித்து நடந்துகொண்டார்.'[23] தனிப்பட்ட மன்னர்களேயன்றி 'வங்காளத்தை ஆண்ட முஸ்லிம் மன்னர்கள் அனைவருமே பொதுவாக இந்துக் குடிமக்களிடம் சமயப் பொறையுடன் நடந்து கொண்டனர்'.[24] இங்ஙனம் ஏறக்குறைய இந்தியா முழுவதிலுமே முஸ்லிம் மன்னர்களின் மனப்போக்கில் ஓர் மாற்றம் தென்பட்டது. இந்துக்களிடம் அவர்கள் நடந்துகொண்ட முறையில் பொதுவாக ஒரு மாறுதல் காணப்பட்டது. அது நல்ல எதிர்காலத்துக்கோர் அறிகுறியாகத் திகழ்ந்தது. ஆனுல், பெரும்பான்மையான முஸ்லிம் அரசர்கள் குறுகிய வைதிகக் கொள்கைகளால் உந்தப்பட்டவர்களாய் இந்துக்களைத் துன்புறுத்துபவர்களாகவே இருந்தனர் என்பதும் ஈண்டு நினைவிற் பதிக்கற்பாலது. எனினும், சமயப் பொறையை வழங்குவதற்கு ஆங்காங்கே முயற்சிகள் நடைபெற்றதென்பதொன்றே, ஆட்சிக் கலையில் புதியதோர் குறிக்கோள் ஏற்கெனவே தோன்றிவிட்டதென்பதற்கும், நாடெங்கும் அது கடைப்பிடிக்கப்படுவதென்பது வெகு தொலைவிலில்லையென்பதற்கும் ஓர் அறிகுறியாக விளங்கியது.

[20] Ferista, Vol, IV, p. 234.
[21] Ibid., p. 2.
[22] Ferista, Vol. III, p. 25.
[23] Ferista, Vol. II, p. 370.
[24] C.H.I., Vol. III, p. 267.

ஆஃப்கானியப் பிரபு ஒருவன் இந்து மதத்தைத் தழுவிய நிகழ்ச்சியைக்கூட நாம் இக் காலத்தே காண்கிறோம். சுல்தான் சிக்கந்தர் லோடியின் ஆட்சிக் காலத்தே, 'லக்னோவின் ஆளுநரான முபாரக் கான் லோடி என்பாரின் மைந்தரான அகமத் கான் என்பார் இந்து சமயக் கொள்கைகளைத் தழுவிக்கொண்டு மதம் மாற்றிக்கொண்டார்'[25] எனக் கேள்விப்படுகின்றோம். அகமத் கான் லோடி, ஜய்னுல் அபிதின் ஆகிய இருவரது கூற்றுகளையும் ஒருங்கு சேர்த்துப் பார்ப்போமானால், முஸ்லிம்களின் மனப் போக்கில், அதாவது, இந்துக்களை எப்படி நடத்த வேண்டும் என்று அவர்கள் கொண்டிருந்த கருத்தில் எவ்வாறு புதியதோர் திருப்பம் ஏற்பட்டிருந்ததென்பதை நாம் ஒருவாறு அறியலாம்.

## பாமர மக்களுக்குகந்த இலக்கியம் தோன்றல்

முஸ்லிம் மன்னர்கள் சுதேச மொழிகளுக்கும் இலக்கியத் துக்கும் ஆதரவும் ஊக்கமும் அளித்ததன்மூலமாக அவர்களது இந்தத் தாராள மனப்பான்மையானது இன்னும் சிறப்பான முறையில் வெளிப்பட்டது. இதன்மூலம் மக்களுக்கு இரு வகையில் நன்மை ஏற்பட்டது. முஸ்லிம் மன்னர்களும் இந்துக் குடிமக் களும் பரஸ்பரம் ஒருவரை ஒருவர் புரிந்துகொள்வதற்கு இது உதவி செய்தது. இதனால் இந்துக் குடிமக்கள் முஸ்லிம் மன்னர் களிடம் விசுவாசத்துடன் நடந்துகொள்ள ஓர் வசதி ஏற்பட்டது. மேலும், பாமர மக்களுக்குகந்த இலக்கியங்கள் வளர்வதற்கேற்ற சாதனங்களை அது வகுத்து அளித்தது. அத்தகைய இலக்கி யங்கள் சமய சம்பந்தமான சம்ஸ்கிருத இலக்கியங்களினின்றும் பெரிதும் வேறுபட்டிருந்தன. சான்றாக, ஜய்னுல் அபிதின் என்பார் '''மகாபாரதம்', 'ராஜதரங்கிணி' ஆகிய இருபெரு நூல் களையும் பாரசீக மொழியில் மொழிபெயர்க்கச் செய்தார். அதே போன்று பல அராபிய, பாரசீக நூல்களையும் அவர் ஹிந்தி மொழியிலே மொழிபெயர்க்கச் செய்தார்.''[26] இது யாவராலும் அறியப்பட்டதோர் உண்மையாகும். வங்காளத்தில் ஆண்டு வந்த நுஸ்ரத் ஷா என்பார், சம்ஸ்கிருதத்தில் இருந்த மகாபார தத்தை வங்காள மொழியில் மொழிபெயர்க்குமாறு புலவர் களைப் பணித்தார். ஹுசேன் ஷாவின் தளபதியான பரகல் கான் (Paragal Khan) போன்ற அதிபர்கள் வங்காள மொழிக்குக் கொடுத்த ஊக்கத்தையும் ஆக்கத்தையும் கண்ட இந்து அரசர் களே, தாங்கள் பெரிதும் வளர்க்க விரும்பிய சம்ஸ்கிருதத்தை விட்டு, மக்கள் மொழியான வங்காளிக்கு முதன்மை தர முன்

[25] Ferista, Vol. I, p. 582.
[26] Ibid., p. 282.

வந்தனர்.[27] இந்து அரசர்களின் சபைகளில் சம்ஸ்கிருதத்துக்குப் பதிலாக மக்கள் மொழிகள் வளர்க்கப்படலாயின. பீஜப்பூரில் ஆண்டுவந்த இப்ராஹிம் அடில் ஷா எனும் அரசர், பாரசீக மொழிக்குப் பதிலாகக் கன்னடத்தையும் மராத்தியையும் ஆட்சி மொழிகளாக ஆக்கினர்.[28] குஜராத்தை ஆண்டுவந்தவரும், மிக்க மதவெறி பிடித்தவருமான பகதூர் ஷா என்பார்கூட, ஓர் உருக்கமான சமயத்தில், இன்னோர் அரசரான பர்ஹான் நைஜாம் ஷா என்பவரோடு உரையாடிக்கொண்டிருந்தபோது குஜராத்தி மொழியையே பயன்படுத்தினரென அறிகின்றோம்.[29]

## முஸ்லிம் மன்னர்கள் இந்து இளவரசிகளை மணம் புரிந்துகொளல்

இக் காலத்தே எங்கும் ஓங்கி நின்ற ஓர் புதிய மனப்பான்மைக்கேற்பப் பல முஸ்லிம் மன்னர்கள், அரசியல் காரணங்களுக்காக இந்து இளவரசிகளைத் திருமணம் புரிந்துகொள்வதைப் பார்க்கின்றோம். அக்பரும் ஏனைய பெருமை மிகு முகலாயர்களும் பின்னல் கடைப்பிடித்த ஓர் கொள்கையை, அவர்கள் முன் கூட்டியே உணர்ந்து கடைப்பிடித்தனர் என்று கூறலாம். அத்தகைய திருமண ஒப்பந்தங்கள், வட இந்தியாவைவிடத் தென்னிந்தியாவில்தான் அதிகமாக நடைபெற்றன. இந்துக்களைச் சாந்தப்படுத்த வேண்டுமென்ற மனப்பான்மையானது வட இந்திய மன்னர்களைவிடத் தென்னிந்திய மன்னர்களிடம் மிகவும் தீவிரமாகக் காணப்பட்டது ஒருவேளை அதற்குக் காரணமாயிருக்கலாம். குஜராத்தை ஆண்டுவந்த மகமது ஷா (Muhammed Shah) என்பார் கி.பி. 1449-ல் இடுர் (Idur) நாட்டு இராஜபுத்திர இளவல் ஒருவரின் மகளைத் தம் மனைவியாக வரித்துக்கொண்டு, அப் பகுதியில் அவர் அநுபவித்துக்கொண்டுவந்த பண்டைய உரிமைகளையெல்லாம் அவரிடமே மீண்டும் ஒப்படைத்தார்.[30] யூசுஃப் அடில் ஷா (Yusuf Adil Shah) என்பார் பீஜப்பூரில் தமது சுயேச்சையை ஏற்படுத்திக்கொண்டபோது, மராத்தியத் தலைவரான முகுந்த ராவோடும் அவரது சகோதரரோடும் அவர் கைகலக்க நேர்ந்தது. அவர்கள் இருவரையும் அவர் வென்ற பின்னர், அவர்

[27] D. C. Sen, 'History of the Bengali Language and Literature' (1911 Ed.) pp. 12, 14, 170, 184, 201 and 203.

[28] C. H. I., Vol. III, p. 439.

[29] Ferista, Vol. III, p. 224.

[30] Ferista, Vol. IV, p. 35.

களின் சகோதரியை அடில் ஷா மணந்துகொண்டு, அவர்களின் முழு ஆதரவையும் அதன் மூலம் பெற்ருர்.[31] ஃபிரோஸ் ஷா பஹ்மினி (Firoz Shah Bahmani) எனும் அரசர், விஜய நகர மன்னரான தேவராயரின் மகளை மணந்துகொண்டார். அதன் மூலம் அவர் இருதரப்பாருக்கும் இருந்துவந்த பகைமையை ஒழிக்க எண்ணினர். ஆனல், அதனல் ஏற்பட்ட நற்பலன் ஒன்று மில்லை.[32] இதைப்போன்ற சான்றுகளின் எண்ணிக்கையைப் பெருக்கிக்கொண்டே போவதை விடுத்து, இதுகாறும் நாம் கூறியவற்ருன், இக் காலத்தே இந்துக்கள் முஸ்லிம்கள் ஆகிய இரு வகுப்பாரிடையே இருந்துவந்த தொடர்பில் ஓர் புதிய திருப்பம் ஏற்பட்டுவிட்டதென்பது நன்கு பெறப்படுகின்றதென் பதை ஈண்டு வலியுறுத்தலாம். ஒருவர்க்கொருவர் விட்டுக் கொடுக்கும் மனப்பான்மையானது இவ்விரு வகுப்பாரிடையே இக் காலத்தே வளர ஆரம்பித்தது. அதனல்தான் இக் காலத் துக்கு முற்பட்ட காலத்தே நன்கு அமைக்கப்பட்ட இந்தோ-இஸ்லாமியக் கட்டடத்தின் அடிப்படையானது இக் காலத்தே நன்கு திண்மையாக்கப்பட்டது.

## வட்டார நாடுகளும் டில்லிப் பேரரசும்

இந்தக் காலப்பகுதியில் நாம் இருவேறுபட்ட நாடுகளின் தொகுதியைக் காண்கின்றோம். சௌகரியத்தை முன்னிட்டு அவற்றை டில்லிப் பேரரசு நாடுகள் என்றும், உள்ளூர் அல்லது வட்டார நாடுகள் என்றும் பிரிக்கலாம். முன்னல் கூறப்பட்ட நாடுகள் அளவிலும் ஆற்றலிலும் வேறுபட்டனவாய், வெறும் பெயரளவில் தலைமை பூண்டொழுகிய சயத்துகள் (Sayyids), நிலமானிய முறையில் தலைமை பூண்டொழுகிய லோடிகள், அதிகாரச் செறிவுபடைத்த சூர்கள் ஆகியோரின் ஆட்சியின்கீழ் இருந்துவந்தன. பின்னல் கூறப்பட்ட நாடுகளை இந்துக்கள், முஸ்லிம்கள் ஆகிய இருவகை மன்னர்கள் நாட்டின் பல்வேறு பகுதிகளில் ஆண்டுவந்தனர். உள்ளூர் வட்டாரங் களில் நிலவிய முடியரசுகளில், பொதுவாக இந்துக்களும் முஸ்லிம் களும் ஆட்சி நிறுவனத்தில் கலந்துகொண்டு வேலை பார்த்து வந்தனர். இந்து-முஸ்லிம் ஒத்துழைப்பு அவற்றின் சிறப்பியல் பாகத் திகழ்ந்தது. டில்லிப் பேரரசு நாடுகளில் கூடியவரை இந்துக்கள் முற்றிலும் விலக்கப்பட்டு, முஸ்லிம்கள் மட்டுமே பெரிதும் ஆட்சியின் எல்லாத் துறைகளிலும் அமர்த்தப்பட்டனர். முன்னையவற்றில் முற்றிலும் ஓர் சுதேச மனப்பான்மை தென்

[31] Ferista, Vol. III, p. 31.

[32] Ferista, Vol. II, pp. 385-87.

பட்டது. பின்னையவற்றில் முழுவதிலும் அந்நிய மனப் பான்மையே மேலோங்கி நின்றது. இவ்விரு நிலத்தொகுதிகளுள் முந்தியது பிந்தியதைக் காட்டிலும் நிலையானதாயிருந்தது. ஏனெனில், அது இந்துக்களின் ஒத்துழைப்பு, சமயப் பொறை என்ற தாராளக் கொள்கை ஆகியவற்றின் அடிப்படையின்மீது நன்கு அமைக்கப்பட்டிருந்தது.

இஃது எப்படியிருந்தபோதிலும், அரசாங்க அமைப்பு முறையின் அடிப்படையிலோ அல்லது அரசின் நிறுவன முறையின் அடிப்படையிலோ பார்க்கும்போது, மேற்சொன்ன இருவகை நாடுகளும் ஒரே இந்தோ - இஸ்லாமிய அரசியலமைப்பு ஒழுங்கு முறையின் இரு கூறுபாடுகளாக அல்லது மாதிரிச் சான்றுக ளாகவே விளங்கின! அவற்றுள் ஒரு வகையான நாடுகளில் இந்துஸ் தானி முஸ்லிம்கள் (இந்தியர்கள்) ஆண்டுவந்தனர். இந்துக்கள், முஸ்லிம்கள் ஆகிய இரு வகுப்பாரின் ஒத்துழைப்பையும் அவர்கள் பெற்றுக்கொண்டனர். தாராள நோக்குடன் அவர்களை நடத்தி னர். எனவே, அங்கு ஓர் சுதேச ஆட்சி நடப்பதுபோல் காணப் பட்டது. இன்னும் வேறு சில நாடுகளில் நாட்டுக்கே புதியவர் களான சூர்கள், லோடிகள் போன்ற ஆஃப்கானியர்கள் ஆண்டு வந்தனர். அவர்கள் தமது ஆளுகைக்குட்பட்ட இந்துக்களின்மீது நம்பிக்கையில்லாத காரணத்தினால், தமது உறவினர்களையே வைத்துக்கொண்டு ஆட்சியை நடத்தினர். எனவே, அங்கு ஓர் அந்நிய ஆட்சி நடப்பதுபோல் காணப்பட்டது. இக் காரணங்களைக்கொண்டு இவ்விருவகை நாடுகளும் இந்தோ - இஸ்லாமிய அரசியலமைப்பு ஒழுங்குமுறையின் வெவ்வேறு கூறு பாடுகளாகுமென நாம் கருதிவிடக்கூடாது; அல்லது ஒன்று மற்றொன்றைக் காட்டிலும் இந்தோ - இஸ்லாமிய அரசிய லமைப்பை அதிகமாகப் பிரதிபலித்தது என்றும் நாம் கருதுவதற் கில்லை. ஏனெனில், நிறுவன அமைப்பைப் பொறுத்தவரையில், இவ்விருவகை நாட்டுத் தொகுதிகளும் ஒன்றையொன்று ஒத்திருந் தன. அவைகளின் அரசாங்க நிறுவனங்களும் ஒரே முறை யிலேயே அமைக்கப்பட்டிருந்தன. அவற்றின் கருப்பொருள்கள் அநேகமாய் ஒன்றாகவே இருந்தன. இந்தியாவில் பழங்காலத்தி லிருந்து தொன்றுதொட்டு நிலவிவந்துள்ள மரபுகளிலிருந்தும், அரசியல் நிறுவனங்களிலிருந்தும் நிறைய அவை கடன் வாங்கிக் கொண்டன. தென்னிந்தியாவிலிருந்த பஹ்மினிப் பேரரசா யிருப்பினும் அல்லது வட இந்தியாவில் ஆண்டுவந்த ஷேர் ஷா சூரின் பேரரசாய் இருப்பினும், அவை இரண்டிலுமே ஓர் ஒற்றுமை அல்லது இந்து - முஸ்லிம் குறிக்கோள்களின் இணைப்புக் காணப்படுகிறது. அவ்வித இணைப்பில் இந்துக்களுக்கே உரிய சில சிறப்பியல்புகள் நன்கு பின்னப்பட்டுள்ளன. அந்நியர்களால்

நிறுவப்பட்ட அரசாங்க அமைப்பில் இந்தியப் பண்புகள் புகுத்தப் பட்டன. உண்மையில் டில்லியில் அமைக்கப்பட்ட ஆஃப்கானிய அரசில், அதிலும் சிறப்பாக ஷெர்ஷா, இஸ்லாம் ஷா ஆகியோரின் கீழ் அமைந்திருந்த அரசில் அந்நியப் பண்புகள் யாவும் முற்றிலும் மாற்றியமைக்கப்பட்டன. அதன் விளைவாக அவை உள்ளூர் வட்டார நாடுகளின் அரசாங்க அமைப்புகளை ஒத்து விளங்க ஆரம்பித்ததோடு, பல வகைகளில், அவைகளைவிட ஒருபடி மேம்பட்டவைகளாக விளங்கலாயின. இந்திய மரபுகளில் அப்படியே முழுக்கமுழுக்கத் தோய்த்தெடுக்கப்பட்டதாய், இந்து-முஸ்லிம் நிறுவனங்களில் காணப்பட்ட எல்லா நற்பண்புகளும் ஒருங்கே திறம்பெற்ற முறையில் உட்கொள்ளப்பட்டதாய், தக்க முறையில் வகுக்கப்பட்ட ஓர் ஆட்சித்துறை அமைப்பாய் விளங்கிய காரணத்தால் இக்கால இந்தோ-இஸ்லாமிய அரசியலமைப்பு ஒழுங்கு முறைக்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாய் அதைக் கொள்ளுதல் பெரிதும் பொருத்தமானதேயாகும். இத்தகைய தோர் விளைவை, அல்லது கலாசார இணைப்பை உண்டாக்குவதில் ஷெர்ஷா, இஸ்லாம் ஷா ஆகிய இரு மேதைகளும் பெரும் பங்கு கொண்டனர். அவர்களின் அரிய முயற்சிகளால் மட்டுமே அத்தகைய இணைப்பு சாத்தியமாயிற்று எனலாம். அவர்கள் இருவரின் ,ஆட்சிக் காலத்திலும் அக்பர் காலத்தில் போன்று 'ஜஸியா வரி அகற்றப்படவில்லை எனினும், பசுவதையைத் தடுக்கச் சட்டமேற்படவில்லை யெனினும், கலாசாரத் துறையில் ஈரினங்களிடையே ஓர் ஒற்றுமையையும் அறிவு சார்ந்த அனுதாபத்தையும் உண்டாக்க வேண்டி சம்ஸ்கிருத இலக்கிய மானது நன்கு வளர்க்கப்படவில்லை எனினும், கலப்புத் திருமணங்கள் ஆதரிக்கப்படவில்லை எனினும்,' இந்து - முஸ்லிம் அரசியற் குறிக்கோள்களும் நிறுவனங்களும் அவர்களால் ஆக்கப்பட்ட அரசியலமைப்பில் நன்கு இணைந்து காணப்பட்டன. அக் காரணத்தால், வலிமைபெற்ற ஆஃப்கானியப் பேரரசை அமைத்தவர்கள் என்று மதிக்கப்படத்தக்கவர்களல்லரெனினும், இக் கால இந்தோ-இஸ்லாமிய அரசியலமைப்பு ஒழுங்குமுறையி லேயே மிகவும் முன்னேற்றம் வாய்ந்த ஓர் அரசியலமைப்பை ஏற்படுத்தியவர்கள் என்ற பெருமை அவர்களையே சாரும்.

## இந்தோ-இஸ்லாமிய அரசியலமைப்பு ஒழுங்கு முறையின் அரசியற் குறிக்கோள்

இவ்விருவகை நாடுகளின் அரசாங்க அமைப்பைப்பற்றிப் படிக்கப் புகுமுன், அவர்களது ஆட்சிமுறை அமைப்புக்கு அடிப் படையாய் விளங்கிய அரசியற் குறிக்கோள்களை ஆராய்வது மிக

இன்றியமையாதது. இதற்கு முன்னைய காலத்தே, டில்லியில் ஆண்ட முஸ்லிம் மன்னர்கள், ஒருசில விதிவிலக்குகளைத் தவிர, எல்லாருமே சட்டத்தையும் சமயத்தையும் காத்துவந்த சமய அறிஞர்களுக்குக் கட்டுப்பட்டு அவர்களது ஏவலின்படி நடக்கும் அடிமைகளாகவே இருந்துவந்தனர் என்பதை நாம் ஏற்கென வேயே பார்த்துள்ளோம். அலாவுதீன், மகமதுபின் துக்ளக் ஆகிய இரு சுல்தான்களைத் தவிர, வேறெந்த சுல்தானுமே, அரசினைப் பொறுத்த காரியங்களில் குரானின் கட்டளைகளுக்கும் உலேமாக்களின் ஆணைகளுக்கும் முரணாகப் போவதற்குரிய துணி வினைப் பெறவில்லை. டில்லியை ஆண்ட சுல்தான்கள், தாங்கள் பட்டத்துக்கு வருகின்ற உரிமையைப் பெறுதற்குங்கூடச் சமயச் சட்டத்தின் சம்மதத்தைப் பெறவேண்டியிருந்தது. சமயத்தோடு மோதிக்கொள்ளாமல், இஸ்லாமை வளர்ப்பதற்குத் துணைபுரிந்த அளவுக்கு மட்டுமே அரசனின் ஆதிக்கமானது செல்லுபடி யாயிற்றேயன்றி வேறன்று.

## யூசுஃப் அடில்ஷா ஒரு புதிய அரசாங்க மதத்தை அறிவித்தல்

இதன் விளைவாக மதத்துக்கு அரசும், மத அறிஞர்களுக்குச் சுல்தானும் அடிமையாக இருக்க நேர்ந்தது. ஆனால், இக் காலத்தே இத்தகைய நிலைமையானது அடிக்கடி உதறித் தள்ளப் பட்டது. டில்லி சுல்தான்களைவிட அதிகாரத்தில் மிகமிகக் குறைந்த முஸ்லிம் மன்னர்களில்கூட குரானியக் கட்டளைகளுக்கும் உலேமாக்களின் ஆணைகளுக்கும் நேர்விரோதமான கொள்கை யைக் கடைப்பிடிக்கத் துணிந்தவர்கள் ஓரிருவர்மட்டுமல்லர்; ஏராளமான பேர் அங்ஙனம் செய்ய முன்வந்தனர் என்பதைக் காண்கிறோம். சான்றாக, உள்ளூர் வட்டார நாடுகளில் ஆண்டு வந்த மன்னர்கள் எங்ஙனம் இந்துக்களை சிவில் அரசாங்கத் துறையில் நியமித்தும், மத சம்பந்தமான காரியங்களில் சமயப் பொறையைக் கடைப்பிடித்தும், தத்தம் நாட்டு மொழிகளை ஆட்சி மொழிகளாக்கியும், நேர்முகமாகவோ அன்றி மறைமுக மாகவோ மக்களுக்குகந்த இலக்கியங்கள் தோன்றுதற்கு உதவி செய்தும் தாராள மனப்பான்மையுடன் நடந்துகொண்டனர் என் பதையும், அதன்மூலம் இஸ்லாமிய அரசின் மரபுகளை எங்ஙனம் புறக்கணித்தனர் என்பதையும் நாம் ஏற்கெனவே கண்டோம். அவர்களில் ஒருசிலர் இன்னும் தீவிரமாகச் சென்றனர். ஏற்கெனவே இருந்துவந்த ஒரு மதத்துக்குப் பதிலாக இன்னொரு புதிய அரசாங்க மதத்தைத் தோற்றுவிக்கவும் சிலர் முன் வந்தனர். சான்றாக, அடில் ஷா என்பார், தாம் சுன்னி சமயத்தி

லிருந்து ஷியா சமயத்துக்குத் தம்மை மாற்றிக்கொண்டதோடு அமையாது ஷியா மதத்தையே அதிகாரபூர்வமான அரசாங்க மதமென நாடெங்கும் பறைசாற்றினர். அதன்பின் அவர் நடந்துகொண்ட விதத்தைப் பார்க்கும்போது எங்ஙனம் சமயத் துறையில் ஒரு புதிய மனப்பான்மையானது தோன்றிவிட்டது என்பது தெற்றெனத் தெரிகிறது. முஸ்லிம் மன்னர்கள், உலமாக்கள், சமய விற்பன்னர்கள் ஆகியோரிடம் நடந்துகொண்ட வகையில் ஒரு புதிய திருப்பம் ஏற்பட்டுவிட்டதை அவை நன்கு எடுத்துக் காட்டின. ஷியா சமயத்தைச் சேர்ந்த கல்விமான்கள் அடங்கிய ஒரு சபையைக் கூட்டி அவர்களைப் பார்த்து அவர் 'நபிகள் நாயகம் தமது கனவில் ஒரு சமயம் தோன்றியதாயும், தோன்றித் தாம் பெறப்போகும் புதிய கௌரவத்துக்குரிய அறிகுறிகளைக் காட்டி வாழ்த்தியதாயும், அக் கனவு பலிக்க வேண்டுமானல் இமாம்களின் சமயம் ஒன்றைத் தோற்றுவித்தல் அவசியம் என்றும் கூறிக் கண்டிப்பாய் அங்ஙனம் செய்யப்போவதாக ஒரு சபதமும் எடுத்துக்கொண்டார்......'[33] நபிகள் நாயகத்தோடு தாம் ஆன்மீகத் தொடர்புகொண்டுள்ள தாயும், நபிகளின் விருப்பத்தைப் பூர்த்தி செய்வதற்காகவே ஷியா மதத்தைத் தாம் தோற்றுவித்ததாகவும் அரசர் ஈண்டு உரிமை கொண்டாடுகிறர். எனவே, அவர் எல்லாச் சமயங்களுக்கும் சம உரிமையை வழங்கினர். 'ஷாகிபாவுக்கெதிராக அவதூருகவோ பழிப்புரையாகவோ அடைமொழிகளை' எவரும் பயன்படுத்துதல் கூடாதென அவர் எல்லா மக்களையும் தடுத்தார். 'ஜாஃபுர் (Jafur) என்பாரின் கற்றறிந்த சீடர்களும், மகமது ஹனீப் என்பாரின் கோட்பாடுகளை நன்கு கற்றுத் தெளிந்தவர்களும், ஷாஃபியெ (Shafye) சமயப் பிரிவைப் பின்பற்றுபவர்களும் ஒருங்கே நட்புடன் வாழ்ந்தனர்'[34]

இதேபோன்று பர்ஹான் நைஜாம் ஷா என்பார் 'குத்பாவிலிருந்து ஷாஹிபாவின் பெயர்களை நீக்கி, அவைகளுக்குப் பதிலாக இமாம்களின் பெயர்களைப் புகுத்தினர்'.[35] இந்த ஷியா மன்னர்கள் அனைவருமே, ஒரு விதிவிலக்குமின்றி, தாராள மனப்போக்கையும் கொள்கைகளையும், தங்களது ஆட்சி முறையில் கடைப்பிடித்தனர். அவர்கள் இஸ்லாமின் கட்டளைகளுக்கு விரோதமாக, இந்துக்களைப் பல

[33] Ferista, Vol. III, p. 22

[34] Ibid., p. 24

[35] Ferista, Vol. III, p. 228. முதல் மூன்று கலீபாக்களான அபுபெக்கர் (Abu Bakr), உமார் (Umar), உஸ்மான் (Usman) ஆகியவர்களே ஷாஹிபா எனப்பட்டனர்.

அரசாங்கப் பணிகளில் நியமித்தனர்; இந்துப் பேரரசான விஜய நகரோடு அவர்கள் அடிக்கடி கூட்டுச் சேர்ந்தனர். காஷ்மீரில் ஆண்டுவந்த ஜய்னுல் ஆபீதின் (Zain-ul-Abidin) என்பாரின் மனப்பான்மையைப்பற்றி நாம் ஏற்கெனவே குறிப்பிட்டுள் ளோம். இங்ஙனம் தூய இஸ்லாமிய, அரசியலமைப்பு ஒழுங்கு முறைக்கு முற்றிலும் முரணான வகையில் பல முஸ்லிம் மன்னர் கள், இருக்கின்ற மதத்தை மாற்றி அதற்குப் பதில் இன்னொரு புதிய சமயத்தைப் புகுத்தல் போன்ற செயல்களில் ஈடுபட்டார் கள் என்பதை நாம் பார்க்கின்றோம். அதிலிருந்து புதியதோர் குறிக்கோள் ஒன்று அரசியல் துறையில் உதயமாகிவிட்டதென் பதை நாம் அறிய முடிகிறது. அதாவது அரசாங்க அதிகாரத் தைப்பற்றிய எண்ணத்தின் போக்கில் ஓர் மாற்றம் ஏற்பட்டு விட்டதென்பதை நாம் அறிகிறோம். சமய விற்பன்னர்களின் ஆதிக்கத்துக்கு விரோதமாக மன்னர்கள் தத்தம் விருப்பத்தையே வலியுறுத்தும் வகையில் இம் மனப்பான்மையானது வெளிப் பட்டது.

## ஷெர்ஷாவும் இஸ்லாம் ஷாவும் இந்திய மரபுகளுக்கொத்த அரசுரிமைக் குறிக்கோள்களைக் கடைப்பிடித்தல்

ஆப்கானிய அரசு இத் துறையில் குறிப்பிடத்தக்கதொரு மாற்றத்தைச் செய்ததெனலாம். சிவில் அரசாங்கத்தில் இந்துக் கள் உயர் பதவிகளில் மிக அரிதாகவே நியமிக்கப்பட்டனர் என்றாலும், சமயப் பொறைக் கொள்கையானது யாவருமறிய பறைசாற்றப்படவில்லை யென்றாலும், அரசரது தூண்டுதலின் பேரில் சமய மாற்றங்கள் எதுவும் ஏற்படுத்தப்படவில்லை என்றாலும், வேறொரு வகையில் அவ்வரசு இந்து மரபுகளுக்கேற்ற முறையில் மாபெரும் மாற்றமொன்றைச் செய்தது. ஷெர்ஷா, இஸ்லாம் ஷா ஆகிய இருவரின் காலத்தே ஆப்கானிய அரசு, நன்கு திறம்பெற்ற முறையில் அமையப்பெற்றதோர் ஆட்சித் துறை நிறுவனத்தின்மூலம் பல்வேறு துறைகளிலும் அதிகாரம் செலுத்தப்படக்கூடியதோர் பெருந்தகைமை தனக்கிருப்பதாக உரிமை கொண்டாடியது. மையத்திலே அதிகாரச் செறிவை ஏற்படுத்தியதன்மூலம் அவர்கள் லோடிகள் காலத்தில் வழக் காற்றிலிருந்த ஆப்கானிய அரசாங்க முறையை மட்டுமன்றி, ஆப்கானிய அரசுரிமைக் குறிக்கோளையே மாற்றியமைக்க முயன்றனர். வருங்காலத்தே அரசாங்க அமைப்பு முறையில் புதிய கொள்கைகள் புகுத்தப்படப்போவதையும், அரசுரிமை பற்றிப் புதிய குறிக்கோள்கள் கடைப்பிடிக்கப்படப்போவதை யும் அவை முன்கூட்டியே அறிவித்தன. ஷெர்ஷாவின்

அரசாங்க நிறுவனமானது, நிலமானியப் பிரபுக்களிடையே அதிகாரம் பங்கிடப்படுகின்ற கொள்கைகளின் அடிப்படையில் அமைக்கப்படவில்லை. அதாவது அவரது அரசாங்கம் நிலமானிய முறையின் அடிப்படையில் அமைக்கப்படவில்லை. நிலமானிய முறையில், பெரும் பிரபுக்கள் தனிப்பட்ட படைகளை வைத்துக் கொண்டு குறுகிய குலப்பற்றின் பிடியிற் சிக்கியவர்களாய் ஒருவரோடொருவர் பொருதுவந்தனர். அதனால் மையத்தில் இருந்த அதிகாரத்துக்கே மதிப்பில்லாமற்போயிற்று. ஆனால், ஷெர்ஷாவின் காலத்தில் மையத்தில் அதிகாரச் செறிவு ஏற்பட்டது. அரசருடைய அதிகாரத்திற்கு எல்லா வகுப்பினரும் கண்டிப்பாகக் கீழ்ப்படியவேண்டுமென்பது வற்புறுத்தப்பட்டது. அரசாங்கத்தின் அதிகாரங்கள் யாவும் அரசரின் கைகளில் குவிக்கப் பெற்றன.

இங்ஙனம் செய்தபோது ஷெர்ஷா இந்தியாவில் வழக்காற்றில் இருந்துவந்த அரசாங்க மரபுகளையும் அரசுரிமைக் கொள்கையையும் பெரிதும் பயன்படுத்திக்கொண்டார். இதற்கோர் சான்றாக, நாம் அவர் காலத்தே இந்தியாவில் வழங்கிவந்த மரபுகளுக்கும், ஆப்கானியர்களின் குடியிருப்பு நாடாக இருந்த ரோ (Roh) பிரதேசத்தில் காணப்பட்ட பழக்க வழக்கங்களுக்கும் இடையே காணப்பட்ட வேறுபாட்டை எடுத்துக் காட்டலாம். ரோ பிரதேசத்தில் இருந்ததைப் போன்று இந்தியாவில் தனிப்பட்டவர்களுக்குச் சொத்துரிமை இல்லை என்பதை அவர் அறிந்திருந்தார். இந்திய மரபுகளின்படி அரசரால் அங்கீகரிக்கப்படாத வரையில் தனிப்பட்டவர்கள் சுயேச்சையாக இருக்கமுடியாததென்பதும் அவருக்குத் தெரியும். எல்லா நிலமும், சொத்தும், பட்டமும், பதவியும் அரசரிடம் இருந்தே பெறத்தக்கன என்பது இந்திய மரபாகும். அதை ஒட்டியே ஷெர்ஷா நடந்துகொண்டார். ஒரு சமயம் அவர் குறிப்பிட்டதாவது: 'இந்திய நாடு முழுவதும் அரசருக்கே சொந்தமானது. அதில் வேறு எவருக்குமே பங்கு இல்லை. அதை அவர் தம் பிரியம்போல் பயன்படுத்திக்கொள்ளலாம். அங்கே மூத்தவர், இளையவர், சுற்றத்தார் ஆகியோருக்கு எவ்விதமான சலுகையும் கிடையாது.'[86] இங்ஙனம் அவர் தனது மிக இளமைக் காலத்திலேயே இந்திய மரபுகளின் முக்கியத்துவத்தை நன்கு புரிந்துகொண்டிருந்தார். பிற்காலத்தே அதிகாரச் செறிவை அவர் திறம்பெற்ற முறையில் அமைக்க முடிந்ததென்றால் அதற்குக் காரணம் இளமையில் அவருக்கு இந்திய மரபுகளால் ஏற்பட்ட ஊக்கமே ஆகும். அவரது மைந்தரான இஸ்லாம்ஷா தன் தந்தையின் வழியை அடிபிறழாது பின்பற்றினர்,

[86] Elliot and Dowson, Vol. IV, p. 327.

'தமது அமீர்களிடமிருந்து அவர் எல்லாப் போர் யானைகளையும் பறிமுதல் செய்தார். ஏதோ ஓர் உதவாத பெட்டை யானையை மட்டுமே அவர் அவர்களிடம் சவாரிக்காக விட்டுவைத்தார்; நாட்டினுடைய வருமானங்கள் அனைத்தையும் அவர் தமக்கே உரிமையாக்கிக்கொண்டார். வருமானத்தைப் பலருக்கும் வகுத்து அளிக்கின்ற வழக்கத்தை அவர் கைக்கொள்ளவில்லை.'[37] ஆகவே, நாட்டில் இருந்த ஆப்கானியப் பிரபு வர்க்கத்திடையே ஷெர்ஷாவோ அல்லது இஸ்லாம் ஷாவோ, பிரைமஸ் இன்டர் பாரஸாக (primus-inter-pares) அதாவது சமமானவர்களிடையே முதல்வர்களாக இருக்கவில்லை. மன்னரே நாட்டின் ஒப்பற்ற தலைவராக விளங்கினர். இக் கொள்கையைக் கடைப்பிடிப்பதில் இஸ்லாம் ஷா தமது தந்தையையும் விஞ்சிவிட்டார். பிரபுக் களையும், பின்னும் எல்லா அதிகாரிகளையும் சதா பயப் படுத்தியே வைத்திருக்கவேண்டுமென்பது அவரது கொள்கையா யிருந்தது. அப்படி அவர்கள் அரசரின் அதிகாரத்தையும், பெருமைமிக்க இறைமையையும் கண்டு சதா அஞ்சி நடக்கவேண்டு மென்பதற்காகவும், தெய்விக உரிமையுடன் தாம் ஆட்சி புரிவ தாக மக்கள் மனத்தில் ஓர் எண்ணத்தை ஆழப் பதிவிப்பதற் காகவும், அவர் சடங்கு ஒன்றை ஏற்படுத்தி அதை யாவரும் முழுமனத்தோடு கடைப்பிடிக்கவேண்டுமென வற்புறுத்திவந்தார். இங்ஙனம் இஸ்லாம் ஷா, மக்களை ஆட்சி புரிய தமக்கு ஒரு தெய் விக உரிமை யிருப்பதாகவும், எல்லாம்வல்ல இறைமை தமக்கே சொந்தமென்றும் சலுகை கொண்டாடியதெல்லாம், பண்டைய இந்துக்கள் கடைப்பிடித்த அரசுரிமைக் குறிக்கோளினைப் பெரிதும் ஒத்திருந்தது. அவரது அரசுரிமைக் கொள்கைக்குச் சான்றாகப் பின்வரும் நிகழ்ச்சியினைக் குறிப்பிடலாம்: 'வெள்ளிக்கிழமை தோறும், ஐயாயிரம், பத்தாயிரம், இருபதாயிரம் குதிரைகளுக்கு அதிபதிகளான பெரும் அமீர்கள் யாவரும் சேர்ந்து, எட்டு மண்ட பங்களைக் கொண்ட உயரமான பெருங் கூடாரமொன்றை எழுப்பு கின்றனர். அதன் நடுவே அமைந்த சிம்மாதனத்தின்மீது மிக பயபக்தியோடும், நடுக்கத்தோடும் ஷலீம் ஷாவினுடைய மிதியடி களைச் சர்தார் ஒருவர் வைக்கின்றார். அதன்பின் பெரும் அதி காரிகள் யாவரும் ஒவ்வொருவராகச் சென்று அதற்கு வணக்கம் செலுத்துகின்றனர். முதன்முதலாகச் சேனபதியும், அதன்பின் அமீன் என்ற சிவில் நீதிபதியும், அவருக்குப்பின் ஏனைய பிரபுக் களும் முறைப்படி ஒருவர்பின் ஒருவராகச் சென்று அம் மிதியடி களின் முன் மிகுந்த பயபக்தியோடும் தலைவணங்கித் தங்களது விசுவாசத்தைத் தெரிவிக்கின்றனர். அங்ஙனம், வணங்கிய பின்னர் அவர்கள் ஒவ்வொருவரும் தத்தமக்குரிய இருக்கைகளுக்குச்சென்று

[37] Erskine, 'History of India', Vol. II, p. 474.

அமர்கின்றனர்.[88] படைகளும், படையதிகாரிகளும் கூடார வாழ்க்கை வாழ்ந்தபோதும் அல்லது தலைநகருக்கு வெகு தூரத்தே சென்று வாழ நேர்ந்தபோதும் மேற்சொன்னபடி நடந்து கொண்டனர். இதிலிருந்து இஸ்லாம் ஷாவுக்கு நாட்டில் எத்தகைய மதிப்பும் மரியாதையும் இருந்துவந்தது என்பதும், அவரது பதவிக்கு எவ்வளவு உயர்ந்த அதிகாரமானது தரப்பட்டிருந்தது என்பதும், அவற்றின்மூலமாக அவரை ஓர் தெய்விகமான கீர்த்தி எப்படி எப்போதும் சூழ்ந்திருந்தது என்பதும் நமக்கு நன்கு தெளிவாகத் தெரியவருகிறது.

மன்னரின் அதிகாரத்துக்கு வெறும் சடங்குபூர்வமாக மட்டுமன்றி உண்மையிலேயும் பெருமதிப்பு இருந்துவந்தது. மன்னரின் அதிகாரத்துக்கு ஒரே தடையாயிருந்த முஸ்லிம் மத விற்பன்னர்களின் ஆதிக்கத்தையே உதறித் தள்ளுகின்ற அளவுக்கு அவர் இறைமை பெற்றிருந்தார். அது பின்வரும் வரலாற்றுப் பகுதியிலிருந்து தெள்ளிதின் உணரப்படும்: 'அவருக்குச் சொந்தமான இடங்களின் ஒவ்வொரு பகுதியிலிருந்தும், முறையாக அவருக்கு அறிக்கைகள் வந்துகொண்டேயிருந்தன. அதற்குப் பதிலாக அவர் தமது கட்டளைகளை எழுதி அனுப்பிவந்தார். மதம், சிவில் அரசாங்கம் அல்லது வருமானம் ஆகிய எதைப்பற்றிய விவகாரமாயிருந்தாலும் அவர் அது ஒவ்வொன்றுக்கும் தமது ஆணைகளைப் பிறப்பித்துவந்தார்.....அங்ஙனம் பிறப்பிக்கப்பட்ட ஆணைகள் சட்டத்துக்கு ஒத்தனவாயிருப்பினும் இல்லாமலிருப்பினும், அவைகளின் நுண்ணிய விவரங்கள்கூட மிகவும் கண்டிப்பான முறையில் கடைப்பிடிக்கப்படுதல்வேண்டுமென வற்புறுத்தினர். காஜியிடமோ, அல்லது மஃப்டியிடமோ அவைபற்றி அபிப்பிராயம் கேட்கப்படுவதைத் தடுத்தார்.'[89] முற்றிலும் மத சம்பந்தமான காரியங்களில்கூட அதாவது இஸ்லாம் கொள்கைகளுக்கே முற்றிலும் முரணாக அமைந்த நிகழ்ச்சிகளில்கூட, அவை உலமாக்களின் அதிகார வரம்புக்குள் வரவேண்டியவைகளாயிருந்தபோதிலும், இஸ்லாம் ஷா தலையிட்டுத் தமது அதிகாரத்தை நிலைநாட்ட முன்வந்தார். ஷெய்க் அலாயி (Shaikh Alai) என்பார் பேரரசின் மதத் தலைவரின் கருத்துப்படி இஸ்லாம் மதத்தின் எதிரி எனவும், எனவே, பெரிதும் தண்டிக்கப்படத்தக்கவர் எனவும் கருதப்பட்டவர். 'மஹ்தும் உல் முல்க் (Makhdum-ul-Mulk) என்பார் ஷேக்கின் தண்டனைபற்றிக் கூறிய அறிவுரைகளை இஸ்லாம்ஷா காது கொடுத்துக் கேட்க மறுத்து இந்தியாவுக்கு அவரை அனுப்பி

[88] Ibid., p. 475, Quotation from Badaoni.
[89] Ibid., p. 474.

வைத்தார்.'[40] மீண்டும் ஒரு முறை ஷேக் அலாயி என்பார் மத விரோதி எனக் குற்றம் சாட்டப்பட்டபொழுதும் 'இஸ்லாம்ஷா இரண்டாம் முறையாக மஹ்தும் உல் முல்க் சொல்லியவற்றைச் சற்றும் மதியாமல் நடந்துகொண்டார்.' இங்ஙனம் சமயச் சட்டத்துக்கே காவலர்களாக விளங்கிய மதத் தலைவர்களை அவர் அலட்சியமாக நடத்தியதிலிருந்து எல்லாத் துறைகளிலும் அதாவது அரசியல், ஆட்சித் துறையில் அல்லது மத இயல் முதலிய எல்லாக் காரியங்களிலும் அரசரது அதிகாரமே முதலிடம் பெறவேண்டும் என்ற கொள்கையை அவர் வலியுறுத்தியது நன்கு தெளிவாகிறது. அவர் கொண்டாடிய அதிகாரமானது வரம்பு இல்லாத முழுமை பெற்ற அதிகாரமாகும். ஆட்சித்துறை அதிகாரங்கள் யாவும் ஓரிடத்திலே குவிக்கப்பெறவேண்டும் என்ற கொள்கையை அது அடிப்படையாகக் கொண்டிருந்தது. சமயச் சட்டங்களுக்கோ அல்லது உலமாக்களின் ஆணைகளுக்கோ ஒரு சிறிதும் மதிப்புக் காண்பிக்கப்படவில்லை. மன்னர்களின் விருப்பத்திற்கு விரோதமாக அவைகள் இருந்தால் அவை உடனே மறுக்கப்பட்டன. அவ்விதமாக அக் கால மன்னர், இக் காலத்தே இறைமை என்று எதைக் கருதுகிறோமோ அந்த ஒரு தனித்தலைமை நிலையை ஏறக்குறைய எய்தினர் எனக் கூறலாம். எனவே, மத விலங்குகளின் பிடியிலிருந்து அரசரின் அதிகாரமானது தன்னை விடுவித்துக்கொண்டது. எல்லா வகையிலும் இக் காலத்தில் சாதிக்கப்பட்ட சாதனைகள் அனைத்தும் இந்தோ-இஸ்லாமிய அரசியல் அமைப்பு ஒழுங்கு முறையானது, தனது மிக உயர்ந்த எல்லையை எய்திய அக்பரது காலத்துக்குத் தக்கதோர் முன்னோடியாக விளங்கின எனலாம்.

## அரசரது இறைமை வலியுறுத்தப்பெறுவதற்கு மத இயக்கங்கள் துணை புரிதல்

இங்ஙனம் இக்கால அரசர்கள் தங்களது விருப்பங்களை வலியுறுத்தியதற்கும், சமய விற்பன்னர்கள், சட்ட அறிஞர்கள் ஆகியோரின் கைகளுக்கு அரசின் அதிகாரமானது சென்றுவிடாதபடி அவர்கள் முன் நின்று தடுத்ததற்கும், இக் காலத்தே எழுந்த மத இயக்கங்களின் போக்குப் பெரிதும் துணை புரிந்ததெனலாம். இந்த இயக்கங்கள் இந்தியாவில் அப்போது விளங்கிவந்த சுன்னி வைதிக மதத்தின் அடிப்படைகளையே ஆட்டம் கொள்ளச் செய்தன. பொதுவாக, ஒரு சமுதாயமானது ஒரே ஒரு மதத்தைப்பற்றி மட்டுமே அறிந்திருக்கும்போதும், அதன் பொறுமை

[40] Elliot and Dowson, Vol. IV, p. 502.

யைப்பற்றி ஐயப்பட்டு எவருமே கேள்வி கேட்கத் துணியாத போதும், முழுமனத்தோடு கூடிய விசுவாசத்தோடும் உற்சாகத் தோடும் அச் சமுதாயமானது அம் மதத்தையே பற்றுக்கோடாகப் பற்றிக்கொண்டிருக்கும்போதும் அச் சமுதாயத்தின் வாழ்க்கை யானது தனது சொந்த வைதிகத்திலேயே சுழன்று சுழன்று மிகவும் நெருக்கப்பட்டுக் குறுகிவிடுகிறதென்பது தேற்றம். அதனுடைய பழக்க வழக்கமும், சிந்தனையும், குறிக்கோளும் ஓர் தனித்தன்மை யையும் வளைந்துகொடா இயல்பையும் பெற்றுவிடுகின்றன. தன்னைச் சாராத எல்லா வகையான நிறுவனங்களின்மீதும் அதற்கு ஓர் வெறுப்பு ஏற்பட்டுவிடுகின்றது. வாழ்க்கையானது மலர்வதற்குத் துணையாக இருக்கக்கூடிய நிறுவனமாய் இருப் பினும்கூட அதை ஏற்றுக்கொள்ள அதற்கு மனம் வருவதில்லை. இத்தகைய மனப்போக்கானது அந்தச் சமுதாயமானது அமைக் கின்ற எல்லா நிறுவனங்களிலும் ஊடுருவி நின்று அவற்றின் பண்பையே மாற்றிவிடுகின்றது. அவர்களால் அமைக்கப்பட்ட அரசின் இயல்பும் அம் மனப்போக்கால் பாதிக்கப்படுகிறது. டில்லி சுல்தானியர் காலத்து இந்தியாவில் வாழ்ந்த இஸ்லாமிய சமுதாயத்தின் வாழ்க்கையானது இம்முறையிலேயே அமைந்திருந் தது. அது குறுகிய மனப்பான்மை கொண்டதாயும், வைதிகம் நிறைந்ததாயும், பழைய மரபுகளுக்குக் கட்டுப்பட்டதாயும், மேலும் வேண்டத்தக்கது ஒன்றுமில்லை என்ற மனநிறைவுகொண்ட தாயும் விளங்கிற்று. தன்னுடைய வலிமையிலும் ஒற்றுமையிலும் அதற்கு நல்ல நம்பிக்கை இருந்தது. அதனுடைய பலவீனமானது அதற்கே தெரியவில்லை. ஆனால், இக்காலத்தின் இறுதியில் மதத் துறையில் பரந்ததும் ஆழமானதுமான ஓர் கிளர்ச்சி தோன்றியது. அதன் விளைவாக அமைதியோடும் திருப்தியோடும் போய்க் கொண்டிருந்த வைதிகச் சுன்னி சமுதாயத்தில் ஓர் கொந்தளிப்பும் பரபரப்பும் ஏற்பட்டது. இஸ்லாம் சமயத்திலேயே பல பிரிவுகள் தோன்றின. சுன்னி சமுதாயத்தினரால் அப்பட்டமான நாத்திகம் என்று கருதத்தக்க கொள்கைகளை அவர்கள் போதித்தனர். தனிப்பட்ட வாழ்க்கைக்கும் பொது வாழ்வுக்கும் உகந்ததென அவர்களால் போதிக்கப்பட்ட ஒழுக்க நெறிகள் சுன்னி அறநெறித் தொகுதிக்கு முற்றிலும் பொருந்தாதனவாயிருந்தன. சுன்னி களால் திட்டவட்டமாக வெறுக்கப்பெற்ற குறிக்கோள்களை அவர்கள் சமய வாழ்வில் கடைப்பிடித்தனர். சில சமயங்களில் அவர்கள் அமைக்க முயன்ற சமுதாய அரசியல் நிறுவனங்கள், சுன்னிகளின் நிறுவனங்களுக்கு முற்றிலும் முரணானவையாக இருந்ததோடுகூட அந் நிறுவனங்களை அறவே ஒழித்துவிடுவதே போல் காணப்பட்டன.

ஏனெனில், அவற்றுள் ஒவ்வொன்றும் இஸ்லாமிய மரபுகளை யும், இஸ்லாம் மதத்தைத் தோற்றுவித்தவரையும் பின்பற்றுவ தாகக் கூறிக்கொண்டன. அதனோடு தாங்கள் கொண்டாடிய ஆன்மீக உரிமைகளுக்கு ஒரு பிற் சேர்க்கையாக, தனித் தலைமை யோடு கூடிய அரசியல் அதிகாரத்தையும் அவை செலுத்த விரும்பின. வாழ்க்கையைப்பற்றி அவைகள் புதிய முறையில் பொருள்பண்ணலாயின. உலகில் மதிக்கத்தக்கவை எவை யெவை என்பதுபற்றி அவை புதியபுதிய விளக்கங்களைத் தந்தன. அவ் விளக்கங்கள் யாவும், சுன்னி சமயமானது இந்தியாவில் ஏற்கெனவே நன்கு அமைத்து வைத்திருந்த ஓர் நிறுவனத்தை நிலைகுலையச் செய்ய முயன்றன. அதாவது, சமுதாயம், மதம், அரசியல் ஆகிய துறைகளில் அமைந்திருந்த நிறுவனங்கள் அனைத்தையும் ஒருங்கே கோத்து நிலைநிறுத்தும் வகையில் சுன்னி சமயமானது ஏற்படுத்தி வைத்திருந்த பிணைப்பை அது குலைக்க முயன்றது. அப் பிணைப்பானது எவ்வளவுக்கெவ்வளவு தளர்ச்சியுற்றதோ அவ்வளவுக்கவ்வளவு அரசரின் அதிகாரமானது வலிமையையும் தன்முனைப்பையும் பெற்றது. அரசன் தன் சொந்த வீட்டுக்காகிலும் அதாவது அரசுக்காகிலும் அதிபதியாக விரும்பினன். அதற்கு முன்பெல் லாம் அரசரின் அதிகாரமும் அரசாங்கமும் இஸ்லாம் மதத்தின் அதிகாரத்துக்கு அடிமையாய்க் கிடந்தன. இஸ்லாமிய அரசு, இஸ்லாமிய மதத்துக்கென்றே நிலைபெற்றிருந்தது. டில்லி சுல்தா னியர்களின் காலத்தில் இத்தகைய நிலைமையானது முழுவதுமாக நீடிக்கக்கூடவில்லை என்பதை நாம் ஏற்கெனவே கண்டோம். ஓரளவு அது அக்காலத்தே மாற்றியமைக்கப்படவேண்டிய ஒரு கட்டாயம் நேர்ந்தது. ஆனுல், நம்மால் ஆராயப்பட்டு வரும் இக்காலத்தே அந் நிலைமையானது கொஞ்சம் கொஞ்சமாகக் கைவிடப்பட நேர்ந்தது. அரசர் தமது முக்கியத்துவத்தை நன்கு உணரலானுர். பல்வேறு சமயங்களையும் சட்டங்களையும் பின்பற்றி வாழ்ந்துவந்த ஒரு சமுதாய அமைப்பில் தனக்குப் பெரியதொரு முக்கியத்துவமும் அதிகாரமும் இருக்கிறதென்பதை அரசர் உணர்ந்துகொண்டார். முரண்பட்ட கொள்கைகளைக் கடைப் பிடித்துவந்த இந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும், சுன்னிகளுக்கும் ஷியாக்களுக்கும் மஹ்தவிகளுக்கும் (Mahdavis) ரோஷ்னியாக்களுக் கும் (Roshnias) இடையே துலாக்கோல் போல் நின்று அவர்களது வேறுபட்ட வேண்டுகோள்களுக்கேற்ப சமநீதி வழங்கவேண்டிய நிலையில் அரசர் இருந்தமையாலும், போட்டி போட்டுக்கொண்டு வாழ்ந்த பல்வேறு கூட்டங்களிடையே சமரசம் செய்துவைக்க வேண்டியவர் அரசர் ஒருவராகவே இருந்தமையாலும், அவருடைய வார்த்தைகளுக்கு மதிப்புச் சாதாரணமாக இருப்

பதைவிடச் சற்று அதிகமாகவே இருந்தது. இந்துமதமும் இஸ்லாம் மதமும் மட்டுமே இருந்திருந்தால் மன்னரது தீர்ப்புகள் எந்த அளவுக்குச் செல்லுபடியாயிருக்குமோ, அதற்குச் சற்று அதிகமாகவே அவரது ஆக்கினைகள் மேற்கண்ட சூழ்நிலையில் செல்லுபடியாகின. தனது சொந்த விருப்பங்களை வற்புறுத்தித் தனது தற்பெருமையை நிலைநாட்டுவதில் அரசரின் அதிகாரத்துக்கு மேற்சொன்ன சூழ்நிலையானது பக்கபலமாயிருந்தது. ஆனால், அரசின் அதிகாரமானது தனது உச்ச நிலையை எய்தவும், மதத்தின்மீது தன் முழு ஆதிக்கத்தையும் நிலைநாட்டவும், திட்டவட்டமான முறையில் சமயத்தின் குறுகிய குறிக்கோள்களைத் தாண்டி மேலே எழும்பவும், அரசானது அடுத்து வரும் காலம் வரை காத்திருக்க வேண்டியிருந்தது.

## சுன்னி சமயத்துக்கெதிராகப் புதிய சமய வழக்குகள் (Cults) தோன்றல்

(a) தக்காணத்தில் ஷியா மதம்

இத்தகைய கண்கொண்டு பார்க்கும்போது, இதுவரை இந்திய வரலாற்றில் உதவாக்கரை நிகழ்ச்சிகளாகக் கருதப்பட்டவைகளில் பல, பொருள் பொதிந்தவைகளாக நமக்குக் காட்சியளிக்கின்றன. இந்த நோக்குடன் பார்க்கும்போது, முதலில், தக்காண நாடுகளில் புகுத்தப்பட்ட ஷியா மதமானது பெருமளவில் முக்கியத்துவம் பெறுகிறது. பாரசீகத்தில் சஃப்வி (Safwi) வம்சத்தவர் ஆட்சிபீடத்துக்கு வந்தபோது, அவர்கள் அங்கு ஷியா மதத்தை ஆதரித்துச் சுன்னி சமயத்தவரைப் பல வகையிலும் துன்புறுத்தினர். அதன் எதிரொலி இந்தியாவிலும் காணப்பட்டது. முக்கியமாகப் பாரசீகர்கள் பெரும்பாலும் குடியேறியிருந்த தென்னிந்தியாவில் அதன் பிரதிபலிப்பு அதிகமாக இருந்தது. தென்னிந்தியாவில் அவர்களது செல்வாக்கால்தான் அகமதுநகர், பீஜபூர், கோல்கொண்டா ஆகிய நாடுகள் சுன்னி மதத்தைவிட்டுஷியா மதத்தைக் கைக்கொண்டன. அதனால் சுன்னி வைதிக குருமார்கள் மன்னர்மீதும், அவரது அரசாங்கத்தின்மீதும் செலுத்திவந்த ஆதிக்கம் குறைந்தது. மன்னரொருவர் தமது பிரியம்போல் ஒரு மதத்தை ஏற்றுக்கொள்ளவும், தள்ளிவிடவும் முடியும் என்ற நிலை வந்தபோது, சமய விற்பன்னர்கள் சட்ட அறிஞர்கள் ஆகியோரை வேண்டுமென்கிறபோது மறுப்பதென்பதும் அவருக்கு எளிதாகிவிட்டது. மற்றும் தக்காணத்தில் ஆண்ட ஷியா சுல்தான்கள், சமயத் துறையில் தாங்கள் எவ்வித நோக்குடன் நடந்துகொள்ளவேண்டுமென்பதைத் தாங்களாகமட்டுமே தீர்மானிக்கவேண்டுமென்

பதை வற்புறுத்தினர். ஆனால், அவர்கள் அங்ஙனம் வற்புறுத்திய தானது, அதுவரையில் இந்தியாவில் ஆட்சி புரிந்த ஒரு முகமதிய அரசு, முகமதிய சமயத்திடம் நடந்துகொண்ட விதத்துக்கு முற்றிலும் மாறானதாயிருந்தது. தம்முள் போட்டியிட்டுக்கொண்டிருந்த இருவேறு சமயப் பிரிவினைச் சேர்ந்த ஷியாக்களையும் சுன்னிகளையும் கட்டுப்படுத்தி, சமாதானம் செய்யவேண்டிய நிலையில் அரசர் இருந்தமையால், அவர் அந்த இரு பிரிவினரின் பிடிக்கும் சிக்காமல் தனித்து நிற்க விரும்பியதில் வியப்பொன்றுமில்லை. இரு சமயப் பிரிவினரின் மத குருக்களையும் அரசர் தம்மை அண்டவிடவில்லை; அவர்களின் செல்வாக்குக்கு உட்படாமல் தம்மைக் காத்துக்கொள்வது, எல்லாருக்குமே நல்லது என்பதை அவர் உணர்ந்தார். அரசர்கள் அங்ஙனம் உணர்ந்து, நடந்து காட்டினர் என்பதற்கு ஒரு சான்றாகப் பீஜபூரை ஆண்ட யூசுப் அடில் ஷாவின் நடத்தையைக் காட்டலாம். அவர் சமயப் பொறையை, தமது அரசாங்கத்தின் ஓர் கொள்கையாகக் கடைப்பிடித்தார் என ஃபெரிஸ்டா (Ferista) என்ற வரலாற்றாசிரியர் குறிப்பிடுகின்றார். அவர் கூறியுள்ளதாவது, 'அவர் காலத்தே மக்கள் சஹிபாவுக் (Sahiba) கெதிராக எவ்விதமான அவதூறான சொற்களையும் பேசக்கூடாதெனத் தடுக்கப்பட்டனர். ஆகையினால், மத வெறியர்கள், தங்களது வெறி எனும் நஞ்சை நாடெங்கும் பரப்ப முடியாமல் போயிற்று. ஜஃபூர் (Jafur) என்பாரின் படிப்பறிவுமிக்க சீடர்களும், மகமது ஹனீஃபின் (Mahomed Haneef) கொள்கைகளில் நன்கு ஊறியவர்களும், ஷாஃபியி (Shafye) சமயப் பிரிவைச் சேந்தவர்களும் நண்பர்களாக ஒருங்கே வாழ்ந்தனர்; வெவ்வேறு சமயப் பிரிவினைச் சேர்ந்த மசூதிகளில், மக்கள் தத்தம் விருப்பப்படியே, உண்மையான இறைவனை வழிபட்டனர். அங்ஙனம் வழிபட்டபோது, ஒரு பிரிவினர், இன்னொரு பிரிவினரின் சடங்குகளில் தலையிடாமல் ஒவ்வொருவரும் பார்த்துக்கொண்டனர்.'[41]

மன்னரின் மனப்போக்கில் ஏற்பட்டுவிட்ட மாபெரும் மாற்றத்தையே இவை எல்லாம் எடுத்துக் காட்டுகின்றன. எல்லாருக்கும் வழிபாட்டுரிமையை வழங்க முஸ்லிம் மன்னர்கள் முன்வந்தனர் என்பதும், சமயத் துறையில் ஒரு பிரிவை ஆதரித்து இன்னொன்றைக் கைவிடுதல் என்ற குறுகிய மனப்பான்மையைக் கடந்து அதற்கு மேம்பட்ட சமரச மனப்போக்கை எய்த அன்னார் தீர்மானித்துவிட்டனர் என்பதும், இவற்றால் நன்கு தெரிய வருகின்றன. அரசியல் அதிகாரத் துறையில் ஷியாக்களின் தோற்றத்தால், தக்காணத்தில் இத்தகைய விளைவு ஏற்பட்ட

[41] Ferista, Vol. III, p. 24.

தென்றால், மஹ்தவி மதப் பிரிவினரும், ரோஷ்னி சமயக் கூட்டத்தவரும் தோன்றிய காரணத்தால் வட இந்தியாவில், இஸ்லாமிய மத் குருமார்கள் அரசரின் அதிகாரத்தின்மீதும், அரசாங்கத்தின்மீதும் செலுத்திவந்த செல்வாக்குப் பெரிதும் குறைந்தது. அரசர்கள்மீது அவர்கள் கொண்டிருந்த பிடிப்புப் பெரிதும் தளர்ந்தது. அதைப் புரிந்துகொள்ளவேண்டுமானல், இந்த மத இயக்கங்களைப்பற்றிப் பொதுவாகவேனும் ஈண்டு ஒரு சில கூறப்படுதல் அவசியம்.

### (b) வட இந்தியாவில் சமயத் துறையில் மஹ்தவி மார்க்கம் தோன்றுதல்

மகமதுவின் பிறப்புக்குப்பின் ஓர் ஆயிரமாண்டுகள் கழித்து, மக்களைப் பாவப் படுகுழியினின்றும் ஈடேற்ற, மெசயா (Messiah) அல்லது மீட்பர் ஒருவர் இந் நிலவுலகில் அவதரிப்பார் என்ற ஓர் நம்பிக்கையை அடிப்படையாய்க்கொண்டு எழுந்ததே மஹ்தவி இயக்கமாகும். பதினைந்தாம் நூற்ருண்டின் இறுதியிலும், பதினாறும் நூற்ருண்டு முழுவதிலும் இந் நம்பிக்கையானது மிகவும் வலுவுற்றது. அரேபியாவிலும், பாரசீகத்திலும், கொரசாணிலும், ஆக்ஸியானுவுக்கு வடக்கிலும், ஹிந்துஸ்தானத்திலும் இந் நம்பிக்கையானது பெருங் கிளர்ச்சியை உண்டுபண்ணியது. ஹிந்துஸ்தானத்தில் இவ் வியக்கமானது ஜான்பூரைச் சேர்ந்த சயது மகமது (கி.பி. 1443-ல் பிறந்தவர்) என்பவரால் தோற்றுவிக்கப்பட்டது. மக்களால் எதிர்பார்க்கப்பட்ட மஹ்தி என்பார் தாம்தான் என அவர் உரிமை பாராட்டினார். அவருடைய கொள்கைகளைப் பின்பற்றியவர்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் பெருகிற்று. அவரது சீடர்கள், அவரை இறைவனின் ஆவேசத்தைப் பெற்றவரெனவும் நபிகள் நாயகமான மகமதுவும் அவரும் ஒன்றே எனவும் நம்பி அவர்கள் வழிபடலாயினர். மகமதுவால் வெளியிடப்பட்ட குரானுக்கு விளக்கம் தரவென்றே பிறந்தவர் மஹ்தி என்பது அவர்களின் அசைக்கமுடியாத நம்பிக்கையாயிருந்தது.

நான் எனும் அகந்தையை அறவே அகற்றி இறைவனிடம் இரண்டறக் கலந்துவிடுவதே வாழ்க்கையின் முடிவான குறிக்கோள் என மஹ்தி போதித்தார். அக் குறிக்கோளை அடையவேண்டின், பக்தர்கள் ஏழ்மையையும் தூய்மையையும் கடைப்பிடிக்கவேண்டுமென்றும், எல்லாவித உலக பந்தங்களையும் துறக்கவேண்டுமெனவும் அவர் போதித்தார். அவரைப் பின்பற்றியவர்கள் எதற்கும் அவரையே முடிவான அதிகாரியாக எண்ணினர். மஹ்தியால் ஒப்புக்கொள்ளப்பட்டு உறுதி செய்யப்

பட்டாலன்றி, குரானின் கட்டளைகளுக்குக்கூடக் கட்டுப்பட அவர்கள் மறுத்தனர். உலக சம்பந்தமான காரியங்களில்கூட அவர் ஒருவர்மட்டுமே கீழ்ப்படியப்படத் தக்கவர் என்பது அவர்களின் நம்பிக்கையாயிருந்தது. அவர்கள் யாவரும் ஒரு குடும்பமென வாழ்ந்தனர். எனவே, ஒவ்வொருவருக்கும் சொந்தமாயிருந்த தனிச்சொத்திலும், பொதுச் சொத்திலும் எல்லாருக்கும் சம உரிமையும், சமபாகமும் உண்டு என அவர்கள் நினைத்தனர். ஏதாவது துன்புறுத்தப்பட்டால் அதை எதிர்த்துத்தாக்க அவர்கள் எப்போதும் தயாராக இருந்தனர். மஹ்தியை நம்பாதவர்களை எல்லாம் புறச்சமயிகளாக எண்ணி அவர்கள் வெறுத்தனர். அவர்களிடையே காணப்பட்ட சமத்துவமும் சகோதரத்துவமும், இவ்வுலகில் மஹ்தி ஒருவருக்குமட்டுமே பணியவேண்டுமென்கிற உறுதியும், சொத்து விஷயத்தில் பொதுவுடைமை மனப்பான்மையும், உலகியலுக்கு அப்பாற்பட்ட அநுபவங்களைப் பெறுவதில் அவர்களுக்கு இருந்த ஆர்வமும் எல்லாம், சுன்னி சமயத்தவர்கள் அமைத்து வைத்த சமுதாயக் கட்டுக்கோப்பு முறைக்கும் இந்தியாவில் இஸ்லாமிய அரசிற்கு ஏற்பட்டிருந்த தேவைக்கும் சற்றும் ஒவ்வாதனவாயிருந்தன. 'அவர்கள் எப்போதும், எங்குச் சென்றாலும் போர்க் கருவிகளுடனேதான் சென்றனர். வாள் ஒன்றையும், கேடயமொன்றையும் அல்லது வேறு போர்க்கருவிகளையும், எதிரிகளை முரியடிக்கவென, அவர்கள் எப்போதும் தம்முடன் கொண்டுசென்றனர். அவர்கள் எதை நியாயமென்று நினைத்தார்களோ, அதற்கு மாறாக எவரேனும் நடந்துகொள்வதை அவர்கள் பார்த்துவிடுவார்களேயானால், உடனே அவரை அணுகி, முதலில் சாந்தமான முறையில் எச்சரிப்பர்; அவ்வித நடத்தையைக் கைவிட்டுவிடும்படி வேண்டிக்கொள்வர்; ஆனால், அவர் விடாப்பிடியாகத் தொடர்ந்து அவ்விதமே நடந்துகொண்டால், அவர்களைப் பயமுறுத்தியும் பலாத்காரப்படுத்தியும் வேறு வழியில் திருப்ப அவர்கள் முயல்வர்.'[42] இங்ஙனம் அவர்கள் தாம் வைத்ததே சட்டம் என்ற முறையில் நடந்துகொண்டனர். அரசின் தலையீட்டுக்காக அவர்கள் காத்திருக்கவில்லை. எனவே, அரசுக்கும் அவர்களுக்கும் மோதல் ஏற்படுவதென்பது தவிர்க்க முடியாததாகிவிட்டது. இஸ்லாம் ஷா சூர் (Islam Shah Sur) என்பாரின் ஆட்சிக் காலத்தில்தான், ஷேக் அலி (Shaikh Ali) என்பாரின் சிறப்புமிக்க தலைமையின்கீழ் இம்மார்க்கமானது நாடெங்கும் வேகமாகப் பரவலாயிற்று. பெரும் பெரும் பிரபுக்களும் இஸ்லாம் ஷாவின் வல்லமைமிக்க ஆளுநர்களில், காவாஸ் கான் (Khawas Khan), பீஹார் கான் சர்வானி

[42] Erskine, 'History of India', Vol. II, p. 479.

(Bihar Khan Sarwani) போன்றவர்கள் பலரும், இன்னும் எண்ணிறந்த சாதாரண மக்களும் அவருக்குச் சீடர்களா யமைந்தனர். எனவே, ஷேக் அலி ஒரு மத விரோதி எனக் குற்றம் சாட்டப்பட்டார். இஸ்லாமுக்குப் புறம்பான கொள்கைகளைப் போதித்த குற்றத்துக்காக இஸ்லாம் ஷாவின் ஆணைப்படி அவர் முஸ்லிம் மத குருமார்கள் நிறைந்த ஓர் கூட்டத்தின் முன் கொணரப்பட்டு விசாரணை செய்யப்பட்டார்.

அங்ஙனம் அவர் விசாரிக்கப்பட்டபோது, தனது சிறந்த நாவன்மையாலும் வாதத்திறமையாலும் எதிரிகளை எல்லாம் வாயடைக்கவைத்தார் என 'தரீஹி தௌதி' (Tarikh-i-Daudi) எனும் நூலை எழுதிய வரலாற்றாசிரியர் கூறுகின்றார். அவரது வாதங்களைச் செவிமடுத்த இஸ்லாம் ஷா புளகாங்கித மெய்திய வராய் அவரை விளித்து 'ஓ ஷேக்! நீர் கடைப்பிடித்து வரும் இம் முறையைக் கைவிட்டுவிடுக! அப்படிச் செய்தீரானால் உம்மை நாம், நமது ஆணைக்குட்பட்ட நாடுகளில் எல்லாம் சமய ஒழுக்கத் தணிக்கையாளனாக (Cnsor—Mahtasib) நியமிக்கக்கூடும். இந் நாள்வரை நீர் நமது அதிகாரத்தின் அனுமதியின்றியே மக்களைத் தீ நெறிகளில் செல்லாமல் தடுத்து வந்தீர். இனிமேல் எம்முடைய இசைவினைப் பெற்று நீர் அவ்விதம் செய்வீ ராக!'[48] என்று கூறினார். ஆனால், இதற்கு அவர் ஒப்பவில்லை. அதுவரையும் அவர் அரசரைத் தமக்குச் சமமாகவே எண்ணி வந்தார். ஏனெனில், அரசரின் அதிகாரத்தை ஏற்றுக்கொள்வது என்பது அவரது கொள்கைகளுக்கே விரோதமாயிருந்தது. அரசர் முதலில் அவரை ஒன்றும் செய்யாமல் விட்டுவிட்டார். ஆனால், அவர் தமது நடத்தைகளை மாற்றிக்கொள்ளாமலே போய்க் கொண்டிருந்ததைக் கண்ட இஸ்லாம் ஷா அவரை அரசவைக்கு அழைத்துவரும்படி செய்து, நன்கு புடைத்துக் கொன்றுவிடும்படி ஆணையிட்டார். அவ்விதமே அவர் அடித்துக் கொல்லப்பட்டார். மஹ்தவி மார்க்கத்தின் தோற்றமும் வளர்ச்சியும், ஒரு சில குறிப் பிடத்தக்க உண்மைகளை நமக்குத் தெள்ளிதின் புலப்படுத்து கின்றது. முதலில் சுன்னி சமயம் ஒன்றுதான் இந்தியா அனைத் துக்கும் உகந்த பொதுவான ஒரே மதம் என்று மக்களிடையே பரவலாகக் காணப்பட்ட ஓர் அபிப்பிராயமானது தகர்த் தெறியப்பட்டது. இரண்டாவதாக, உலகியலிலும் ஆன்மீகத் துறையிலும், சமமான இரு சக்திகள் உரிமை கொண்டாடக்கூடும் என்பதையும் அது எடுத்துக்காட்டியது. மூன்றாவதாக அந்நாள் வரை எல்லாராலும் ஒப்புக்கொள்ளப்பட்டதும், அதனால் யாவருக்கும் உகந்ததாகக் கருதப்பட்டதுமான கொள்கைகளுக்கு

[48] Elliot and Dowson, Vol. IV, p. 502.

முற்றிலும் புறம்பான கொள்கைகள் பல துறைகளிலும் கடைப் பிடிக்கப்படலாயின. அதாவது முன்பிருந்தவற்றுக்குப் பெரிதும் வேறுன புதியதொரு சமுதாய முறையும், புதிய மதிப்பீட்டு முறையும் (Values), புதிய அதிகார முறையும் ஆதரிக்கப் படலாயின. இந்த மார்க்கத்தைப் போதித்தவர்களிடையே காணப்பட்ட ஆர்வமிக்க மனவெழுச்சியும், அவர்களைப் பின் பற்றியவர்களிடையே காணப்பட்ட அசைக்கமுடியாத நம்பிக் கையும், மக்கள்மீது சுன்னி சமுதாயமானது கொண்டிருந்த பிடிப்பைத் தளர்த்தின. மேலும், வைதிக குருமார்கள் மக்கள்மீது செலுத்திவந்த அதிகாரமும் குறைந்தது. தனது கொள்கையே பெரிதென வாதிக்கும் அதன் குறுகிய மனப் பான்மையை இவை யாவும் அம்பலப்படுத்திவிட்டன.

### (c) வடக்குப் பிராந்தியங்களில் ரோஷ்னிய (Roshnia) மார்க்கம் தோன்றல்

மஹ்தவி மார்க்கத்தைப் போன்ற இன்னெரு மார்க்கம் வடக்கே தோன்றியது. அதற்கு ரோஷ்னிய மார்க்கம் என்பது பெயர். மஹ்தவிகளைப் போலவே ரோஷ்னியரும் பலாத்கார முறைகளில் நம்பிக்கைகொண்டிருந்தனர். மெசையா ஒருவர் வரப்போவதையும் அவர்கள் நம்பினர். இம் மார்க்கத்தைப் பின்பற்றிவர்கள், கடவுளே இப் புவனத்துக்கெல்லாம் முதல்வர் எனவும்; எல்லாம்வல்ல சத்தாகவும் (Reality), எங்கும் நிறைந்த சித்தாகவும் (Universal Reason) அவர் திகழ்கிருர் எனவும்; அவரிடமிருந்தே காலம், இடம் என்ற மூலபூதங்கள் யாவும் தோன்றின என்றும்; அப் பூதங்களிலிருந்தே கட்புலனுக்கெட்டும் இப் புவனமும், தனித்தனியே உயிர்களின் தோற்றமும் ஏற்பட்டன என்றும்; அங்ஙனம் தோன்றிய அனைத்தும் இறை யிடத்திலேயே சென்று மீண்டும் ஒடுங்கிவிடுமெனவும் அறுதி யிட்டுக் கூறினர். இங்ஙனம் கடவுளிடமிருந்து தோன்றிய அனைத்தும் அவரிடமே சென்று அடங்குவதற்கு இரு முனைகளி லிருந்தும் ஊக்கம் பிறப்பது இன்றியமையாதது என அவர்கள் கூறினர். முதலில் அது எங்கும் நிறைந்து விளங்கும் சித்து அல்லது அறிவின் மூலமாயும், இரண்டாவதாக இவ்வுலகின் ஆன்மாவால் விளங்கும் ஒரு பொருளின் மூலமாயும், இங்ஙனம் உயிர்கள் புறப்பட்ட இடத்துக்கே திரும்புவது எளிதாக்கப்படுகிறது என அவர்கள் கூறினர். 'இங்குக் கூறப்படும் படித்தரத்திற்கேற்ப, எல்லாமான அறிவின் (All Reason) முழு ஆற்றலையும் முதலில் தெய்விக அவதாரத்தின் ஆன்மாவானது உட்கொண்டுவிடுகிறது. அதன் பின் அதனுல் அறிவு துலக்கப்படும் தீர்க்கதரிசிகளையும்,

பின்னர் அப்படியே படிப்படியாக தீர்க்கதரிசிகளின் தூதுவர்களை யும், போதகர்களையும் அவ்வறிவாற்றல் சென்று ஆட்கொள்கிறது. மனிதர்களை ஆட்கொள்வதேபோல், இதே ஆன்மீகச் சக்திகள் வானவெளியில் விளங்கும் இயற்கைப் பொருள்களிலும் சென்று குடிகொள்கின்றன. முதலில் சூரிய வெளிச்சத்திலும், இரண்டா வதாக மழையிலும் அவ்வாற்றல்கள் வந்து குடிகொள்கின்றன.'[44] தெய்விக ஆன்மாக்கள் யுகத்துக்கு யுகம் வரலாறுபூர்வமான மானுடர்களாக அவதாரம் செய்கின்றன. அத்தகைய தெய்விக அவதாரங்களைக் கண்டுபிடித்து அல்லது அடையாளங் கண்டு கொண்டு, எல்லாருக்கும் அதை விளம்பரப்படுத்தி, அதன்மூலம் தனிப்பட்ட ஜீவன்கள் தாங்கள் தோன்றிய இடத்துக்கே மீண்டும் சென்று சேர்வதற்கு உதவிபுரியவேண்டுவது அறிவொளிமிக்க வர்களின் கடமையாகும். இங்ஙனம் மெசையா அல்லது தெய்விக அவதார புருஷர் என்பவர், உண்மையிலேயே இவ்வுலகில் கண் காண வந்த தெய்வமாகும். எனவே, நபிகள் நாயகத்தைவிட அவர் உயர்ந்தவராவார். அதாவது, கடவுளுக்குக் கீழ்ப்பட்டவர் எனத் தன்னைக் கருதிய மகமதுவைவிட அவர் உயர்ந்தவர். இங்ஙனமெல்லாம் போதிக்கப்பட்ட கொள்கைகள், மகமது வையும் அவரது சமயத்தையும், அந்த அடிப்படையில் அமையப் பெற்ற அரசியல், சமூக நிறுவனங்களையும் ஒருங்கே ஒழித்துவிட மறைமுகமாக முயன்றன. ஏனெனில், அவற்றைக் கடைப்பிடித் தவர்கள் உலகியல் துறை, ஆன்மிகத் துறை இவ்விரண்டிலு முள்ள எல்லாத் தலைவர்களும் பீரேரோஷன் (Pir-i-Raushan) அல்லது தெய்விக அவதாரத்துக்குக் கீழ்ப்பட்டவர்கள் என்றே கருதி நடந்துகொண்டனர். அவர்கள் போதித்ததைப் பார்க்கும்போது, சமயத்துறையில் ஒரு பெரும் புரட்சியை ஏற் படுத்துமாறு அவர்கள் அனைவரையும் அறைகூவி அழைத் ததுபோல் நமக்குத் தோன்றுகிறது. ஏனெனில், மெசையாவின் பெயரிலோ அல்லது அவரது அதிகாரத்தின் பெயரிலோ அமைக்கப் படாத, எல்லாவிதமான, சமுதாய, அரசியல் அமைப்புகளையும் உடைத்தெறியவேண்டுமென அவர்கள் விரும்பியதாகவே தெரிந்தது. மெசையா என்பவர் ஆன்மீகத் துறை, உலகியல் துறை ஆகிய இரண்டு துறைகளுக்கும் தலைவராகத் தன்னைக் கருதிக் கொண்டு நடந்துகொண்டார். இப்படி அவர் தன்னைக் கருதிக் கொண்ட ஒரு வழக்கமானது, இந்தியாவுக்கு வெளியில் ஒன்பதாம் நூற்றாண்டிலேயே காணப்பட்டதெனினும், பதினாறும் நூற்றாண்டளவில் அது மெதுவாக இந்தியாவுக்குள் புக ஆரம் பித்தது. அதைப்பற்றிப் பேசிப் பெரிதும் முதன்முதலாக விளக்கம்

[44] Vor Nouer, 'Akbar', Vol. II, pp. 144-45.

செய்ய முன்வந்தவர் கலின்ஜர் என்றஇடத்தில் வாழ்ந்த சுலேமான் (Suleiman) என்பவராவார். அவருடைய சீடரான ஷேக் பயாஜித் (Shaikh Baiyazid) என்பவர்தான் இந்தியாவின் எல்லைப்புறப் பிரதேசங்களில் அக் கொள்கைககளைப் பரப்பினர். அவற்றைக் கேட்ட காட்டுக் குடிமக்கள், மின்சாரத்தால் தாக்கப்பட்டவர்கள் போன்று அப்படியே பரவசத்தில் ஆழ்ந்தனர். வெகு விரை விலேயே அவை ஆஃப்கானிஸ்தானத்துக்கும் இந்தியாவுக்கும் பரவிவிட்டன. அவைகளின் கொள்கைகளை நாம் துருவி ஆராயும்போது, அவை வைணவம், பாரசீக சூஃபிஸம் முதலிய சமயப் பிரிவுகளின் கொள்கைகளைப்போன்றே ஏறக்குறைய காட்சி யளிப்பதையும், இஸ்லாமியக் கொள்கைகளுக்கு, அதிலும் முக்கியமாகச் சுன்னி சமயக் கொள்கைகளுக்கு அவை சற்றும் ஒவ்வாதிருப்பதையும் நாம் அறிகிறோம். அக்பர் ஒருவர்தாம் இப் பிரிவினரை அரசியல் பகைவர்களாகக் கருதினர். அதை விடுத்துப் பொதுவாகப் பார்க்கும்போது, வைதிகத்தில் மண்டிக் கிடந்த சுன்னி முஸ்லிம்களையும், அவர்களின் சமுதாய அரசியல் அமைப்புகளையும் மேற்சொன்ன கொள்கைகள் ஒரு பெரும் உலுக்கு உலுக்கிவிட்டதென்றே கூறலாம். வாழ்க்கையின் இறுதிக் குறிக்கோள்கள்பற்றியும், சிக்கல்கள்பற்றியும் ஒரு புதிய விளக்கமானது மக்களுக்குக் கிடைத்தது. அவர்களுக்கு வாழ்க்கையில் புதிய மதிப்பீடுகளைப்பற்றிய விளக்கத்திலும் மக்களுக்குப் பரிச்சயம் ஏற்பட்டது. அதனல் பண்டைய நம்பிக்கை களிலும், அரசியல் நிறுவனங்களிலும் கால்கொண்டிருந்த மக்களுக்கு அவர்களுடைய நம்பிக்கைகளில் ஓரளவு தளர்ச்சி ஏற்பட்டது.

### (d) பக்தி மார்க்கம்

ஷியா மத நம்பிக்கையானது தெற்கிலும், மஹ்தவி இயக்கமானது ஹிந்துஸ்தானத்திலும், ரோஷ்னிய சமய வழக்கானது எல்லைப்புறப் பிரதேசங்களிலும் பரவிப் பல சீடர்களைப் பெற்றதென்றல், வைணவ மதமானது இந்தியா அனைத்திலும் பரவிப் பல அரும்பெருஞ் சாதனைகளை நாடெங்கும் நடாத்திக் காட்டியது எனலாம். மக்களனைவர்பாலும் செலுத்தப் படுகின்ற அன்பும், காட்டப்படுகின்ற சகோதர வாஞ்சையுமே இப் புதிய மார்க்கத்தின் அடிப்படையாயிருந்தன என்பதை நாம் ஏற்கெனவே கண்டோம். பிராமணனையும், சாமாரையும், அரசனை யும், குடியானவனையும், இந்துவையும், முஸ்லிமையும் ஒன்றுக இணைத்து, ஒரு தாய் வயிற்றுப் பிள்ளைகள் போன்று ஒன்றித்து வாழும்படி செய்யவும், அதன்மூலம் இறைவனை அடைவிக்கவும் அது முயன்றது. ஒன்றுக்கொன்று போரிட்டுக்கொண்டு கிடந்த

சமயக் கொள்கைகளுக்கும் சமுதாயங்களுக்கும் இடையே அத்தகைய கொள்கையானது மெச்சத்தக்கதோர்குறிக்கோளாகத் தென்பட்டது. அதன் கொள்கைகள் சுன்னி இஸ்லாமியர்களால் இம்மியும் ஏற்றுக்கொள்ளப்படவில்லை என்றாலும், வைதீக இந்துவும் முஸ்லிமும் அவற்றால் பெரிதும் கவரப்பட்டனர் என்பதில் ஐயமில்லை. பக்தி இயக்கத்தின் செல்வாக்கு எத்தகையதாயிருந்ததென்பதை தரீகீ தாவூதியில் (Tarikh-i-Daudi) குறிப்பிடப்பட்டுள்ள ஒரு நிகழ்ச்சியிலிருந்து நன்கு அறியலாம். லீலாதர் (Leeladhar) என்ற பிராமணர், முஸ்லிம்கள் முன்னிலையில் ஆற்றிய ஓர் சொற்பொழிவில், இஸ்லாம் மதமானது தமது சொந்த மதத்தைப் போன்றே உண்மையான மதம் என்று வலியுறுத்திப் பேசினார்.[45] சிக்கந்தர் லோடியின் காலத்தில் இது நடந்தது. தமது சொந்த மதமானது இஸ்லாம் மதத்தைப் போலவே உண்மையானது என்று வலியுறுத்திக் கூறத் துணிந்த குற்றத்துக்காக அப் பிராமணர் பெரிய தொகை ஒன்றை அபராதமாகச் செலுத்த நேர்ந்தது. அதே ஆட்சிக் காலத்தில் லக்னோவின் ஆளுநரின் புதல்வர் ஒருவர் எங்ஙனம் ஓர் இந்துவாக மாறினார் என்பதை நாம் ஏற்கெனவே கண்டோம்.[46] எனினும், மேற் சொன்ன பிராமணரால் சுட்டிக்காட்டப்பட்ட மனப்போக்கானது புதுமையானதொன்றென்பதும், புதியதோர் சகாப்தத்தின் தோற்றத்துக்கு ஒரு முன்னறிவிப்பாக இருந்ததென்பதும் மறுக்கக் கூடாத உண்மைகளாகும்.

இஸ்லாமிய சமயத்தின் எல்லைக்குள்ளேயே தோன்றிய எல்லாச் சமயப் பிரிவுகளும், ஏற்கெனவே நன்கு ஒப்புக்கொள்ளப் பட்டிருந்த நம்பிக்கைகளை மறுத்தன. வாழ்க்கைக்கு அவை போதுமா என்பதில் அப் பிரிவுகள் தமக்குள்ள ஐயப்பாட்டினை எடுத்து விளம்பின. சுன்னி முஸ்லிம்களால் வகுக்கப்பட்ட வாழ்க்கை முறை, பழக்கவழக்கங்கள் ஆகியவை நிறைவுடையன அல்ல என அவை வாதிட்டன. அத்தகைய புதிய சமய மார்க்கங்கள் தோன்றியதிலிருந்து, ஏற்கெனவே இருந்த சமுதாய அமைப்புக்கும் அரசியலமைப்புக்கும் சற்றும் பொருந்தாத புதிய மதிப்பீடுகளும் நிறுவனங்களும் தோன்றப்போகின்றன என்பது குறிப்பாக நன்கு, ஆனால், தெளிவாக உணர்த்தப்பட்டது. ஒன்றுக்கொன்று முரண்பட்ட சக்திகளை அவை உருவாக்கின. இந்தியாவில் இஸ்லாமிய சமுதாயமானது பாதுகாப்புடனும் தூய்மையுடனும் நிலைபெறவேண்டுமானால், அத்தகைய சக்திகள் யாவும் முற்றிலும் நாட்டிலிருந்து அகற்றப்பட வேண்டுவது இன்றி

[45] Elliot and Dowson, Vol. IV, p. 464.

[46] Ferista, Vol. I, p. 582.

யமையாததாய்க் காணப்பட்டது. நாம் ஏற்கெனவே கண்டபடி அவைகள் தங்களது கொள்கைகளை அமைதியான முறைகளில் பரப்ப வேண்டும் என ஒருசிறிதும் எண்ணவில்லை. சுன்னி சமயப் பிரிவை அறவே ஒழித்துவிட்டு, அது இருந்த இடத்தில் தத்தம் சொந்தச் சமய வழக்குகளை நிலைநாட்டவேண்டுமென அவை ஒவ்வொன்றும் விரும்பின. அங்ஙனம் அவர்கள் விரும்பியது சமுதாய, அரசியல் ஒற்றுமைக்கே ஆபத்தை விளைவிக்கும்போல் தோன்றியது.

## சமுதாயத் துறையிலும் சமயத் துறையிலும் ஏற்பட்ட பிளவுகள் அரசரின் இறைமை வளர்வதற்கு வழி வகுத்தல்

சமுதாயத் துறையிலும் சமயத் துறையிலும் உண்மையிலேயே மிகப் பெரிய பிளவு ஒன்று ஏற்பட்டது. அத்தகைய அபாயத்தைத் தடுக்க, அதுநாள்வரை எல்லாம் வல்லவர்களாயிருந்துவந்த மத குருமார்களாலும் சமயக் காவலர்களாலும் ஒன்றும் முடியவில்லை. எனவே, அவர்கள் வேறு வழியின்றி அரசின் உதவியை நாடலாயினர். அதாவது, முஸ்லிம் சமுதாயத்திலும் சமயத்திலும் ஓர் ஒற்றுமையையும் சமநிலையையும் ஏற்படுத்த அவர்கள் அரசு ஆதிக்கத்தின் உதவியை நாடினர். இங்ஙனம், சமுதாயத்தில் ஏற்பட்ட ஒரு நெருக்கடியும், சமயத்தில் ஏற்பட்ட உட்பிளவும் சேர்ந்து, உலேமாக்கள், மதகுருமார்கள், முஜ்தஹீதுகள் (Mujtahids) ஆகியோரின் ஆதிக்கத்தைப் பெரிதும் பாதித்தன. ஏனெனில், இஸ்லாமிய சமயத்தில் எதிர்பாரா விதமாக ஏற்பட்ட இந்த இயக்கங்களை அடக்க அவர்கள் முயன்றபோது, தங்களுக்கு உண்மையில் அதிகாரமெதுவும் இல்லை என்பதை அவர்கள் நன்கு உணர்ந்துகொண்டனர். எனவே, அவர்கள் அரசருடைய உதவியைக் கோரலாயினர். புதிய சமய மார்க்கங்களால் அவிழ்த்து விடப்பட்ட சக்திகளை அறவே ஒழிக்க முடியாவிட்டாலும், அவைகளை ஓரளவு கட்டுப்படுத்திவைப்பதற்காகிலும் அரசரின் வல்லமையானது மிகமிக இன்றியமையாததென்பதை அவர்கள் அறிந்துகொண்டனர். இந்தியாவிலிருந்த முஸ்லிம் சமுதாயத்தில் ஒற்றுமையையும் சமநிலையையும் நிலைநாட்ட அரசர் ஒருவராலேயே முடியும் என அவர்கள் நம்பினர். உண்மையில் சூழ்நிலை கட்டுக்கடங்காத நிலையில்தான் இருந்தது. 'எண்ணிலடங்காப் பக்கிரிகளும், தார்விஷுக்களும், காவாஸ்கான் (Khawas Khan) போன்ற பிரபுக்களும், அவர்களது வழிநடப்பவர்களும், அரசரின் படைவீரர்கள் அத்தனை பேரும் ஷேக்

அலியின் போதனைகளில் மயங்கி அவரைப் பின்பற்றலாயினர். பிராமணர் ஒருவர், இந்து மதமும் இஸ்லாமிய சமயமும் ஒரே உண்மையின் அடிப்படையில் எழுந்தவைகளே என யாவருமறிய எடுத்துக்கூற முடிந்தது இக் காலத்தில்தான். பீரே-ரோஷன் (Piri-Roushan) என்ற அவதார புருஷர் மகமதுவைக் காட்டிலும் உயர்ந்தவர் என்று உரிமை கொண்டாடியதும் இக் காலத்தில் தான். மேலும், இக் காலத்தே மதகுரு ஒருவர் தம்முடைய சொற்பொழிவு ஒன்றில், 'மதங்கள் யாவும் ஒரே அரண்மனைக்குள் புகுவதற்கு அமைக்கப்பட்ட வெவ்வேறு வாயில்கள் போன்றவை என்றும், கடவுளானவர் அவ் வரண்மனையில் அமர்ந்துள்ள அரசர் போன்றவர் என்றும், ஒவ்வொரு சமயத்தின் மிகச் சிறந்த மனிதர்கள் யாவரும் மிகச் சிறந்த மதத்தைப் பின்பற்றுபவர் களேயாவர்'[47] என்றும் பேசியபோது அதை ஓர் அரசர் ஆர்வத்தோடு கேட்டதுமின்றிப் பாராட்டவும் செய்தார் எனக் கேள்விப்படுகிறோம். இவை யாவும் காலத்தின் போக்கை ஒரு வாறு உணர்த்துபவைகளாயிருந்தன. அப் போக்கு, சற்றும் ஐயத்துக்கிடமின்றி, வைதீக மதத்துக்கும் சுன்னி சமயக் கோட் பாடுகளின் ஒருமைக்கும் எதிராயிருந்தது. இத்தகைய சூழ் நிலையில், அதாவது, சமயமானது உட்பிரிவுகளாலும், சமுதாய மானது பிளவுகளாலும் கலகங்களாலும் அலைக்கழிக்கப்பட்டு வந்த ஒரு குழப்பமான சூழ்நிலையில், சுன்னி சமய விற்பன்னர் களும் சட்ட அறிஞர்களும் அரசின்மீது செலுத்திவந்த ஆதிக்கம் கண்காணக் குறையலாயிற்று. சமுதாயக் கட்டுக் கோப்பையும் சமய ஒற்றுமையையும் நிலைநாட்ட அரசரின் வல்லமையை அவர்கள் நாடவேண்டியதோர் கட்டாயம் ஏற்பட்டது. அதன் விளைவாக அரசரின் கௌரவம் உயர்ந்தது. அது மட்டுமன்று; புதிதாய்த் தோன்றிய சமய மார்க்கங்கள் சுன்னி சமயத்தின் குறுகிய ஒருதலைப்பட்ச மனப் பான்மையை நன்கு வெளிக்கொணர்ந்துவிட்ட காரணத்தால், முன்னேற்றக் கொள்கைகளை உடைய சில அரசர்கள், தங்க ளுடைய ஆதிக்கம் அல்லது அரசியல் அதிகாரமானது யாவராலும் நாட்டில் ஒப்புக்கொள்ளப்படவேண்டுமானால், அது ஒரு தனிப் பட்ட கட்சியையோ, அல்லது சமயப் பிரிவையோ ஆதரிப்பதாக இருக்கக்கூடாது என்ற முடிவுக்கு வரவேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. அரசாங்கமானது புதியதோர் குறிக்கோளைக் கடைப் பிடிக்கவேண்டுவதன் இன்றியமையாமை புலப்பட்டது. அரசன் மதகுருமார்களின் ஆதிக்கத்திலிருந்து விடுபட்டுவிட்டதை அச் சூழ்நிலை குறிப்பாக உணர்த்தியது. ஒருசில முஸ்லிம் அரசர்கள்

[47] Ferista, Vol. III, pp. 24-25.

அக் குறிக்கோளை அடைவதற்காகப் புதிய முறையில் தமது ஆட்சியைச் செலுத்த விரும்பினர். அதாவது, குரானின் கட்டளைகளாலும் உலேமாக்களின் ஆணைகளாலும் கட்டுப் படுத்தப்படாமல் நாட்டின் நலனை வளர்ப்பதற்கு எது சிறந்ததோ அதைக் கடைப்பிடிப்பதன்மூலம் அவர்கள் தங்களது புதிய குறிக்கோளை அடைய எத்தனித்தனர். அதனுற்றான் அவர்கள் அரசாங்கத்தில் தாராளக் கொள்கைகளைக் கடைப் பிடித்தனர். மையத்தில் அதிகாரமெல்லாம் செறியப்பெற்ற ஆட்சித்துறை நிறுவனங்களை அவர்கள் அமைத்தனர். சுதேச மொழிகளுக்கு அவர்கள் ஆக்கமும் ஊக்கமும் தந்தனர். அதனோடு எல்லாச் சமயங்களுக்கும் அவர்கள் சமமான வழிபாட்டுரிமைகளை வழங்கினர். இந்த நிகழ்ச்சிகள் யாவும், சட்டம், மதம் இவற்றின் காவலர்களாய்த் திகழ்ந்த கூட்டத்தாரின் தனி ஆதிக்கம் நிலவிய ஓர் இடத்தில், அரசரின் இறைமையானது நன்கு நிலைநாட்டப் பட்டுவிட்டதற்கோர் அறிகுறியாகக் காட்சியளித்தன. எனவே, இக் காலத்தின் விளைவுகள் யாவும், இதற்கு முன்னைய காலத்தைவிட, இக் காலத்தே இந்தோ-இஸ்லாமிய அரசிய லமைப்பின் ஒழுங்குமுறையின் வளர்ச்சியைப் பொறுத்தவரையில் ஒருபடி அதிகமாகவே முன்னேற்றம் காணப்பட்டதென்பதையே நன்கு எடுத்துக்காட்டுவதாயமைந்தன எனலாம்.

இங்ஙனம், சமுதாயத்தில் ஏற்பட்ட பிளவுகளாலும், மதத்தில் உண்டான உட்பிரிவுகளாலும் அரச பதவிக்குரிய முக்கியத்துவமும் அதிகாரமும் பெருகின. மதகுருமார்களின் ஆதிக்கத்திலிருந்து அரசர் பெருமளவுக்குத் தம்மை விடுவித் துக்கொண்டார். அதன் காரணமாக இறைமை என்று பேசப்படுகின்ற அரசியல் அதிகாரக் குறிக்கோளை அரசர் அடைந்துவருகிறார் என்ற உண்மையானது மெல்லமெல்ல வெளிப்படலாயிற்று. என்றுமே இல்லாதபடி அரசர் தமக்குப் பேரதிகாரமும் பெருந்தகைமையும் இருப்பதாகக் கொண்டாட லானார். அரசாங்கத் துறையில் ஒரு புதிய கொள்கை யைக் கடைப்பிடிப்பதன்மூலமும், ஆட்சித்துறையிலும் அதி காரச் செறிவை (centralization) ஏற்படுத்துவதன் மூலமும் அவர் தமது அதிகாரக் குறிக்கோளை எய்தினார். இஸ்லாம் ஷாவின் காலத்தில்தான் இக் குறிக்கோளின் உச்சநிலையானது அடையப்பெற்றது. அவர் ஏதோ தெய்விக உரிமையை நேரில் பெற்றவர் போல ஆட்சி புரிந்தார்; உலகியல் துறையிலும் சமயத் துறையிலும் அவர் ஒப்பற்ற தனித்தலைமை கொண் டாடினார். அரசரே தெய்வம் என எல்லோரும் கொண்டாடு மளவுக்கு அவரது பெருமை வளர்ந்துவிட்டது. இந்த ஆய்வினை

இதனோடு நிறுத்திக்கொண்டு, இந்தோ-இஸ்லாமிய அரசிய லமைப்பு ஒழுங்குமுறையில் காணப்பட்ட ஆட்சித்துறை நிறு வனங்களைப்பற்றி ஆராய இனி முற்படுவோமாக! நாம் ஏற் கெனவே பார்த்தபடி, இருவகை நிறுவனங்களைப்பற்றிப் படிக்கவேண்டியது அவசியம். அதாவது, உள்ளூர் அல்லது வட்டார நாடுகளில் காணப்பட்ட அரசாங்கங்களைப்பற்றி ஒரு புறமும், டில்லிப் பேரரசின் மத்திய ஆட்சிமுறைபற்றி இன்னொரு புறமும் படிக்கவேண்டுவது இன்றியமையாதது.

## அரசர்மீதும் அவரது அதிகாரத்தின்மீதும் ஏற்பட்டிருந்த தடைகள்

உள்ளூர் அல்லது வட்டார நாடுகளில் கட்டற்ற கோனாட்சி களே நிலவிவந்தன. அரசரே அங்கெல்லாம் ஒப்பற்ற தலைவராகத் திகழ்ந்தார். ஆட்சித்துறைபற்றிய காரியங்களில் அரசன் வைத்ததே சட்டமாயிருந்தது. அத் துறையில் ஏறக்குறைய வரம் பற்ற வல்லாட்சியைச் செலுத்தக்கூடிய நிலையில் அரசர் இருந்தா ரெனலாம். ஒரே ஒரு வழியில்மட்டுமே அவர் அத்தகைய முழு வல்லாட்சியைச் செலுத்துவதினின்றும் தடுக்கப்பட்டார்; அதாவது, இஸ்லாமிய மதகுருமார்களும் சட்ட அறிஞர்களும் சேர்ந்து செலுத்திவந்த அதிகாரம் ஒன்றுக்குமட்டுமே அவர்கள் ஒருசிறிது கட்டுப்பட்டனர். பொதுவாகக் கூறுமிடத்து, மத சம்பந்தமான காரியங்களில் உலேமாக்களும் காஜிகளும் மட்டுமே தனிப்பட்ட அதிகாரத்தைப் பெற்றிருந்தனர். அரசரின் இசை வுடனேயே அவர்கள் தங்களது அதிகாரத்தைச் செலுத்திவந்தார் கள் எனினும், அவர்கள் செய்யும் காரியங்களுக்காக அரசரிடம் பதில் கூறவேண்டிய நிலையிலில்லை. அரசரால் ஏற்படுத்தப்படாத தோர் இஸ்லாமியச் சட்டத்தை அவர்களே பிரித்துப் பொருள் கூறவேண்டியவர்களாயிருந்தனர். கொள்கையளவில் அரசர் சட்டத்தின் ஆட்சிக்கு உட்பட்டவரே; சட்டத்துக்கு மேம்பட்டவ ராக அவர் கருதப்படவில்லை. சட்டத்தைப் புறக்கணித்தபோது, அரசர்களானாலும் சாதாரணக் குற்றவாளிகளைப் போலவே நடத்தப்பட்ட நிகழ்ச்சிகள் பல நடைபெற்றுள்ளன. வங் காளத்தை ஆண்ட சுல்தான் கியாஸுத்தீன் (Sultan Ghyasuddin) என்பவரால் கூறப்பட்டதொரு மிகமிகச் சுவையானதோர் சிறு நிகழ்ச்சியை ஈண்டுக் கூறுதல் பொருத்தமுடையதாகும். வங்காள சுல்தானாகிய கியாஸுத்தீன் ஒரு சமயம் விற்பயிற்சியில் (archery) ஈடுபட்டிருந்தபோது, தவறிப்போய் விதவை ஒருத்தியின் மகனைக் காயப்படுத்திவிட்டார். மனம் நொந்த அவ் விதவை அக் கணமே காஜி சிராஜுத்தீன் (Qazi Sirajuddin) என்பாரின் நீதிமன்றத்தில்

தனது குறையை முறையிட்டுக்கொண்டாள். நீதிபதியும், தம் கடமையை உண்மையாகச் செய்யக் கருதி, அப் பெண்மணியின் முறையீட்டுக்குப் பதில் கூறுதற்காக நீதிமன்றத்துக்கு வரும்படி ஓர் அதிகாரியின்மூலம் அரசருக்கு ஓர் அழைப்பு விடுத்தார். அந்த அதிகாரியும் மிக விநயமாக அரசரிடம் அச் செய்தியை எடுத்துக்கூறினர். அவர் கூறியதைக் கேட்ட அக்கணமே, அரசர் தமது இருக்கையினின்றும் எழுந்தார். சிறிய வாள் ஒன்றை எடுத்து அதைத் தம் ஆடைக்குள் மறைத்துக்கொண்டு, அவர் காஜியின் முன்னிலேக்குச் சென்ருர். காஜி, அரசருக்கு மரியாதை செலுத்துவதற்குப் பதிலாக அதிகார தொனியில் அவரை விழித்து, 'இந்த ஏழை விதவையின் மகனே நீர் காயப் படுத்திவிட்டீர். அதற்கு ஏற்ற ஈட்டுத்தொகையை நீர் அவளுக்கு இக் கணமே செலுத்தவேண்டும். இல்லே யென்ருல் சட்டப்படி என்ன தண்டனே உண்டோ அதை நீர் ஏற்கவேண்டும்' என்று கூறினர். அரசரும் நீதிபதியின்முன் சிரந்தாழ்த்தி வணங்கினர். அதன்பின் அவ் விதவையின்பால் திரும்பி, அவளுக்கு வேண்டிய தொகையைக் கொடுத்து, அவளது மனம் நிறைவெய்தும்படி செய்தார். அதன்பின் அவர் நீதிபதியை விழித்து, 'மேம்பட்ட நீதிபதியவர்களே! என்மீது குற்றம் சாட்டிய இப் பெண்மணி என்னே மன்னித்துவிட்டாள்' எனப் புகன்ருர். அதை அவ் விதவை யும் ஆமோதித்து அவ்விடம் விட்டு அகன்ருள். அதன்பின் காஜி நீதிமன்றத்திலிருந்து கீழே இறங்கிவந்து அரசருக்குப் பணிவார்ந்த வணக்கம் செலுத்தினர். அரசர் உடனே தமது ஆடைக்குள் மறைத்துவைக்கப்பட்டிருந்த வாளினே வெளியே எடுத்துக் காஜியைப் பார்த்து, 'காஜியவர்களே! புனிதமான சட்டத்தை விளக்கம் செய்பவர் என்ற முறையில் நீவிர் இட்ட கட்டளேக்குப் பணிந்து அக் கணமே உமது நீதிமன்றத்துக்கு நாம் ஓடோடியும் வந்தோம். குரானியக் கட்டளேகளுக்கு ஒருசிறிதேனும் மாருக நீர் நடந்திருப்பீரேயாகில், உடனே இவ் வாளேக்கொண்டு உமது தலேயை நாம் இக் கணமே கொய்திருப்போம் என்பது உறுதி; இதனே இதோ நான் ஆணேயிட்டுக் கூறுகிறேன். ஆனல், காரியங்கள் யாவும் மகிழ்ச்சிக்குரிய முறையில் இங்ஙனம் நலமே நடந்தேறியது குறித்து நான் இறைவனுக்கு நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறேன். அதனேடு சட்டத்துக்கு மேலாக எந்த ஓர் அதிகாரத்தையும் ஒப்புக்கொள்ளாத ஒரு நீதிபதி எமது நாட்டில் இருக்கிருரே என்பதற்காகவும் நான் இறைவனுக்கு நன்றி செலுத்துகிறேன்' என்று மொழிந்தார். இதைக் கேட்ட நீதிபதியும் தமது கசையை (scourge) எடுத்துக்கொண்டு அரச ரிடம் நீட்டி, 'அரசரே! சட்டத்தின் கட்டளேகளுக்குத் தாங்கள் பணியாமல் மட்டும் இருந்திருப்பீரேயாளுல், இதோ இந்தக் கசை

யானது தங்களது முதுகில் கறுப்பும் நீலமுமான தடிப்புகளை இந் நேரம் ஏற்படுத்தியிருக்கும்'[48] என்று கூறினர். இதிலிருந்து அரசரின் அதிகாரத்துக்கும், புனிதமான குரானியச் சட்டத்துக்கு முள்ள தொடர்பானது நன்கு எடுத்துக் காட்டப்படுகிறது. சட்டக் காவலர்கள் தங்களுக்குமேல் எந்த அதிகாரத்தையும் ஒப்புக்கொள்வதில்லை என்ற ஒரு நிலைமையின் விளைவாக நாட்டில் ஒன்றுக்கொன்று சமமான இரு அதிகாரங்கள் தழைத்தன. அது அரசரின் வரம்பிலா அதிகாரத்துக்கு ஒரு பெருந்தடையாக அமைந்தது. இறைமை என்று பேசப்படுகிற ஒப்பற்ற தனித் தலைமையை அரசர் அடையக்கூடாவண்ணம் அது தடைசெய்தது. ஆனால், அரசரின் வல்லாட்சி வழக்கிலிருந்த ஒரு காலத்தே இத்தகைய தடையானது சமுதாயத்தின் ஒரு தேவையாகக் கருதப் பட்டது. அரசரால் ஏற்படுத்தப்படாத ஒரு புனிதச் சட்டத்தின் மூலம் நீதிபதிகளின் சுதந்திரமும் ஓரவஞ்சனையற்ற நீதியும் நாட்டில் பெறப்பட்டன. சமுதாய நீதியானது (social justice) அக் காலத்தே எங்ஙனம் பெறப்பட்டதென்பதற்கு இது ஒரு சான்றாகக் காட்சியளிக்கிறது. இத்தகைய நீதிதான் அரசிய லமைப்புப்பற்றிய கலைச்சொற்களில் 'தடைகளும் சமநிலையும்' (checks and balances) என்று குறிப்பிடப்படுகின்றது.

அரசரின் வரம்பிலா அதிகாரத்துக்கு மதச்சார்பான ஒரு தடையாக இருந்த இன்னொன்றும் உளது. கதிபுகளால் (Khatibs) குத்பா ஓதப்பட்டதே அத் தடையாகும். அதிலிருந்து அரசர் ஒருவர் அரியணை ஏறியது சட்டப்படி செல்லவேண்டுமானல், அதற்கு மத நிறுவனத்தின் ஒப்புதல் தேவை என்பது மறைமுக மாக வற்புறுத்தப்பட்டது. அப்போதுதான் மக்கள் அனைவரும் 'அரசரை ஒருமுகமாக ஒப்புக்கொண்டதாகக்' கருதப்பட்டது. இது ஏதோ ஒரு புறச்சடங்காகமட்டும் நடைபெற்ற ஒன்று என்று கருதமுடியாது. மக்களது வாழ்வில் மதமானது தனி ஆதிக்கம் பெற்றிருந்த ஓர் காலத்தே, அதுவும் வாரிசுரிமைபற்றிச் சட்ட மெதுவும் இல்லாதிருந்த ஒரு காலத்தே அது பெரிதும் இன்றியமை யாததாயிருந்தது. 'வாளைப் பயன்படுத்தக்கூடியவனுக்கே வாள் சொந்தமாயிருக்கவேண்டும். நாட்டை வென்றவன் எவனோ அவனுக்கே அதை ஆட்சி புரியும் உரிமையும் இருக்கவேண்டும்' என்பது குரானின் கட்டளையாயிருந்தது. அதன் விளைவாக வாரிசுரிமையைப் பெறுவதென்பது சட்டத்தின் மூலமாகவன்றி, அதிகாரத்தின் மூலமாகவும் திறமையின் மூலமாகவுமே பெறத் தக்கது என்ற நிலைமை ஏற்பட்டது. அதனால்தான், சாகுந் தறுவாயில் அரசர் ஒருவர் இருக்கும்போது, அவரது ஆட்சியைக்

[48] Stewart, 'History of Bengal', pp. 90-91.

கைப்பற்ற அவருடைய மக்களுக்குள்ளேயே திறமை மிகுதியும் உடைய ஒருவர் விரும்புவதும் பாடுபடுவதும் முடிந்தது. சில சமயங்களில் பிரபுக்கள்கூட ஆட்சியைக் கைப்பற்ற நினைக்க முடிந்ததும் இதனுற்ருனகும். இத்தகைய ஒரு சூழ்நிலையால்தான் மகமது கான் என்ற அமைச்சர் மாள்வாவின் அரியணையைக் கைப்பற்றவும், ஒரு புதிய வமிசத்தைத் தோற்றுவிக்கவும், ஷாமீர் (Shah Meer) என்ற இன்னேர் அமைச்சர் காஷ்மீர் அரசுரிமையைக் கைப்பற்றவும் முடிந்தது. சிக்கந்தர் லோடிக்கு மக்கள் மூவர் இருந்தபோதும், அவரது மரணத்துக்குப்பின், அவருடைய மக்களின் முதல் இருவரையும் ஒதுக்கிவிட்டுக் கடைசி மகனை இப்ராஹிம்லோடி பட்டத்துக்கு வர முடிந்ததும் இக் காரணம் பற்றியேயாகும். அக் கால இந்தியாவில் இத்தகைய நிகழ்ச்சி களுக்குக் குறைவில்லை. ஒருவர் வாரிசுரிமையைப் பெற்ற ஒவ்வொரு சமயத்திலும் அந் நிகழ்ச்சியின் சிறப்பியல்பாகக் காட்சியளித்தது என்னவெனில், இறுதியாகப் பலவந்தத்தின் மூலமாகவே அவ்வுரிமை அடையப்பெற்றது என்பதாகும். அங்ஙனம் அடையப் பெற்ற ஓர் உரிமையானது செல்லுபடியாவதற்கும், மக்களனைவராலும் ஏற்றுக்கொள்ளப்படுதற்கும் அது மத சம்மதத்தைப் பெறவேண்டுவதென்பது கட்டாயமாகிவிட்டது. எனவே, அரசரொருவர் அரியாசனத்தைத் தமக்கே பெற வேண்டுமானல் அதற்குக் குத்பா ஓதப்படுவதென்பது ஒரு தடுக்க முடியாத சடங்காகிவிட்டது. வெறுமனே குத்பாவை ஓதிவிடுவதால் மட்டுமே ஒருவருக்கு அரசுரிமை கிடைத்துவிடும் என்று கருதுவது தவருகும். பொதுத் தொழுகைகளின் தலைவர் அல்லது இமாமி அதில் (Imam-i-Adil) என்று அரசர் ஒருவர் அறிவிக்கப் படுவாராஞல், அவரை இஸ்லாம் மதத்தைத் தழுவியுள்ள அனைவரும் ஆதரிப்பர் என்பதே அதன் முக்கியத்துவமாகும்.

ஏனெனில், இஸ்லாமின் அரசுரிமைக் கோட்பாட்டின்படி, அரசரே சமயக் காவலரும், பொதுத் தொழுகையின் தலைவரும், இஸ்லாமல்லாத புறச்சமயங்களை வேரறுப்பவரும்[49] ஆவர். மதத்துக்குச் சேவை செய்யவேண்டும் என்ற நிபந்தனையின் பேரிலேயே அரசருக்கு அதிகாரம் யாவும் வழங்கப்பட்டது. அதனுற்ருன், வங்காளத்தை ஆண்ட (கி.பி. 1392—1409) ஜலாலுதீன் சுல்தானும், காஷ்மீரை ஆண்ட (கி.பி. 1396—1416) சிக்கந்தர் புட்ஷிகானும் (Sikandar Butshikan) பலவந்தமாக மக்களை மதமாற்றுவதன்மூலம் சிலைவணக்கத்தை முற்றிலும் ஒழிக்க முயன்றனர். அப்படி முயன்றதாலேயே அவர்கள்

[49] Muntkhab-ut-Tawarikh (Asiatic Society Translation).

முஸ்லிம் அரசர்களிலேயே தலைசிறந்தவர்கள் எனப் புகழப் பட்டனர். இஃது இங்ஙனமிருந்தபோதிலும், இஸ்லாமிய ஆட்சி யின் குறிக்கோளாகக் கருதப்பட்ட இத்தகைய போக்கினை ஏற்றுக்கொள்ளாத பிராந்திய மன்னர்கள் பலர் இருந்தனர். நாம் ஏற்கெனவே பார்த்தபடி, அவர்கள் எல்லா மதங்களுக்கும் சமமான வழிபாட்டுரிமையை வழங்கினர். அத்தகைய கொள்கை யைக் கடைப்பிடிக்க அவர்கள் முன்வந்ததே, அரசர்கள் மதத்துக்கு அடிமையாக இருந்த ஒரு நிலையினின்றும் மெல்லமெல்ல விடுபட்டு வந்தார்கள் என்பதற்கு ஓர் அறிகுறியாக விளங்கியது. ஆனால், இந்தக் காலப்பகுதி முழுவதையும் ஒன்றாக எடுத்துக்கொண்டு பார்க்கும்போது, சமய விற்பன்னர்களும் மத குருமார்கள் அல்லது சட்ட அறிஞர்களும் மன்னர்கள்மீது ஏராளமான ஆதிக்கம் செலுத்திவந்தார்கள் என்பதையும், அரசர்களின் அதிகாரச் செயல்முறையை அல்லது அரசாங்கத்தின் வினைகளை அவர்கள் தங்களது விருப்பப்படி கட்டுப்படுத்திவந்தார்கள் என்பதையும் நாம் நன்கு அறிகிறோம். சான்றாக, ஷா தஹீர் என்பார் முதலாம் பர்ஹான் நைஜாம் ஷா[50] என்பவர்மீது ஏராள மான ஆதிக்கத்தைச் செலுத்திவந்தார். யூசுப் அடில்ஷாவிடம்[51] புகழ்பெற்ற பாரசீக மதகுருவான மௌலானா கியாசுதீன் என்பார் செலுத்திவந்த செல்வாக்குச் சொல்லுந்தரமன்று. சுனர் கானைச் சேர்ந்த ஷேக் ஜஹீத் என்பாரை, வங்க மன்னர் ஜலா லுதீன் என்பார் 'பற்பல ஆன்மீக காரியங்கள் பற்றியும்'[52] கலந்தாலோசிப்பது வழக்கம். அப்படி ஒருசிலர் இருக்க மதகுரு மார்களை எதிர்த்த மன்னர்களுமுண்டு. முதலாம் மகமது ஷா பஹ்மினி என்பார் அப்படிப்பட்டவர்களில் ஒருவர். அவர் அரியணை ஏறியபோது மதகுருமார்களின் வார்த்தைகளைச் செவி மடுக்கு முன்பே, 'தனது நாட்டில் வாழ்ந்த எல்லாச் சமய குருமார்களும் தனக்குக் கீழ்ப்படிவதாக அறிவிக்கும்படி கட்டளை யிட்டார். அதன்படியே அவர்களும் செய்தனர்...'[53] இங்ஙனம் அவர் கட்டளையிட்டதைப் பார்க்கும்போது, மக்களிடையே

[50] Ferista, Vol. III, p. 228. ஷா தஹீரின் அறிவுரைப்படி, 'அவர் தமது சமயத்தைத் துறந்து ஷியா மதத்தைத் தழுவினார். அதனோடு மசூதிகளிலும் தெருக்களிலும் முதல் மூன்று கலீஃபாக்களையும், அவர்களின் வழிநடப் பாரையும் திட்டவும் சாபங்கொடுக்கவுமென ஒரு சிலருக்கு அவர் உதவிப் பணம் வழங்கினார்'.

[51] Ferista, Vol. III, p. 25. மௌலானாவின் உபதேசப்படி யூசுப் அடில்ஷா சமயப் பொறை வழங்கினார்.

[52] Stewart, 'History of Bengal', p. 95.

[53] Ferista, Vol. II, p. 323.

எல்லாப் பிரிவினர்மீதும் அரசரது அதிகாரமானது முற்றிலும் நிலைநாட்டப்பட்டுவிட்டதாகவே தெரிகிறது. அரசரின் அதிகாரம் அல்லது அரசாங்க வல்லமையின் வரம்பும் நடைமுறைத் திறமும் எவ்வளவு என்பதை நன்கு புரிந்துகொள்ள வேண்டுமானால், இந்த ஓர் உண்மையை நாம் நன்கு நினைவில் வைத்துக்கொள்ள வேண்டியது அவசியமாகும்.

## அரசரின் கட்டற்ற முழு வல்லரசு

ஒருசில கட்டுப்பாடுகள் இருந்தபோதும், அரசரே மக்களின் உண்மையான தலைவராகத் திகழ்ந்தார். அவருடைய விருப்பத்திற்கேற்பவே மக்கள் தமது சொத்து, நிலம் யாவற்றையும் வைத்திருக்கவும் அநுபவிக்கவும் முடிந்தது. எனவே, அவர் விரும்பினால் எவருடைய சொத்தையும் நிலத்தையும் அவர்களைக் கேளாமலேயே எடுத்துக்கொள்ளும் உரிமையை அவர் பெற்றிருந்தார். அவரது குடிமக்களில், செல்வர்க்கெல்லாம் செல்வர்களிலிருந்து ஏழைகளுக்கெல்லாம் ஏழைகள் வரை, ஒரு தீங்கும் செய்ய இயலாத மனிதர்களிலிருந்து மிக வல்லமை வாய்ந்த அமைச்சர்கள்வரை யாவரது சொத்தாயிருப்பினும் நிலமாயிருப்பினும், அவற்றை அவர் இருக்கும்போதும் இறந்தபின்பும் காலத்துக்கேற்பப் பறிமுதல் செய்யும் உரிமை அவருக்கு இருந்தது. சான்றாக, இப்ராஹிம் அடில்ஷா எனும் அரசர், தமது மிகத் திறமையும் விசுவாசமுமுள்ள பிரதமராயிருந்த ஆசுத் கான் (Assud Khan) என்பார் இறந்த பிறகு[54] அவரது நிலபுலன்கள், சொத்துகள் அனைத்தையும் பறிமுதல் செய்தார் என்றும், தமது சேனாதிபதியாக விளங்கிய செய்ஃப் எய்னுல் முல்க் (Seif Ain-ul-Mulk) என்பாரது சொத்துகளை அவர் உயிரோடிருக்கும்போதே[55] பறித்துக்கொண்டார் என்றும் அறிகிறோம். நாட்டிலுள்ள நிலம், நீர் அனைத்துக்கும் அவரே தலைவராக விளங்கினார். நீதிக்கும் பெருமைக்கும் அவர் ஓர் ஊற்றெனத் திகழ்ந்தார். மேலும், நாம் ஏற்கெனவே பார்த்தபடி, அவர் சமயக் காவலராயும், பொதுத் தொழுகையைத் தலைமை தாங்கி நடத்துபவராயும், சிலைவணக்கத்தை வேரறுப்பவராயும் விளங்கினார். அரசாங்கம் அவரது நேரடியான கட்டுப்பாட்டுக்குள் இருந்தது. எனவே, சரியானபடி பார்க்கும்போது, வெறும் பெயரளவில் மட்டுமன்றி உண்மையிலேயும் அவர் நாட்டைக் கட்டியாண்டுவந்தார் எனத் தெரிகிறது. அவரது அமைச்சர்கள் யாவரும் அவரது பணியா

[54] Ferista, Vol. III, pp. 100,101.
[55] Ibid., pp. 105 et. seq.

ளர்கள் அல்லது செயலாளர்களாகவே இருந்தனர். அவர் களுக்குச் சொந்தமாக எந்த அதிகாரமும் தரப்படவில்லை. அரசரது கட்டளைகளைச் சிரமேற்கொண்டு நிறைவேற்று வதும், ஆட்சித் துறையைக் கண்காணிப்பதும் மட்டுமே அவர்களின் கடமையாயிருந்தன. நாட்டின் படைகளுக்கு அவரே தலைவர். தளகர்த்தர்கள் போர்முனையில் தோல்வி யுற்ற பல சமயங்களில் அவரே படைகளுக்குத் தலைமை தாங்கி நடத்திச் செல்வது வழக்கம். அவரது சிவில், இராணுவ நிர்வாகத் துறைகள் சரியான முறையில் அமைக்கப்பெறவும் பணிபுரியவும் வேண்டி அவர் எப்போதுமே விழிப்பாக இருக்க வேண்டியிருந்தது. ஆட்சித்துறைபற்றிய கட்டளைகளை அவர் அவ்வப்போது பிறப்பித்துக்கொண்டிருந்தார். அவரது அரசாங்கத்தில் பல்வேறு துறைகள் அடங்கியிருந்தன. அவற்றுள் முக்கியமானவை வருமானம், நீதி, போலீஸ், இராணுவம், சமயம் ஆகியவைபற்றிய துறைகளாகும். இத் துறைகள் பற்றிய ஆட்சி நுணுக்கங்களைக் கட்டுப்படுத்திவந்தவர் மன்னரேயாவர். அவற்றின் ஒழுங்குமுறைபற்றிய விவகாரங் களில் அவரது தீர்ப்பே முடிவானதாயிருந்தது. நீதித்துறை யைப் பொறுத்த வரையில் பெயரளவில் அவரே முடிவான அதிகாரத்தை உடையவராயிருந்தபோதிலும், உண்மையில் சட்ட விளக்கம் செய்பவர்களின் துணைகொண்டுதான் அவர் தமது இறுதித் தீர்ப்புகளை வழங்கினார். அதேபோல, அவரது நீதிமன்றங்களிலுங்கூட, அவர் தம்மால் ஆக்கப்பெறாத சட்டங் களின்படியே தீர்ப்புகளை வழங்கிவந்தார். அவரது அதிகாரத் தின் தன்மை இத்தகையதாகவே இருந்தது.

## வஸீர் அல்லது பேஷ்வா என அழைக்கப்பட்ட தலைமை அமைச்சர்

மன்னர் ஒருவருக்கு ஆலோசனை கூறப் பல அமைச்சர் கள் இருந்தனர். அவர்களுள் ஒருவர் தலைமை அமைச்சராக அல்லது பிரதமராக விளங்கினார். வட இந்தியாவிலெல்லாம் அவர் வஸீர் என அழைக்கப்பட்டார்; ஆனால், தென்னிந்தியா வில் அவரைப் பேஷ்வா என யாவரும் அழைத்தனர். வஸீர் என்ற பெயர் தென்னிந்தியாவில் அமைச்சர் பதவியை மட்டுமே குறித்தது. ஆனால், பேஷ்வா என்ற பட்டமானது அங்கு பிரதமரைக் குறிக்க அடிக்கடி பயன்படுத்தப்பட்டது. பிரதமருக் குரிய இப் பட்டமானது, அதாவது, பேஷ்வா என்ற பட்ட மானது பதினான்காம் நூற்றாண்டின் இறுதியில் கியாசுதீன் பாஹ்மினி (Ghyasuddin Bahmani) என்பாரது காலத்தில் முதன்

முதலாகத் தோன்றியது. அவரது பிரதமரும், பீஜப்பூர், கோல் கொண்டா, அகமது நகர் முதலிய நாடுகளின் தலைமை அமைச்சர்களும் பேஷ்வா என்ற பட்டப் பெயருடன் விளங்கினர்.[56] குஜராத், வங்காளம், காஷ்மீர் போன்ற இடங்களில் தலைமை அமைச்சர்கள் வஸீர் [57] என்று அழைக்கப்பட்டனர். அத்தகைய வஸீரின் தனிப்பட்ட கடமைகள் என்ன அல்லது அவரது பொறுப்பில் என்னென்ன தனிப்பட்ட ஆட்சித் துறைகள் ஒப்படைக்கப்பட்டிருந்தன என்பதுபற்றித் திட்டவட்டமாகத் தெரிந்துகொள்வது சற்றுக் கடினமாயுள்ளது. ஆனால், அவர் மிகவும் ஆற்றல் வாய்ந்த ஓர் மனிதர் என்பது நன்கு தெரிய வருகிறது. தந்திரமாக நடந்துகொள்வதிலும் சதிவேலைகளில் துணிந்து ஈடுபடுவதிலும், அரசருடைய செல்வாக்கைப் பெறுவதிலும் யார் வல்லவராயிருக்கிறாரோ அவரே ஆற்றல்மிக்க பிரதமராக இருக்க முடிந்தது. தென்னிந்திய நாடுகளில், பிரதமர் சில சமயங்களில் தானைத்தலைவராகவும் பணியாற்றினர்[58] என அறியவருகிறோம். ஆனால், பிரதமரொருவர் அளவுக்கு மீறி அதிகாரத்தைக் கைப்பற்றிக்கொள்ள முடிந்தபோதெல்லாம், அது பல இன்னல்களுக்கும் இழப்புகளுக்கும், இறுதியில் ஓர் ஆளும் வம்சத்தின் அழிவுக்குமே இட்டுச்சென்றுவிடுவதையும் நாம் அடிக்கடி காண்கிறோம். பீஜப்பூரில் வாழ்ந்த அசுத் கான், கோல்கொண்டாவைச் சேர்ந்த ஜகதேவ் ராவ் ஆகியோரைப் பொறுத்த வரையில் அது பல இன்னல்களை விளைவித்தது. மாள்வாவைச் சேர்ந்த மெதினி ராய் (Medini Ray) என்பார் விஷயத்தில் அது ஒரு பேரிழப்பாய் முடிந்தது. வங்காளத்தில் வாழ்ந்த சயத் ஹுசேன் என்பாரைப் பொறுத்தவரை அது ஓர் ஆளும் வம்சத்தின் அழிவுக்கே வித்திட்டது. காஷ்மீர் நாட்டு ஷா மீர் என்பாரும், மாள்வா நாட்டு மகமது கான் கில்ஜி என்பாரும் அங்ஙனமே நாட்டை ஆண்ட வம்சத்தையே ஒழித்து விடக் காரணமாயிருந்தனர். இந்த மூன்று நாட்டு வஸீர்களும், வல்லமையற்ற தங்களது மன்னர்களின் அரியணைகளை வலியப் பறித்துக்கொண்டார்கள். எனினும், மன்னரொருவர் உயிரோடு வாழ்ந்துவந்தபோதும், அவர் இறந்தபின்பும்கூட வஸீர் மிகமிக முக்கியத்துவம் பெற்றிருந்தார் என்பதில் யாதோர் ஐயமுமில்லை. பொதுவாக அவர் ஏனையோரைக் காட்டிலும் அறிவிலும் ஆற்றலிலும் சிறந்து காணப்படுவது வழக்கம். திறமை மிக்க தளபதியாகவும், சாமர்த்தியம் நிறைந்த இராஜதந்திரியாகவும், நல்ல

[56] Ferista, Vol. III, pp. 217, 220.

[57] Ibid., p. 219., Stewart, 'History of Bengal', p. 102.

[58] Ferista, Vol. III, pp. 87, 211, 404, 410-14.

நிர்வாகியாகவும் அவர் இருப்பது வழக்கம்; அல்லது முதலாம் பர்ஹான் நைஜாம் ஷா என்பார் காலத்துப் பேஷ்வாவாயிருந்த குன்வார் சீன் (Kunwar Sein) என்பாரை ஃபெரிஷ்டா என்பார் விவரிக்கும்போது கூறியுள்ளபடி, 'அவர் முதிர்ந்த அறிவும், நுண் மாண் நுழைபுலமும், நேர்மையும் ஒருங்கே வாய்க்கப்பெற்றிருந் தார்'[59] என்றும் கூறலாம். பெரும்பெருஞ் சேனைகளை வழிநடத் திச் சென்ற பிரதமர்கள் பலர் இருந்துள்ளனர். ஒரு சமயத்தே, குஜராத்தின் மன்னரான பகதூர்ஷா என்பார், தாம் அடைந்த தோல்வியை வெற்றியாக மாற்றக் கருதி, தமது வஸீராயிருந்த குதாவந்த் கான் (Khudawand Khan) என்பாரின் தலைமையில் இருபதாயிரம் குதிரை வீரர்களை அனுப்பினுர் எனக் கேள்விப் படுகிறோம்.[60] பர்ஹான் நைஜாம்ஷா (கி.பி. 1510) என்பாரின் அமைச்சராயிருந்த முகமில் கான் (Mukamil Khan) என்பார் பேஷ்வா பதவியையும் மீர் ஜும்லா பதவியையும் ஒருங்கே வகித்துவந்ததாக அறிகிறோம்.[61] வாரிசுரிமைப் போராட்டங் களைத் தவிர்ப்பதற்காக ஒருசில மன்னர்கள் சற்று வழக்கத்துக்கு மாறாகவே சென்று, தங்களுடைய உடன்பிறந்தோர்கள் அல்லது மைந்தர்களைப் பிரதமர்களாக வைத்துக்கொள்வது வழக்கம். அம் மன்னர்களின் மரணத்துக்குப்பின் பொதுவாக அப் பிரதமர் களே அரசபதவியைப் பெறுவது வழக்கம். காஷ்மீரை ஆண்ட முஸ்லிம் வம்சத்தில் மூன்றுவது மன்னரான அலாவுதீன் என்பார் 'கீழை நாட்டு மன்னர்களிடையே சாதாரணமாகக் காணப் படாத நம்பிக்கையோடு தமக்கு அடுத்த சகோதரனுயிருந்த ஷிராஷமக் (Shirashamak) என்பாரைத் தமது அமைச்சராக அமர்த்திக்கொண்டார்.' அவர் இறந்தபின் இயல்பாகவே அவ்வமைச்சர் அரியணை ஏறினுர்.[62] அதேபோல, அவ் வம்சத் தின் ஏழாவது மன்னரான அலி ஷா (Ali Shah) என்பார், தமது இளைய சகோதரர் ஷேடி கான் (Shady Khan) என்பாரைப் பிரதம ராக ஆக்கினுர். அலிஷாவின்[63] மரணத்துக்குப்பின் ஷேடி கான், ஜய்னுல் ஆபிதின் (Zainul Abideen) என்ற பட்டப் பெயருடன் அரியணை ஏறினுர். மாள்வாவைச் சேர்ந்த சுல்தான் கியாசுதீன் கில்ஜி என்பார், 'தமது சொந்த மகனுன அப்துல் காதர் என்ப வரைப் பிரதமராக நியமித்த பின்னர் தமக்குப் பின் வாரிசுரிமை

[59]Ferista, Vol. III, p. 220.

[60]Ibid., p. 219.

[61]Ibid., p. 211.

[62]C.H.I., Vol, III, p. 277.

[63]Ferista, Vol. IV, p. 467

யைப் பெறத்தக்கவர் அவரே என ஒரு பேரறிக்கையை வெளியிட்டார்.'[64]

## வக்கீல், வஸீர் ஆகிய இரு அதிகாரிகளின் பணிகளும் அநேகமாக ஒருங்குசேர்த்தே செயலாற்றப்பெற்றன

வாரிசுரிமையை அடைவதைப் பொறுத்த வரையில் வஸீரின் ஆதரவானது மிகமிக இன்றியமையாததாயிருந்தது. வங்காளத்தில் சுல்தான் ஷஹ்ஜாதா (Sultan Shahzadah) என்ற அலி, வஸீரின் துணைகொண்டே அரியணையேறினர்.[65] பட்டத்துக்கு வரும் அரசர் வயதுவராத இளைஞராக இருப்பாராஞல், வஸீரின் நிலையானது மிகவும் முக்கியத்துவம் பெற்றுவிடுவது வழக்கம்.[66] வயதுவராத இளைஞருக்குப் பதிலாக இருந்து செயலாற்றிவந்த வேளைகளில் அவர் வக்கீல் அல்லது பிரதிநிதி என அழைக்கப்பட்டார். ஒருசில சமயங்களில் வக்கீல் எனப்படுபவர் பிரதமராயில்லாமலிருப்பதுமுண்டு. ஆனல், அவ்விரண்டு பதவிகளும் ஒரே மதனிரிடத்தில் ஒன்றுசேர்ந்தபொழுது பிரதமர் வரம்பற்ற வல்லமையுடன் ஆள ஆரம்பித்தார். இஸ்மாயில் அடில்ஷா காலத்தில் அது அங்ஙனம் நடைபெற்றது. தமது பதின்மூன்றும் வயதில் அவர் பட்டத்துக்கு வந்தார். அப்போது பிரதமரின் முக்கியத்துவம் மிக உயர்ந்தது. பர்கான் நைஜாம் ஷா தமது ஏழாம் வயதில் அரியணையேறியபோதும் இதே போன்றுதான் நிகழ்ந்தது.[67] மல்லோ ஆதில் ஷா (Mallo Adil Shah, கி.பி. 1534) போன்ற உதவாக்கரை இளவரசர், அரியணையேற முடிந்ததென்ருல், அதற்குக் காரணம் அவரது பிரதமர் அவருக்கு அளித்த ஆதரவேயாகும். இஸ்மாயில் அடில்ஷா என்பார் தாம் இறப்பதற்கு முன் எங்ஙனம் தமது பிரதமராயிருந்த அசுத் கான் என்பவரை, தமது உதவாக்கரை மகனை மல்லோ கான் என்பவரின் பாதுகாப்பாளராக நியமித்தார் என்பதை ஃபெரிஷ்டா எனும் வரலாற்ருசிரியர் நன்கு விவரித்துள்ளார். அசுத்கானை அவர் பிரதமராக நியமித்தபோது 'அவ்வமைச்சரின் திறமையில் தமக்குப் பூரண நம்பிக்கை இருப்பதாயும், தமது மைந்தன்பால் காணப்படக்கூடிய குற்றங்குறைகளையும் மதியீனத்தையும் அவரது திறமை மறைத்துவிடுமெனவும்'[68] கூறியதாக ஃபெரிஷ்டா வர்ணித்துள்ளார். இறுதியில்

[64] Ibid., p. 236.
[65] Stewart, 'History of Bengal', p. 103.
[66] Ferista, Vol. IV, p. 481.
[67] C.H.I., Vol. III, p. 434.
[68] Ferista, Vol. IV, p. 73.

அவ்வமைச்சரின் துணைகொண்டே மல்லோ அடில் ஷா அரியணையைப் பெற்ருர். ஆனல், அடில் ஷா தமக்குக் கிடைத்த அதிகாரத்தைப் பெரிதும் தப்பான வழியில் பயன்படுத்தவும், வெட்கங்கெட்ட முறையில் அத்துமீறி ஒழுக்கக்கேடாக நடந்து கொள்ளவும் ஆரம்பித்தபோது, அவர் அரியணையினின்றும் அகற்றப்பட்டு, இப்ராஹிம் அடில் ஷா என்பார் அரசராக்கப் பட்டார். அசுத்கானின் துணைகொண்டே இப்ராஹிமும் அரசுரிமையைப் பெற்ருர். பிரதமர் ஒருவரின் நிலை நாட்டில் தனிச்சிறப்புடன் திகழ்ந்தது. ஏனெனில், மிக உயர்ந்த நிலையிலிருந்த பிரபுக்களும் அதிகாரிகளும் அவருக்குக் கீழ்ப்படிந்து நடந்துகொண்டனர். அன்னாரது கடமைகள் இன்னின்னவென்று வகுத்துக்கொடுத்தவரும், தர்மசங்கடமான நிலைமைகளில் அவர்களுக்குத் தலைமை தாங்கி வழிநடத்தியவரும் அவரே. கோவில்கொண்டா (Kowilconda) முற்றுகையின்போது, இஸ்மாயில் அடில்ஷா இறந்தவுடன் ஏற்பட்ட நெருக்கடியான நிலைமையை அசுத்கான் சமாளித்த விதத்தைப் பிரதமர் அக்காலத்தே பெற்றிருந்த சிறப்புக்கும் செல்வாக்குக்கும் ஓர் எடுத்துக்காட்டாகக் கூறலாம். இஸ்மாயில் இறந்தபின் யார் பட்டத்துக்கு வருவது என்பதுபற்றி அதிகாரிகள் பிரபுக்களிடையே சச்சரவு ஏற்பட்டது. அரியணைக்கு உரிமை கொண்டாடிய இரண்டு இளவரசர்களை அவர்கள் ஆதரித்தனர். எனவே, அரச முகாமில் குழப்பம் ஏற்பட்டது. அதிருப்தி எங்கும் தாண்டவமாடிற்று. 'எல்லாராலும் மதிக்கப்பெற்ற அசுத்கான்......தமது அதிகாரத்தைப் பயன்படுத்திக் குழப்பத்தைத் தவிர்க்கத் துணிவோடு முன்வந்தார். இளவரசர்களை ஒருவர்க்கெதிராக ஒருவரைத் தூண்டிவிட்ட தீயோர்களை அவர் முதலில் பிடித்துக் கொன்ருர். அதன்பின் அவர் எல்லாப் பிரபுக்களையும் அழைத்து இளவரசர்கள் இருவரில் ஒருவர் வீட்டுக்கும் போகக்கூடாது எனப் பணித்தார். அப்போதைக்கு, யாவரும் அரச முகாமின் அத்தாணி மண்டபத்துக்கு வந்து, வழக்கம்போல் தனக்கு மரியாதை செலுத்தவேண்டுமெனவும், அரியணையில் எந்த இளவரசர் அமர்த்தப்படவேண்டுமென்பது தீர்மானிக்கப்படும் வரையில் பொதுக் காரியங்களை வழக்கம்போல் அனைவரும் செய்து வரவேண்டுமெனவும் அவர் கட்டளையிட்டார். இரு கட்சியாளர்களும் அவரது ஆணைகளுக்குப் பணிந்து அவரது சொற்படியே நடந்தனர். படை அனைத்தும், அசுத்கானின் நடத்தையை ஏற்றுக்கொண்டு, அவரது விருப்பங்களை நிறைவேற்றி வைப்பதாக வாக்களித்தது.'[69] பானிபட் போர்க்களத்துக்குச் சற்று

[69] Ferista, Vol. III, pp. 74-75.

முன்னர் (கி.பி. 1556) பைராம்கான் நடந்துகொண்ட விதத்துக்கு ஒரு முன்னேடி போல அமைந்தது அசுத்கானின் நடத்தை. அசுத்கானின் நடத்தையானது வாஸரத் (Wazarat) பதவியின் முக்கியத்துவத்தை நமக்கு நன்கு எடுத்துக்காட்டுகிறது. அது, ஏறக்குறைய டில்லி சுல்தானியர்கள் காலத்து வஸாரத் பதவியை நிகர்த்ததாய், மிக முக்கியமானதொரு பதவியாய்த் திகழ்ந்ததென முடிவாகக் கூறலாம்.

## வக்கிலுஸ் சுல்தானத்

வஸீர் அல்லது பேஷ்வா என்ற அமைச்சரோடு வக்கிலுஸ் சுல்தானத் என்ற ஓர் அதிகாரியும் பேசப்படுகிருர். அவர் வஸீரை விட உயர்ந்த நிலையிலிருந்ததாகக் கூற முடியாவிட்டாலும், அவருக்கு இணையான ஒரு பதவியை வகித்தாரெனக் கூறலாம். பாஹ்மினி அரசர்களின்கீழ் (கி.பி. 1396) அத்தகைய அமைச்சரொருவர் பணிபுரிந்துவந்ததாகக் கேள்விப்படுகின்ருேம். ஷம்சுதீன் ஷா பாஹ்மினியும் (கி.பி. 1396) அவரது வழித்தோன்றலும் மீர் ஃபெய்ஸ் உல்லா ஆஞ்சி (Meer Faiz Ullah Anjee) என்பவர் வக்கிலுஸ் சுல்தானத்தாக விளங்கினுர். ஹுமாயூன்ஷா பாஹ்மினி என்பார் குவாஜா மஹமது கவான் என்பாரையும், நைஜாம்ஷா பாஹ்மினி என்பார் குவாஜா ஜஹான் என்பாரையும் வக்கிலுஸ் சுல்தானத்தாக நியமித்திருந்தார்கள். அச் சமயத்தே மஹமது கவான் என்பார் வஸீராக இருந்தார்.[69a] ஃபிரோஸ் ஷா பாஹ்மினி என்பாரது ஆட்சிக் காலத்தில் வக்கிலுஸ் சுல்தானத் என்பார் மாலிக் நாயிப், அதாவது, பிரதிநிதித்துவப் பிரபு என்னும் பட்டத்துடன் விளங்கினுர். ஆனல், வக்கீல் என்ற சொல்லானது பிரதிநிதி என்ற பொருளில் வழங்குவதால், டில்லி சுல்தானியர்கள் காலத்தில் இருந்த ஒருவகைப் பதவியைப் போன்றே அது காணப்பட்டது. ஒருவேளை அவரது கடமையானது அரசர் தலைநகரில் இல்லாதபோது அவருக்குப் பதிலாக ஆட்சி புரிவதொன்ருக இருந்திருக்கக்கூடும்; அல்லது அரசர் வயதேறப்பெருத சிறுவனுக இருந்தபோதும் ஆட்சியை நடத்தும் பொறுப்பைப் பெற்றிருக்கக்கூடும்.

## சேனுதிபதி

வஸீர் அல்லது பிரதமருக்கு அடுத்தபடியாகச் சேனுதிபதி விளங்கினுர். ஹாசன் ஷா என்ற காஷ்மீர் மன்னர் காலத்தே மாலிக் தாஜ்பட் என்பார் சேனுதிபதியாகவும் சயத்

[69a] Ferista, Vol. II, pp. 359, 370, 398, 453, 465.

ஹாஸன் என்பார் பிரதமராகவும் விளங்கினார். வங்காளத்தை ஆண்ட சுல்தான் ஃபதேஷா என்பார் முல்க் அஞ்சில் என்ற அபிசீனியர் ஒருவரைச் சேனாதிபதியாகவும், காஞ்சஹான் என்ற இன்னோர் அபிசீனியரை வஸீராகவும் நியமித்தார்.[70] பர்ஹான் நைசாம் ஷா என்பார் சயிப் அயினுல் முல்க் என்பாரைத் தனது சேனாதிபதியாக நியமித்தார்.[71] ஷா தகீர் என்பவரையும், அவருக்குப்பின் கோபாலராவ் என்பவரையும் அவ் வரசர் தமது பிரதமர்களாக நியமித்து இருந்தார். ஆனால், பொதுவாக இந்தப் பதவியானது இன்னோர் அமைச்சரின் பணியோடு பொருத்தப் பட்டிருப்பது வழக்கம். ஏனெனில், அக் காலத்தே ஒவ்வொரு சிவில் அதிகாரியும் ஓர் இராணுவத் தலைவராக முதலில் விளங்கினார். சிவில், இராணுவத் துறைகளின் பணிகள் அக் காலத்தே சரிவரப் பிரிக்கப்படவில்லை. சான்றாக, இப்ராஹிம் குதுப்ஷா என்பவர் முஸ்தஃபா கான் என்பவரைத் தமது அமைச்சராகவும், அதே சமயம் சேனாதிபதியாகவும் வைத்திருந்தார்.[72] குஜராத்தை ஆண்டுவந்த பஹதூர் ஷா என்பார் ஒரு சமயத்தில் 'குதவந்த்கான் என்னும் தமது வஸீரை இருபதினாயிரம் குதிரைகளின் தலைவராகப் போர்க்களத்திற்கு அனுப்பினார்.'[73] முதலாம் இப்ராஹிம் அடில் ஷாகூட அசுத்கானைத் தனது பிரதமராக மட்டுமன்றிச் சேனாதிபதியாகவும் நியமித்தார்.[74]

## மீர் நௌபத் அல்லது சரிநௌபத்

சேனாதிபதி என்ற அதிகாரியோடுகூட அரண்மனைச் சேவகர்களின் தலைவர் ஒருவர் இருந்தார். அவர் சேனாதிபதிக்குச் சற்றும் கட்டுப்பட்டவர் அல்லர். ஆனால், பெரும் பொறுப்பும் பெருஞ் சிறப்பும் கொண்டவராய் அவர் விளங்கினார். ஏனெனில், அரசரின் மெய்காப்பாளர்களுக்கு அவரே தலைமை பூண்டு விளங்கினார். மேலும், அரச குடும்பத்தைப் பாதுகாக்கும் பொறுப்பு அவரிடம் ஒப்படைக்கப்பட்டது. அவர்தான் மீர் நௌபத் அல்லது சரிநௌபத் என்னும் அதிகாரியாவார். கியாசுதீன்ஷா பாஹ்மினி என்பாரின்கீழ் மஹமதுகான் என்பார் மீர் நௌபத்தாக விளங்

---

[70] Stewart, 'History of Bengal', p. 102.

[71] Ibid., p. 105.

[72] Ferista, Vol. III, p. 404.

[73] Ibid., p. 219.

[74] Ibid., p. 87.

கினர். சம்சுதீன் ஷா பாஹ்மினி என்பார் காலத்தில் அரச குடும்பத்தின் அடிமையாக இருந்த சத்து (Saddu) என்னும் ஒருவர் அப் பதவியை வகித்தார்.[75] பர்ஹான் நைஜாம் ஷா என்பவரின் ஆட்சிக் காலத்தில் மியான் ஜமாலுதீன் என்பார் சரிநௌபத்தாக விளங்கினர்.[76] இந்த அதிகாரியானவர் அரண்மனை நிறுவனத்தோடு சம்பந்தப்பட்டவர் எனத் தெரிகிறது. சான்ருக, முதலாம் மஹமதுஷா பாஹ்மினி என்பாரது காலத்தில் மீர் நௌபத் என்பார் மிக உயர்ந்த பதவியில் இருந்த ஓர் பிரபுவாக இருந்தார். அவர் நாலாயிரம் பேர்கள் அடங்கிய ஒரு மெய்காப்பாளர் படைக்குத் தலைமை பூண்டு விளங்கினர். ஐம்பது சிலேதார்களும் (Silehdars) ஆயிரம் மெய்காப்பாளர்களும் அரண்மனைக்குத் தினந்தோறும் வந்துபோயினர்.'[77] அவரிடத்தே இருந்த சிலேதார்களின் கூட்டமொன்றில் பெரும் பிரபுக்களின் மக்களிலிருந்து பொறுக்கப்பட்ட இருநூறு வாலிபர்கள் அடங்கியிருந்தனர். அதனேடுகூடக் குடும்பக் காவலர்கள்[78] அல்லது பெர்தேதார்கள்[79] (Perdehdars) என்ற அதிகாரிகளும் இருந்தனர்.

## அமீர் ஜும்லா

அமைச்சர்களுக்குள்ளேயே மிகமிக முக்கியத்துவம் வாய்ந்தவர் பொருளாதார அமைச்சராகத்தான் இருந்திருக்க வேண்டும். அவர் அமீர் ஜும்லா என அழைக்கப்பட்டார். அஹமது நைஜாம் ஷாவின்கீழ் நாஸிர் உல்முல்க் குஜராத்தி என்பார் அமீர் ஜும்லாவாகப் 'பணியாற்றினர்.[80] பர்ஹான் நைஜாம் ஷாவின்கீழ் முகமில் கான் (Mukamil Khan) என்பார் பேஷ்வாவாகவும் மீர் ஜும்லாவாகவும் இருந்தார்.[81] காஷ்மீர் நாட்டில் சங்கர் ஜீன (Shankar Zeina) என்னும் ஒருவர் பொருளாதார அமைச்சராகத் திகழ்ந்தாரெனக் கேள்விப்படுகிறோம்.[82]

[75] Ferista, Vol. II, p. 353, 358.

[76] Ferista, Vol. III, p. 212.

[77] Ibid., Vol. II, p. 299.

[78] Ibid., Vol. III, p. 87.

[79] Ibid., Vol. II, p. 453.

[80] Ibid., Vol. III, p. 193.

[81] Ibid., p. 211.

[82] Ibid., Vol. IV, p. 489.

## அமீரிதூர் அல்லது கவந்தி மஜிலிஸ் அல்லது வஸீரி அஷ்ரஃப்

சடங்குகளுக்கெல்லாம் பொறுப்பு வாய்ந்த அமைச்சர் ஒருவர் இருந்தார். அவருக்கு வெவ்வேறு நாடுகளில் வெவ்வேறு பட்டப் பெயர் இருந்துவந்தது. காஷ்மீரில் அவர் அமீரி தூர்[83] என்றும், அகமது நகரை ஆண்ட அகமது நைஜாம் ஷா என்பார் காலத்தே அவர் கவந்தி மஜ்லிஸ்[84] என்றும், பாஹ்மினிப் பேரரசில்அவர் வஸீரி அஷ்ரஃப்[85] என்றும் அழைக்கப்பட்டார். சடங்குகளின் தலைவர் அல்லது முக்கிய வாயிற்காப்பார்[86] (Chief Usher) எனவும் அவர் அழைக்கப்பட்டுவந்தாரெனத் தெரிகிறது. மாள்வாவை ஆண்ட சுல்தான் மகமது கில்ஜி என்பார் காலத்து மாலிக் பர்கூர்தார் (Malik Barkhoordar) என்பார் முக்கிய வாயிற் காவலராக இருந்தார்.

## சதர்

மத சம்பந்தமான காரியங்களைக் கவனிப்பதற்கென்றே தனிப்பட்ட ஓர் அரசாங்கத் துறை இருந்திருப்பதாகத் தெரிகிறது. அத்தகைய துறையைப்பற்றியோ அல்லது அதன் நடவடிக்கைகள்பற்றியோ திட்டவட்டமான குறிப்புகள் காணப்படுவது அரிதாக இருப்பினும், பாஹ்மினி நாட்டில் அத்தகைய துறைக்குப் பொறுப்பாளியாக சதர் எனும் அதிகாரி ஒருவர் இருந்ததாகத் தெரியவருகிறது. முகலாயர்கள், ஆப்கானியர்கள் காலத்தும் அவருக்கு அதே பட்டப் பெயர்தான் இருந்து வந்தது. இரண்டாம் மகமது ஷா பாஹ்மினி என்பாரின் சதராக ஷேக் அகமது என்பார் பணிபுரிந்துவந்தார் என அறிகிறோம்.[87]

## சித்நவிஸ்

தெற்கத்திய நாடுகளில் சித்நவிஸ் அல்லது செயலாளர் என அழைக்கப்பட்ட உயர் அதிகாரி ஒருவர் இருந்ததாகத் தெரிகிறது. மராத்தியர்கள் காலத்தே இந்தப் பதவியின் பெயர் பலருக்கும் தெரிந்ததொன்றாக இருந்தது. ஆனால், அவர் ஒரு முக்கியமான

[83] Ferista, Vol. IV, p. 477.
[84] Indian Antiquary, Vol. XIIX, p. 159.
[85] C.H.I., Vol. III, p. 377.
[86] Ferista, Vol. IV, p. 196.
[87] Ibid., Vol. II, p. 481.

அதிகாரியாக விளங்கியிருக்க வேண்டுமென்பதில் சற்றும் ஐயமில்லை. ஓர் அமைச்சருக்குரிய உன்னத ஸ்தானத்தில் அவர் இருந்திருக்கக்கூடும். ஒரு சமயத்தில் அவர் அரசரின் தூதுவராக வெளிநாட்டு அரசவைக்கு அனுப்பப்பட்டார் என்பதைக் கொண்டு அவரது உயர்நிலையை நாம் ஒருவாறு யூகிக்கலாம்.[88]

## எட்டு அமைச்சர்கள் அடங்கிய சபை

பொதுப்படையாகப் பேசப்படும் கூற்றுகளின்படி பார்ப் போமேயானுல், தக்காண நாடுகளில் எல்லாமே எட்டு அமைச்சர்க ளடங்கிய சபை ஒன்று இருந்துவந்ததாக ஊகிக்க இடமுண்டு. அத்தகைய அஷ்டாங்க மந்திரிசபையானது முதலாம் மகமது ஷா பாஹ்மினி என்பாரால்தான் முதலில் தோற்றுவிக்கப்பட்டது. அவருக்குப்பின் வந்த அரசர்களின் தேவைக்கும் வசதிகளுக்கும் ஏற்ப அச் சபையின் எண்ணிக்கையிலும் செயலிலும் சிறு சிறு மாற்றங்கள் அவ்வப்போது ஏற்பட்டன. மகமது ஷாவின் எட்டு அமைச்சர்களின் பெயர்களை சர் வுல்ஸி ஹேக் (Sir Wolsley Haig) என்பார் தந்துள்ளார். அவை பின்வருமாறு:[89]

(i) வக்கிலுஸ் சுல்தானத் (Wakil-us-Sultanat)—நாட்டின் துணைத்தலைவர்.

(ii) வஸீரி குல் (Wazir-i-Kull) — மேற்பார்வையிடும் அமைச்சர்.

(iii) அமீரி ஜும்லா (Amir-i-Jumlah) — நிதி அமைச்சர்.

(iv) வஸீரி அஷ்ராஃப் (Waziri-i-Ashraf) — வெளிநாட்டு விவகார அமைச்சரும் சடங்குகளின் தலைவரும்.

(v) நஸீர் (Nazir) – பொருளாதாரத் துணை அமைச்சர்.

(vi) பேஷ்வா (Peshwa) — நாட்டின் துணைத் தலைவரோடு சேர்ந்து நின்று பணியாற்றியவர். பிற்காலத்தே அப் பதவியும் இவருடையதும் வேறுபாடின்றி ஒன்ருகப் பிணைந்துவிட்டது.

(vii) கொத்வால் (Kotwal)—முக்கியப் போலீஸ் அதிகாரியும் தலைநகரின் மாஜிஸ்திரேட்டுமா யிருந்தவர்.

(viii) சதரி ஜஹான் (Sadr-i-Jahan) — முக்கிய நீதிபதியும், மதம், மதமானியம்பற்றிய அமைச்சருமாய் விளங் கியவர்.

[88] Ferista, Vol. III, pp. 223, 226.
[89] C.H.I., Vol. III, p. 377.

சாதாரணமாக ஒரு நாட்டின் ஆட்சிப் பொறுப்பானது மேற் சொன்ன அமைச்சர்களின் கைகளில் ஒப்படைக்கப்பட்டிருக்க வேண்டுமென்பது ஒருதலை. அரசரைத் தலைவராக அல்லது எஜமானராகக்கொண்டு அவர்கள் நாட்டின் நடுநாயக அதிகாரி களாக விளங்கியிருத்தல் கூடும். அவர்களின்மீது அரசர் செலுத்திய அதிகாரக் கட்டுப்பாடானது அவரது திறமைக்கும் சக்திக்குமேற்பச் சில சமயம் உண்மையாகவும் சிலசமயம் வெறும் பெயரளவிலுமாக இருந்திருக்கக்கூடும். பாஹ்மினி அரசரால் அமைக்கப்பட்டதும், எண்மர் அடங்கிய சபையைக் கொண்டது மான அரசாங்கத்தை சிவாஜி என்ற மராத்திய அரசர் கைக் கொண்டார். அஷ்டப் பிரதான அரசாங்க முறை என அது பெயர்பெற்றது. பாஹ்மினி நாட்டு அமைச்சரவையும் சிவாஜி யின் மந்திரிசபையும் வெறும் எண்ணிக்கையில்மட்டும் அமைந்த தோர் மேல்வாரியான ஒற்றுமையை உடையனவாகக் கருதுவ தோடு, இன்னும் அதிகமான அளவில் அவை ஒற்றுமை உடை யவையெனக் கருதுவதில் குற்றமொன்றுமில்லை எனலாம்.

## நாடுகளின் மாநிலப் பகுதிகளும் அவற்றின் உட்பிரிவுகளும்

இந்த நாடுகள் பல மாநிலங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தன. ஒவ்வொரு மாநிலத்தையும் ஒரு கவர்னர் அல்லது வைஸ்ராய் ஆட்சி புரிந்துவந்தார். சான்ருக, பாஹ்மினி நாடானது நான்கு பெரு மாநிலங்களாக அல்லது தரஃபுகளாகப் (Turufs) பிரிக்கப் பட்டிருந்ததென்றும், ஒவ்வொரு தரஃபும் ஒரு தரஃப்தாரால் (Turufdar) ஆளப்பட்டுவந்ததென்றும் அறிகிறோம். குல்பர்கா, தௌலதாபாத், பீரார், பீடார் என நான்கு மாநிலங்கள்[90] அதில் அடங்கியிருந்தன. குஜராத்தை ஆண்ட முதலாம் மகமது ஷா என்பார் தமது நாட்டைப் பல தனிப்பட்ட மாநிலங்களாகப் பிரித்து ஒவ்வொன்றுக்கும் ஓர் ஆளுநர் அல்லது கவர்னரை நிய மித்தார். அவரது நாட்டில் காணப்பட்ட மாநிலப் பகுதிகள் வரு மாறு: (a) பெடேயும் ஜகத்தும், (b) சோன்ஜியர், (c) கோத்ரா, (d) தாண, (e) அகமதாபாத்.[91] எங்கெல்லாம் நாடுகளின் பரப்பு அதிகமாயிருந்ததோ அங்கெல்லாம் அவை பொதுவாகப் பல மாநிலங்களாகப் பிரிக்கப்பட்டன. மாநிலங்கள் பல மாவட்டங் களாகப் பிரிக்கப்பட்டன. ஒவ்வொரு மாவட்டத்திலும் பல கிராமங்களும் நகரங்களும் அடங்கியிருந்தன. கிராமங்களுக் கெனத் தனிப்பட்ட அதிகாரிகள் இருந்தனர். அவர்கள்

[90] C.H.I., Vol. III, p. 374.
[91] Ferista, Vol. IV, p. 62.

குல்கர்னிகள் அல்லது கணக்கர்கள்,[92] ஹவல்தார்கள் அல்லது மாஜிஸ்திரேட்டுகள்[93] எனப்பட்டனர். பட்டணங்கள், நகரங்கள் ஆகியவைகளுக்கெனக் கொத்தவால்கள்[94] என்ற தனிப்பட்ட அதிகாரிகள் இருந்தனர்.

## அரசாங்க அதிகாரிகளிடையே காணப்பட்ட படித்தரம்

அரசாங்க அதிகாரிகள் பொதுவாக இராணுவ அந்தஸ்தைக் கொண்டிருந்தனர். அதை ஒட்டியே அவர்களின் படித்தரங்களும் கணிக்கப்பட்டன. ஃபெரிஷ்டா என்பார் பாஹ்மினி நாட்டைப் பற்றிக் கூறுகையில், 'அங்கே பாஹ்மினி மன்னர்களின்கீழ் மிக உயர்ந்த பிரபுத்துவ அந்தஸ்தைப் பெற்றிருந்தவர்கள் எல்லாம், குறைந்தது இரண்டாயிரம் குதிரை வீரர்களுக்காகிலும் அதிபதிகளாயிருந்தவர்கள். நாட்டின் நான்கு முக்கிய மாநிலப் பகுதிகளின் ஆளுநர்களுக்கு மட்டுமே அத்தகைய உயர்நிலையானது தரப்பட்டது. இந்த உயர்நிலையிலிருந்து கீழே பல படித்தரங்கள் வகுக்கப்பட்டன. இருநூறு வீரர்களுக்கதிபதியாயிருந்த தலைவர்கள்வரை அது கீழ்நோக்கிச் சென்றது. ஆனால், அத்தகைய அதிபதிகளில் எவருமே கண்ணிய மிக்க பிரபுவாக மதிக்கப்படவில்லை. ஆயிரத்துக்கதிபதியாக விளங்கிய அமீர் ஒருவர் தோகா (togha), ஆலம் (கொடி), தமுக்கு (drums) போன்றவைகளைத் தமது பதவியின் சின்னங்களாக வைத்துக்கொள்ளும் சிறப்புரிமையைப் பெற்றிருந்தார்.[95] இக்காலத்தே இழிந்த முஸ்லிம் நாடுகளில் சாதாரணமாகக் கடைப்பிடிக்கப்பட்டுவந்த ஆட்சிமுறையானது இத்தகையதாகவே இருந்திருக்க வேண்டும். அக்பரால் வகுக்கப்பட்ட முகலாய மன்சப்தாரி முறையானது இம் முறையையே பின்பற்றியது. இம் முறையைக் கொஞ்சம் சீர்திருத்தி அமைத்ததனால் ஏற்பட்டதே மன்சப்தாரி முறை எனக் கூறலாம். சிவாஜியின் இராணுவ அமைப்பு முறைக்கு இதுவே உண்மையில் அடிப்படையாயமைந்தது. பொதுப்படப் பேசுமிடத்து, நாம் பிரிக்ஸ் (Briggs) என்பாரின் பின்வரும் கூற்றுகளை எளிதில் ஏற்றுக்கொள்ளலாம். அவர் எழுதுவதாவது: 'ஒவ்வோர் அதிகாரியும் எத்தனை படைவீரர்க்கு அதிபதியாயிருந்தாரோ, அதற்கேற்ப இராணுவப் பட்டம் வழங்குவதென்பது கீழைநாடுகளில் வழங்கிவரும் பண்டைய வழக்கமாகும். பதின்

[92] Ferista, Vol. III, p. 214.
[93] Ibid., p. 420.
[94] Ferista, Vol. II, pp. 435, 460.
[95] Ferista, Vol. II, p. 399.

மர்க்கதிபதி, நூற்றுவர்க்கதிபதி என்ற பட்டங்களைப் பற்றி விவிலிய வேதாகமங்களில் படிக்கிறோம். ரோமானியர்களிடையே பல நூற்றுவர்க்கதிபதி (Centurians) இருந்தனர். டார்ட்டார் களிடையே நூற்றுவர்க்கதிபதிகளான யூஜ்பாஷிகளும் (Yooz-bashies) ஆயிரவர்க்கதிபதிகளான மீன்பாஷிகளும் (Meenbashies) அக் காலத்தே இருந்ததோடு இக் காலத்தும் இருக்கின்றனர். இந்த வழக்கத்தை இந்திய மகமதியர்கள் தம்முடன் இந்தியாவுக்குக் கொண்டுவந்தனர். ஐயாயிரம் வீரர்க்கதிபதி என்ற பட்டம் வரை அவர்கள் இராணுவப் படித்தரத்தை உயர்த்தினர். குறிப் பிட்ட பட்டங்களில் அதுவே மிகவும் உயர்ந்ததாகக் கருதப் பட்டது. அதைவிட உயர்ந்த நிலையிலிருந்தவர்கள் சுர்லுஸ்குர் (Surlushkur) அல்லது தளபதி என அழைக்கப்பட்டனர்'[96] என்ப தாகும். அகமது ஷா வாலி பாஹ்மினி என்பாரின் வக்கீலுஸ் சுல்தானத்தாக இருந்த கால்ஃப் ஹாஸன் (Khalf Hasan) என்பார் ஆயிரத்து இருநூறு குதிரைகளுக்கதிபதியாகவும், அமீருல் உம்ரா ஹோஸியார்அய்னுல் முல்க்(Amir-ul-Umra Hoshiyar Ainul Mulk) என்பார் ஆயிரத்து ஐந்நூறு குதிரைகளுக்கதிபதியாகவும் விளங் கினர் என்பது ஈண்டுக் குறிப்பிடத்தக்கது. மாள்வாவை ஆண்டு வந்த சுல்தான் கியாசுதீன் என்பார் தனக்குப்பின் அரியணைக் குரியவனை தனது மைந்தனைத் தனது பிரதமராக நியமித்த போது, அவனுக்கு 'ஆயிரத்து இருநூறு குதிரைவீரர்க்கதிபதி' என்ற பட்டத்தை வழங்கினர்.[97]

## சிவில் அரசாங்கம்

சிவில் அரசாங்கத்தை ஆங்காங்கே இருந்த அதிகாரிகள் நடத்திவந்தனர். மாநிலங்களிலும் மாவட்டங்களிலும் அந்தந்தப் பகுதிகளின் ஆட்சிப் பொறுப்பை மேற்கொண்டிருந்த அதிகாரி களும், நகரங்களில் கொத்தவால்களும் காஜிகளும், கிராமங்களில் ஹவல்தார்களும் சிவில் மாஜிஸ்திரேத்துகளும் அரசாங்கத்தை நடத்திவந்தனர். ஆளுநரிலிருந்து ஹவல்தார்வரை அநேகமாக எல்லா சிவில் அரசாங்க அதிகாரிகளுமே முதலில் இராணுவ அதிகாரிகளாகவே மதிக்கப்பட்டனர். அவரவர்களின் ஆட்சி வரம்புக்குள் அவரவர் அநேகமாக சுயேச்சையாகவே ஆண்டு வந்தனர். ஆளுநர்கள் அவரவரது மாநிலங்களில் வரிவசூல் செய்து, அதில் வந்த வருமானத்தில் ஒரு பகுதியை சிவில் அரசாங்கச் செலவுகளுக்காகவும், இன்னொரு பகுதியைத் தமது சொந்த அரண்

---

[96] Ibid., Footnote.

[97] Ibid., Vol. IV, p. 237.

மனைச் செலவுகளுக்கென்றும், மூன்றுவது பகுதியை முறையான குதிரைப்படைவீரர்களுக்கு அல்லதுசிலேதார்களுக்கும், அதாவது, கவசமணிந்த குதிரைப்படை வீரர்களுக்கும் காலாட்படை வீரர்கள் அல்லது பர்கீர்களுக்கும் (Bargeers) ஊதியம் வழங்கு வதற்காகவும் ஒதுக்கிவைத்தனர்.[98] உள்நாட்டு அமைதியிலும் வளத்திலும் பெரிதும் அக்கறை கொண்ட சில அரசர்கள் தனிப் பட்ட போலீஸ் படையை நிறுவினர். சான்ருக, குஜராத்தை ஆண்ட முதலாம் மகமது ஷா என்பார், தமது நாட்டின் பெருவழி களில் கொள்ளை நேர்வதைத் தடுப்பதற்காக 'மேலும் சுறுசுறுப் புடன் பணிபுரியக்கூடிய போலீஸ் படையொன்றை' நிறுவி, அதை மொகாஃபிஷ்கான் (Mohafiz Khan) என்பாரிடம் ஒப்படைத்தார். அவரிடம் 'அப்போது ஆயிரத்து எழுநூறு பர்கீரி காஸ்(Bergeer-i-Khas) அல்லது அவரது சொந்தச் செலவில் தயாரிக்கப்பட்டு அவரது கொட்டில்களில் உள்ள குதிரைகளின்மீது சவாரி செய்த குதிரைவீரர்களின் படையொன்று'[99] இருந்தது. மாள்வாவை ஆண்ட சுல்தான் மகமது கில்ஜி போன்ற அரசர்கள் மக்களுக்கு நீதி வழங்குவதில் கண்ணுங் கருத்துமாயிருந்தனர். போலீஸ் அதிகாரிகளின் கவலையீனத்தாலும் கடமை தவறலினுலும் துன்புற நேர்ந்த மக்களுக்குத் தக்க காலத்தே தக்க நீதி வழங்கப் படுமாறு அவர் பார்த்துக்கொண்டார். அவரைப்பற்றி அடிக்கடி பேசப்படும் நிகழ்ச்சி வருமாறு: 'ஒரு சமயம்வியாபாரி ஒருவரைத் திருடர்கள், மாண்டோ (Mando) எனுமிடத்தில் நடு இரவில் வழிமறித்துக் கொள்ளை அடித்துவிட்டார்கள்; அவர் அங்ஙனம் கொள்ளையடிக்கப்பட்டது உண்மை என்பது தக்க சான்றுகளுடன் நிறுவப்பட்டது......அதன்பின் அக் கணமே அவரது இழப்புக்கு ஈடு செய்யப்பட்டது. பொதுக் கருவூலத்திலிருந்து அவருக்கு இழப் பீடு வழங்கப்பட்டது. அவருக்கு அங்ஙனம் தரப்பட்ட தொகைக் குச் சமமான தொகையானது அக் குறிப்பிட்ட நகரப் பகுதியில் ரோந்து சுற்றித் திருடர்களைப் பிடிக்க வேண்டிய கடமைபூண் டிருந்த போலீஸ் அதிகாரிகளிடமிருந்து வசூலிக்கப்பட்டது.'[100] முதலாம் மகமது ஷா பஹ்மினி என்பாரும் இங்ஙனமே மக்க ளுக்குப் பணிபுரிவதில் அக்கறை காட்டினர். 'தக்காணத்தில் பெருவாரியாகக் காணப்பட்ட கொள்ளைக் கூட்டத்தை ஒழிப்ப தென அவர் கங்கணங் கட்டிக்கொண்டார். வணிகர் கூட்டத் தைப் பட்டம்பகலில் துணிந்து கொள்ளையடிப்பதில் வல்லவர்கள் என்று வெகுகாலமாகவே பெயர் பெற்றிருந்த ஒரு கொள்ளைக்

[98] Ibid., Vol. III, p. 79.
[99] Ibid., Vol. IV, 57.
[100] Ibid., p. 234.

கூட்டத்தை ஒழிக்க அவர் திட்டமிட்டார். அதற்காக அவர் மாநிலங்களை ஆண்டுவந்த ஆளுநர்களுக்கெல்லாம் கண்டிப்பான கட்டளைகளை விடுத்தார். அக் கட்டளைகளில், அவர்கள், திருடர்களையும் வழிப்பறி செய்வோரையும் நாட்டிலிருந்து அறவே ஒழிக்க என்னென்னவெல்லாம் செய்ய முடியுமோ அத்தனையையும் செய்யுமாறு பணித்தார். அத்தகைய தீயோர்களை ஈவிரக்கமின்றிக் கொன்று, அவர் தம் தலைகளைக் கொய்து தலைநகருக்கு அனுப்பி வைக்குமாறு அவர் மாநில ஆளுநர்களுக்கு ஆணையிட்டார்.[101]

## நீதியும் ஒழுக்கநலமும்

குடிமக்களுக்கு நீதி வழங்குவதில் அரசர்கள் அளவுக்கு மீறிய அக்கறை காட்டினர். பொதுவாக ஒரு தந்தை தனது மக்களுக்கு எத்தகைய நீதியை வழங்குவாரோ அத்தகைய நியாயத்தை அவர் தம் குடிமக்களுக்கு வழங்கினர். இதை மெய்ப்பிக்கப் பற்பல சான்றுகளை நாம் காட்டக் கூடும். வங்காள மன்னர் கியாசுதீன் சுல்தான் என்பவர் எங்ஙனம் ஒரு முறை தனது காஜியின்முன் சென்று தண்டிக்கப்பட இசைந்தார் என்ற நிகழ்ச்சியை நாம் ஏற்கெனவே எடுத்துக் கூறியுள்ளோம். வங்காளத்தை ஆண்ட யூசுப்ஷா (Yusuf Shah) எனும் அரசரைப்பற்றிக் கூறும்போது, நீதி வழங்குவதில் அவர் பெரிதும் அக்கறை காட்டியதாகச் சொல்லப்படுகின்றது. 'தனது ஆட்சிக்குட்பட்ட பகுதிகள் யாவற்றிலும் கண்டிப்பான முறையில் நீதி வழங்கப்படவேண்டுமென்பதற்காக அவர் பல சட்டதிட்டங்களை ஏற்படுத்தினர். நீதிபதிகளையும் உள்ளூர் ஆட்சியாளர்களையும் அவர் தம்முன் வரவழைத்து, பாரபட்சமற்ற சமநீதியை அவர்கள் அனைவர்க்கும் வழங்குமாறு அறிவுறுத்தினர். ஏழையென்றும் பணக்காரனென்றும் பாராது, வல்லவனென்றும் இளைத்தவனென்றும் பாகுபாடு செய்யாது, அவர்கள் ஓரவஞ்சனையற்ற நீதியை யாவர்க்கும் சமமாக வழங்கவேண்டுமென்றும், தனிப்பட்ட அன்பின் காரணமாகவோ, வேறு அக்கறையினலோ அவர்களில் எவரேனும் நீதியினின்றும் சிறிதேனும் வழுவுவதாகத் தெரிந்தால் அவர்கள் மிகவும் கடுமையாகத் தண்டிக்கப்படுவர் எனவும் அவர் அறிவித்தார். அதன்பின் அவர்கள் தங்களது நடவடிக்கைகள் குறித்து வாராந்தர அறிக்கைகளை அனுப்புமாறும் பணித்தார். சட்டத்தில் அவரே மிக வல்லுநராக இருந்த காரணத்தால், மிகவும் அநுபவம் வாய்ந்த காஜிகளையும் முஃப்திகளையும் (Moofties) திகைக்கவைத்த சில சிக்கல்களைக்கூட அவர் மிக எளி

[101]Ferista, Vol. II, p. 325.

தாகத் தீர்த்துவைக்க முடிந்தது.'[102] ஒருசில அரசர்கள் தமது குடிமக்களின் ஒழுக்கநலனைப் பேணுவதிலும் பெரிதும் அக்கறை காட்டினர். அலாவுதீன் ஷா பாஹ்மினி என்பார் 'வறியோர்க் கென ஒரு மருத்துவமனையைக் கட்டினார். அதற்காக ஆகும் செலவுகளைச் சமாளிக்க அவர் ஏராளமான நிலங்களை மானியமாக வழங்கினார். அம் மருத்தவமனையில் அவர் இந்து மருத்துவர் களையேயன்றி முஸ்லிம் வைத்தியர்களையும் நியமித்தார். அதனோடு தமது நாட்டின் பல்வேறு பகுதிகளுக்கும் அவர் ஒழுக்க சீலக் கண்காணிப்பாளர்களையும் நியாயந் தவறாத நீதிபதிகளையும் அனுப்பிவைத்தார். தாம் அடிக்கடி மது அருந்திவந்தபோதிலும் ஏனையோர் அதை அருந்தாவண்ணம் அவர் தடை விதித்தார். சூதாட்டத்தையும் அவர் தடுத்தார். சோம்பேறிகள், ஒழுக்கங் கெட்ட ஊர்சுற்றிகள், குல்லேந்தர்கள் (Kullenders) ஆகி யோரின் கழுத்துகளில் அவர் சங்கிலியிட்டுக் கைது செய்து, வீதிகளில் குவிந்துகிடந்த குப்பைகளை அகற்றும்படியும், பெரிய கற்களை இழுக்குமாறும், வேறு பல கடினமான வேலை களைச் செய்யுமாறும் செய்து அவர்களைத் த்ண்டித்தார். அப்படிப்பட்டவர்கள் உழைப்பின்மூலம் தங்களது வாழ்க்கைக்கு வேண்டியதைச் சம்பாதிக்கவேண்டும், எப்படியாவது திருந்த வேண்டுமென்பதே அவரது அவாவாகும். திருந்தாதவர்கள் நாட்டைவிட்டு வெளியேறிவிட வேண்டுமென்பதும் அவரது கருத்தாகும். நன்கு கடிந்துகொள்ளப்பட்ட பின்னரோ, அன்றிச் சற்றே திருத்தப்பட்ட பின்னரோ ஒருவர் மீண்டும் சாராயம் அருந்தியதாகக் குற்றம் சாட்டப்பட்டால், அவரது தொண்டையி னூடே உருக்கிய ஈயக்குழம்பை ஊற்றவேண்டுமென்று அவர் கட்டளையிட்டிருந்தார். இங்ஙனம் குற்றம் செய்தவர்கள் எத்திறத்தினராயிருந்தபோதிலும் அவர்கள் ஒரே மாதிரியாகவே தண்டிக்கப்பட்டனர்.'[103] ஜய்னுல் ஆபிதின் (Zain-ul-Abidin) என்ற காஷ்மீர் மன்னர் யாவர்க்கும் சமநீதி வழங்கப்பட வேண்டு மென்பதில் பெரிதும் உற்சாகம் காட்டினார். அதற்காக அவர் 'தனிப்பட்ட சட்டங்களின் தொகுதி ஒன்றை ஏற்படுத்தி, அதைச் செப்பேடுகளில் பொறிக்கச்செய்து, பொதுச் சந்தைகளிலும் நீதிமன்றங்களிலும் அவற்றை வைக்குமாறு அவர் பணித் தார்......திருட்டு அல்லது சாதாரணப் பெருங் குற்றங்களுக்கு அவர் எவருக்கும் மரண தண்டனை விதிக்கவில்லை; ஆனால், எல்லா வகையான கொள்ளைக்காரர்களும் கடுமையாகத் தண்டிக்கப் பட்டனர். அவர்கள் விலங்கிடப்பட்டுக் கடுமையான உழைப்பின்

[102] Stewart, 'History of Bengal', p. 101.

[103] Ferista, Vol. II, p. 434.

மூலம், அதாவது, பொதுக் கட்டடங்களைக் கட்டுவதன்மூலம் தங்களது வாழ்க்கையை நடத்திக்கொள்ளுமாறு ஆணையிடப் பட்டனர்.'[104]

## கலை, இலக்கியம் முதலியவற்றிற்கு அரசர்கள் ஆதரவு அளித்தல்

அரசர்கள் கலை, இலக்கியம் ஆகியவற்றை ஆதரிக்கவேண்டு மென்பது இந்தியாவில் தொன்றுதொட்டு வரும் ஒரு மரபாகும். அதற்கேற்ப முஸ்லீம் மன்னர்களின் அரசவைகளுக்கும் கவிஞர் களும், கல்விமான்களும், கலைஞர்களும் பொதுவாக ஈர்க்கப் பட்டனர். சுல்தான் மஹமது கில்ஜி என்பவர் 'கல்விமான் களுக்குப் பேராதரவு அளித்தார்; பல கல்லூரிகளை நாட்டில் வெவ்வேறு பாகங்களில் ஏற்படுத்தி இலக்கியங்களை வளர்த்தார். அதன் விளைவாக, மாள்வாவில் வாழ்ந்த மௌலானுக்களும் தத்துவ சாஸ்திரிகளும் சிராஜ், சாமர்கண்டு ஆகிய இடங்களில் வதிந்த மெய்ஞ்ஞானிகளை ஏறக்குறைய ஒத்து விளங்கலாயினர்'[105] என்று சொல்லப்படுகிறது. இதுபோலவே, பொதுவாக ஜான்பூர் மன்னர்களும் சிறப்பாக இப்ராஹிம் ஷா ஷார்க்கி என்பவரும் 'இலக்கியக் கலையையும் இன்னும் நாகரிகத்துக்குரிய பல கலைகளை யும் வளர்த்து அமைதியான வாழ்க்கையை வாழ்ந்தனர்'[106] என்று சொல்லப்படுகிறது. இப்ராஹிம் என்பவரின் ஆட்சிக் காலத்தில்தான் உண்மையில் ஜான்பூரானது 'இந்தியாவின் சிராஜ்'[107] (Shiraz of India) என்ற பட்டப்பெயரை அடைந்தது. காஷ்மீர மன்னர்களும் இங்ஙனமே கலையையும் இலக்கியத்தையும் வளர்ப்பதில் புகழ்பெற்று விளங்கினர். மூர்க்கம் நிறைந்த கொடுங்கோலனாகிய சிக்கந்தர் ஷா புட்ஷிகன் (Sikandar Shah Butshikan) என்ற மன்னர்கூட அவரது மைந்தரான ஜெய்னுல் அபிதினைப் (Zain-ul-Abidin) போன்று கலைஞர்கள், கல்வி மான்கள், கவிஞர்கள் ஆகியோரைப் பெரிதும் ஆதரித்ததாக அறிகிறோம். வங்காளம், கோல்கொண்டா, பீஜபூர், அகமதுநகர், குஜராத் ஆகிய நாடுகளை ஆண்ட மன்னர்களும் பொதுவாக மேற் சொல்லப்பட்ட மன்னர்களைப் போன்றே கலைகளை ஆதரித்துவந்த தாகவே குறிக்கப்பெற்றுள்ளது. அவர்கள் அளித்த உற்சாகத்தின் விளைவாகவே, அந்த நாடுகளில் வெறும் பேச்சு வழக்கில் மட்டும்

---

[104] Ferista, Vol. IV, pp. 469-70.
[105] Ibid., p. 197.
[106] Ibid., p. 365.
[107] C.H.I. Vol. III, p. 259.

இருந்த உள்ளூர் மொழிகள் இலக்கியங்களாக வளர்ந்தன. உள்ளூர் நுண்கலையும் கட்டடக் கலையும் தத்தமக்கே உரிய தனிப்பட்டதோர் சிறப்பியல்பை எய்தியதும் அவர்களின் ஆதரவாலேயே எனலாம்.

## நிலமானிய முடியரசுகளில் காணப்பட்ட ஆட்சித்துறைத் தளர்ச்சி

பிராந்திய இராஜ்யங்களில் நடைமுறையிலிருந்த ஆட்சித் துறை அமைப்பைப்பற்றிய இம் மேல்வாரியான குறிப்பை அவ்வாட்சித் துறையில் காணப்பட்ட ஒருவிதத் தளர்ச்சியைப் பற்றிக் கூறி அதனோடு முடிப்போமாக! இந்த இராஜ்யங்கள் அனைத்திலுமே டில்லி சுல்தானிய ஆட்சியில் காணப்பட்டதை விட ஒருபடி அதிகமாகவே அதிகாரமும் கட்டுப்பாடும் மையத்தில் செறிந்திருந்ததேனும், அரசாங்கத்திலும் அதிகாரத்திலும் பெரு மளவுக்குத் தளர்ச்சி காணப்பட்டது. அதற்குக் காரணமென்ன வெனில், ஆங்காங்கே பல சிறிய உள்நாட்டுத் தலைவர்களை அரசர் உலவவிட்டதும், அவர்கள் தங்களது சிறுசிறு இராஜ்யங்களில் பாதிக்குப் பாதி சுதந்திரத்தோடு ஆட்சி புரிய அனுமதித்ததுமே யாகும். இவர்கள்தாம் அவ்வப்போது அரசருக்கு வந்து சேவகம் புரிந்த நிலமானியப் பிரபுக்களாவர். அரசர் விரும்பிய போது அவருக்குப் படைகளை அனுப்பி உதவி புரிந்தவர்களும் இவர்களே. சில சமயங்களில் இவர்கள் நாட்டின் பல்வேறு மாநிலங்களின் ஆளுநர்களாகவும் பணியாற்றினர். இவர்களது அதிகாரத்தின் அளவும், மத்திய ஆட்சி நிறுவனத்தோடு இவர்கள் கொண்டிருந்த தொடர்பும் மத்தியிலிருந்து அரசாங் கத்தின் வலிவுக்கும் மெலிவுக்கும் தக்கபடியே அமைந்திருந்தன. உண்மையில் பெரும்பான்மையான இராஜ்யங்களில், மத்திய அரசாங்கத்துக்குப் பணியாத இராஜாக்களையும் தலைவர்களையும் எதிர்த்து ஓயாத போராட்டங்கள் நடந்தவண்ணமிருந்தன. காஷ்மீராயிருந்தாலும் அல்லது வங்காளமாயிருந்தாலும், குஜராத்தாயிருந்தாலும் அல்லது கோல்கொண்டாவாயிருந் தாலும், முடியரசின் இயல்பானது எங்கும் நிலமானிய அடிப் படையிலேயே அமைந்திருந்தது. உள்நாட்டுத் தலைவர்களை அறவே ஒழித்துவிடுவதென்பது முடியாத காரியமென்பதை அவ் வரசர்கள் உணர்ந்தனர். எனவே, தண்டிக்கப்பட்டு ஓரளவு கேவலமாக நடத்தப்பட்டபின்னருங்கூட அத்தகைய தலைவர் களை மீண்டும் பழையபடியே அதிகாரத்தில் விட்டுவைப்பதே உசிதமாக அவர்களுக்குப் பட்டது. சான்றாக, காஷ்மீரில் லோகோதே (Lohkote), ஜம்மு ஆகிய இரு இடங்களில் ஆண்டு

வந்த மிக வல்லமை வாய்ந்த நிலமானியத் தலைவர்கள் அடிக்கடி மன்னருக்குத் தொந்தரவு கொடுத்துக்கொண்டுவந்தனர். அதற்காகச் சில சமயங்களில் அவர்கள் தண்டிக்கப்பட்டது முண்டு. இருந்தபோதிலும் ஓரளவு அநுதாபத்தோடும் மிகுந்த கவனத்தோடும் அரசர் அவர்களை நடத்தவேண்டியிருந்தது. மாள்வாவில் ஆண்ட மெதினிராய் போன்ற தலைவர்களின் அதி காரமும் செல்வாக்கும் எத்தகையன என்பது யாவரும் அறிந்த தொன்றேயாகும். குஜராத்தில் இடுர் (Idur), தொங்கார்பூர் (Dongarpur), கிர்ணர் (Girnar) ஆகிய இடங்களில் ஆண்டுவந்த இராஜாக்கள் அடிக்கடி கலகங்களில் ஈடுபட்டுவந்தனர். பல விதமான உபாயங்களைப் பயன்படுத்தி அவர்களது விசுவாசத்தை அரசர் பெறவேண்டியிருந்தது. அதேபோன்று பாஹ்மினி பேரரசையும், அதன் பின்னர் தக்காணத்தில் தோன்றிய ஐந்து சுல்தானிய நா்டுகளையும் உள்நாட்டுத் தலைவர்கள் பலர் சுதந்திர மாக ஆட்சி புரிந்துவந்தனர். நாட்டு நலன்களைப் பாதித்த ஒருசில முக்கியமான காரியங்களில் அவர்கள் அரசரோடு மோதிக்கொண்டபோதுமட்டுமே அரசர்கள் அவர்களைத் தடுத்து நிறுத்தினர். இரண்டே இரண்டு காரியங்களில்மட்டுமே அவர்கள் மன்னர்களுக்குக் கட்டுப்பட்டு இருந்தனர். ஆண்டுதோறும் அவர்கள் மன்னருக்குக் கப்பம் கட்டிவந்தனர். அரசவையிலோ அல்லது அரசரது முகாமிலோ அவசியமானபோது அவர்கள் சென்று பணிபுரிந்துவந்தனர்.

முஸ்லிம் மன்னர்கள் கொள்கையளவில் நாட்டிலுள்ள நிலம், நீர், உடைமை ஆகிய எல்லாவற்றிற்கும் அதிபதி என்றாலும், உள்நாட்டுத் தலைவர்களின் ஆட்சிக்குட்பட்ட பிரதே சங்களைத் தமக்குச் சொந்தமாக ஆக்கிக்கொள்ள அவர்கள் துணிந்ததில்லை. அப்படி ஏதேனும் செய்துவிட்டால் பெருந் தொந்தரவும் இடையூறுகளும் உண்டாகும் என்பதை அவர்கள் உணர்ந்திருந்தனர். உண்மை என்னவெனில், அத்தகைய தலைவர் களில் பெரும்பாலோர் பழைய இந்து ஆட்சியின் சின்னங்களாக விளங்கிய இந்து இராஜாக்களாக இருந்தனர் என்பதேயாம். டில்லி சுல்தான்கள் வேறு வழியின்றி அவர்களை ஏறக்குறைய சுயேச்சையான நிலைமையிலேயே விட்டுவைத்தனர். எனவே, அவர்கள் செல்வாக்கிலும் அதிகாரத்திலும் வளர்ந்தனர். பொதுமக்களின் நன்மதிப்பையும் விசுவாசத்தையும் அவர்கள் பெற்றிருந்தனர். அவைகள் யாவும் இக் காலத்திய மன்னர் களால் நீக்கப்படக்கூடாதனவாய் இருந்தன. நாட்டின் வெவ் வேறு பாகங்களில் அவர்களுக்கு வெவ்வேறு பட்டப் பெயர்கள் இருந்தன. ராயர்கள், ராணுக்கள், மண்டலிக்குகள், ராஜாக்கள்,

தேசாய்கள், ரெட்டிவார்கள், ஜமீன்தார்கள் அல்லது பாளையக்காரர்கள் என்று அவர்கள் பலவிதமாக அழைக்கப்பட்டனர். அவர்கள் நாட்டில் இருந்துகொண்டு அதிகாரத்தைச் செலுத்தி வந்தமையானது இக் கால முஸ்லீம் மன்னர்களின் வரம்பிலா ஆட்சிக்கு ஓர் பெருந்தடையாக இருந்தது. முஸ்லீம் ஆட்சி யாவராலும் ஒப்புக்கொள்ளப்பட்டதாய் விளங்காமற்போனதற்கும் அத் தலைவர்களே காரணம் என்பதில் சிறிதும் ஐயமில்லை. இஸ்லாமின் சட்டமானது நாடெங்கும் செல்லுபடியாவதற்குத் தடையாக இருந்தவர்களும் அவர்களே. அவர்கள் ஆண்டுவந்த சிறு சிறு நாடுகளில் தொன்றுதொட்டு வழங்கப்பட்டுவந்த மரபுகளையும் வழக்காறுகளையும் மக்கள் விரும்பினரே யன்றி, நீதிபற்றிய விவகாரங்களில் இஸ்லாமின் சட்டத்தை ஏற்றுக்கொள்ள அவர்கள் முன்வரவில்லை. உள்நாட்டுப் பழக்கவழக்கங்களின் தொன்மை அதற்கு ஓரளவு காரணமாகும். அதனோடு நாட்டின் ஆட்சி நிறுவனத்தை நடாத்துவதற்குப் போதுமான சிப்பந்திகளின்மையும் அதற்கு ஒரு காரணமாகும். ஏனெனில், இந்த மன்னர்கள் யாவரும் இரண்டு முக்கிய அரசாங்கப் பணிகளைமட்டுமே திறமையாகச் செய்து வந்தனர். அதாவது, நாட்டின் வருமானங்களை நன்கு வசூலிப்பதிலும், பிறநாட்டுப் படையெடுப்புகளினின்றும் நாட்டைப் பாதுகாப்பதிலுமே அவர்கள் வல்லவர்களாகத் திகழ்ந்தனர். மற்றபடி, இக் கால அரசு ஒன்றுக்கு அணிகலனாய் விளங்கக்கூடிய ஏனைய அரசாங்கப் பணிகளை அவர்கள் சரிவரச் செய்யவில்லை. ஏனென்றால், அக் காலத்தே ஒரே மாதிரியான சட்ட முறைமையோ, நீதி முறைமையோ, அல்லது நீதித்துறை நிறுவனமோ இல்லை. நாட்டிலுள்ள எல்லா மக்களுக்கும் பொருந்தக்கூடியனவாயும், பல வகையான வழக்குகளையும் தீர்க்கத்தக்கனவாயும் அவைகள் விளங்கவில்லை. நீதி வழங்கும் முறையில் காணப்பட்ட இக் குறைபாட்டைப் பயன்படுத்திக்கொண்டு ஆங்காங்கே இருந்த உள்நாட்டுத் தலைவர்கள் ஏறக்குறைய சுயேச்சையாக ஆட்சி புரிந்துவந்தனர். அந்த அளவுக்கு முஸ்லிம் மன்னர்களின் சட்டபூர்வமான இறைமையானது தடைப்படுத்தப்பட்டது. அரசியல் இறைமையை அவர்கள் செலுத்திவந்தனர் என்றாலும், அவர்களுடைய இராணுவ பலத்திற்குத் தக்கபடியே அந்த இறைமையானது செலுத்தப்பட்டது. உள்நாட்டுத் தலைவர்கள் செலுத்திவந்த ஒருவித விசித்திரமான நிலமானிய இறைமையின் காரணமாக அவ்வரசர்களின் சட்டபூர்வமான இறைமையானது பெரிதும் குறைக்கப்பட்டது.

# பொருள்குறிப்பு அகரவரிசை

மா



மி



மு



மெ



மொ



மோ



மௌ



ய



யூ



யௌ



ரா



ரு



ல



லி



வ



ஹ

